திருவொற்றியூரான்

# கிருஷ்ண எசுர்வேதம்

## தைத்திரீய சங்கிதை

மூன்றுங் காண்டம் ஐந்தாம் பகுதி

வே. மோ. பெ. கா. வெளியீடு, நெ. 5



# கிருஷ்ண எசுர்வேதம்

## தைத்திரீய சங்கிதை

### சோமயாக பரிசேடம்

சாயணபாடியக் கருத்துப் பதவுரைகளுடன் கூடியது

ஐந்தாம் பகுதி

---

இது

உயர் திரு.

**காசிவாசி சிவானந்த யதீந்திர சுவாமிகளால்**

மொழி பெயர்க்கப்பெற்று

---

திருவொற்றியூரான் அடிமை என்னும்

சென்னை

**த. ப. இராமசாமிப் பிள்ளையவர்களால்**

பதிப்பித்து

நன்கொடையாக அளிக்கப்பெற்றது.

---

விஷு அற்பிசித்திங்கள்.

**1941**

# கிருஷ்ண எசுர்வேத தைத்திரீய சங்கிதை

## சோமயாக பரிசேடம் என்னும் மூன்றுங் காண்டம்

### முதற் பிரபாடக விடயச் சுருக்கம்.

| பக்கம் | அநுவாகம் | |
|---|---|---|
| 2 | 1 | தீட்சை மந்திரங்களும் பிராமணங்களும் |
| 7 | 2 | சோமத்தைப் போற்றும் மந்திரங்களும் பிராமணங்களும் |
| 13 | 3 | பசுக் கடாரிக்கன்றின் காலடியில் ஹோமஞ் செய்வது முதலியதைக் கூறும் பிராமணங்கள் |
| 17 | 4 | பசுவின் உபாகரணத்தை (தருப்பையாற்றொடுதலை)க் கூறு மந்திரங்கள் |
| 25 | 5 | பசு உபாகரணமுதலிய மந்திரங்கட்கு பிராமணங்கள் |
| 29 | 6 | அபிமந்திரணத்திற்குரிய மந்திரங்களும் பிராமணங்களும் |
| 33 | 7 | இரண்டு வேள்வித்தலைவர்கள் தம்முள் பொறாமைகொண்டு செய்யும் வேள்வியின் பிரயோகங்களைக் கூறுமந்திரங்களும் பிராமணங்களும் |
| 39 | 8 | உபாம்சுக்கிரகத்திற்குரிய மந்திரங்கள் |
| 43 | 9 | சவனாதிகட்குரிய மந்திரங்களும் பிராமணங்களும் |
| 51 | 10 | பிரவிருத ஹோமங்கட்குரிய மந்திரங்கள் |
| 57 | 11 | காமியயாஜ்யா புரோநு வாக்கியங்களைக்கூறும் மந்திரங்கள் |

# இரண்டாம் பிரபாடக விடயச் சுருக்கம்.

# மூன்றும் பிரபாடக விடயச் சுருக்கம்.

---

# நான்காம் பிரபாடக விடயச் சுருக்கம்.

பக்கம் அநுவாகம்

## ஐந்தாம் பிரபாடக விடயச் சுருக்கம்.

| பக்கம் | அநுவாகம் | |
|---|---|---|
| 276 | 1 | தரிசபூரணமாசயாகங்களின் அங்கமாகிய அன்வாரம்பணீய இஷ்டியை விதிக்கும் பிராமணங்கள் |
| 283 | 2 | ஸ்தோம பாகத்தைக்கூறும் பிராமணங்கள் |
| 292 | 3 | விஷ்ணு அதிக்கிரம மந்திரங்கள் |
| 295 | 4 | அதிமோக்ஷ மந்திரங்கள் |
| 301 | 5 | ஆதித்தியக்கிரக மந்திரங்கள் |
| 306 | 6 | பத்தினிக்குவேண்டிய மந்திரங்கள் |
| 311 | 7 | சுருக்குக்களின் விதி |
| 315 | 8 | தயிரை எடுத்தற்குரிய மந்திரங்கள் |
| 317 | 9 | முற்கூறிய மந்திரங்களின் பிராமணங்கள் |
| 322 | 10 | கவாமயன அதிக்கிராகியக்கிரக பிராமணங்களும் மந்திரங்களும் |
| 327 | 11 | பசுவைப்பற்றின ஹோதாவின் மந்திரங்கள் |

மூன்றுங்காண்ட விடயச்சுருக்கம்

முடிந்தது.

# கிருஷ்ண எசுர்வேத தைத்திரீய சங்கிதை

## மூன்றாங் காண்டத்தின்

## பிழை திருத்தங்கள்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 4 | 28 | दि | दी |
| 9 | 27 | ज्म् | ज्यम् |
| 10 | 4 | முன்னும் | பின்னும் |
| 14 | 27 | காருகபந்திய | காருகபத்திய |
| 15 | 28 | கடைந்தெடுத்து | கடைந்தெடுத்தாவது |
| 22 | 26 | கொல்வோய் | கொல்வோர்களே |
| 24 | 25 | சுவாஹாகார | சுவாஹாகாரமான |
| 25 | 11 | ह्रि्य | ह्वि्य |
| 33 | 3 | धर्या | र्धया |
| 35 | 6 | ஆசநாயத் | ஆசங்யாத் |
| 36 | 23 | மூன்செய்தல் | முன்ஹோமங்கள் செய்தல் |
| 43 | 18 | य-स्मै भू-ध्वरोऽसि-र्पि स्वघृ-व | य-स्मैभू--ध्वरोऽसि-र्पि स्वघृ-व |
| 47 | 23 | அதவரே | அத்வரோ |
| 48 | 22 | நபாதிஷ்டன் | நபாநேதிஷ்டன் |
| 58 | 3 | यन्य | यस्य |
| 59 | 6 | न्सु | स्सु |
| 80 | 18 | वि | ति |
| 83 | 7 | एनंतु | एनंतृ |
| 86 | 22 | षपु | ष |
| ,, | 19 | இஅ | இனி |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 90 | 4 | மகமாரம் | மகமாம் |
| 91 | 14 | रस्थ | स्थ |
| 94 | 18 | जमः | जपः |
| ,, | 20 | र्विं | विं |
| 96 | 10 | मोंवश्षि | मोंवः पि |
| 104 | 3 | வண்மை | வன்மை |
| 108 | 7 | स्यप्रमा | स्य पशवः प्रमा |
| 112 | 20 | स्सो | सो |
| 116 | 15 | रिंगृ | रिंगृ |
| 122 | 21 | அவயவஞ்சளை | அவயவங்களை |
| 131 | 13 | வேட்போனை | ஹோதாவை. |
| 144 | 6 | யாஜ்யா | சம்யாஜ்யா |
| 149 | 7 | எத்போதும் | எப்போதும் |
| 154 | 7 | देवं | देंव |
| 157 | 12 | न्दासा | न्दसा |
| 159 | 12 | ह्रीं | ह्री |
| 169 | 8 | வ்யேம்ன: | வ்யோம்னே |
| 193 | 25 | स्योस्त | स्यास्ते |
| 204 | 13 | मअ | अ |
| 206 | 15 | नां | नां |
| 206 | 20 | न | न |
| 207 | 2 | दन्म | दन्य |
| 208 | 12 | வந்தாக | வந்ததாக |
| 222 | 1 | பூஷக | பூஷ |
| 227 | 24 | ஆறுவதில் | ஏழாவதில் |
| 230 | 7 | ब्रंह्म | ब्रह्म |
| ,, | 16 | नान | नाम |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 236 | 27 | தக்ஷிீனை | தக்ஷிீணை |
| 239 | 20 | தேவவைகள் | தேவதைகள் |
| 240 | 14 | रा-रा॒॑ | रा॑-रा॒ |
| 242 | 1 | स्मा | स्मा |
| 258 | 4 | பக்கடிவாம் | பக்கவடிவாம் |
| 235 | 20 | பிரமங்தோ | பிரயங்தோ |
| 273 | 14 | यष्ठा | ष्ठ्या |
| 280 | 20 | பிரதிலோப-அநுலோப | பிரதிலோம-அநுலோம |
| ,, | 23 | அநுலோப | அநுலோம |
| 296 | 2 | क्त्यो | क्त्यौ |
| 315 | 1 | சுருக்கின் | சுருக்குக்களின் |
| ,, | 16 | हो | हे |
| 317 | 2 | டிமுதலிய | முதலிய |
| 322 | 5 | श्वि | श्वि |
| 335 | 2 | अग्नि | अग्नि |

பிழை திருத்தங்கள்

முடிந்தன



# கிருஷ்ண எசுர்வேத தைத்திரீய சங்கிதை

## மூன்றுங் காண்டம்

இம்மூன்றுங் காண்டம் "ஔபாநுவாக்கியம்" என்று வழங்கப்படும். இது "காண்டாநுக்கிரமணிகை, என்னும் நூலிற் கண்டதாம். இதனால், அநுவாகங்கட்கு அருகில் அந்நுவயப்படும் பொருளைக் கூறுவது ஔபாநு வாக்கியமாம் என்பது பெற்றும். ஈண்டு, கருமங்களைக்கூறு மந்திரங்கள் 'வாகம்' எனப்படும். அதன் உரையாகிய 'பிராமணம்' அநுவாகமாம். அவற் றுள் ஒவ்வொரு மந்திரத்தை ஓதி அவ்வதற்கருகில் படிக்கப்பட்டிருக்கின் றது உபாநுவாகம். அதைப்பற்றிய காண்டம் ஔபாநு வாக்கிய காண்டம் என்பது திரண்ட பொருள்.

அங்ஙனமாயினும், இவையனைத்தும் ஒன்றைத் தொடங்காமலே கூறப் படுகின்றன. ஆனாலும் அவ்வப்பிரமாணத்தால் அவ்வவ்வநுவாகங்களில் அந் வயப்படுத்துவது போலாகின்றன. ஆனால், ஈண்டுச் சோமயாகப் பிரகரணங் களில் வருவனமாத்திரம் இனிது அந்வயப்படுகின்றன. அதையும் ஆங்காங்குக் காட்டப்படும். இதுபற்றியே, இக்காண்டம், பெரும்பான்மையும் சோமயாகத் தின் பரிசேடம் என்றே சொல்லத்தக்கதாம்.

மற்றும், இக்காண்டத்தும், சோமயாகத்தில் பொதுவாய் விதித்தவை களையே சிறப்பாய் எடுத்து நியமப்படுத்தும் மந்திரங்கள் சில, புதிதாகவே விநியோகப்படுத்தும் மந்திரபாகங்கள் சில, அம்மந்திரங்கட்கே உரைகூறும் பிராமணபாகங்கள் சில என்றிவ்வாறு மந்திரங்களும் பிராமணங்களும் கலந்து கொண்டு கிடக்கின்றன என்பதை யுணர்க.

## மூன்றாங் காண்டம் முதற் பிரபாடகம்

### முதலாம் அநுவாகம்

நான்கு பஞ்சாதிகட்குமேல் இருபத்துநான்கு பதங்களைக் கொண்டது.

தீட்சை மந்திரங்களும் பிராமணங்களும்.

प्रजापतिरकामयत प्रजास्सृजेयेति स तपोऽतप्यत स सर्पानसृजत सोऽकामयत प्रजास्सृजेयेति स द्वितीयमतप्यत स वयाꣳस्यसृजत सोऽकामयत प्रजास्सृजेयेति स तृतीयमतप्यत स एतं दीक्षितवादमपश्यत्तमवदत्ततो वै स प्रजा असृजत यत्तपस्तप्त्वा दीक्षितवादं वदति प्रजा एव तद्यजमानः ॥ १ ॥ सृजते यद्वै दीक्षितोऽमेध्यं पश्यत्यपास्माद्दीक्षा क्रामति नीलमस्य हरो व्येत्यबद्धं मनो दरिद्रं चक्षुस्सूर्यो ज्योतिषाꣳ श्रेष्ठो दीक्षे मा मा हासीरित्याह नास्माद्दीक्षाऽप क्रामति नास्यनीलं न हरो व्येति यद्वै दीक्षितमभिवर्षति दिव्या आपोऽशान्ता ओजो बलं दीक्षाम् ॥ २ ॥ तपोऽस्य निर्घ्नन्त्युन्दतीर्बलं धत्तौजो धत्त बलं धत्त मा मे दीक्षां मा तपो निर्वधिष्टेत्याहैतदेव सर्वमात्मन्धत्ते नास्यौजो बलं न दीक्षां न तपो निर्घ्नन्त्यग्निर्वै दीक्षितस्य देवता सोऽस्मादेतर्हि तिर इव यर्हि याति तमीश्वरꣳ रक्षाꣳसि हन्तोः ॥ ३ ॥ भद्रादभि श्रेयः प्रेहि बृहस्पतिः पुरएता ते अस्त्वित्याह ब्रह्म वै देवानां बृहस्पतिस्तमेवान्वारभते स एनꣳ सं पारयत्येदमगन्म देवयजनं पृथिव्या इत्याह देवयजनꣳ ह्येष पृथिव्या आगच्छति यो यजते विश्वे देवा यदजुषन्त पूर्व

தீட்சை மந்திர முதலாயின)

इत्याह विश्वे ह्येतद्देवा जोषयन्ते यद्ब्राह्मणा ऋक्सामाभ्यां यजुषा-
संतरन्त इत्याहर्क्सामाभ्याꣳ ह्येष यजुषा संतरति यो यजते राय-
स्पोषेण समिषा मदेमेत्याहाऽऽशिषमेवैतामा शास्ते ॥ ४ ॥

ஈண்டுத் தீட்கை என்பது முதலிற் செயற்பாலதாமாதலின், தீட்சை பண்ணிக்கொண்ட வேள்வித் தலைவன் கூறவேண்டிய மந்திரங்களும், அவற்றின் விதிகளும் இவ்வநுவாகத்திற் கூறப்படுகின்றன.

---

அவற்றுள்ளும், தீட்சைபண்ணிக்கொண்டவன் கூறவேண்டிய மந்திரங்களை விதிக்க விரும்பி அதைப்புகழ்கின்றது.

பிராமணம் 1.

प्रजापतिरकामयत प्रजास्सृजेयेति स तपोऽतप्यत स सर्पानसृजत सोऽ-
कामयत प्रजास्सृजेयेति स द्वितीयमतप्यत स वयाꣳस्यसृजत सोऽ-
कामयत प्रजास्सृजेयेति स तृतीयमतप्यत स एतं दीक्षितवादमपश्य-
त्तमवदत्ततो वै स प्रजा असृजत ।

என்பது.

உரை

பிரமன், உயிர்களைப்படைக்க விரும்பி முதலில் நியமவடிவதவத்தைச் செய்தனன். தீட்சைபண்ணிக்கொண்டவன் கூறுதற்குரிய மந்திரங்களைக் கூறவில்லை. ஆதலின் அத்தகைய தவத்தால் அவன் பாம்புகளையுண்டாக்கினன். இரண்டாமுறையும் உயிர்களைப்படைக்க விரும்பி மீண்டும் அத்தகைய தவத்தையே செய்தனன் அதனால் அவன் பறவைகளை யுண்டாக்கினன். மூன்றுமுறை உயிர்களைப்படைக்கவிரும்பி அக்கினிட்டோமமாகிய தவத்தைச் செய்து, தீட்சைபண்ணிக் கொண்டவன் கூறவேண்டியவைகளைக் கண்டுபிடித்துக் கூறினன்; அதனால் அவன் மனிதர்களை யுண்டாக்கினன் அக்கினிட்டோமத்தால் பிரசைகளைப் படைத்தான் என்பது ஏழாங்காண்டத்திற் கூறப்படும் என்பதாம்.

---

நியமவிசேடமாகிய தவத்துடன் கூடியவனும் தீட்சைபண்ணிக்கொண்டவனுமாகியவனுக்குக் கூறவேண்டியதை விதிக்கின்றது,

பிராமணம் 2

यत्तपस्तप्त्वा दीक्षितवादं वदति प्रजा एव तद्यजमानस्सृजते ।

என்பது

உரை

ஈகை, அருந்தாமை, வேதமந்திரங்களை ஓதல் என்னுந்தவத்தைச் செய்து தீட்சைபண்ணிக் கொண்டவன் ஓதவேண்டிய மந்திரத்தை ஓதல் வேண்டும். எசமானன், இம்மந்திரத்தை ஓதலால் பிரசையை உண்டாக்குகின்றான் என்பதாம்.

---

ஓதவேண்டிய அம்மந்திரங்களுள் நிமித்தத்தை முன்னிட்டு ஓதவேண்டிய ஒரு மந்திரத்தை விதிக்கின்றது.

பிராமணம் 3

**यद्वै दीक्षितोऽमेध्यं पश्यत्यपास्माद्दीक्षा क्रामति नीलमस्य हरो व्येत्यबद्धं मनो दरिद्रं चक्षुस्सूर्यो ज्योतिषा॒ श्रेष्ठो दीक्षे मा मा हासीरित्याह नास्माद्दीक्षाऽप क्रामति नास्य नीलं न हरो व्येति ।**

என்பது

உரை.

தீட்சை பண்ணிக்கொண்டவன் மலத்தைக் காண்பானேல், தீட்சை பயனற்றதாகின்றது. மற்றும், பாவம் உண்டாகின்றது. வன்மை குறைகின்றது. ஈண்டு மந்திரம்:- மனம் நியதியற்றது. கண் எனது தரித்திரமாம். அதாவது தானாய் விளங்கும் தன்மையிலாதது. விளங்கும் ஒளிகளுக்குள் சூரியன் சிறந்தவன். அதாவது கண்ணின் குற்றத்தைச் சூரியனே பொறுத்துக் கொள்ளுகின்றான் என்பது. ஆதலின், தீட்சையே! நீ, வசப்படாத மனம் கண் என்னுமிரண்டினால் வருங்குற்றங்களை எண்ணக்கூடாது. அதாவது எண்ணிக்கொண்டு என்னை விட்டுவிடாதேயென்று கூறுவானாக என்பது. இதை ஓதியதால், தீட்சை வீணாகாது, பாவமும் இல்லை. வன்மையுங் கெடாது என்பது கருத்தாம். தீட்சைபண்ணிக்கொண்டிருக்கின்றவன் மலத்தைப் பார்த்தால் 'அபத்தம் என்பது முதல் ஹிம்சீ:' என்பது ஈறாக உள்ள இம் மந்திரத்தை ஓதல் வேண்டும் என்பதாம்.

---

மழையில் நனைந்துவிடில், மற்றொரு மந்திரத்தை விநியோகப்படுத்துகின்றது

பிராமணம் 4

**यद्वै दिक्षितमभिवर्षति दिव्या आपोऽशान्ता ओजो बलं दीक्षां तपोऽस्य निर्घ्नन्त्युन्दतीर्बलं धत्तौजो धत्त बलं धत्त मा मेदीक्षां मा तपो निर्वधिष्टेत्याहैतदेव सर्वमात्मन्धत्ते नास्यौजो बलं न दीक्षां न तपो निर्घ्नन्ति ।**

என்பது.

தீட்சை மந்திர முதலாயின)

உரை

*தீட்சை செய்துகொண்டவன்மீது மழை பெய்யில், மண்ணிற்படாமல் வானில் உள்ள தண்ணீர் கெடுதலை உண்டாக்குவதாம், மற்றும் அது, இவனுடைய தாதுவையும், வன்மையையும், தீட்சையையுங் கெடுத்துவிடுகின்றது. ஆதலின் (மந்திரம்) தண்ணீரே! நீ, எனது உடம்பை நனைப்பதாய் வன்மையை நிலைநாட்டுவாயாக. அதற்குக் காரணமாகிய தாதுவையுங் கொடுப்பாயாக. இந்திரிய வன்மைமையையும் உறுதிப்படுத்துவாயாக. எனது தீட்சையைக் கெடுக்காதே. எனது தவத்தையுங்கெடுக்காதே என்று ஓதுக என்பதாம்.*

---

வேட்போனுடைய மந்திரகாண்டத்தில், வண்டியிலேறிச் செல்வதற்கு, 'பத்ராதபிஶ்ரேய:' எனவும், வேள்விச்சாலையை யடைவற்கும், 'ஏதமகன்மதேவயசனம்' எனவும் இரண்டு மந்திரங்கள் கூறப்பட்டிருக்கின்றன. அவற்றுள் முதலாவது மந்திரத்திற்கு உரைகூறுகின்றது.

பிராமணம் 5

**अग्निर्वै दीक्षितस्य देवता सोऽस्मादेतर्हि तिर इव यर्हि याति तमीश्वरꣳ-**
**रक्षाꣳसि हन्तोर्भद्रादभि श्रेयः प्रेहि बृहस्पतिः पुरएता ते अस्त्वित्याह**
**ब्रह्म वै देवानां बृहस्पतिस्तमेवान्वारभते स एनꣳ संपारयति ।**

*என்பது.*

உரை

*தீட்சைசெய்துகொண்டவன் வெளியிற் செல்லும்போது, அவனுடைய தேவதையாகிய அக்கினி அணைந்ததுபோலாகிவிடில் அசுரர்கள் எசமானனைக் கொல்லுவார்கள். அதை நீக்குவதற்கு வண்டியே! நீ எமது வீட்டிலிருந்து மிகச்சிறந்த வேள்விச்சாலையையடைவாயாக. உனக்கு முன்பு பிருகற்பதி செல்வாராக. தேவர்களுக்குள் பிருகற்பதியே பிராமணராவர். அவர், அசுரர்களைச் சபிக்க வல்லுநர். அத்தகைய பிருகற்பதி, எசமானனைப் பின்தொடர்ந்து செல்கின்றனர். அவர் இனிது கரையேற்றிவைப்பர் என்பதை ஓதுக என்பதாம்.*

---

இரண்டாவது மந்திரத்தின் முற்பகுதியின் பொருள் மிக வெளிப்படையா மென்பதைக் காட்டுகின்றது.

பிராமணம் 6.

**एदमगन्म देवयजनं पृथिव्या इत्याह देवयजनꣳ ह्येष पृथिव्या आगच्छति**
**यो यजते ।**

*என்பது.*

உரை

மண்மீதுள்ள இவ்வேள்விப்பூமியை வந்தடைந்தனம் என்றது, எவன் வேட்கின்முனே, அவன் வேள்வி செய்யுமிடத்திற்கு வருகின்முன். இது, நேரே காணப்படுகின்றது என்கின்றதாம்.

---

ஷை மந்திரத்தின் இரண்டாவது பகுதியிலுள்ள 'தேவர்கள்' என்னுஞ் சொல்லால் வேள்விச் செயலாளர்கள் (இருத்துவிக்குக்கள்) என்னும் பிராமணர்கள் கொள்ளப்படுகின்றனர் என்று காட்டுகின்றது.

பிராமணம் 7

**विश्वे देवा यदजुषन्त पूर्व इत्याह विश्वे ह्येतदेवा जोषयन्ते यद्ब्राह्मणाः।**

என்பது

உரை

முந்திய விசுவ தேவர்கள் யாகஞ் செய்தார்கள் என்றது, யாகஞ்செய்த தேவர்கள் பிராமணர்களேயாவர் என்பதாம்.

---

ஷை மந்திரத்தின் மூன்றும் பகுதியில், யாகஞ் செய்கின்றவனுக்கு மூன்று வேதங்களும் வேண்டுமெனல் மிக வெளிப்படை என்று காட்டுகின்றது.

பிராமணம் 8

**ऋक्सामाभ्यां यजुषा संतरन्त इत्याहर्क्सामाभ्या२ ह्येष यजुषा संतरति यो यजते।**

என்பது

உரை

இருக்கு, சாமம், எசுர் என்னும் வேதங்களால் யாகத்தினின்றுங் கரையேறுகின்முன் என்றது, மூன்று வேதங்களாலும் யாகஞ் செய்தவன் இனிது யாகத்தின் முடிவைக் காண்கின்முன் என்பதாம்.

---

ஷை மந்திரத்தின் நான்காம் பகுதியின் தன புஷ்டியாலும் உணவுப் பொருளாலும் மிகக்களிப்படையவேண்டுமென்று வேண்டுதல் ஆசீர்வாதமெனக் காட்டுகின்றது

பிராமணம் 9

**रायस्पोषेण समिषा मदेमेत्याहाऽऽशिषमेवैतामा शास्ते।**

என்பது

சோமத்தைப் போற்றல் முதலாயின)

உரை

*தனத்தாலும் உணவுப்பொருளாலும் களிப்படைவேமாக என்றது. இது ஆசீர்வாதமென்று விரும்பப்படுகின்றது என்பதாம்.*

முதலாம் அநுவாகம்

முற்றிற்று

---

## மூன்றுங் காண்டம் முதற் பிரபாடகம்

## இரண்டாவது அநுவாகம்

*நான்கு பஞ்சாதிகட்குமேல் பத்தொன்பது பதங்களைக் கொண்டது.*

சோமத்தைப் போற்றும் மந்திரங்களும் பிராமணங்களும்.

एष ते गायत्रो भाग इति मे सोमाय ब्रूतादेष ते त्रैष्टुभो जागतो भाग इति मे सोमाय ब्रूताच्छन्दोमाना२ं साम्राज्यं गच्छेति मे सोमाय ब्रूताद्यो वै सोम२ं राजान२ं साम्राज्यं लोकं गमयित्वा क्रीणाति गच्छति स्वाना२ं साम्राज्यं छन्दा२ंसि खलु वै सोमस्य राज्ञस्साम्राज्यो लोकः पुरस्तात्सोमस्य क्रयादेवमभि मन्त्रयेत साम्राज्यमेव ॥ १ ॥ एनं लोकं गमयित्वा क्रीणाति गच्छति स्वाना२ं साम्राज्यं यो वै तानूनप्त्रस्य प्रतिष्ठां वेद प्रत्येव तिष्ठति ब्रह्मवादिनो वदन्ति न प्राश्नन्ति न जुह्वत्यथ क्व तानूनप्त्रं प्रति तिष्ठतीति प्रजापतौ मनसीति ब्रूयात्त्रिरव जिघ्रेत्प्रजापतौ त्वा मनसि जुहोमीत्येषा वै तानूनप्त्रस्य प्रतिष्ठा य एवं वेद प्रत्येव तिष्ठति यः ॥२॥ वा अध्वर्योः प्रतिष्ठां वेद प्रत्येव तिष्ठति यतो मन्येतानभिक्रम्य होष्यामीति तत्तिष्ठन्ना श्रावयेदेषा वा अध्वर्योःप्रतिष्ठा य एवं वेद

प्रत्येव तिष्ठति यदभिक्रम्य जुहुयात्प्रतिष्ठायां इयात्तस्मात्समानत्र तिष्ठता होतव्यं प्रतिष्ठित्यै यो वा अध्वर्योस्स्वं वेद स्ववानेव भवति स्रुग्वा अस्य स्वं वायव्यमस्य ॥ ३ ॥ स्वं चमसोऽस्य स्वं यद्वा-यव्यं वा चमसं वाऽनन्वारभ्याऽऽश्रावयेत्स्वादियात्तस्मादन्वारभ्या-ऽऽश्राव्यꣳ स्वादेव नैति यो वै सोममप्रतिष्ठाप्य स्तोत्रमुपाकरोत्य-प्रतिष्ठितस्सोमो भवत्यप्रतिष्ठितस्स्तोमोऽप्रतिष्ठिता-युक्थान्यप्रति-ष्ठितो यजमानोऽप्रतिष्ठितोऽध्वर्युर्वायव्यं वै सोमस्य प्रतिष्ठा चमसो-ऽस्य प्रतिष्ठा सोमस्स्तोमस्य स्तोम उक्थानां ग्रहं वा गृहीत्वा चमसं वोन्नीय स्तोत्रमुपाकुर्यात्प्रत्येव सोमꣳ स्थापयति प्रति स्तोमं प्रत्युक्थानि प्रति यजमानस्तिष्ठति प्रत्यध्वर्युः ॥ ४ ॥

*இதில் சோமத்தைப் போற்றும் மந்திரங்களும். அவற்றின் பிராமணங் களுங் கூறப்படுகின்றன.*

---

இதில், சோமத்தைப் போற்றும் நான்கு மந்திரங்களை எடுத்துக் கூறுகின்றது.

மந்திரங்கள் 1, 2, 3, 4.

**एष ते गायत्रो भाग इति मे सोमाय ब्रूतादेष ते त्रैष्टुभो जागतो भाग इति मे सोमाय ब्रूताच्छन्दोमानाꣳ साम्राज्यं गच्छेति मे सोमाय ब्रूतात् ।**

*என்பது*

**உரை.**

*தேவதாவடிவ சோமரசமே! நேரில் காணப்படும் கொடியாகிய உனது பாகம் காலையில் சோமரசம் பிழியும்போது காயத்திரிச் சந்தத்தால் புநிதஞ் செய்தல் வேண்டும் என்று, எசமானனாகிய என்பொருட்டு காயத்திரி தேவதை சோமத்திற்குக்கூறுக. இவ்வாறே உச்சிப்போது சோமரசம் பிழியும்போது திருஷ்டுப் சந்தத்தால் சோமக்கொடி புநிதஞ் செய்தல் வேண்டுமென்று*

திருஷ்டுப் சந்தமாகிய தேவதை சோமத்திற்குக்கூறுக. மூன்றுமுறை சோமரசம் பிழியும்போதும் சக்திச்சந்தத்தால் கொடி புநிதஞ் செய்தல் வேண்டுமென்று சகதிச்சந்தமாகிய தேவதை சோமத்திற்குக்கூறுக. இருபத்துநான்கு, நாற்பத்துநான்கு, நாற்பத்தெட்டு என்னும் எண்களைக்கொண்ட மூவகைத் துதிமஞ்சரிகளின் சாம்ராச்சியமாகிய பன்னிரண்டு சுத்யாகசு (பிழியுநாள்) முதலான உத்தரயாகங்களிற் செல்வாயாக என்று எசமானனாகிய என்பொருட்டு துதிமஞ்சரியால் வழிபடும் தேவதை சோமராசனுக்குக் கூறுக என்பதாம்.

ஈண்டு, சோமத்தை அளவாக்கிய பிறகு, அதாவது விலைக்கு வாங்கு முன் எசமானன் இந்நான்கு மந்திரங்களாலும் போற்றல் வேண்டும். முதற்காண்டம், இரண்டாம் பிரபாடகம் ஆறும் அநுவாகம் ஆறுவது விநியோகத்தில் இது விநியோகப்பட்டது என்பதையுணர்க.

---

முற்கூறிய மந்திரங்கள் நான்கையும் விநியோகித்தற் பொருட்டுப் புகழ்கின்றது

பிராமணம் 1

**यो वै सोमꣳ राजानꣳसाम्राज्यं लोकं गमयित्वाक्रीणाति गच्छतिस्वानाꣳ-साम्राज्यं छन्दाꣳसि खलु वै सोमस्य राज्ञस्साम्राज्यो लोकः ।**

என்பது

உரை.

எசமானன், சோமராசனுக்கு சாம்ராச்சியமாகிய உலகை யடைவித்து, பிறகு, கொடியாகிய சோமத்தை வாங்குகின்றான். அது, தம்முள் சாம்ராச்சியத்தை யடைகின்றது. ஈண்டு காயத்திரி முதலிய சந்தங்களும் அவைகளாற் குறித்த சந்தோமங்களும் சோமராசனுடைய இராச்சியம் என்பதாம்.

---

அந்நான்கு மந்திரங்களையும் உபயோகிக்கும் முறையாய் விநியோகிக்கின்றது

பிராமணம் 2

**पुरस्तात्सोमस्य क्रयादेवमभि मन्त्रयेत साम्राज्यमेवैनं लोकं गमयित्वा क्रीणाति गच्छति स्वानाꣳ साम्राज्म् ।**

என்பது

உரை

முன்னர், "சோமம் தே க்ரீணாமி" என்று தொடங்கி யிருத்தலின், சோமத்தை வாங்குவதற்கு முன், "அம்சுநா தே அம்சுః" என்னும் அநுவாகத்தின் முடிவிலும், "பிரசாஸ்த்வாம் அநுப்ராணந்து" என்பதற்கு முன்னும் இந் நான்கு மந்திரங்களாலும் சோமத்தைப் போற்றல் வேண்டுமென்பதாம். சாம்ராக்கியத்தை யடையும்படி செய்து விலைக்கு வாங்குகின்றான். ஆதலின் அது சாம்ராச்சியத்தை யடைகின்றது என்பதாம்.

---

'தாநூநப்த்ரம்' என்னும், நெய்யை முகந்து பார்த்தலை விதித்தற்பொருட்டுப் புகழ்கின்றது.

பிராமணம் 3.

**योवै तानूनप्त्रस्य प्रतिष्ठां वेद प्रत्येव तिष्ठति ब्रह्मवादिनो वदन्ति न प्राश्नन्ति न जुह्वत्यथ क्व तानूनप्त्रं प्रति तिष्ठतीति प्रजापतौ मनसीति ब्रूयात्।**

என்பது

உரை

"தநூநப்த்ரேத்வா க்ருண்ஹாமி" என்னும் மந்திரத்தால் நெய்யெடுக்கப் படுவதால் அது தாநூநப்த்ரமாம். அதனுடைய பெருமை அறியப்படவில்லை. தீயில் ஆகுதி செய்தலானும், வேள்விச் செயலாளர்கள் அருந்துகின்றதாலுமே சோமரசத்திற்குப் பெருமையுண்டு என்று பிரமவாதிகள் சங்கிக்கில், அன்று, மனதில் பிரசாபதியினிடத்தில் நிலைக்கவைத்தலினாற்றான் பெருமை உண்டென்று உத்தரங்கூறுவானாக என்பதாம்.

---

மந்திரத்தால் நெய்யை முகந்துபார்த்தலை விதிக்கின்றது.

பிராமணம் 4.

**त्रिरव जिघ्रेत्प्रजापतौ त्वा मनसि जुहोमीत्येषा वै तानूनप्त्रस्य प्रतिष्ठा य एवं वेद प्रत्येव तिष्ठति।**

என்பது.

உரை

'தாநூநப்த்ர நெய்யே! உன்னை, பிரசாபதியினிடத்தில் ஓமஞ்செய்கின்றேன், என்று மனத்தில் எண்ணுதலும், மும்முறை முகந்து பார்த்தலுமே தாநூநப்த்ரத்தின் பெருமையாம். இவ்வாறுணர்ந்தவன் பெருமையை யடைகின்றான் என்பதாம்.

சோமத்தைப் போற்றல் முதலாயின)

ஈண்டு இம்மந்திரம், அக்னேராதித்யமஸி, என்னும் அநுவாகத்தின் முடிவில் உள்ளதாய் உணர்ந்துகொள்க. முற்கூறிய மந்திரங்களும் விதிகளும் எசமானனுடையவைகள். இனி, வேட்போனுடையவைகள் கூறப்படுகின்றன என்பதையுணர்க.

---

'ஆசிராவணம், என்பதை விதிக்கின்றது.

பிராமணம் 5

**यो वा अध्वर्योः प्रतिष्ठां वेद प्रत्येव तिष्ठति यतो मन्येतानभिक्रम्य होष्यामीति तत्तिष्ठन्ना श्रावयेदेषा वा अध्वर्योः प्रतिष्ठा य एवं वेद प्रत्येव तिष्ठति ।**

என்பது

உரை.

ஆசிராவணந் தொடங்கி ஓமம் முடியும்வரை ஒரேயிடத்தில் நிற்றல் என்னும் வேட்போனுடைய பெருமையையுணர்ந்தவன் பெருமையை யடைகின்றான். ஆகவனீயத்திற்கு அருகு முதலிய விடங்களுள் எவ்விடத்தில் நின்றுகொண்டு ஆசிராவணஞ் சொல்கின்றானோ, அவ்விடத்தினின்றும் நகராமல் நிற்றலாகிய தன்மையையுணர்ந்தவன் பெருமையடைகின்றான் என்பதாம்.

---

ஆசிரவணஞ் செய்யுமிடத்திலிருந்து வேறிடம் போய்ச் செய்யும் ஓமத்தைப் பழிக்கின்றது.

பிராமணம் 6

**यदभिक्रम्य जुहुयात्प्रतिष्ठाया इयात्तस्मात्समानत्र तिष्ठता होतव्यं प्रतिष्ठित्यै ।**

என்பது

உரை.

வேறிடம் போய் ஓமஞ்செய்யில் பெருமை நழுவிவிடுகின்றது. ஒரே இடத்திலிருந்து செய்யில் பெருமை உண்டாகின்றது. ஆதலின் பெருமையின் பொருட்டு ஒரே இடத்திலிருந்துகொண்டு ஓமஞ் செய்யத்தக்கது என்பதாம்.

---

ஆசிரவண காலத்தில் ஹோமசாதனங்கள் கையில் இருத்தல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம் 7

योवा अध्वर्योस्स्वं वेद स्ववानेव भवति स्रुग्वा अस्य स्वं वायव्यमस्य स्वं चमसोऽस्य स्वं यद्वायव्यं वा चमसं वाऽनन्वारभ्याऽऽश्रावयेत्स्वादिया-त्तस्मादन्वारभ्याऽऽश्राव्यꣳ स्वादेव नैति ।

என்பது

உரை.

எவன், வேட்போனுடைய தனத்தையுணர்கின்றானோ, அவன் தன முடையவனாகின்றான். அத்வரியுவின் தனம் 'சுருக்கு (அகப்பைவிசேடம்) ஆகும். வாயுவின் பாத்திரமாகிய கிரகமும் சமசமும் தனமாம். இதை கையில் வைத்துக்கொண்டு 'ஆசிராவய' என்று கூறல் வேண்டுமென்பதாம்.

ஈண்டு, வாயவீய சமசமும் கிரஹமுமே கொள்ளற்பாலன என்பதை யூகித்துக் கொள்க.

---

காலைப்போது சோமரசம் பிழியுந் தோத்திரம் (பக்ஷ்பவமானம்) முதலிய தோத்திரங்கட்கு, காலத்தோடு உபாகரணம் (தருப்பை கொடுத்துச் சுட்டுதல்) என்ப தையும் விதிக்கின்றது,

பிராமணம் 8.

यो वै सोममप्रतिष्ठाप्य स्तोत्रमुपाकरोत्यप्रतिष्ठितस्सोमो भवत्यप्रतिष्ठितः स्तोमोऽप्रतिष्ठितान्युक्थान्यप्रतिष्ठितो यजमानोऽप्रतिष्ठितोऽध्वर्युर्वायव्यं वै सोमस्य प्रतिष्ठा चमसोऽस्य प्रतिष्ठा सोमस्स्तोमस्य स्तोम उक्थानां ग्रहं वा गृहीत्वा चमसं वोन्नीय स्तोत्रमुपाकुर्यात्प्रत्येव सोमꣳ स्थापयति प्रति स्तोमं प्रत्युक्थानि प्रति यजमानस्तिष्ठति प्रत्यध्वर्युः ।

என்பது

உரை

சோமரசத்தை பாத்திரத்தில் எடுத்துக்கொள்ளாமல் தோத்திரங்கட்கு தருப்பை கொடுப்பவன் பெருமையை யடையமாட்டான். மற்றும், ஸ்தோம மும், சஸ்திரமும் பெருமையடையாதனவாம். எசமானனும் பெருமையை யடையான். ஆதலின் வேட்போன், வாயவீயத்தி (கிரஹபாத்திரங்களி) ல்

கடாரியின் காலடிஹோமம்)

சோமரசத்தை எடுத்துவைத்துக்கொண்டு துதிகட்குத் தருப்பை கொடுத்தல் வேண்டும். அல்லது, சமசத்தில் சோமரசத்தை நிறைத்துக்கொண்டு துதி கட்குத்தருப்பை கொடுத்தல்வேண்டும். இதனுல், துதி, சஸ்திரம், எசமானன் முதலானவைகள் பெருமையடைகின்றன. ஈண்டு, காலையிலும், உச்சிப்போதி லும் சோமரசம் பிழியும் கிரகபாத்திரத்தில் சோமரசத்தைப் பிடித்துவைத்துக் கொண்டு துதியின் பொருட்டுத் தருப்பை கொடுத்தல் வேண்டும். மூன்றுவது முறை சோமரசம் பிழியும்போது சமசத்தில் சோமரசத்தை நிறைத்து வைத் துக்கொண்டு செய்யவும். இதனுல், கிரகத்தில் சோமரசத்தை எடுக்குங்காலமும், சமசத்தில் நிறைக்குங்காலமும் துதிகட்கும் காலங்களாம் என்பது பெறப் பட்டது.

இரண்டாம் அநுவாகம்

முற்றிற்று.

---

## மூன்றும் காண்டம் முதற் பிரபாடகம்

## மூன்றுவது அநுவாகம்

இரண்டு பஞ்சாதிகட்குமேல் இருபத்தாறு பதங்களைக் கொண்டது.

பசுக்கடாரிக் கன்றின் காலடியில் ஹோமஞ் செய்வது முதலியதைக் கூறும் பிராமணங்கள்.

यज्ञं वा एतत्सं भरन्ति यत्सोमक्रयण्यै पदं यज्ञमुखꣳ हविर्धाने यर्हि हविर्धाने प्राची प्रवर्तयेयुस्तर्हि तेनाक्षमुपाञ्ज्याद्यज्ञमुख एव यज्ञमनु सं तनोति प्राञ्चमग्निं प्र हरन्त्युत्पत्नीमानयन्त्यन्वनाꣳसि प्र वर्तयन्त्यथ वा अस्यैष धिष्णियो हीयते सोऽनु ध्यायति स ईश्वरो रुद्रो भूत्वा ॥ १ ॥ प्रजां पशून्यजमानस्य शमयितोर्यर्हि पशुमाप्रीतमुदञ्चं नयन्ति तर्हि तस्य पशुश्रपणꣳ हरेत्तेनैवैनं भागिनं करोति यजमानो वा आहवनीयो यजमानं वा एतद्वि कर्षन्ते यदाहवनीयात्पशुश्रपणꣳ हरन्ति स वैव स्यान्निर्मन्थ्यं वा कुर्याद्यज-

मानस्य सात्मत्वाय यदि पशोरवदानं नश्येदाज्यस्य प्रत्याख्यायमव द्येत्सैव ततः प्रायश्चित्तिर्ये पशुं विमथ्नीरन्यस्तान्कामयेताऽऽर्तिमार्छे-युरिति कुविदङ्गेति नमोवृक्तिवत्यर्चाऽऽग्नीध्रे जुहुयान्नमोवृक्तिमेवैषां वृङ्क्ते ताजगार्तिमार्छन्ति ॥ २ ॥

*இவ்வநுவாகத்தில், சோமத்திற்கு விலையாகிய கடாரிக் கன்றின் காலடி மண்ணில் ஓமஞ் செய்தல் முதலிய விதிகள் கூறப்படுகின்றன.*

*காண்-1, பிர-2, அநு-13-ல் மூன்றுவது மந்திர விநியோகத்திற்குத் துணையாய் நிற்கும் பிராமணங்கள்.*

---

அவிகளைச் சுமந்துசெல்லும் வண்டிகட்கு மைப்போடுவதற்கு, எடுத்துவைத்திருக்கின்ற கடாரிக் கன்றின் காலடி மண் சாதன மென்று விதிக்கின்றது.

பிராமணம் 1

यज्ञं वा एतत्सं भरन्ति यत्सोमक्रयण्यै पदं यज्ञमुखꣳ हविर्धाने यर्हि हविर्धाने प्राची प्रवर्तयेयुस्तर्हि तेनाक्षमुपाञ्ज्याद्यज्ञमुख एव यज्ञमनु संतनोति ।

என்பது

உரை.

*சோமத்தின் விலையாகிய கடாரிக்கன்றின் ஏழாவது அடிமண் எக்ஞத்திற்கு முக்கியமாகிய சோமக் கொடியைத் தாங்கலின் முகம்போன்ற வண்டி கிழக்கு முகமாய்ச் செல்லும்போது அம்மண்ணை நெய்யில் குழைத்து மைப் போடல்வேண்டும். இதனால், எக்ஞத்தின் முகமாகிய வண்டியில் கடாரிக் கன்றின் காலடி மண்ணாகிய எக்ஞ முகத்தை எப்போதுஞ் செய்ததாகும் என்பதாம்.*

---

அக்கினி ஷோமிய பசுவைச் சமைப்பதற்கு, 'பிராசீனவம்சம்' என்னும் மூங்கில் கோட்டகையின் மேற்குப் பக்கத்திலுள்ள பழைய காருகபந்தியத்திலிருந்து தீயெடுத்துக்கொண்டு சாமித்திரா சாலைக்குச் செல்லவேண்டுமென விதிக்கின்றது.

பிராமணம் 2.

प्राञ्चमग्निं प्र हरन्त्युत्पत्नीमा नयन्त्यन्वनाꣳसि प्र वर्तयन्त्यथ वा अस्यैष धिष्णियो हीयते सोऽनु ध्यायति स ईश्वरो रुद्रो भूत्वा प्रजां पशून्य-

கடாரியின் காலடிஹோமம்)

**जमानस्य शमयितोर्यर्हि पशुमाप्रीतमुदञ्चं नयन्ति तर्हि तस्य पशुश्र-
पण१॰ हरेत्तेनैवैनं भागिनं करोति ।**

என்பது

**உரை.**

முன்னர், பழைய காருகபத்தியத்திலிருந்து கிழக்காக பழைய ஆகவனீயத்திற்கு அக்கினி கொண்டுவரப்பட்டது. இனி அதிலிருந்து கிழக்காக புதிய ஆகவனீயத்திற்குக் கொண்டுபோதல் வேண்டும். மற்றும், பத்தினியை ஆகவனீயத்திற்கு அருகாய் கிழக்கே அழைத்துக் கொண்டுவரல் வேண்டும். அதற்கருகிலுள்ள வண்டிகளும் கிழக்கே கொண்டும்வரப்பட்டன. இது பற்றியே அவைகள் தேடப்பட்டன. இவ்வாறு செய்தமையின், பழைய காருகபத்தியத்திற்கு இடமில்லாமற் போய்விட்டது. அதனால் அவ்வக்கினி கோபமடைந்து உருத்திரனாய் எசமானனுடைய பசுக்களைக் கொல்லும், ஆதலின், கடாவைக் கொல்லுமிடத்திற்குக் கொண்டுபோகுங்கால் கடாவின் அங்கங்களை வேகவைப்பதற்கும், பழைய காருகபத்தியத்திலிருந்து தீயெடுத்துக் கொண்டு போனால் பழைய காருகபத்தியத்திற்கும் இடமுண்டாயிற்று. ஆகையால் அது சாந்தமாய் எசமானனுடைய பசு முதலானவற்றைக் கெடுக்க மாட்டாது என்பதாம்.

---

ஆகவனீயத்திலிருந்து பசுவைச் சமைக்கத் தீயெடுத்துக்கொண்டு போயின் குற்றமென்று காட்டுகின்றது.

பிராமணம் 3

**यजमानो वा आहवनीयो यजमानं वा एतद्वि कर्षन्ते यदाहवनीयात्पशु-
श्रपण१॰ हरन्ति स वैव स्यान्निर्मन्थ्यं वा कुर्याद्यजमानस्य सात्मत्वाय ।**

என்பது

உரை

ஆகவனீயத்திலிருந்து அக்கினியை எடுத்துக் கொண்டுபோனால், ஆகவனீயம் எசமானவடிவாமாதலின் எசமானனையே இழுத்துச் சென்றதுபோலாகும். ஆதலின் கடைந்தெடுத்துக் கொள்ளல் வேண்டும், இவ்வாறு செய்யின் எசமானன் நிறைந்த வடிவினனாகின்றான் என்பதாம்.

---

பசுவைக்கூறத் தொடங்கியதால் அதில் ஒரு பிராயச் சித்தத்தை விதிக்கின்றது.

பிராமணம் 4

**यदि पशोरवदानं नश्येदाज्यस्य प्रत्याख्यायमव द्येत्सैव ततः प्रायश्चित्तिः ।**

என்பது

உரை.

எடுத்த பசுவின் அங்கங்கள் கெட்டுப்போய்விடில் கெட்ட அங்கங்களின் தொகையளவு எண் கொண்ட நெய்யை எடுத்துக்கொள்ளல் வேண்டும். ஈண்டு நெய்யெடுத்தலே பிராயச்சித்தமாம் என்பதாம்.

---

தொடர்புபற்றி ஒரு காமியத்தை விதிக்கின்றது.

பிராமணம் 5

**येपशुं विमथ्नीरन्यस्तान्कामयेताऽऽर्तिमार्छेयुरिति कुविदङ्गेति नमोवृक्तिव-त्यर्चाऽऽग्नीध्रे जुहुयान्नमोवृक्तिमेवैषां वृङ्क्ते ताजगार्तिमार्छन्ति ।**

என்பது

உரை

வேள்வி செய்யும்போது பகைவன் கலகஞ்செய்து யாகத்திற்குக் குறிப்பிட்ட பசுவைத் தன்னதென்று கொண்டுபோய்விடுவானேல், 'குவிதங்க' என்பது முதலிய மந்திரத்தால் ஆக்னீத்ரத்தீயில் ஓமஞ் செய்தல் வேண்டும். இம்மந்திரம் வணக்கத்தைத் தொலைப்பது என்னும் பொருள் கொண்ட சொல்லையுடையதாம்; ஆதலின், பகைவன், சுற்றத்தார் நண்பர் முதலானோர்களால் நீக்கப்பட்டு வணக்கஞ் செய்யப்படாதவனாகின்றான். மற்றும் அவன் நீக்கப்பட்ட தன்மை பற்றி மானக்கேடு வந்தது கொண்டு விரைவில் இறந்தும் விடுகின்றான் என்பதாம்.

மூன்றாவது அநுவாகம்

முற்றிற்று

---

நான்காம் அநுவாக விடயச் சுருக்கம்.

प्रजापतेरिति द्वाभ्यां स्यादुपाकरणंपाशोः ।
प्रजापञ्चजुहोत्यग्नौ नाना तन्नयनेजपेत् ॥ १ ॥
यत्पशुर्मृतहोमस्याच्छमिता गच्छतः पशुम् ।
अध्वर्यु यजमानौ द्वावदि पाशप्रमोचनम् ॥ २ ॥
अरावृक्षादिषुज्ञेयत्वां जुहोति वपोपरि ।
जा वपाहुतिरेवस्यात्स्वाहा इत्यभितोहुतिः ॥ ३ ॥
अनुवाके चतुर्थेस्मिन्मन्त्राष्षोडश कीर्तिताः ।

*பசுவை உபாகரணம் (இச்சிமரக்கிளையாலும் தருப்பைகளாலும் தொடுதல்) செய்தல், ஐந்து நெய் ஹோமங்கள் செய்தல், பசுவை சாமித்திரத்திற்கு ஓட்டிக்கொண்டு போகுங்கால் செபித்தல், பசுவைக் கொன்ற பிறகு ஹோமஞ் செய்தல், வேட்போன் வேள்வித் தலைவர்களிருவரும் போற்றுதல், பசுவின் கழுத்திற் கட்டிய கயிற்றையவிழ்த்தல், பகைவிருக்கில் அக் கயிற்றை மரத்திற் கட்டுகல், வபைக்குமேல்ஹோமஞ் செய்தல், வபையை ஹோமஞ் செய்தல், பரிவப்யஹோமங்கள் என்பது.*

---

## மூன்றுங் காண்டம் முதற் பிரபாடகம்

### நான்காம் அநுவாகம்

*நான்கு பஞ்சாதிகட்குமேல் பதினாறு பதங்களைக் கொண்டது.*

பசுவின் உபாகரணத்தை (தருப்பையாற்றொடுதலை)க் கூறு மந்திரங்கள்.

प्रजापतेर्जायमानाः प्रजा जाताश्च या इमाः । तस्मै प्रति प्र वेदय चिकित्वाँ अनु मन्यताम् । इमं पशुं पशुपते ते अद्य बध्नाम्यग्ने सुकृतस्य मध्ये । अनु मन्यस्व सुयजा यजाम जुष्टं देवानामिदमस्तु हव्यम् । प्रजानन्तः प्रति गृह्णन्ति पूर्वे प्राणमङ्गेभ्यः पर्याचरन्तम् ।

सुवर्गं याहि पथिभिर्देवयानैरोषधीषु प्रति तिष्ठा शरीरैः। येषामीशे ॥ १ ॥ पशुपतिः पशूनां चतुष्पदामुत च द्विपदाम् । निष्क्रीतोऽयं यज्ञियं भागमेतु रायस्पोषा यजमानस्य सन्तु । येबध्यमानमनु बध्यमाना अभ्यैक्षन्त मनसा चक्षुषा च । अग्निस्ताꣳ अग्रे प्र मुमोक्तु देवःप्रजापतिः प्रजया संविदानः । य आरण्याः पशवो विश्वरूपा विरूपास्सन्तोबहुधैकरूपाः। वायुस्ताꣳ अग्रे प्र मुमोक्तु देवः प्रजापतिः प्रजया संविदानः । प्रमुञ्चमानाः ॥ २ ॥ भुवनस्य रेतो गातुं धत्त यजमानाय देवाः। उपाकृतꣳ शशमानं यदस्थाज्जीवं देवानामप्येतु पाथः । नाना प्राणो यजमानस्य पशुना यज्ञो देवेभिस्सह देवयानः । जीवं देवानामप्येतु पाथस्सत्यास्सन्तु यजमानस्य कामाः। यत्पशुर्मायुमकृतोरो वा पद्भिराहते । अग्निर्मा तस्मादेनसो विश्वान्मुञ्चत्वꣳहसः । शमितार उपेतन यज्ञम् ॥ ३ ॥ देवेभिरिन्वितम् । पाशात्पशुं प्र मुञ्चत बन्धाद्यज्ञपतिं परि । अदितिः पाशं प्र मुमोक्त्वेतं नमः पशुभ्यः पशुपतये करोमि । अरातीयन्तमधरं कृणोमि यं द्विष्मस्तस्मिन्प्रति मुञ्चामि पाशम् । त्वामु ते दधिरे हव्यवाहꣳ शृतंकर्तारमुत यज्ञियं च । अग्ने सदक्षस्सतनुर्हि भूत्वाऽथ हव्या जातवेदो जुषस्व । जातवेदो वपया गच्छ देवान्त्वꣳ हि होता प्रथमो बभूथ । घृतेन त्वं तनुवो वर्धयस्व स्वाहाकृतꣳ हविरदन्तु देवाः । स्वाहा देवेभ्यो देवेभ्यस्स्वाहा ॥ ४ ॥

பசு உபாகரணம்)

இதில் பசுவின் உபாகரண மந்திரங்கள் முதலானவைகள் கூறப்படு கின்றன.

முதற்காண்டம் மூன்றும் பிரபாடகம் ஏழாம் அநுவாகத்தின் மூன்றும் விநியோகத்தில், இச்சிக்கிளையாலும் தருப்பையாலும் ஆட்டுக்கடாவைத் தொடுதல் என்னும் உபாகரணங் கூறப்பட்டிருக்கின்றது. அதில் உபயோகிக் கப்படும் மந்திரங்கள் இரண்டனுள்,

---

முதலாம் மந்திரம்

**प्रजापतेर्जायमानाः प्रजा जाताश्चया इमाः । तस्मै प्रति प्र वेदय चिकित्वाꣳ अनु मन्यताम् ।**

என்பது

உரை

இப்போது உண்டாகின்ற பசுக்களும், இதற்கு முன் உண்டாகிய பசுக் களும் பிரசாபதியினிடத்திலிருந்தே உண்டாயிற்று. ஆகையால், பசுவே! (ஆட்டுக்கடாவே!) நீ, பிரசாபதியிடஞ்சென்று, தனித்தவிடத்தில் தனது வரலாற்றைக் கூறுவாயாக. அப்பிரசாபதி அதையுணர்ந்து உனக்கு சுவர்க்க மடையும் வகையை உணர்வித்து உன்னை ஏற்றுக்கொள்வன் என்பதாம்.

---

அதில், இரண்டாமந்திரம்.

**इमं पशुं पशुपते ते अद्य बध्नाम्यग्ने सुकृतस्य मध्ये । अनु मन्यस्व सुयजा यजाम जुष्टं देवानामिदमस्तु हव्यम् ।**

என்பது

உரை

பசுபதியாகிய அக்கினியே! இன்று, இக்கருமங்களுக்குள், அதாவது சோதிட்டோம யாகச் செயல்கட்கிடையில் இக்கடாவை யூபத்திற் கட்டுகின் றேன். அதற்கு நீ அநுமதி கொடுத்தருள்வாயாக. யாம் நல்ல வேள்வியால் வழி படுகின்றோம். இந்த அவி தேவர்கட்கு விருப்பமுடையதாகுக என்பதாம்.

---

ஷை விநியோகத்தில் வேட்போன் ஆகவனீயத்தீயில் வசாஹோமஹவணி யென்னும் ஒருஅகப்பை விசேடத்தாற் செய்யப்படும் ஐந்து ஹோமங்களுள் முதலாம் ஹோமம்.

மூன்றும் மந்திரம்

**प्रजानन्तः प्रति गृह्णन्ति पूर्वे प्राणमङ्गेभ्यःपर्याचरन्तम् । सुवर्गं याहि पथिभिर्देवयानैरोषधीषु प्रति तिष्ठा शरीरैः ।**

என்பது.

உரை.

ஆட்டுக்கடாவே; முன்னுள்ள தேவர்கள் உனதுவரலாற்றை அறிந்தவர்களாய் உனது அவயவங்களின்மீது பற்றிநிற்கும் பிராணனை, இது எம்முடையதென்று ஏற்றுக்கொள்கின்றனர். நீ, தேவர்கள் செல்லுமார்க்கமாக பிராணவடிவாய்ச் சுவர்க்கஞ் சென்று எஞ்சிய அவயவங்களால் கொடி செடிகளில் இருப்பாயாக. அதாவது புரோடாசம் போன்று அவியாவாயாக என்பதாம்.

---

நான்காம் மந்திரம்.

**येषामीशे पशुपतिः पशूनां चतुष्पदामुत च द्विपदाम् । निष्क्रीतोऽयं यज्ञियं भागमेतु रायस्पोषा यजमानस्य सन्तु ।**

என்பது

உரை

இருகாற் பசுக்கட்கும், நாற்காற் பசுக்கட்கும் உருத்திரன் ஈசனுவான். அத்தகைய உருத்திரனைத்தலைவனுகக் கொண்ட பசுக்களுக்குள், இக்கடாவை உருத்திரனிடத்திலிருந்து விலைக்கு வாங்கினேன். இக்கடா, வேள்விக்குரிய அவிர்ப்பாகம் ஆகுக. எசமானனுக்கு தனம் வளருக என்பதாம்.

---

ஐந்தாம் மந்திரம்

**ये बध्यमानमनु बध्यमाना अभ्यैक्षन्त मनसा चक्षुषा च । अग्निस्ताँ अग्रे प्र मुमोक्तु देवः प्रजापतिः प्रजया संविदानः ।**

என்பது

உரை

இக்கடாவினுடைய தாய்தந்தை சகோதரர்கள் மற்றும் கூட இருக்கின்றவைகள் அனைத்தும், இதனிடத்திலுள்ள அன்பால் இக் கடாவிற்குப் பின்னுல் கட்டப்பட்டவைகளாய் எவைகள் மனதாலும் கண்ணுலும் பார்த்துக் கொண்டிருக்கின்றனவோ, அவைகளை அக்கினிதேவன் அவிழ்த்து விடுவானுக. பிறகு,பிரசாபதியாகிய தேவன், தனது பசுக்களுடன் ஒன்ருய் அப்பசுக்களை விட்டுவிடுவானுக என்பதாம்.

ஆறுவது மந்திரம்

**य आरण्याः पशवो विश्वरूपा विरूपास्सन्तो बहुधैकरूपाः । वायुस्ताꣳ-
अग्रे प्र मुमोक्तु देवः प्रजापतिः प्रजया संविदानः ।**

என்பது

உரை

வனத்திலுள்ளவைகள், நாட்டிலுள்ளவைகள் என்று, நிறத்தாலும் சாதி வேறுபாட்டாலும் பல்வேறுவகைப்பட்ட பசுக்கள் (ஆட்டுக்கடாக்கள்) இருப்பினும் அவைகளனைத்தும் பசுத்(விலங்குத்) தன்மையால் ஒன்றேயாம். அவைகளை வாயு விடுவிப்பதாகுக. மற்றவை முன்போல் என்பதாம்.

---

ஏழாவது மந்திரம்

**प्रमुञ्चमाना भुवनस्य रेतो गातुं धत्त यजमानाय देवाः । उपाकृतꣳ शश-
मानं यदस्थाज्जीवं देवानामप्येतु पाथः ।**

என்பது

உரை

தேவர்களே ! புவனத்தின் உற்பத்திக்கு யாகவாயிலாக நிமித்தமாகிய ஆட்டுக்கடாவை, அதனுடைய சுற்றங்களிலிருந்து விடுவிக்கும் எசமானனுக்குச் சுவர்க்கத்தைக் கொடுப்பீர்களாக. தருப்பையாற் றொடுதலால் புநிதமானதும் அவியையருந்தும் தேவர்களிடத்தில் கலப்பதுமாகிய ஆட்டுக்கடாவின் அங்கசமுதாயம், அன்னமாகித் தேவர்களுக்கு உதவுக, மற்றும், எசமானனுக்குச் சுவர்க்கத்தையும் அளிப்பதாகுக என்பதாம்.

---

முதற் காண்டம், மூன்றும் பிரபாடகம் எட்டாம் அநுவாகத்தின் பன்னிரண்டாவது விநியோகத்தில், ஆட்டுக்கடாவை வடக்கே சாமித்திரத்திற்குக் கொண்டுபோகும்போது வேட்போன் செபிக்கவேண்டிய மந்திரம்.

எட்டாவது மந்திரம்

**नाना प्राणो यजमानस्य पशुना यज्ञो देवेभिस्सह देवयानः । जीवं देवा-
नामप्येतु पाथस्सत्यास्सन्तु यजमानस्य कामाः ।**

என்பது

உரை.

எசமானனுடைய பிராணன் பசுவுடன் வேறுகுக. செய்யப்படும் யாகம் விளக்கமுடைய ஆட்டுக்கடாவின் பிராணங்களோடு அவியையருந்தும் தேவர் களிடஞ் செல்க. ஆட்டுக்கடாவாகிய அன்னம் தேவர்களின் வாழ்விற்குக் காரணமாகுக. அதனுல், எசமானனுடைய விருப்பம் உண்மையதாகுக என் பதாம்.

---

முதற் காண்டம், மூன்றும் பிரபாடகம், எட்டாம் அநுவாகம் பதின்மூன்றவது விநியோகத்தில், ஆட்டுக்கடாவின் உயிர்போனபிறகு செய்யவேண்டிய ஹோம மந்திரம்

ஒன்பதாவது மந்திரம்

यत्पशुर्मायुमकृतोरो वा पद्भिराहते । अग्निर्मा तस्मादेनसो विश्वान्मुञ्च-
त्वꣳहसः ।

என்பது

உரை

இவ்வாட்டுக்கடா இறக்குபபோது இறப்புத்துன்பால் கத்திஞலும், அல் லது, கால்களை இங்குமங்கும் ஆட்டி அடித்துக் கொள்ளினும் உண்டாகும் பாவத்தை அக்கினி நீக்குக. மற்றும், கட்டுதல் முதலியவைகளால் உண்டா கும் பாவங்களேயும் போக்குக என்பதாம்

---

ஷை விநியோகத்தில், ஏகசூலம் துவிசூலங்களுடன் ஆட்டுக்கடாவைக் கொன்று விடத்திற்குச் செல்வதற்குரிய மந்திரம்

பத்தாவது மந்திரம்

शमितार उपेतन यज्ञं देवेभिरिन्वितम् । पाशात्पशुं प्र मुञ्चत बन्धाद्य-
ज्ञपतिं परि ।

என்பது

உரை

ஆட்டுக்கடாவைக் கொல்வோய்! தேவர்களாற் சூழப்பெற்ற வேள்வியைச் செய்விப்பீர்களாக. வேள்வித் தலைவனையும், பசுவைக் கட்டின குற்றத்தி லிருந்து விடுவிப்பீர்களாக என்பதாம்.

---

ஷை விநியோகத்தில், பசுவைக் கட்டியிருந்த கயிற்றை அவிழ்ப்பதற்கு மந்திரம்

பதினோராவது மந்திரம்

अदितिः पाशं प्र मुमोक्त्वेत नमः पशुभ्यः पशुपतये करोमि ।

என்பது

உரை.

*பூமி, இக்கடாவை அவிழ்த்துவிடுக. யான், பசுக்கட்கும், பசுபதிக்கும், எனது பிழை நீங்குதற் பொருட்டு வணக்கஞ் செய்கின்றேன் என்பதாம்.*

---

பகைவனுக்கு மாரணத்தொழில் செய்யில், அவிழ்த்த கயிற்றை ஒரு மரத்தில், அல்லது ஒரு கோம்பில் கட்டிவைத்தல் வேண்டும் என்பதற்கு மந்திரம்.

பன்னிரண்டாவது மந்திரம்.

अरातीयन्तमधरं कृणोमि यं द्विष्मस्तस्मिन्प्रति मुञ्चामि पाशम् ।

என்பது

உரை.

*என்மீது பகைமை செய்கின்றவனை என்னினும் தாழ்ந்தவனுச் செய்கின்றேன். மற்றும், பகைமைசெய்ய விரும்புகின்றவனல்லன் எனினும் வேறு சமயத்தில் பகைமை செய்வானெனக் கருதி இப்போது அவனிடம் பொறுமை கொள்கின்றேன். அத்தகைய பகைவனை இக்கயிற்றாற் கட்டுகின்றேன் என்பதாம்.*

---

முதற்காண்டம், மூன்றும் பிரபாடகம் ஒன்பதாம் அநுவாகம் பதினேட்டாவது விநியோகத்தில், காய்ச்சும் வபையின்மீது ஹோமஞ் செய்வதற்குரிய மந்திரம்

பதின்மூன்றுவது மந்திரம்.

त्वामु ते दधिरे हव्यवाहꣳ शृतंकर्तारमुत यज्ञियं च । अग्ने सदक्षस्सतनुर्हि भूत्वाऽथ हव्या जातवेदो जुषस्व ।

என்பது

உரை

அக்கினியே! தேவர்கட்கு அவியெடுத்துச் செல்வோனும், அவியைப் பக்குவஞ் செய்கின்றவனும், எக்ஞத்தைத் தேடுகின்றவனுமாகிய உன்னையே காரியஞ் செய்வோனென முற்கூறிய தேவர்கள் உறுதி கொண்டனர். தோன்றியவைகளை யுணரும் அக்கினியே! நீ, உறுதியாகிய திருமேனியை யுடையவன், உற்சாக முடையவன். ஆதலின், எமது அவியைத்தாங்கிச் செல்வதற்கு விருப்புடையோனுகுவாய் என்பதாம்.

---

முதற்காண்டம், மூன்றாம்பிரபாடகம், ஒன்பதாம் அநுவாகம், பதினெட்டாவது விநியோகத்திற் செய்யப்படும் வபாஹோமத்தின் மந்திரம்.

பதினான்காவது மந்திரம்.

**जातवेदो वपया गच्छ देवान्त्वꣳ हि होता प्रथमो बभूथ। घृतेन त्वं तनुवो वर्धयस्व स्वाहाकृतꣳ हविरदन्तु देवाः।**

என்பது

உரை.

உண்டானவைகளை யுணரும் அக்கினியே! நீ, வபையுடன் தேவர்களை யடைவாயாக. நீ, மனித ஹோதாவினும் முந்திய ஹோதாவாயிருத்தலின், நெய்யால் தேவர்களின் உடம்புகளை வளர்ப்பாயாக. யாம் அர்ப்பித்த அவிகளை தேவர்கள், அருந்துவார்களாக என்பதாம்.

---

ஷை விநியோகத்தில், வபாஹோமத்திற்கு முன்னர்ச் செய்யும், 'பூர்வபரிவப்யம் உத்தபரிவப்யம் என்னும் ஹோமமந்திரங்கள்.

பதினைந்தாவது • பதினாறுவது மந்திரங்கள்.

**स्वाहा देवेभ्यो देवेभ्यस्स्वाहा।**

என்பது

உரை

சுவாஹாகார வபா ஹோமத்திற்கு முன்னர் இந்நெய் தேவர் கட்கு அருப்பணமாகுக. அந்த ஹோமம் வபா ஹோமத்திற்கு அங்கமாதலின் பூர்வபரிவப்யமாம். பின்னர் சுவாஹாரமாகிய வபா ஹோமத்திற்குமேல் இந்த நெய் தேவர்கட்கு அருப்பணமாகுக. இந்த ஹோமம் சுவாஹாகாரமும் வபையும் சமமாதலின் முன்னும் பின்னும் பிரயோகம் என்பதாம்.

நான்காம் அநுவாகம்

முற்றிற்று

## மூன்றாங் காண்டம் முதற் பிரபாடகம்

## ஐந்தாவது அநுவாகம்

*இரண்டு பஞ்சாதிகட்குமேல் ஐந்து பதங்களைக் கொண்டது.*

பசு உபாகரணமுதலிய மந்திரங்கட்கு பிராமணங்கள்.

प्राजापत्या वै पशवस्तेषाꣳ रुद्रोऽधिपतिर्यदेताभ्यामुपाकरोति ताभ्यामेवैनं प्रतिप्रोच्याऽऽलभत आत्मनोऽनाव्रस्काय द्वाभ्यामुपाकरोति द्विपाद्यजमानः प्रतिष्ठित्या उपाकृत्य पञ्च जुहोति पाङ्क्ताः पशवः पशूनेवाव रुन्धे मृत्यवे वा एष नीयते यत्पशुस्तं यदन्वारभेत प्रमायुको यजमानस्स्यान्नाना प्राणो यजमानस्य पशुनेत्याह व्यावृत्त्यै ॥ १ ॥ यत्पशुर्मायुमकृतेति जुहोति शान्त्यै शमितार उपेतनेत्याह यथायजुरेवैतद्वपायां वा आह्रियमाणायामग्नेर्मेधोऽप क्रामति त्वामु ते दधिरे हव्यवाहमिति वपामभि जुहोत्यग्नेरेव मेधमव रुन्धेऽथो शृतत्वाय पुरस्तात्स्वाहाकृतयो वा अन्ये देवा उपरिष्टात्स्वाहाकृतयोऽन्ये स्वाहा देवेभ्यो देवेभ्यस्स्वाहेत्यभितो वपां जुहोति तानेवोभयान्प्रीणाति ॥ २ ॥

*இதில், முற்கூறிய ஆட்டுக்கடாவைத் தருப்பைப் புல்லால் தொடுதலாகிய உபாகரண மந்திரங்கட்கு உரை கூறும் பிராமணங்கள் கூறப்படுகின்றன.*

---

உபாகரண வகையை விதிக்கின்றது.

பிராமணம் 1

प्राजापत्या वै पशवस्तेषाꣳ रुद्रोऽधिपतिर्यदेताभ्यामुपाकरोति ताभ्यामेवैनं प्रतिप्रोच्याऽऽलभत आत्मनोऽनाव्रस्काय ।

என்பது

உரை

பிரசாபதி ஆட்டுக்கடாக்களை உண்டாக்குகின்றனர். அக்கினியாகிய உருத்திரன் அவைகட்கு இறைவன். இவ்விருவரையுங் கூறும் இம்மந்திரத்தால் ஆட்டுக்கடாவை தருப்பையாலும் இச்சிக்கியாலுந் தொடல் வேண்டும். அவ்விருவர்களாலும் உத்தரங் கொடுக்கப்பெற்று இக்கடா கொல்லப்படுகின்றது. அதுவும், தன்மீது குற்றமில்லாதிருத்தற் பொருட்டு என்பதாம்.

---

மந்திரங்கள் இரண்டு என்பதைப் புகழ்கின்றது

பிராமணம் 2

द्वाभ्यामुपाकरोति द्विपाद्यजमानः प्रतिष्ठित्यै ।

என்பது.

உரை

எசமானன் இரண்டுகால்களை யுடையவன், மந்திரங்களும்இரண்டு, ஆதலின் பெருமையை யடைகின்றான் என்பதாம்.

---

உபாகரணஞ் செய்ததற்குப் பின், 'பிரஜானந்த:' என்பது முதலிய ஐந்து மந்திரங்களால் ஐந்து ஹோமங்கள் விதிக்கப்படுகின்றன.

பிராமணம் 3

उपाकृत्य पञ्च जुहोति पाङ्क्ताः पशवः पशूनेवाव रुन्धे ।

என்பது

உரை

உபாகரணஞ் செய்துவிட்டு ஐந்து ஹோமங்கள் செய்தல் வேண்டும். ஆட்டுக்கடாக்கள் பங்ந்தி என்னுஞ் சந்தங்களாகின்றன. ஏனெனின்? கால்கள் நான்கும் வால் ஒன்றுஞ் சேர்ந்து ஐந்தானதாலென்க. பங்ந்திச் சந்தமும் ஐந்தெழுத்துக் கொண்ட தென்பதாம்.

---

கடாவைக் கொல்வதன் பொருட்டுக் கொண்டு போருங்கால், வேட்போன் செபிக்கும் மந்திரத்திலுள்ள, நாநா, என்பதன் பொருளின் கருத்தைக் காட்டுகின்றது.

பிராமணம் 4

मृत्यवे वा एष नीयते यत्पशुस्तं यदन्वारभेत प्रमायुको यजमानस्स्यान्नाना प्राणो यजमानस्य पशुनेत्याह व्यावृत्त्यै ।

என்பது

உரை

மரணத்தின் பொருட்டுக் கொண்டுபோகும் கடாவின் பின்புறத்தைக் கையாற்றொடுதல் வேண்டும். இது எசமானனுடைய பிராணன் கடாவுடன் கூடாமல் வேறாதல் வேண்டும் என்கின்றது என்பதாம்.

---

கொன்றபிறகு செய்யும் ஹோமம் விதிக்கப்படுகின்றது

பிராமணம் 5

**यत्पशुर्मायुमकृतेति जुहोति शान्त्यै ।**

என்பது

உரை.

'அம்ஹஸோ முஞ்சது' என்னும் மந்திரத்தாற் போற்றுதல் பாவம் நீங்குதற் பொருட்டென்பதாம்.

---

வேட்போனும், வேள்வித் தலைவனும் வபையைக் குத்திக் காய்ச்சும் ஒருவகை முள்ளை எடுத்துக்கொண்டு கடாவை யடைதல் வேண்டுமென்னும் மந்திரத்தின் வெளிப்படைப் பொருளைத் தெரிவிக்கின்றது.

பிராமணம் 6

**शमितार उपेतनेत्याह यथायजुरेवैतत् ।**

என்பது.

உரை

இம்மந்திரம் பாதங்களுடன் (அடிகளுடன்) கூடியதால் இருக்கு மந்திரமேயாம். அங்ஙனமாயினும் எசுர்வேதத்திற் கூறப்பட்டிருத்தலின், அல்லது, அக்கருமத்தில் விநியோகஞ் செய்வதால் எசுர்மந்திர மெனப்படு கின்றது என்பதாம்.

---

வபையின் (ஈரல் சவ்வின்)மேல் நெய்விடுதலை விதிக்கின்றது

பிராமணம் 7

**वपायां वा आह्रियमाणायामग्नेर्मेधोऽपक्रामति त्वामु ते दधिरे हव्यवाहमिति वपामभि जुहोत्यग्नेरेव मेधमवरुन्धेऽथो शृतत्वाय ।**

என்பது

உரை

ஹோமத்தின் பொருட்டு வபையைக் கொண்டுவரும்போது அக்கினி யிடத்திலிருந்து எக்ஞும் கடஞுக வாங்கப்படுகின்றது. அது, இந்த ஹோமத்தால் நீக்கப்படுகின்றது. இதுபற்றியே, மந்திரத்தில், அக்கினி வேள்வியைத் தாங்குகின்றது எனப்பட்டது. இதனுல் அவியை ஏற்றுக்கொள்வது என்பதுமாம். மற்றும், "சமைக்குங் கருத்தனே" எனச் சிறப்பித்தலின் இந்த ஹோமமானது வபை நன்கு பக்குவமாதற் பொருட்டுச் செய்யப்படுகின்றது என்பதாம்.

---

பூர்வ பரிவப்யம், உத்தர பரிவப்யம் என்னும் ஹோமங்களை விதிக்கின்றது

பிராமணம் 8

**पुरस्तात्स्वाहाकृतयो वा अन्ये देवा उपरिष्टात्स्वाहा कृतयोऽन्ये स्वाहा देवेभ्यो देवेभ्यस्स्वाहेत्यभितो वपां जुहोति तानेवोभयान्प्रीणाति ।**

என்பது

உரை.

முன் சுவாஹாகாரத்தேவதை வேறு, பின் சுவாஹகாரஞ் செய்யப்பெற்ற தேவதைகள் வேறு, சுவாஹா என்னுஞ் சொல்லை முன்னும் பின்னும் மாற்றி வைத்திருத்தலின் இருவகையான தேவதைகளும் இதனுற் பிரியமடைகின்றன என்பதாம்.

ஐந்தாம் அநுவாகம்

முற்றிற்று

---

ஆறும் அநுவாக விடயச் சுருக்கம்.

आग्नेय्यग्ने नयेतीदं विष्णुरित्येषवैष्णवी ।
अग्न आयूंषि चाग्नेयी आवायो इतिवायवी ॥ १ ॥
आधाये अग्निमैन्द्री स्याद्युनज्मीति त्रिभिः क्रमात् ।
साद्यन्ते द्रोणकलशाधवनीयौचपूत भृत् ॥ २ ॥
युनेतिमन्त्रणं कुर्यात्सवनीय स्रुव स्रुचाम् ।
अग्निरित्यादिदशभिर्ग्रहपात्राणि संस्पृशेत् ॥
षष्ठानुवाके संप्रोक्ता मन्त्रा एकोन विंशतिः ॥ ४ ॥

அபிமந்திரண மந்திரம்)

ஆக்னேய இருக்கால் அக்னீத்ர மண்டபத்தையும், விஷ்ணு மந்திரத்தால் அவிர்த்தானத்தையும், அக்ன, என்பது முதலியதால் சுருக்கு முதலானவைகளையும், ஆவாயோ, என்பது முதலியதால் கிரகபாத்திரங்களையும், ஆகாயே, என்பது முதலியதால் சபாமண்டபத்தையும் தொடுதல். வேதியில்வைத்த சுருக்குக்களை அபிமந்திரணஞ் செய்தல், துரோணகலசம், பூதபிருத்து ஆதவனீயம் என்பவைகளை வைத்தல், உபாம்சு முதலிய பத்துக்கிரக பாத்திரங்களையும் பத்து மந்திரங்களால் தொடுதல் என்பது.

---

## மூன்றுங் காண்டம் முதற் பிரபாடகம்

## ஆறுவது அநுவாகம்.

இரண்டு பஞ்சாதிகட்குமேல் முப்பத்துமூன்று பதங்களைக் கொண்டது.

அபிமந்திரணத்திற்குரிய மந்திரங்களும், பிராமணங்களும்

यो वा अयथादेवतं यज्ञमुपचरत्या देवताभ्यो वृश्च्यते पापीयान्भवति यो यथादेवतं न देवताभ्य आ वृश्च्यते वसीयान्भवत्याग्नेय्यर्चाऽऽग्नीध्रमभि मृशेद्वैष्णव्या हविर्धानमाग्नेय्या स्रुचो वायव्यया वायव्यान्यैन्द्रिया सदो यथादेवतमेव यज्ञमुप चरति न देवताभ्य आ वृश्च्यते वसीयान्भवति युनज्मि ते पृथिवीं ज्योतिषा सह युनज्मि वायुमन्तरिक्षेण ॥ १ ॥ ते सह युनज्मि वाचꣳ सह सूर्येण ते युनज्मि तिस्रो विपृचस्सूर्यस्य ते । अग्निर्देवता गायत्री छन्द उपाꣳशोः पात्रमसि सोमो देवता त्रिष्टुप्छन्दोऽन्तर्यामस्य पात्रमसीन्द्रो देवता जगती छन्द इन्द्रवायुवोः पात्रमसि बृहस्पतिर्देवताऽनुष्टुप्छन्दो मित्रावरुणयोः पात्रमस्यश्विनौ देवता पङ्क्तिश्छन्दोऽश्विनोः पात्रमसि सूर्यो देवता बृहती ॥ २ ॥ छन्दश्शुक्र-

स्य पात्रमसि चन्द्रमा देवता सतो बृहती छन्दो मन्थिनः पात्र-
मसि विश्वे देवा देवतोष्णिहा छन्द आग्रयणस्य पात्रमसीन्द्रो देव-
ता ककुच्छन्द उक्थानां पात्रमसि पृथिवी देवता विराट्छन्दो ध्रुव-
स्य पात्रमसि ॥ ३ ॥

இவ்வநுவாகம், சோமரசம் பிழியும்பகலிலுள்ள பிரயோகத்தைத் தொடங்கும்போது தொடுவதையும், மந்திர விசேடங்களையுங் கூறுகின்றது.

---

தோடும் வகையை விதிக்கின்றது

பிராமணம் 1

यो वा अयथादेवतं यज्ञमुपचरत्या देवताभ्यो वृश्च्यते पापीयान्भवति यो
यथादेवतं न देवताभ्य आ वृश्च्यते वसीयान्भवत्याग्नेय्यर्चाऽऽग्नीध्र-
मभि मृशेद्वैष्णव्या हविर्धानमाग्नेय्या स्रुचो वायव्यया वायव्यान्यैन्द्रिया
सदो यथादेवतमेव यज्ञमुप चरति न देवताभ्य आ वृश्च्यते वसीया-
न्भवति ।

என்பது

உரை.

ஆக்னீத்ர மண்டம் அவிர்த்தானமண்டபம் என்பவைகளுக்கு யாதொரு தேவதையுண்டோ, அதையன்றி வேறு தேவதையை வழிபடில் உரிய தேவதையை விட்டுவிட்ட குற்றமும் வறுமையும் வரும். ஆதலின் எம்மந்திரத்தில் எத்தேவதை கூறப்பட்டிருக்கின்றதோ, அம்மந்திரத்தால் அதைத் தொட்டு விடில் அக்குற்றம் இல்லை. அம்மந்திரங்கள் வருமாறு :—அக்னேநய, என்னும் மந்திரத்தால் ஆக்னீத்ர மண்டபத்தையும், இதம் விஷ்ணுர் விசக்ரம், என்னு மந்திரத்தால் அவிர்த்தான மண்டபத்தையும், 'அக்ன ஆயூம்ஷிபவஸே, என்னு மந்திரத்தால் சுருக்குக்களையும், 'ஆவாயோ பூஷசுசிபா: என்பதால் கிரகபாத்திரங்களையும், ஆகாயே அக்னிமிந்ததே என்னு மந்திரத்தால் சபையையுந் தொடல் வேண்டும் என்பதாம்.

---

அபிமந்திரண மந்திரம்)

துரோண கலசம், ஆதவனீயம் பூதபிருத் என்னும் சோமரச பாத்திரங்களை வைத்தற்குரிய மந்திரங்கள்.

மந்திரங்கள் 1, 2, 3.

**युनज्मि ते पृथिवीं ज्योतिषा सह युनज्मि वायुमन्तरिक्षेण ते सह युनज्मि वाचꣳ सह सूर्येण ते ।**

என்பது

**உரை**

துரோண கலசமே! உனது வடிவாகிய மண்ணை, அக்கினியுடன்கூட இவ்விடத்தில் வைக்கின்றேன். ஆதவனீயமென்னுங்குடமே! உனது வடிவாகிய வாயுவை அதன் நிலைக்களமாகிய வாயுவுடன் இங்கு வைக்கின்றேன். பூதபிருத் என்னுங் குடமே! உன்னை, வாக்கென்னும் விண்ணுலகத்துடன் இங்கு வைக்கின்றேன் என்பதாம்.

---

சுக முதலான மூன்று சுருக்குக்களைத் தொடுவதற்குரிய மந்திரம்.

மந்திரம் 4.

**युनज्मि तिस्रो विपृचस्सूर्यस्यते ।**

என்பது

**உரை**

சுருக், உபபிருத், துருவம் என்னும் மூன்று சுருக்குக்களையும், சூரியனாகிய உனது ஒளியால் பிரித்துத் தொட்டுவைக்கின்றேன் என்பதாம்.

---

உபாம்சு பாத்திரத்தை வைத்தற்குரிய மந்திரம்.

மந்திரம் 5.

**अग्निर्देवता गायत्री छन्द उपाꣳशोः पात्रमसि ।**

என்பது

**உரை**

கிரக பாத்திரமே! உன்னை அக்கினி தேவதை பாதுகாப்பதாகுக. காயத்திரிச் சந்தம் உன்னைப் பரிபாலிக்க. நீ, 'உபாம்சு' என்னும் சோமரச பாத்திரமாயிருக்கின்றாய் என்பதாம்.

மேலும் மேலும் வைக்கவேண்டிய ஒன்பது பாத்திரங்கட்கும் மந்திரங்கள்.

மந்திரங்கள் 6—14.

सोमो देवता त्रिष्टुप्छन्दोऽन्तर्यामस्य पात्रमसीन्द्रो देवता जगती छन्द इन्द्र-वायुवोः पात्रमसि बृहस्पतिर्देवताऽनुष्टुप्छन्दो मित्रावरुणयोः पात्रम-स्यश्विनौ देवता पङ्क्तिश्छन्दोऽश्विनोः पात्रमसि सूर्यो देवता बृहती छन्दश्शुक्रस्य पात्रमसि चन्द्रमा देवता सतो बृहती छन्दो मन्थिनः पात्रमसि विश्वे देवा देवतोष्णिहा छन्द आग्रयणस्य पात्रमसीन्द्रो देव-ता ककुच्छन्द उक्थानां पात्रमसि पृथिवी देवता विराट्छन्दो ध्रुवस्य पात्रमसि ।

என்பது

உரை

சோமம் தேவதை, திருஷ்டுப் சந்தம், அந்தர்யாமி என்னும் பாத்திரமாயிருக்கின்றாய். இந்திரன் தேவதை, சகதிச்சந்தம், இந்திரவாயுப் பாத்திரமாக இருக்கின்றாய். பிருகற்பதி தேவதை, அநுஷ்டுப்ச் சந்தம், மித்திராவருண பாத்திரமாயிருக்கின்றாய். அசுவினிகள் தேவதை, பங்க்திச் சந்தம், அசுவினிப் பாத்திரமாக இருக்கின்றாய். சூரியன் தேவதை, பிருகதீச் சந்தம், சுக்கிர பாத்திரமாயிருக்கின்றாய். சந்திரன் தேவதை, சதோபிருகதிச்சந்தம், மந்தி என்னும் பாத்திரமாயிருக்கின்றாய். விசுவே தேவதை, உஷ்ணிக்ச் சந்தம், ஆக்கிராயண பாத்திரமாயிருக்கின்றாய். இந்திரன் தேவதை, ககுத்ச் சந்தம், உக்த்ய பாத்திரமாயிருக்கின்றாய். பிருதிவி தேவதை, விராட்ச் சந்தம், துருவ பாத்திரமாயிருக்கின்றாய் என்பதாம்.

ஈண்டு, இவ்வாநுவாகத்திற் கூறிய பிரயோகங்களை, முதற் காண்டம், மூன்றும் பிரபாடகம், பதின்மூன்றும் அநுவாகம் ஹ்ருதேத்வா, மனஸேத்வா என்னும் அநுவாகத்தின் பிரயோகத்திற் காண்க.

ஆறும் அநுவாகம்

முற்றிற்று.

———

ஏழாம் அநுவாக விடயச் சுருக்கம்.

आसन्येति पुरा होमस्स्यात्प्रातरनुवाकतः ।
स्पधर्या सुन्वतस्सोमं संवेशाहुति पञ्चकम् ॥ १ ॥
प्रशब्दयुक्तानि याज्यानि मरुत्वत्य उपक्रमे ।
बृहद्रथतरेद्वे च विहव्यंच निमित्ततः
नित्यप्रयोगादेतावान्विशेषस्स्पर्धयांभवेत् ॥ २ ॥

பிராதரநுவாகம் என்னுஞ் சஸ்திரத்தைச் சொல்வதற்குமுன் செய்ய வேண்டிய ஓமம், ஷை ஹோமத்தின் இடத்தில் பகையுடைய வேள்வித் தலைவர்கள் செய்யவேண்டிய ஐந்து ஹோமங்கள் என்னுமிவைகட்கு மந்திரங் களும், உத்காதா என்பவன் பகையுடையவன் செய்யும் வேள்வியிற் செய்ய வேண்டிய விசேடம், ஹோதாவிற்கு விசேடம், எசமானனுக்கு விசேடம் என்னுமிவைகட்குப் பிராமணங்களும் இவ்வநுவாகத்திற் சொல்லப்படுகின் றன என்பது.

---

## மூன்றுங் காண்டம் முதற் பிரபாடகம்

## ஏழாவது அநுவாகம்

*மூன்று பஞ்சாதிகட்குமேல் இருபத்தெட்டுப் பதங்களைக் கொண்டது.*

இரண்டு வேள்வித் தலைவர்கள் தம்முள் பொறுமை கொண்டு செய்யும் வேள்வியின் பிரயோகங்களைக் கூறு மந்திரங்களும் பிராமணங்களும்.

इष्टर्गो वा अध्वर्युर्यजमानस्येष्टर्गः खलु वै पूर्वोऽर्ष्टुः क्षीयत आस-
न्यान्मा मन्त्रात्पाहि कस्याश्चिदभिशस्त्या इति पुरा प्रातरनुवाका-
ज्जुहुयादात्मन एव तदध्वर्युः पुरस्ताच्छर्म नह्यतेऽनार्त्यै संवेशाय
त्वोपवेशाय त्वा गायत्रियास्त्रिष्टुभो जगत्या अभिभूत्यै स्वाहा प्रा-
णापानौ मृत्योर्मा पातं प्राणापानौ मा मा हासिष्ट देवतासु वा एते

प्राणापानयोः ॥ १ ॥ व्यायच्छन्ते येषा॑ᳲ सोम॑स्समृच्छते॑ संवे॒-

शाय॑ त्वोपवे॒शाय॒ त्वेत्या॑ह॒ छन्दा॑ᳲसि वै सं॒वेश उ॑पवे॒शश्छन्दो॑-

भि॒रेवास्य॒ छन्दा॑ᳲसि वृङ्क्ते प्रेति॑वन्त्याज्या॑नि भवन्त्य॒भिजि॑त्यै

म॒रुत्व॑तीः प्रति॒पदो॒ विजि॑त्या उ॒भे बृ॑हद्रथंत॒रे भ॑वत इ॒यं वाव र॑थं-

त॒रम॒सौ बृ॒हदा॒भ्यामे॒वैन॑मन्त॒रेत्य॒द्य वाव र॑थंत॒रᳲ श्वो बृ॒हद॑द्याश्वा-

दे॒वैन॑मन्त॒रेति भू॒तम् ॥ २ ॥ वाव र॑थंत॒रं भ॑वि॒ष्यद्बृ॒हद्भू॒ताच्चै-

वैनं॑ भवि॒ष्यत॒श्चान्त॒रेति॒ परि॑मितं॒ वाव र॑थंत॒रमप॑रिमितं बृ॒हत्परि॑-

मि॒ताच्चै॒वैन॒मप॑रिमिताच्चान्त॒रेति विश्वामित्रजमदग्नी वसि॑ष्ठेनास्पर्धे-

ता॒ᳲ स॒ ए॒तज्ज॒मद॑ग्निर्विह॒व्य॑मपश्य॒त्तेन॒ वै स वसि॑ष्ठस्येन्द्रि॒यं वी॒र्य॑म-

वृङ्क्त॒ यद्वि॑ह॒व्य॑ᳲ श॒स्यत॑ इन्द्रि॒यमे॒व तद्वी॒र्यं॑ यज॑मानो॒ भ्रातृ॑व्यस्य

वृङ्क्ते॒ यस्य॒ भूया॑ᳲसो य॒ज्ञक्र॑तव॒ इत्या॑हु॒स्स दे॒वता॑ वृङ्क्त॒ इति

य॒द्य॑ग्नि॒ष्टो॒मस्सोमः॑ प॒रस्ता॑त्स्यादु॒क्थ्यं॑ कुर्वी॒त य॒द्युक्थ्य॑स्स्याद॑-

तिरा॒त्रं कु॑र्वीत य॒ज्ञक्र॑तुभि॒रेवास्य॑ दे॒वता॑ वृङ्क्ते॒ वसी॑यान्भवति ॥३॥

ஒரு நித்தியப்பிரயோகத்தை விதிக்கின்றது.

பிராமணம் 1.

इष्टर्गो वा अध्वर्युर्यजमानस्येष्टर्गः खलु वै पूर्वोऽर्ष्टुः क्षीयत आसन्यान्मा म-
न्त्रात्पाहि कस्याश्चिदभिशस्त्या इति पुरा प्रातरनुवाकाज्जुहुयादात्मन
एव तदध्वर्युः पुरस्ताच्छर्म नह्यतेऽनात्यै ।

என்பது

உரை

சோம்பல் முதலியவைகளால் விருப்பத்தைக் கெடுக்கும் வேட்போன், எசமானனுடைய வேள்வியிலும் சோம்பல் முதலான வைகளைப் போக்கமுடியாத வனுகின்றனுதலின் முதலில் தானுங் கெடுகின்றுன், பிறகு எசமானனுங் கெடுகின்றுன்; அதில் தனது கேட்டை நீக்குவதற்கு, ஹோதாவின் பிராதரநுவாகத்தை ஓதுவதற்கு முன் 'ஆசநாயத்' என்பது முதலிய மந்திரத்தால் நெய்யைக்கொண்டு ஒரு ஹோமஞ் செய்தல்வேண்டும். அதனுல், வேட்போன் தனக்குச் சுகத்தைத் தேடுகின்றுன். அது எசமானனுடைய சுகத்தின் பொருட்டாகின்றது.

ஹோமமந்திர உரை.

அக்கினியே! நீ, பகைவனுடைய முகத்திலிருந்துண்டாகும் செய்வினை மந்திரத்திலிருந்து எம்மைப் பாதுகாப்பாயாக. தேவ! எம்மைப் பரிபாலிப்பாயாக. அங்ஙனமே! எல்லாவகையான செய்வினைகளிலிருந்தும் எம்மைப் பாதுகாப்பாயாக என்பதாம்.

இந்த ஹோமமும் முதற்காண்டம் மூன்றும் பிரபாடகம் பதின் மூன்றும் அநுவாகத்தில் விநியோகிக்கப் படுகின்றது. இந்த ஹோமம் சோமயாகத்தில் நித்தியமாய்ச் செய்யவேண்டியதாம்.

---

பொறமையைால் சோமயாகஞ் செய்யும் இரண்டு வேள்வித் தலைவர்கள், மேற்கூறிய ஹோமமந்திரத்திற்குப் பதிலாகச் செய்யவேண்டிய ஐந்து மந்திரங்கள் இவையெனக் காட்டுகின்றது.

மந்திரங்கள் 1-2-3-4-5

**संवेशाय त्वोपवेशाय त्वा गायत्रिया अभिभूत्यै स्वाहा ।**

என்பது

உரை.

படுக்கை ஆசனம் என்னுமிரண்டுங் கிடைத்தற் பொருட்டும், பகைவன் தாழ்ந்துபோதற் பொருட்டும், காயத்திரியையே கருத்தாவாகக் கொண்ட அக்கினியே! உனக்கு இவ்வாகுதி அர்ப்பணமாகுக என்பதாம்

---

ஈண்டு, ஸ்வாஹா என்பதுடன்,

**संवेशायत्वोपवेशायत्वा त्रिष्टुभोऽभि भूत्यैस्वाहा ।**

எனவும்,

**संवेशायत्वोपवेशायत्वा जगत्या आभिभूत्यैस्वाहा ।**

எனவும்,

**प्राणापानौ मृत्योर्मापातꣳस्वाहा ।**

பிராண அபானன்களே! மிருத்துவினின்றும் எம்மைப் பாதுகாப்பீர்களாக எனவும்

**प्राणापानौ मामाहासिष्टꣳस्वाहा**

பிராண அபானன்களே! ஒருக்காலும் எம்மை விட்டுவிடாதீர்கள்.

எனவும் அந்வயஞ் செய்துகொண்டு ஐந்து மந்திரங்களையும் பகுத்துணர்ந்துகொள்க.

---

மேற்கூறிய மந்திரங்கட்குப் பிராமணங்கள்.

பிராமணம் 2

**देवतासु वा एते प्राणापानयोर्व्यायच्छन्ते येषाꣳ सोमस्समृच्छते संवेशाय त्वोपवेशाय त्वेत्याह छन्दाꣳसि वै संवेश उपवेशश्छन्दोभिरेवास्य छन्दाꣳसि वृङ्क्ते ।**

என்பது

உரை

இரண்டு வேள்வித் தலைவர்கள் பொறுமையால் சோமயாகங்களைத் தொடங்கில், தேவதைகளைப் பற்றியும், பிராண அபானன்களைப் பற்றியும் இது எமது இது எமது என்று விவாதம் உண்டாகின்றதோ, அங்கு, "சம்வேசாய த்வா" என்பதுமுதலான ஐந்து மந்திரங்களால், பிராதரநுவாகத்திற்கு முன்செய்தல் வேண்டும் என்கின்றது. சம்வேசம் உபவேசம் என்பது சந்தங்களாமாதலின் வேள்வியில் ஓதத் தொடங்கிய சந்தங்களால் பகைவனுடைய சந்தங்கெட்டுவிடுகின்றது. தேவர்களும், பிராண அபானன்களும் தனது வசமானதால் துன்பின்றி புகவும் உட்காரவும் வல்லுநராகின்றார்கள் என்பதாம்.

பொற்றுமை யாகஞ் செய்யத் தொடங்குவதில் வேட்போன் செய்ய வேண்டிய தொழில்களைக்கூறிவிட்டு உத்காதா செய்யவேண்டியதைக் கூறுகின்றது.

பிராமணம் 3

**प्रेतिवन्त्याज्यानि भवन्त्यभिजित्यै मरुत्वतीः प्रतिपदो विजित्या उभे बृहद्रथंतरे भवतः ।**

என்பது

உரை.

உத்காதா (சாம மறைபாடுவோன்) 'அக்ன ஆயாஹி' என்பதற்குப் பதிலாக, 'பிரவோவாஜா:' என்பது முதலியதைப் பாடல் வேண்டும். இத்தகைய பாடல், பிரதிபதி, எனவும், மருத்வதீ: எனவும் வழங்கப்பெறும். இதனால் வெற்றி யுண்டாகின்றது. இதுவும் ஆஜ்யத்துதியிலாம். பிருஷ்டத்துதியிலோ, பிருகத் சாமம், ரதந்தர சாமம் என்னு மிரண்டையும் ஓதுமிடத்து விகல்பமாகிறது. பொறுமையாற் செய்யும் இவ்வேள்வியிலோ, பிருகத், ரதந்தரம் என்னும் இரண்டும் ஒன்று சேர்ந்தே ஓதப்படுகின்றன என்பதாம்.

---

சேர்ந்துள்ள அவ்விரண்டையும் பலவாறகப் புகழ்கின்றது.

பிராமணம் 4.

**इयं वाव रथंतरमसौ बृहदाभ्यामेवैनमन्तरेत्यद्यवाव रथंतर१ श्वो बृहद्द्याश्चादेवैनमन्तरेति भूतं वाव रथंतरं भविष्यद्बृहद्भूताच्चैवैनं भविष्यतश्चान्तरेति परिमितं वाव रथंतरमपरिमितं बृहत्परिमिताच्चैवैनमपरिमिताच्चान्तरेति ।**

என்பது

உரை.

பிருகத், ரதந்தரம் என்னுமிரண்டு துதிகளும் மண்ணுலக முதலிய உலகங்களை யடைவதற்குக் காரணங்களாதலின் அவ்வடிவங்களாய்த் துதிக்கப்படுகின்றன. அவ்விரண்டு துதிகளையும் ஒன்று சேர்த்து ஓதினவன், இரண்டுலகத்தும் பொருண்மை யுடையவனை விலக்குகின்றான். மற்றும்; நிகழ்கால முதலிய வடிவாகவும் இறந்தகால முதலிய வடிவாகவுந் துதிக்கின்றவன், இரண்டு

நாட்களிலும் விலக்குகின்றான். நிகழ்கால பயன் இறந்தகால பயனாகத் துதிக்கின் அவ்விரண்டு பயன்களிலிருந்தும் விலக்குகின்றான். அங்ஙனமே கணக்கிலாதது, கணக்குள்ளது என்னும் இரண்டு நலங்களிலிருந்தும் விலக்குகின்றான் என்பதாம்.

---

இவ்வாறு, இருவநக்தும், 'சம்வேசு, என்பது முதலிய மந்திரத்தாற் செய்ய வேண்டியவற்றைக் கூறிவிட்டு ஹோதாவின் செயலைக் கூறகின்றது.

பிராமணம் 5.

**विश्वामित्रजमदग्नी वसिष्ठेनास्पर्धेताꣳ स एतज्जमदग्निर्विहव्यमपश्यत्तेन वै स वसिष्ठस्येन्द्रियं वीर्यमवृङ्क्त यद्विहव्यꣳ शस्यत इन्द्रियमेव तद्वीर्यं यजमानो भ्रातृव्यस्य वृङ्क्ते ।**

என்பது.

உரை

இத்தகைய யாகத்தில், ஹோதா (இருக்கோதுவோன்) வைசுவ தேவ சஸ்திரத்தை ஓதும்போது, ஆநோபத்ரா, என்னுஞ் சூக்தத்திற்குப் பதிலாக 'மமாக்னே' என்பது முதலிய 'விஹவ்யம்' என்னுஞ் சூக்தத்தை ஓதல் வேண்டும். இதனால் சமதக்கினி ஓதிய விஹவ்ய சஸ்திரத்தால் வசிஷ்ட முனிவருடைய இந்திரியவன்மை கெட்டதுபோல் எசமானனிடத்துப் பொறாமை கொண்ட பகைவனுடைய இந்திரியவன்மையுங் கெட்டுவிடும் என்பதாம்.

---

எசமானன் செய்யவேண்டிய செயல் விசேடத்தைக் காட்டுகின்றது.

பிராமணம் 6

**यस्य भूयाꣳसो यज्ञक्रतव इत्याहुस्स देवता वृङ्क्त इति यद्यग्निष्टोमस्सोमः परस्तात्स्यादुक्थ्यं कुर्वीत यद्युक्थ्यस्स्यादतिरात्रं कुर्वीत यज्ञक्रतुभिरेवास्य देवता वृङ्क्ते वसीयान्भवति ।**

என்பது

உரை

பொறாமை கொண்டவர்களுள், மிகுந்த அங்க உபாங்கங்களுடன் கூடிய எக்ஞக் கிருதுக்களை யுடையவன், பொறாமை யுடையவனது தேவதைகளைக் கெடுக்கின்றான். ஆதலின், பொறாமையுடைய ஒருவன், பன்னிரண்டு துதிகளுடன்கூடிய அக்கினிஷ்டோம யாகத்தை முடிக்கின்றபோது பொறாமைக்

குரிய மற்ெருருவன், பதினைந்து துதிகளோடுகூடிய 'உக்த்யம்' என்னும் யாகத்தைச் செய்தல் வேண்டும். ஒருகால், அவன் உக்த்ய யாகத்தைச் செய்யில், இவன், இருபத்தொன்பது துதிகளுடன்கூடிய 'அதிராத்திரம்' என்னும் யாகத்தைச் செய்வானுக என்பதாம்.

ஏழாம் அநுவாகம்
முற்றிற்று.

---

எட்டாவது அநுவாக விடயச்சுருக்கம்.

निग्राभ्यादितृषन्नन्त निग्राभ्याग्रहणेसति ।
स्वामिनग्राचयेत्सोमं मन्त्रयेत ह्यवीवृधं ॥ १ ॥
आमास्कानभि मन्त्र्यांशुद्रप्सो बिन्दुंतुमन्त्रयेत् ।
चत्वार एते मन्त्रास्स्युरष्टमे त्वनुवाकके ॥ २ ॥

உபாம்சுக் கிரகத்திற்குத் தண்ணீர் விடும்போது வேள்வித்தலைவனை ஓதுவித்தல், சோமத்தை அபிமந்திரணஞ் செய்தல், முதலிலெழுஞ் சோமத்திவலையைப் போற்றல், பிறகு எழும், பெருந் திவலைகளைப் போற்றல் என்பது.

---

## மூன்ருங் காண்டம் முதற்பிரபாடகம்

## எட்டாம் அநுவாகம்

மூன்று பஞ்சாதிகட்குமேல் பத்துப் பதங்களைக் கொண்டது

உபாம்சுக்கிரகத்திற்குரிய மந்திரங்கள்.

निग्राभ्यास्स्थ देवश्रुत आयुर्मे तर्पयत प्राणं मे तर्पयतापानं मे तर्पयत व्यानं मे तर्पयत चक्षुर्मे तर्पयत श्रोत्रं मे तर्पयत मनो मे तर्पयत वाचं मे तर्पयताऽऽत्मानं मे तर्पयताङ्गानि मे तर्पयत प्रजां मे तर्पयत पशून्मे तर्पयत गृहान्मे तर्पयत गणान्मे तर्पयत सर्व-

गणं मा तर्पयत तर्पयत मा ॥ १ ॥ गणा मे मा वि तृषन्नोषधयो वै सोमस्य विशो विशः खलु वै राज्ञः प्रदातोरीश्वरा ऐन्द्रस्सोमोऽवीवृधं वोमनसा सुजाता ऋतप्रजाता भग इद्वस्स्याम । इन्द्रेण देवीर्वीरुधस्संविदाना अनु मन्यन्ताꣳ सवनाय सोममित्याहौषधीभ्य एवैनꣳ स्वायै विशस्स्वायै देवतायै निर्याच्याभि षुणोति यो वै सोमस्याभिषूयमाणस्य ॥ २ ॥ प्रथमोऽꣳशुस्स्कन्दति स ईश्वर इन्द्रियं वीर्यं प्रजांपशून्यजमानस्य निर्हन्तोस्तमभि मन्त्रयेताऽऽ मांऽस्कान्त्सह प्रजया सह रायस्पोषेणेन्द्रियं मे वीर्यं मा निर्वधीरित्याशिषमेवैतामा शास्त इन्द्रियस्य वीर्यस्य प्रजायै पशूनामनिर्घाताय द्रप्सश्चस्कन्द पृथिवीमनु द्यामिमं च योनिमनु यश्च पूर्वः । तृतीयं योनिमनु संचरन्तं द्रप्सं जुहोम्यनु सप्त होत्राः ॥३॥

*இவ்வநுவாகத்தில், உபாம்சுக் கிரகத்திற்குச் சோமரசம் பிழிவதன் பொருட்டு வேண்டிய மந்திரங்கள் கூறப்படுகின்றன.*

---

அவிழ்மதீரிமா:, என்பது முதலிய மந்திரத்தால் குடத்தில் நிறைத்து வைத்திருக்கின்ற நீரை வார்த்துக் கொள்ளும்போது, எசமானனை ஓதும்படி செய்யவேண்டிய மந்திரம்.

மந்திரம் 1

निग्राभ्यास्स्थ देवश्रुत आयुर्मे तर्पयत प्राणं मे तर्पयतापानं मे तर्पयत व्यानं मे तर्पयतचक्षुर्मे तर्पयत श्रोत्रं मे तर्पयत मनो मे तर्पयत वाचं मे तर्पयताऽऽत्मानं मे तर्पयताङ्गानि मे तर्पयत प्रजां मे तर्पयत पशून्मे तर्पयत गृहान्मे तर्पयत गणान्मे तर्पयत सर्वगणं मा तर्पयत तर्पयत मा गणा मे मा वितृषन् ।

என்பது

உரை

நிக்ராப்யம், தேவசுருதம் என்னுந் தண்ணீரே! நீ, எமது ஆயுளைக் கொடுப்பாயாக. இவ்வாறே, பிராணன், வியானன், கண், செவி, மனம், வாக்கு, ஆன்மா, அங்கங்கள், பிரசைகள், பசுக்கள், வீடுகள், கணங்கள், சர்வ கணங்கள் என்பவைகளைக் களிப்படைவிப்பாயாக. உனது நலச் செயலால் எமது ஏவலாளர் கூட்டம் துன்பிலாததாகுக என்பதாம்.

இது, முதற் காண்டம், நான்காம் பிரபாடகம், முதலநுவாகத்தின் முதல் விநியோகத்திற்கு முன்னர் விநியோகிக்கப் படுகின்றது,

---

சோமத்தைப் போற்றும் மந்திரத்தை எடுத்துக்கொண்டு உரை கூறுகின்றது.

பிராமணம் 1 மந்திரம் 2

**ओषधयोवै सोमस्य विशो विशःखलु वै राज्ञःप्रदातोरीश्वरा ऐन्द्रस्सोमो-ऽवीवृधं वो मनसा सुजाता ऋतप्रजाता भग इद्वस्स्याम। इन्द्रेण देवी-र्वीरुधस्संविदाना अनु मन्यन्ताꣳ सवनाय सोममित्याहौषधीभ्य एवै-नꣳ स्वायै विशस्स्वायै देवतायै निर्याच्याभि षुणोति।**

என்பது

உரை

சோமராசனுடைய பிரசைகள் கொடி செடிகளாம் ஆதலின் எமக்குச் சோமத்தைக் கொடுத்தற்குரியவைகள். இந்திரதேவதையையுடையது சோமம். ஆதலின், கொடி செடி, இந்திரன் என்பவர்களைப் பொருளாகக் கொண்ட அவீவிருதம் என்னும் மந்திரத்தால் சோமனைத் துதித்தல்கூடும். மந்திரப் பொருள்:— எல்லாவுயிர்கட்கும் உதவி புரிதலின் நல்ல பிறப்பை யுடையவை களும், யாகத்தின் பொருட்டு உண்டானவைகளுமான கொடி செடிகாள்? உங்களை மனதால் வளர்க்கின்றோம். அதாவது உங்களைப் போற்றுவதிலேயே எப்போதும் இருக்கின்றோம். இந்திரனுடன் ஒன்றுபட்ட சோமக்கொடிக ளான தேவிகள் காலையில் இரசம் பிழிவதற்கு ஆணை கொடுப்பார்களாக. இம் மந்திரத்தைப் படித்தலால், சோமத்தின் பிரசைகளான கொடிசெடிகள், தேவ தையாகிய இந்திரன் என்பவர்களிடத்தில் சோமத்தை வாங்கிப் பிழிகின்றான் என்பதாம்.

இது, முதற் காண்டம், நான்காம் பிரபாடகம், இரண்டாம் அநுவாகத் தின் முதல் விநியோகத்தில் விநியோகிக்கப் படுகின்றது,

பிழியும்போது முதலில் எழுகின்ற சோமரசத்தைப் போற்றுதலை விதிக்கின்றது.

பிராமணம் 2 மந்திரம் 3

**यो वै सोमस्याभिषूयमाणस्य प्रथमोऽंशुस्स्कन्दति स ईश्वर इन्द्रियं वीर्यं प्रजां पशून्यजमानस्य निर्हन्तोस्तमभि मन्त्रयेताऽऽ माऽस्कान्त्सह प्रजया सह रायस्पोषेणेन्द्रियं मे वीर्यं मा निर्वधीरित्याशिषमेवैतामा शास्त । इन्द्रियस्यवीर्यस्य प्रजायै पशूनामनिर्घाताय ।**

என்பது

உரை

பிழியும் இரண்டு பலகைகட்கிடையில் வைத்துப் பிழியும்போது முதலில் எழுந்துளி பூமியில் விழுகின்றதல்லவா? அது, எசமானனுடைய இந்திரிய முதலியவைகளை அடியோடு கெடுக்கும் வல்லமையுடையதாம். ஆதலின், இம்மந்திரத்தால் அத்துளி போற்றப்படுகின்றது. மந்திரப் பொருள்:— மண்ணில் விழுந்த சோமரசத்துளியே! நீ, பிரசைகளுடனும் தனங்களுடனுங்கூடி எம்மைக் குறித்து மீண்டும் வந்திருக்கின்றாய். ஆதலின் எமது இந்திரியம் முதலானவைகளைக் கெடுக்காதே என்பதாம்.

இது முதற் காண்டம், நான்காம் பிரமாடகம் இரண்டாம் அநுவாகம் முதல் விநியோகத்தில் விநியோகிக்கப் படுகின்றது.

---

போற்றவேண்டிய மந்திரம்.

மந்திரம் 4

**द्रप्सश्चस्कन्द पृथिवीमनु द्यामिमं च योनिमनु यश्च पूर्वः । तृतीयं योनिमनु संचरन्तं द्रप्सं जुहोम्यनु सप्त होत्राः ।**

என்பது

உரை

மண்ணில் விழுந்த சோமரசத்துளியானது மண்ணுலகம் விண்ணுலகம் சுவர்க்கம் என்னும் மூன்றுலகத்துஞ் சென்று நலஞ் செய்வதாகுக, என்று மனதில் பாவித்துக்கொண்டு, அது சிதறிவிழுந்த திசையொழிந்த ஏனைய திசைகளில் ஹோமஞ் செய்கின்றேன் என்பதாம்.

எட்டாம் அநுவாகம்

முற்றிற்று.

## மூன்றாங் காண்டம் முதற் பிரபாடகம்

### ஒன்பதாவது அநுவாகம்

*ஆறு பஞ்சாதிகட்குமேல் பதினொரு பதங்களைக் கொண்டது.*

சவனாகுதிகட்குரிய மந்திரங்களும் பிராமணங்களும்

यो वै देवान्देवयशसेनार्पयति मनुष्यान्मनुष्ययशसेन देवयशस्येव देवेषु भवति मनुष्ययशसी मनुष्येषु यान्प्राचीनमाग्रयणाद्ग्रहान्गृह्णीयात्तानुपाꣳशु गृह्णीयाद्यानूर्ध्वाꣳस्तानुपब्दिमतो देवानेव तद्देवयशसेनार्पयति मनुष्यान्मनुष्ययशसेन देवयशस्येव देवेषु भवति मनुष्ययशसी मनुष्येष्वग्निः प्रातस्सवने पात्वस्मान्वैश्वानरो महिना विश्वशंभूः । स नः पावको द्रविणं दधातु ॥ १ ॥ आयुष्मन्तः सहभक्षास्स्याम । विश्वे देवा मरुत इन्द्रो अस्मानस्मिन्द्वितीये सवने न जह्युः । आयुष्मन्तः प्रियमेषां वदन्तो वयं देवानाꣳ सुमतौ स्याम । इदं तृतीयꣳ सवनं कवीनामृतेन ये चमसमैरयन्त । ते सौधन्वनास्सुवरानशानास्स्विष्टिं नो अभि वसीयो नयन्तु । आयतनवतीर्वा अन्या आहुतयो हूयन्तेऽनायतना अन्या या आघारवतीस्ता आयतनवतीर्याः ॥ २ ॥ सौम्यास्ता अनायतना ऐन्द्रवायवमादायाऽऽघारमा धारयेदध्वरो यज्ञोऽयमस्तु देवा ओषधीभ्यः पशवे नो जनाय विश्वस्मै भूतायाध्वरोऽसि स पिन्वस्व घृतवद्देव

सोमेति सौम्या एव तदाहुतीरायतनवतीः करोत्यायतनवान्भवति य एवं वेदाथो द्यावापृथिवी एव घृतेन व्युनक्ति ते व्युत्ते उपजीवनीये भवत उपजीवनीयो भवति ॥ ३ ॥ य एवं वेदैष ते रुद्र भागो यं निरयाचथास्तं जुषस्व विदेर्गौपत्यꣳ रायस्पोषꣳ सुवीर्यꣳ संवत्सरीणाꣳ स्वस्तिम् । मनुः पुत्रेभ्यो दायं व्यभजत्स नाभानेदिष्ठं ब्रह्मचर्यं वसन्तं निरभजत्स आऽगच्छत्सोऽब्रवीत्कथा मा निरभागिति न त्वा निरभाक्षमित्यब्रवीदङ्गिरस इमे सत्रमासते ते ॥४॥ सुवर्गं लोकं न प्र जानन्ति तेभ्य इदं ब्राह्मणं ब्रूहि ते सुवर्गं लोकं यन्तो य एषां पशवस्ताꣳस्ते दास्यन्तीति तदेभ्योऽब्रवीत्ते सुवर्गं लोकं यन्तो य एषां पशव आसन्तानस्मा अददुस्तं पशुभिश्चरन्तं यज्ञवास्तौ रुद्र आऽगच्छत्सोऽब्रवीन्मम वा इमे पशव इत्यदुर्वै ॥ ५ ॥ मह्यमिमानित्यब्रवीन्न वै तस्य त ईशत इत्यब्रवीद्यद्यज्ञवास्तौ हीयते मम वै तदिति तस्माद्यज्ञवास्तु नाभ्यवेत्यꣳ सोऽब्रवीद्यज्ञे माऽऽभजाथ ते पशून्नाभि मꣳस्य इति तस्मा एतं मन्थिनस्सꣳस्रावमजुहोत्ततो वै तस्य रुद्रः पशून्नाभ्यमन्यत यत्रैतमेवं विद्वान्मन्थिनस्सꣳस्रावं जुहोति न तत्र रुद्रः पशूनभि मन्यते ॥ ६ ॥

இதில், சவனாகுதி சொல்லப்படுகின்றது.

சவனுகுதி மந்திரம்)

கிரஹ (சோமரசம் பிடிக்கும்) பாத்திரங்களின் இரைச்சல். இரைச்சல் இன்மைகளை முறையே விதிக்கின்றது.

பிராமணம் 1

यो वै देवान्देवयशसेनार्पयति मनुष्यान्मनुष्ययशसेन देवयशस्येव देवेषु भवति मनुष्ययशसी मनुष्येषु यान्प्राचीनमाग्रयणाद्ग्रहान्गृह्णीयात्तानुपाꣳशु गृह्णीयाद्यानूर्ध्वाꣳस्तानुपब्दिमतो देवानेव तद्देवयशसेनार्पयति मनुष्यान्मनुष्ययशसेन देवयशस्येव देवेषु भवति मनुष्ययशसी मनुष्येषु ।

என்பது

உரை

எசமானன், தேவர்களின் பெருமையை அடைவிக்கில் தேவர்களுக்குள் தேவதையின் பெருமையை யடைகின்றான். மனிதர்களின் பெருமையை யடைவிக்கில் மனிதர்களுக்குள் மக்கட் பெருமையை யடைகின்றான். அவ்விரண்டிற்கும் உபாயம் எது வெனின்? கூறப்படுகின்றது. ஆக்கிராயணக் கிரக பாத்திரத்திற்கு முன் கிரகிக்கப்படும், அம்சு, உபாம்சு, ஐந்திர வாயவீயம் என்பவைகளில் சோமரசம் பிடிக்கும்போது அருகிலுள்ளார்கட்கும் காதில கேட்காதபடி மந்திரங்களை ஓதிச் சோமரசத்தைப் பிடித்தல் வேண்டும். இதனுல் தேவர்கட்குள்ள பெருமை அடையப்படுகின்றது. ஆக்கிராயண கிரகபாத்திரத்திற்குமேல் பிடிக்கப்படும், உக்த்யம் முதலான கிரகபாத்திரங்களில் சோமரசத்தைப் பிடிக்கும்போது அருகிலுள்ளார்க்குக் கேட்கும்படி சிறிது ஒலியெழுமாறு மந்திரங்களை ஓதல்வேண்டும். இதனுல் மனிதர்களின் பெருமை அடையப்படுகின்றது என்பதாம்.

---

முதலாவது சவனுகுதி மந்திரம்.

மந்திரம் 1

अग्निः प्रातस्सवने पात्वस्मान्वैश्वानरो महिना विश्वशंभूः । स नः पावको द्रविणं दधात्वायुष्मन्तस्सहभक्षास्स्याम ।

என்பது.

உரை

பாவத்தைப் போக்கிப் புநிதஞ் செய்வதாகிய இந்த அக்கினி எம்மால் காலைச்சவனஞ் (காலையில் சோமரசம் பிழிதல்) செய்யும்போது எம்மைப் பாது காக்க. மற்றும், எல்லா மக்கட்கும் இறையும், தனது மகிமையால் உலகிற்கு சுகங் கொடுப்பதுமாகிய அவ்வக்கினி எமக்குத் தனத்தைக் கொடுக்க. அன்றி யும், நீண்ட ஆயுளுடன் எல்லாவற்றையும் அநுபவிக்கின்றவர்களுடன்கூட யானும் எவ்வாற்றானு மிருப்பேனாக என்பதாம்.

---

மத்தியான சவனம் முடியும்போது செய்யவேண்டிய மந்திரம்,

மந்திரம் 2

**विश्वे देवा मरुत इन्द्रो अस्मानस्मिन्द्वितीये सवने न जह्युः । आयुष्मन्तः प्रियमेषां वदन्तो वयं देवानाᳪ सुमतौ स्याम ।**

என்பது.

உரை.

மருத்துக்கள், இந்திரன், மற்றும் எல்லாத் தேவர்களும், மத்தியான சவ னத்தில் எம்மை விட்டுவிடாதவர்களாகுக. யாம், எத்தேவர்களைத் துதிக் கின்றேமோ, அவர்களுடைய அருளில் நீண்ட ஆயுளுடன் வாழ்ந்துகொண் டிருப்போமாக என்பதாம்.

---

மூன்றாவது சவனுதி மந்திரம்.

**इदं तृतीयᳪ सवनं कवीनामृतेन ये चमसमैरयन्त । ते सौधन्वनास्सुवर्- रानशाना स्स्विष्टिं नो अभि वसीयो नयन्तु ।**

என்பது

உரை.

சமசக் கூட்டங்களைச் செலுத்துகின்றவர்களும், இந்திரனுடைய சம்பந்த முடையவர்களும், சுவர்க்கத்தை அடைந்தவர்களுமான தேவர்கள்; கவிகளான வேள்விச் செயலாளர்களின் சம்பந்தமாகிய இம்மூன்றாவது சோமம் பிழிதலை தனமுடையதாக்கி இதை அடையச் செய்வார்களாக என்பதாம். இந்த ஹோமம் மூன்றாவது சவன முடிவிற் செய்யற்பாலது.

மற்றும், இது, முதற் காண்டம், நான்காம் பிரபாடகம், நாற்பத்து நான் காம் அநுவாகத்தில் விநியோகிக்கப் படுகின்றது. இதை, 'பிருகஸ்பதி சுதஸ்ய' எனனும் அநுவாகத்திற்குமேல் உள்ள தென்று உணர்ந்து கொள்ளல் வேண்டும்.

சவனாகுதி மந்திரம்)

ஐந்தாவது

'பரிப்லவம்' என்னும் ஹோமஞ் செய்தற்குரிய மரப்பாத்திரத்தால் ஆகார ஹோமஞ் செய்யு மந்திரங்களையும் விதிக்கின்றது.

பிராமணம் 2 மந்திரம் 4

आयतनवतीर्वा अन्या आहुतयो हूयन्तेऽनायतना अन्या या आघारवतीस्ता
आयतनवतीर्यास्सौम्यास्ता अनायतना ऐन्द्रव यवमादायाऽऽघारमा
घारयेदध्वरो यज्ञोऽयमस्तु देवा ओषधीभ्यः पशवे नो जनाय विश्वस्मै
भूतायाध्वरोऽसि स पिन्वस्व घृतवद्देव सोमेति सौम्या एव तदाहुती-
रायतनवतीः करोत्यायतनवान्भवति य एवं वेदाथो द्यावापृथिवी एव
घृतेन व्युनत्ति ते व्युत्ते उपजीवनीये भवत उपजीवनीयो भवति य
एवंवेद ।

என்பது

உரை.

ஹோமஞ் செய்யும் ஆகுதிகள், இடமுடையதென்றும் இடமில்லாதென்றும் இருவகைத்து. அவற்றுள், ஆகாரத்தாற் செய்யப்படும் ஹோமம், தரிசபூரணமாத யாகங்களிற் செய்யப்பட்டதாம் அது ஆகாரப் பிரகரணத்திற் கூறப்பட்டிருத்தலால் இடமுடையதாம். சோமயாகத்திலோ, அம்சு, உபாம்சு, அந்தர்யாமக் கிரகங்கள் ஆகார ஹோம மற்றவைகளாதலின் இடமில்லாதவைகள். அவ்வாறே, ஐந்திரவாயவீயம் என்பவைகளுமாம் என வருமிடத்து, அதை நீக்குதற் பொருட்டு, ஐந்திர வாயவீயக் கிரகத்தை ஹோமஞ் செய்வதன்பொருட்டு எடுத்து இடதுகையில் வைத்துக்கொண்டு, வலது கையால் பரிப்லவத்தை யெடுத்து அதில் சோமரசத்தை வார்த்துக்கொண்டு, தென்புறத்து விறகுகள் கூடுமிடத்திற் றொடங்கி, 'அத்வரோயக்ஞ' என்பது முதலிய மந்திரத்தால், கிழக்கில் சோமரசத்தைக் கொட்டல் வேண்டும். இதுவே ஆகாரமாம். மந்திரப் பொருள், தேவர்காள்! கொடி செடிகளின் பொருட்டும், விலங்குகள், மக்கள் என்னும் உயிர்களின் பொருட்டும் இவ்வேள்வி துன்புறுத்தாததாகுக. சோமமே! நீ, துன்பிலாதவனாதலின் நெய்போல் ஒழுகுவாயாக என்பது. இவ்வாறு செய்யின், ஐந்திரவாயவீயக்கிரக முதலியவைகளும் இடமுடையவைகளாகின்றன. இவ்வாறுணர்கின்றவனும் இடம் பெறுகின்றான். நெய்போல் என்றதால், மண்ணும் விண்ணும் பல்வகையான நெய்யால் நனைக்கப் பெற்றதாகின்றன. இவ்வாறு இவ்விரண்டும் நனைக்கப்பட்டதால் எல்லாவுயிர்களும் நனைக்கப்பெற்றதாயின. ஆதலின் இவ்வாறுணர்கின்றவனும் வாழ்விப்பவனாகின்றான் என்பதாம்.

இது, முதற் காண்டம், நான்காம் பிரபாடகம், பதின்மூன்றும் அநுவாகத்தில் விநியோகிக்கப்படுகின்றது.

---

சம்சிராவ ஹோம மந்திரம்.

### மந்திரம் 5

**एष ते रुद्रभागो यं निरयाचथास्तं जुषस्व विदेर्गौपत्यꣳ रायस्पोषꣳ सुवीर्यꣳ संवत्सरीणाꣳ स्वस्तिम् ।**

என்பது

### உரை

உருத்திரதேவ! இந்த சம்சிராவ பாகம் உன்னால் தேவர்களிடத்திலிருந்து வேண்டிக்கொள்ளப் பெற்றது. இதை நீ அருந்துவாயாக. நீ, பசுக்களைப் பாதுகாக்கவும், தனங்களை வளர்க்கவும், அழகிய மகனையும், ஒருவருடத்தில் உண்டாகும் கொடி செடிகளையும் உணர்வாய். ஆதலின் இவற்றை எமக்குக் கொடுத்தருள்வாயாக என்பது கருத்து என்பதாம்.

---

சம்சிராவ ஹோமத்தை விதித்தற் பொருட்டு ஒருகதையை உண்டாக்கிக் கூறத் தொடங்குகின்றது

### பிராமணம் 3

**मनुः पुत्रेभ्यो दायं व्यभजत्स नाभानेदिष्ठं ब्रह्मचर्यं वसन्तं निरभजत्स आऽगच्छत्सोऽब्रवीत्कथा मा निरभागिति न त्वा निरभाक्षमित्यब्रवीत् ।**

என்பது

### உரை

மநு, தமது மக்கட்கு தமது சொத்தைப் பங்கிட்டுக் கொடுத்தனர். அப்போது, 'நபாதிஷ்டன்' என்னும் தமது புதல்வன் பிரமசாரியாய் மறை ஓதிக்கொண்டிருந்தனன் ஆதலின் அவனுக்குப் பாகங் கொடுக்கவில்லை. அப் புதல்வன், தந்தையே! நீ எனக்கு ஏன் பாகம் கொடுக்கவில்லை? என்ற கேட்டதற்கு, உனக்குப் பாகங் கொடுக்காமலில்லை என்று கூறிவிட்டு தனத்தைத் தேடும் வழியை அப்புதல்வனுக்கு உபதேசித்தனர் என்பதாம்.

---

சவனுதி மந்திரம்)

அப்புதல்வன் அவ்வுபாயத்தால் தனத்தை யடைந்தானெனல்

பிராமணம் 4

अङ्गिरस इमे सत्रमासते ते सुवर्गं लोकं न प्र जानन्ति तेभ्य इदं ब्राह्मणं ब्रूहि ते सुवर्गं लोकं यन्तो य एषां पशवस्ताꣳस्ते दास्यन्तीति तदेभ्यो-ऽब्रवीत्ते सुवर्गं लोकं यन्तो य एषां पशव आसन्तानस्मा अददुः ।

என்பது

உரை

ஆங்கிரசர்கள் என்னும் மகரிஷிகள் சத்தர யாகஞ் செய்கின்றவர்கள். அவர்கள், சுவர்க்கத்தையடைய உபாயமாகிய 'நபாநேதிஷ்டம்' என்னும், சஸ்திரத்தை யறியாதவர்களாதலின் சுவர்க்கத்தை யடையமாட்டார்கள். மைந்த! நீ, அங்குச் சென்று, ஓதிய சஸ்திரத்தைப் படிப்பாயேல், யாகமுடிந்து அவர்கள் சுவர்க்கத்திற்கு ஏகும்போது யாகத்திற்குரிய பசுக்களுள் மீந்த பசுக்களை யெல்லாம் உனக்குக் கொடுப்பார்கள். இதுவே, உனக்குப் பாகங் கிடைத்தற்குரிய உபாயம் என்றனர், அவ்வாறே ஓதி அவைகளை யடைந்தனன் என்பதாம்.

---

இனி, நபாநே திஷ்டனுக்கு உருத்திரனுடன் சம்வாதத்தைக் காட்டுகின்றது

பிராமணம் 5

तं पशुभिश्चरन्तं यज्ञवास्तौ रुद्र आऽगच्छत्सोऽब्रवीन्मम वा इमे पशव इत्यदुर्वै मह्यमिमानित्यब्रवीन्न वै तस्य त ईशत इत्यब्रवीद्यद्यज्ञवास्तौ हीयते मम वै तदिति तस्माद्यज्ञवास्तु नाभ्यवेत्यꣳसोऽब्रवीद्यज्ञे माऽऽभ-जाऽथ ते पशून्नाभि मꣳस्य इति तस्मा एतं मन्थिनस्संꣳस्त्रावमजुहोत्ततो वैतस्यरुद्रः पशून्नाभ्यमन्यत ।

என்பது.

உரை

இவ்வாறு அங்கிரசர்கள் கொடுத்த பசுக்களை நபாதிஷ்டன் என்பவன் தனது வீட்டிற்குக் கொண்டு போம்போது, உருத்திரன் வந்து, இப்பசுக்கள் என்னுடையவைகள் என்று போராடினன். அதற்கு, இப்பசுக்கள் ஆங்கிரசர்களாற் கொடுக்கப் பட்டவைகள் என்றனன் நபாதிஷ்டன், அதற்கு உருத்திரன், அற்றேல், பசுக்கட்குத் தலைவர்களாகாதவர் கொடுத்தற் குரியராகார்'

ஏனெனின்? யாகத்தில் மீந்த அவிகட்கிறைவன் யானொருவனே ஆதலின் என்க. இவ்வாற்றால் மற்றொருவரும் வேள்விப்பூமியில் வரக்கூடாது. உனக்கு இந்த மீந்த பசுக்கள் வேண்டுமானால் வேள்வியில் என்னையும் அவிப்பாக மருந்துவோர்களுள் ஒருவனுக்கிக் கொள்வாயாக என்றனன். ஆதலின், நபாநிஷடன், மந்திக்கிரகத்தில் மீந்த சோமரசத்தை பரிதிவைத்திருக்கும் இடத்திற்கு வெளியில் வைத்துள்ள தீயில் உருத்திரன் பொருட்டு ஆகுதி செய்தனன். அதனாற் களிப்புற்ற உருத்திரன், நபாநேதிஷ்டனுடைய பசுக்களைக் கொல்லாது விடுத்தனன் என்பதாம்.

---

அதை விதிக்கின்றது.

பிராமணம் 6.

**यत्रैतमेवं विद्वान्मन्थिनस्संस्रावं जुहोति न तत्र रुद्रः पशूनभि मन्यते ।**

என்பது

உரை

இவ்வாறு, ஐந்திரவாயவ்ய முதலாக வுள்ளவைகளும் உக்த்யம் முடிவாக இருக்கின்றவைகளுமான கிரகங்களுள் இருது பாத்திரங்களிரண்டிலும் சோம ரசத்தைப் பிடிப்பதற்கு முன், ஐந்திரவாயவ்யக்கிரஹ மந்திக்கிரஹ ஹோமஞ் செய்யவேண்டியிருத்தலின், 'மதுச்ச மாதவச்ச' என்னும் அநுவாகத்திற்கு முன்னரே, 'அத்வரோயக்ஞ' என்பது ஆகாரஹோம மந்திரமென்றும், "ஏஷ தேருத்ரபாக" என்பது சம்சிராவ ஹோம மந்திரமென்று தெரிந்துகொள்க. இவ்வாறு; மந்திக்கிரகத்தில் சம்ச்ராவ ஹோமஞ் செய்தவனுடைய பசுக்களை உருத்திரன் கெடுக்கமாட்டான் என்பதாம்.

ஒன்பதாம் அநுவாகம்

முற்றிற்று

---

பத்தாம் அநுவாக விடயச் சுருக்கம்.

जुष्टो द्वे प्रवृतो योऽसौ जुहुयात्प्रवृताहुती ।

यस्त्रिभि र्वैप्रुषोहोमो वागध्वर्यु र्ब्रवीतिहि ॥ १ ॥

विष्णो सोमं स्पृशेदत्र मन्त्रास्सप्तप्रकीर्तिताः ।

பிரவிருத ஹோமங்கள், வைப்ருஷ ஹோமங்கள் அத்வரியு செபிக்க வேண்டிய மந்திரம், சோமத்தை வேள்வித்தலைவன் போற்றல் என்பது.

## மூன்றுங் காண்டம் முதற் பிரபாடகம்

### பத்தாவது அநுவாகம்

*மூன்று பஞ்சாதிகட்குமேல் பதினான்கு பதங்களைக் கொண்டது.*

பிரவிருத ஹோமங்கட்குரிய மந்திரங்கள்.

जुष्टो वाचो भूयासं जुष्टो वाचस्पतये देवि वाक् । यद्वाचो मधुमत्तस्मिन्मा धास्स्वाहा सरस्वत्यै । ऋचा स्तोमꣳ समर्धय गायत्रेण रथंतरम् । बृहद्गायत्रवर्तनि । यस्ते द्रप्सस्स्कन्दति यस्ते अꣳशुर्बाहुच्युतो धिषणयोरुपस्थात् । अध्वर्योर्वा परि यस्ते पवित्रात्स्वाहाकृतमिन्द्राय तं जुहोमि । यो द्रप्सो अꣳशुः पतितः पृथिव्यां परिवापात् ॥ १ ॥ पुरोडाशात्करम्भात् । धानासोमान्मन्थिन इन्द्र शुक्रात्स्वाहाकृतमिन्द्राय तं जुहोमि । यस्ते द्रप्सो मधुमाꣳ इन्द्रियावान्स्वाहाकृतः पुनरप्येति देवान् । दिवः पृथिव्याः पर्यन्तरिक्षात्स्वाहाकृतमिन्द्राय तं जुहोमि । अध्वर्युर्वा ऋत्विजां प्रथमो युज्यते तेन स्तोमो योक्तव्य इत्याहुर्वागग्रेगा अग्र एत्वृजुगा देवेभ्यो यशो मयि दधती प्राणान्पशुषु प्रजां मयि ॥ २ ॥ च यजमाने चेत्याह वाचमेव तद्यज्ञमुखे युनक्ति वास्तु वा एतद्यज्ञस्य क्रियते यद्ग्रहान्गृहीत्वा बहिष्पवमानꣳ सर्पन्ति पराञ्चो हि यन्ति पराचीभिः स्तुवते वैष्णव्यर्चा पुनरेत्योप तिष्ठते यज्ञो वै विष्णुर्यज्ञमेवाकर्विष्णो

त्वं नो अन्तमश्शर्म यच्छ सहन्त्य । प्र ते धारा मधुश्चुत उत्सं दुह्रते अक्षितामित्याह यदेवास्य शयानस्योपशुष्यति तदेवास्यैतेनाऽऽप्याययति ॥ ३ ॥

வேட்போனால் அழைக்கப் பெற்ற வேள்விச் செயலாளர்கள் செய்ய வேண்டிய ஹோம மந்திரங்களுள்,

முதலாம் ஹோம மந்திரம்

மந்திரம் 1

**जुष्टो वाचो भूयासं जुष्टो वाचस्पतये देवि वाक् । यद्वाचो मधुमत्तस्मिन्मा धास्स्वाहा सरस்वत्यै ।**

என்பது

உரை

யான், வாக்குத்தேவதைக்கு அன்பன் ஆவேனாக. அங்ஙனமே பரிபாலக தேவதைக்கும் அன்பன் ஆவேனாக. வாக்குத் தேவியே! ஒலிவடிவ வாக்காலாகிய இன் சொற்களில் யான் நிலைத்திருப்பேனாக. சரசுவதி தேவியே! உனக்கு வணக்கம் என்பதாம்.

---

இரண்டாம் ஹோம மந்திரம்

மந்திரம் 2

**ऋचा स्तोमꣳ समर्धय गायत्रेण रथंतरम् । बृहद्गायत्रवर्तनि ।**

என்பது

உரை

வாக்குத் தேவியே! நீ காரணமாகிய இருக்கால், தோத்திரத்தை, அல்லது, சாமத்தின் ஆவிருத்தியை நன்கு செய்வாயாக. காயத்திர சாமத்துடன் ரதந்தரமென்னுஞ் சாமத்தையும் இனிது உண்டாக்குவாயாக. காயத்திரியை வழியாகக் கொண்ட பிருகத் சாமத்தையும் முழுதும் உண்டாக்குவாயாக. இதனால் இருக்கு, சாமம் முதலிய வற்றிலுள்ள குறையை நீக்கி நிறையச் செய்வாயாக என்பதாம்.

பிரவிநத ஹோமம் முதலாயின)

ஈண்டு, வேட்போன் எந்த இருத்துவிக்கை (வேள்விச் செயலாளனை) அழைக்கின்றானோ அவன் வந்து இவ்விரண்டு ஹோமங்களையுஞ் செய்தல் வேண்டும். அவ்வாறே அனைவருஞ் செய்தல் வேண்டு மென்பதை யுணர்க. இது, முதற்காண்டம், நான்காம் பிரபாடகம், பதின்மூன்றும் அநுவாகத்தில் விநியோகிப்படுகின்றது.

---

வேட்போன், பிரமன், இருக்கோதுவோன் என்னும் மூவருஞ்செய்யவேண்டிய வைப்ருஷ (சோமரசத்துளியின்) ஹோமங்களின் மந்திரங்களுள் முதலா மந்திரம்.

மந்திரம் 3

**यस्ते द्रप्सस्स्कन्दति यस्ते अꣳशुर्बाहुच्युतो धिषणयोरुपस्थात् । अध्व-र्योर्वा परि यस्ते पवित्रात्स्वाहाकृतमिन्द्राय तं जुहोमि ।**

என்பது

உரை

சோமமே! உன்னுடைய பிழியும் பலகைகளின் மேலிருந்து மண்ணில் எந்தத்துளி விழுகின்றதோ, அல்லது, வேட்போனுடைய கையிலிருந்து ஒழுகு கின்றதோ, அல்லது, வடிக்கும் ஆடை நுனியிலிருந்து ஒழுகுகின்றதோ, அந்தத் துளியையும், இந்திரன் பொருட்டு சுவாஹாகாரத்தால் சமர்ப்பித்து ஹோமஞ் செய்கின்றேன் என்பதாம்.

---

இரண்டாவது மந்திரம்.

மந்திரம் 4

**यो द्रप्सो अꣳशुः पतितः पृथिव्यां परिवापात्पुरोडाशात्करम्भात् । धा-नासोमान्मन्थिन इन्द्र शुक्रात्स्वाहाकृतमिन्द्राय तञ्जुहोमि ।**

என்பது

உரை.

நெற்பொரி, புரோடாசம், மாவு, அரிசிப்பொரி, சோமம் என்பவை களிலிருந்து கீழேவிழுந் துளிகளையும், கூறுகளையும், சுவாஹாகாரத்தால் இந்திரனாகிய உனக்கு அர்ப்பித்து ஹோமஞ் செய்கின்றேன் என்பதாம்.

மூன்றாவது மந்திரம்

மந்திரம் 5

**यस्ते द्रप्सो मधुमा॑ इन्द्रियावान्त्स्वाहाकृतः पुनरप्येति देवान् । दिवः पृथिव्याः पर्यन्तरिक्षात्स्वाहाकृतमिन्द्राय तंजुहोमि ।**

என்பது

உரை

*சோமரசமே! இன்சுவையுடையவைகளும், இந்திரியங்களை வளர்ப்பவைகளும், எம்மால் சுவாஹாகாரஞ்செய்தவைகளுமான எந்தத்துளிகள், சுவர்க்கம், வான், மண் என்பவற்றில் ஒன்றின்கண் விழுகின்றனவோ, மீண்டும் தேவர்களையடைகின்றனவோ, அத்தகைய துளிகளை சுவாஹாகாரத்தால் அர்ப்பித்து ஹோமஞ் செய்கின்றேன் என்பதாம்.*

*இவைகளும் முற்கூறியவிடத்தில் விநியோகிக்கப்படுகின்றவைகள்.*

---

பகிழ்ப்பவமானத்தின் பொருட்டு ஒருவரையொருவர் பிடித்துக்கொண்டு, கிழக்கே செல்கின்றவர்களுக்குள் வேட்போன் முதலாவமவனாக இருத்தல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம் 1.

**अध्वर्युर्वा ऋत्विजां प्रथमो युज्यते तेन स्तोमो योक्तव्य इत्याहुर्वागग्रेगा अग्र एत्वृजुगा देवेभ्यो यशोमयि दधती प्राणान्पशुषु प्रजां मयि च यजमाने चेत्याह वाचमेव तद्यज्ञमुखे युनक्ति ।**

என்பது.

உரை

*பகிழ்ப்பவமான துதியின்பொருட்டுச் செல்கின்றவர்களுக்குள் வேட்போன் முதலில் இருத்தலால அவனிடத்திலேயே ஸ்தோமததைச சேர்த்தல வேண்டும் என்று அறிஞர் கூறுகினறனர். அதன் பொருட்டு, 'வாகக்ரேகா, என்பது முதலிய மந்திரததை ஓதல் வேண்டும். மந்திரப் பொருள :— முன்னர்சசெல்க. முன்னர்ச் செல்வதற்கு வன்மையுடையது வாக்கு. அது எத்தன்மையதெனின்? தேவர்களையடைவதற்கு நேர்வழியிற் செல்லும் வேட்போனாகிய என்னிடத்தில் பெருமையை நிலை நாட்டுவதும், பசு முதலியவைகளிடத்தில் பிராணனை இனிது நிலை நாட்டுவதும். எசமானனாகிய எம்மிடத்து புத்திரன முதலான பிரசைகளை நிலைப்படுத்துவதுமாம என்பதாம்.*

பிரவிந்த ஹோமம் முதலாயின)

இதனால், பகிழ்ப்பவமான துதியைத் தொடங்கும்போது வாக்கை உண்டாக்கினது என்பது பெற்றும்.

இதுவும், முற்கூறிய விடத்தில் விநியோகிக்கப்பட்டிருக்கின்றது.

---

பகிழ்ப்பவமானத்திற்கு காலத்தை விதிக்கின்றது.

பிராமணம் 2

**वास्तु वा एतद्यज्ञस्य क्रियते यद्ग्रहान्गृहीत्वा बहिष्पवमानꣳ सर्पन्ति ।**

என்பது.

உரை.

ஐந்திர வாயவீய முதலிய கிரக பாத்திரங்கள் எல்லாவற்றிலும் சோமரசம் பிடித்துக்கொண்டு பகிழ்ப்பவமானத்தின் பொருட்டு இருத்துவிக்குக்கள் தொடர்ந்து செல்கின்றதால், எக்ஞத்திற்கு நிருஹமாகிய இடஞ் செய்யப்பட்டதாயிற்று. ஆகலின், கூறிய கிரகத்திற்கு முன் பிடிததுக் கொண்டு செல்லல் வேண்டுமென்பதாம்.

---

பகிழ்ப்பவமான துதியைச்செய்துவிட்டு, திரும்பிவந்து, விஷ்ணு சம்பந்தமாகிய இருக்குமந்திரத்தால் கிரஹங்களைப் போற்றல் வேண்டுமென விதிக்கும்பிராமணம்.

பிராமணம் 3

**पराञ्चो हि यन्ति पराचीभिस्तुवते वैष्णव्यर्चा पुनरेत्योप तिष्ठते यज्ञो वै विष्णुर्यज्ञमेवाकः ।**

என்பது

உரை

மீண்டும் வாராத வேள்விச் செயலாளர்கள் செல்கின்றனராதலானும், அத்தகைகயரான சாயமோதுவோர்கள், 'உபாஸ்மை காயத' என்பது முதலிய ஒன்பது இருக்குக்களால் துதிக்கின்றனரானதாலும், வேள்விக்குத் தடை வாராது என்று கருதி, சோமத்திற் கருகில் வந்து மீண்டும் எசமானன் துதிப்பானாக. விஷ்ணு வியாபகமாதலின் விஷ்ணு மந்திரத்தால் மீண்டும் எக்ஞந் தொடங்கப் பெற்றது என்பதாம்.

மேற்கூறிய மந்திரத்தை ஓதி, அதன் கருத்தை விளக்குகின்றது.

பிராமணம் 4.

**विष्णो त्वं नो अन्तमश्शर्म यच्छ सहन्त्य। प्र ते धारा मधुश्चुत उत्सं दुह्रते अक्षितमित्याह यदेवास्य शयानस्योपशुष्यति तदेवास्यैतेनाऽऽप्याययति ।**

**என்பது**

உரை

*விஷ்ணுவே! நீ, எமக்கு மிக அருகிலிருக்கின்றவன். பொறுத்தருள் வோய்! நீ, எமது பிழையையும் பொறுத்தருள்வாயாக. உன்னுடைய சோம ரச தாரையை தேன் ஒழுகுகின்றதும், குறையாததுமாகக் கறப்பாயாக. இம்மந்திரத்தை ஓதுவதால் காய்ந்துபோயுள்ள முன் தன்மை இப்போது ஈரமுடையதாக ஆயிற்று என்பதாம். இதுவும், முற்கூறியவிடத்தில் விநி யோகிக்கப்படுகின்றது.*

பத்தாம் அநுவாகம்

முற்றிற்று.

---

பதினோராம் அநுவாக விடயச் சுருக்கம்.

याज्यानु वाक्ये चित्रायां क्रमादग्नेष्टिषु स्थिते ।
अग्न्याग्नेयेऽथसौम्ये स्यादा प्या सं त इतिद्वयम् ॥ १ ॥
इहत्वाष्ट्रे चतस्रस्युः प्रण आन इतिद्वयम् ।
सरस्वत्याः स्त्रियः पीपिचतस्रः पुंसरस्वतः ॥ २ ॥
सिनीवाल्ले सिनीवाल्या इन्द्रमिन्द्रं तथैन्द्रके ।
कारीर्यामसितेत्युक्तं पिण्डी धूमस्यमन्त्रणम् ॥ ३ ॥
विकल्पाद्भिर चत्वारो वर्षाह्वा धूमन्त्रणे ।
अभ्यश्वं कृष्णवस्त्रेण पिनष्टि क्रन्दनायहि ॥ ४ ॥
त्वं धामच्छदि याज्यास्स्युर्दिवो मारुतयागके ।
वैकल्पिकं तत्रयुग्ममुदु चित्रं च सौर्यके ॥ ५ ॥
औवत्रयाचोपहोमाः पञ्चविंशदिहोदिताः ।

யா்சியா புரோநுவாக்கியம்)

சித்திரா என்னும் ஏழு அவிகளைக் கொண்ட இஷ்டியில், அக்கினி, சோமன், துவஷ்டா, சரசுவதி, சரசுவான், சினீவாலீ, இந்திரன் என்னும் ஏழு தேவதைகட்கு யாஜ்யா புரோநுவாக்கியங்களும், காரீரி இஷ்டியில் கரீரம் என்னும் மாவை ஹோமஞ் செய்த பிறகு அதிலிருந்து எழும் புகையைப் போற்றுவதற்குரிய மந்திரமும், ஷை இஷ்டியில் சத்திச்சாரணைக் கொம்பை ஹோமஞ் செய்துவிட்டு அதன் புகையைப் போற்றுவதற்கு மந்திரமும், ஷை மந்திரத்திற்கு விகற்பமாகிய மூன்று மந்திரங்களும், ஷை காரீர இஷ்டியில் குதிரையை கறுப்பு ஆடையால் துடைப்பதற்குரிய மந்திரமும், ஷை இஷ்டியில் மூன்று தேவதைகளுக்கும் முறையே மூன்று யாஜ்யா புரோநுவாக்கியங்களும், உபஹோம மந்திரங்களுஞ் சொல்லப்படுகின்றன என்பது.

———

## மூன்றாங் காண்டம் முதற் பிரபாடகம்

## பதினோராம் அநுவாகம்

காமிய யாஜ்யா புரோநுவாக்கியங்களைக் கூறும் மந்திரங்கள்.

எட்டுப் பஞ்சாதிகட்குமேல் பன்னிரண்டு பதங்களைக் கொண்டது.

अग्निना रयिमश्नवत्पोषमेव दिवेदिवे । यशसं वीरवत्तमम् । गोमाꣳ अग्नेऽविमाꣳ अश्वी यज्ञो नृवत्सखा सदमिदप्रमृष्यः । इडावाꣳ एषो असुर प्रजावान्दीर्घो रयिः पृथुबुध्नस्सभावान् । आ प्यायस्व सं ते । इह त्वष्टारमग्रियं विश्वरूपमुप ह्वये । अस्माकमस्तु केवलः । तन्नस्तुरीपमध पोषयित्नु देव त्वष्टर्वि रराणस्स्यस्व । यतो वीरः ॥ १ ॥ कर्मण्यस्सुदक्षो युक्तग्रावा जायते देवकामः । शिवस्त्वष्टरिहाऽऽगहि विभुः पोष उत त्मना । यज्ञेयज्ञे न उदव । पिशङ्गरूपस्सुभरो वयोधाश्श्रुष्टी वीरो जायते देवकामः । प्रजां त्वष्टा वि ष्यतु नाभिमस्मे अथा देवानामप्येतु पाथः । प्र णो देव्या

नो दिवः । पीपिवाꣳसꣳ सरस्वतस्स्तनं यो विश्वदर्शतः । धुक्षीमहि प्रजामिषम् ॥ २ ॥ ये ते सरस्व ऊर्मयो मधुमन्तो घृतश्चुतः । तेषां ते सुम्नमीमहे । यस्य व्रतं पशवो यन्ति सर्वे यस्य व्रतमुपतिष्ठन्त आपः । यस्य व्रते पुष्टिपतिर्निविष्टस्तꣳ सरस्वन्तमवसे हुवेम । दिव्यꣳ सुपर्णं वयसं बृहन्तमपां गर्भं वृषभमोषधीनाम् । अभीपतो वृष्ट्या तर्पयन्तं तꣳ सरस्वन्तमवसे हुवेम । सिनीवालि पृथुष्टुके या देवानामसि स्वसा । जुषस्व हव्यम् ॥ ३ ॥ आहुतं प्रजां देवि दिदिड्ढि नः । या सुपाणिस्स्वङ्गुरिस्सुषूमा बहुसूवरी । तस्यै विश्पत्नियै हविस्सिनीवाल्यै जुहोतन । इन्द्रं वो विश्वतस्परीन्द्रं नरः । असितवर्णा हरयस्सुपर्णा मिहो वसाना दिवमुत्पतन्ति । त आऽववृत्रन्त्सदनानि कृत्वाऽऽदित्पृथिवी घृतैर्व्युद्यते । हिरण्यकेशो रजसो विसारेऽहिर्धुनिर्वात इव ध्रजीमान् । शुचिभ्राजा उषसः ॥ ४ ॥ नवेदा यशस्वतीरपस्युवो न सत्याः । आ ते सुपर्णा अमिनन्त एवैः कृष्णो नोनाव वृषभो यदीदम् । शिवाभिर्न स्मयमानाभिराऽगात्पतन्ति मिहस्स्तनयन्त्यभ्रा । वाश्रेव विद्युन्मिमाति वत्सं न माता सिषक्ति । यदेषां वृष्टिरसर्जि । पर्वतश्चिन्महि वृद्धो बिभाय दिवश्चित्सानु रेजत स्वने वः । यत्क्रीडथ मरुतः ॥ ५ ॥ ऋष्टिमन्त आप इव सध्रियञ्चो धवध्वे । अभि क्रन्द स्तनय गर्भमा धा उदन्वता परिदीया रथेन । दृतिꣳ सु कर्ष विषितं न्यञ्चꣳ समा भवन्तूद्वता

निषादाः । त्वं त्या चिदच्युताऽग्ने पशुर्न यवसे । धामा ह यत्ते अजर वना वृश्चन्ति शिक्वसः । अग्ने भूरीणि तव जातवेदो देव स्वधावोऽमृतस्य धाम । याश्च ॥६॥ माया मायिनां विश्वमिन्व त्वे पूर्वीः संदधुः पृष्टबन्धो । दिवो नो वृष्टिं मरुतो ररीध्वं प्र पिन्वत वृष्णो अश्वस्य धाराः । अर्वाङेतेन स्तनयित्नुनेह्यपो निषिञ्चन्नसुरः पिता नः। पिन्वन्त्यपो मरुतः सुदानवः पयो घृतवद्विदथेष्वाभुवः । अत्यं न मिहे वि नयन्ति वाजिनमुत्सं दुहन्ति स्तनयन्तमक्षितम्। उदप्रुतो मरुतस्ता२ इयर्त वृष्टिम् ॥ ७ ॥ ये विश्वे मरुतो जुनन्ति । क्रोशाति गर्दा कन्येव तुन्ना पेरुं तुञ्जाना पत्येव जाया । घृतेन द्यावापृथिवी मधुना समुक्षत पयस्वतीः कृणुताऽऽप ओषधीः । ऊर्जं च तत्र सुमतिं च पिन्वथ यत्रा नरो मरुतः सिञ्चथा मधु । उदुत्यं चित्रम् । और्वभृगुवच्छुचिमप्नवानवदा हुवे । अग्निं२ समुद्रवाससम् । आ सवं२सवितुर्यथा भगस्येव भुजिं२ हुवे । अग्निं२ समुद्रवाससम् । हुवे वातस्वनं कविं पर्जन्यक्रन्द्यं२ सहः । अग्निं२ समुद्रवाससम् ॥ ८ ॥

அநுவாகங்களின் தலைப்புச்சொற்களைக் கொண்ட எண் (11).

प्रजापतिरेष तेगायत्रो यज्ञं वै प्रजापतेः प्राजापत्या योवा अयथादेवतमिष्टर्गी निग्राभ्यास्स्थयोवैदेवाञ्जुष्टोऽग्निना रयिमेकादश ॥ ११ ॥

பஞ்சாதிகளின் தலைப்புச் சொற்களைக் கொண்ட எண் (42)

प्रजापतिरकामयत प्रजापतेर्जायमाना व्ययच्छन्ते मह्यमिमान्माया मायिनां द्विचत्वारिंशत् ॥ ४२ ॥

இவ்வநுவாகத்தில் சிலவற்றின் புரோநுவாக்கியங்கள் கூறப்படுகின்றன ஈண்டு, "சித்ராயா யஜேதபசுகாம:" என்பதில், "இவைகள் ஏழு அவி களாகின்றன" என்று கூறப்பட்டிருக்கின்றது. அவற்றுள், முதலாவது அவி யாகிய ஆக்னேய புரோநுவாக்கியங் கூறப்படுகின்றது.

---

முதல் மந்திரம்

अग्निना रयिमश्नवत्पोषमेव दिवेदिवे । यशसं वीरवत्तमम् ।

என்பது

உரை

அக்கினியால் எல்லாரும் தனத்தை யடைகின்றார்கள். மற்றும், தனத் தின் வடிவத்தை மாத்திரம் அடைவதில்லை. மற்றோ, நாடோறும் அதன் மிகு தியையும் அடைகின்றார்கள். குறைவை அடைவதில்லை. தனத்தின் மிகுதி எவ்வண்ணத்ததெனின்? பெருமையைக் கொடுப்பதும் அதிசயமான வீர முடைய மக்களைக் கொடுப்பதுமாம் என்பதாம.

---

மேற்கூறிய அதற்கே யாஜ்யாவாக்கியம்

இரண்டாவது மந்திரம்.

गोमाꣳ अग्नेऽविमाꣳ अश्वीयज्ञो नृवत्सखा सदमिदप्रमृष्यः । इडावाꣳ एषो असुर प्रजावान्दीर्घो रयिः पृथुबुध्नस्सभावान् ।

என்பது.

உரை

உயிரையுடைய அக்கினியே! வேண்டப்படும் எக்குமானது, கோக்களையும், அவிகளையும், இருத்துவிக்குக்களுடன் கூடிய தேவர்களையும், பழிக்கப்படாத தன்மையையும், அன்னத்தையும், மிகுந்த புத்திரப்பேற்றையும், தொடர்ந்து கருமத்தைச் செய்யுந் தன்மையையும், மிகுந்த தனத்தையும், அநுட்டானத் திலும் மந்திரத்திலும் விரிவுடைய தன்மையையும், அறிஞரின கழகத்தையும், உடையதாகுக என்பதாம்.

புரோநுவாக்கியம்)

இரண்டாவது அவியாகிய சோமத்திற்கு யாஜ்யாநுவாக்கியங்களின் தலைப்புச் சொற்களைக் காட்டுகின்றது.

மூன்றாவது நான்காவது மந்திரங்கள்.

**आप्यायस्व सं ते ।**

என்பது.

உரை

*இவ்விரண்டிற்கும், "மாநோஹிம்ஸீத்:" என்னும் அநுவாகத்தில் உரை கூறப்படும் என்பதாம்.*

---

மூன்றும் அவியாகிய துவஷ்டாவிற்கு புரோநுவாக்கியங் கூறப்படுகின்றது.

ஐந்தாவது மந்திரம்

**इह त्वष्टारमग्रियं विश्वरूपमुप ह्वये । अस्माकमस्तु केवलः ।**

என்பது.

உரை

*முக்கியமும், எல்லா வடிவங்களையும் கருப்பத்தில் வைப்பதற் குரியது மாகிய துவஷ்டா தேவதையை இவ்வேள்விக் கருமத்திற்கு அழைக்கின்றேன் என்பதாம்.*

---

மேற்கூறிய அதற்கே யாஜ்யா வாக்கியம்.

ஆறாவது மந்திரம்

**तन्नस्तुरीपमध पोषयित्नु देव त्वष्टर्वि रराणस्स्यस्व । यतो वीरः कर्मण्यः सुदक्षो युक्तग्रावा जायते देवकामः ।**

என்பது.

உரை.

*துவஷ்டாதேவ! நீ வேகத்தையுடையதும், பரிபாலிப்பதுமாகிய தனத்திற்கு வள்ளலாதலின் தனங்களைக் கொடுப்பாயாக. பெற்றுக்கொண்ட தனத்தால், உலகியல், வேதவியல் கருமங்களில் வல்லுநனும், விரைவுடையவனும், சோமரசம் இடித்தும் பிழியும் கற்களையுடையவனும், அதாவது எப்போதும் சோமயாகஞ் செய்கின்றவனும், இத்தகைய வழிபாடு செய்கின்றவன் எமக்கு உண்டாவானாக என்று தேவர்களால் விரும்பத்தக்கவனும், அல்லது தேவர்கட்கு வழிபாடு செய்ய விருப்புடையவனுமாகிய வீரபுத்திரனைப் பெற்றுக் கொள்வோம் என்பதாம்.*

மேற்கூறிய அதற்கே விகற்பமுடைய புரோநுவாக்கியங் கூறப்படுகின்றது.

ஏழாவது மந்திரம்

**शिवस्त्वष्टरिहाऽऽ गहि विभुः पोष उत त्मना । यज्ञेयज्ञे न उद् व !**

என்பது.

உரை

துவஷ்டாவே! நீ, சுகந்தருவோனாய் இவ்வேள்விக் கருமத்திற்கு வருவாயாக. மற்றும், எமது பரிபாலனத்தில் பிறரை வேண்டாமல் தானே பாதுகாக்கும் வன்மையுடையவனுவாய்; அத்தகைய நீ எமது வேள்வியை ஆங்காங்கு இனிது பாதுகாப்பாயாக என்பதாம்.

---

மேற்கூறிய அதற்கே விகற்பமுடைய யாஜ்யா வாக்கியங் கூறப்படுகின்றது,

எட்டாவது மந்திரம்.

**पिशङ्गरूपस्सुभरो वयोधाश्श्रुष्टी वीरो जायते देवकामः । प्रजां त्वष्टा वि ष्यतु नाभिमस्मे अथा देवानामप्येतु पाथः ।**

என்பது.

உரை.

எந்தத் துவஷ்டாவின் அருளால், மூவகைக் குலத்தார்கட்கும் வழிபாடு செய்கின்றவனும், இனிது பரிபாலிக்கின்றவனும், நீண்ட வாழ்நாளை யுடையவனும், தேவர்கள் விரும்புதற்குரியவனும், விரைவுடையவன், அல்லது, மெய்யுரைப்போனுமாகிய மகன் கிடைத்தனனே, அத்தகைய துவஷ்டா, சக்கரத்தின் நாபியைப்போல் பெருமையுடைய மகன் பேரன் முதலான மக்களை எமக்குக் கொடுப்பானாக. பிறகு, தேவர்கட்கும் உணவைப் பெற்றுக்கொள்வானாக என்பதாம்.

---

சரசுவதியைத் தேவதையாகவுடைய நான்காம் அவியின் யாஜ்யாபுரோநுவாக்கியங்களின் தலைப்புச்சொற்கள்,

ஒன்பதாவது பத்தாவது மந்திரங்கள்

**प्रणो देव्या नो दिवः ।**

என்பது.

உரை.

'பிரணோதேவீ சரஸ்வதி, என்பது புரோநுவாக்கியம். ஆனோதிவோ பிருஹத: என்பது யாஜ்யாவாக்கியம். இவ்விரண்டிற்கும், "அக்நா விஷ்ணூ மஹி" என்பதில் உரை கூறப்பட்டிருக்கின்றது என்பதாம்.

---

'சரஸ்வத்' என்னுந் தேவதையையுடைய ஐந்தாம் அவியின் புரோநுவாக்கியம்
பதினோராவது மந்திரம்

पीपिवाꣳसꣳ सरस्वतस्स्तनं यो विश्वदर्शतः। धुक्षीमहि प्रजामिषम्।

என்பது.

உரை.

'சரஸ்வாந்' என்னுந் தேவதையினுடைய தனம் உலகத்தைக் காணுந் தன்மையுடையதாய்ப் பரிபாலிக்க உணர்கின்றது. அத்தகைய யக்ஞவடிவ தனத்தையும், எம்மை வளர்க்கும் புதல்வன் முதலிய மக்களையும் கறக்கின்றோம். பசு பால் கறப்பதுபோல், இக்கதைய தேவதையையுடை யாகத்தைச் செய்து பிரசை முதலிய மக்களை அடைகின்றனம் என்பதாம்.

---

அதற்கு விகற்பமாகிய மற்றொரு புரோநுவாக்கியம்
பன்னிரண்டாவது மந்திரம்.

ये ते सरस्व ऊर्मयो मधुमन्तो घृतश्चुतः। तषां ते सुम्नमीमहे।

என்பது

உரை

கடலே! இன்சுவை யுடையவைகளும், தித்திப்புடையவைகளும், நெய் போன்ற நீரை ஒழுகுவிக்கின்றவைகளுமான உன்னுடைய அலைகளைப்பற்றிய சுகத்தை யடைவோமாக என்பதாம்.

---

மேற்கூறிய அதற்கே யாஜ்யாவாக்கியம்
பதின்மூன்றாவது மந்திரம்

यस्य व्रतं पशवो यन्ति सर्वे यस्य व्रतमुपतिष्ठन्त आपः। यस्य व्रते पुष्टिपतिर्निविष्टस्तꣳ सरस्वन्तमवसे हुवेम।

என்பது

உரை

எவருடைய விரதகருமத்தை எல்லாப் பசுக்களும் அடைகின்றனவோ மழைநீர், எவருடைய விரத கருமத்தை அநுட்டிக்கின்றதோ, இது ஆகுதியால் மழைபுண்டாதலாலெனக. தனத்தைப் பரிபாலிக்கின்ற எசமானன் எவருடைய விரத கருமத்தில் நிலைப்பட்டிருக்கின்றனோ, அச் சரஸ்வத் என்னுந் தேவதையைக் குறித்து எம்மைப்பாது காத்துக்கொள்ளுமாறு ஹோமஞ் செய்கின்றோம் என்பதாம்.

---

மேற்கூறிய அதற்கே விகற்பமுடைய யாஜ்யா வாக்கியம்

பதினான்காவது மந்திரம்

**दिव्यꣳ सुपर्णं वयसं बृहन्तमपां गर्भं वृषभमोषधीनाम् । अभीपतो वृष्ट्या तर्पयन्तं तꣳ सरस्वन्तमवसे हुवेम ।**

என்பது

உரை

வானிற்குரியதும், இரண்டு அழகிய சிறகுடன் கூடியதும், இது பறவையாய் வானிற்கேகும்போதாம். பறவைவடிவினதும், பெரிதும் நீரைப்பொழிவதும், கொடி செடிகளின் கருப்பமும், நெல் முதலியவைகளின் கொத்து வடிவுடையதும், மழையாற் களிப்படைவிப்பதும், காற்றால் வரும் நீர்த்துளியாகிய பறவைபோல் மேகத்திற்சென்று நீர் மிகுதியைப் பெற்று தானாகவே மழையாய்ப் பெய்யும் அதன் வாயிலாக கொடி செடிகளின் கருப்பமாகின்றது. அது மீண்டும் மழையாம். உலகைக் களிப்படைவிக்கின்றது என்பது பொருள். அத்தகைய சரஸ்வான் என்னுந் தேவதைக்கு ஆகுதிசெய்கின்றேன் என்பதாம்.

---

சினீவாலி தேவதையையுடைய ஆறவது அவியின் புரோநுவாக்கியம்

பதினைந்தாவது மந்திரம்

**सिनीवालि पृथुष्टुके या देवानामसि स्वसा । जुषस्व हव्यमाहुतं प्रजां देवि दिदिड्ढि नः ।**

என்பது

உரை

அமாவாசையின் அபிமானியாகிய சினிவாலி தேவதையே! நீ, தேவர்கட்கு உடன்பிறந்தாளைப் போல இனியவை செய்கின்றதா யிருக்கின்றாய். பெருந் துதியை யுடையோய்! நீ, யாம் அர்ப்பித்த அவியை அருந்துவாயாக. தேவியே! நீ, எமது பிரசைகளைத் தழைபச்செய்வாயாக என்பதாம்,

புரோநு வாக்கியம்)

பதினாறுவது மந்திரம்.

**या सुपाणिस्स्वङ्गुरिस्सुषूमा बहुसूवरी । तस्यै विश्पत्नियै हविस्सिनीवाल्यै जुहोतन ।**

என்பது

உரை

அழகிய கைகளையுடையதும், அழகிய விரல்களையுடையதும், நலங்களை யுண்டாக்குவதும், மிகுந்த எக்ஞங்களைப் பாதுகாப்பது மாகிய சினீவாலி தேவதைக்கு, வேட்போர்காள்! வேள்வித்தலைவ! நீவிர் ஆகுதி செய்வீர்களாக என்பதாம்.

---

"ஐந்திர உத்தமோபவதி" என்னும் ஏழாவது அவி முதலான சிலவற்றிற்குப் புரோநு வாக்கிய யாஜ்யாநு வாக்கியங்களின் தலைப்புச் சொற்களைத்தெரிவிக்கின்றது

பதினேழாவது பதினெட்டாவது மந்திரங்கள்.

**इन्द्रं वो विश्वतस्परीन्द्रं नरः ।**

என்பது

உரை

இவ்விரண்டிற்கும், முதற்காண்டம் ஆறும்பிரபாடகத்தில் உரை கூறப்பட்டிருக்கின்றது என்பது.

இனி, காரீரி இஷ்டியின் உதவிமந்திரங்கள் கூறப்படுகின்றன.

---

காரீர மாவுருண்டையின் புகையைப் போற்றல்

பத்தொன்பதாவது மந்திரம்.

**असितवर्णा हरयस्सुपर्णा मिहो वसाना दिवमुत्पतन्ति । त आऽववृत्रन्त्सदनानि कृत्वाऽऽदित्पृथिवी घृतैर्व्युद्यते ।**

என்பது

உரை

கருநிறமுடையதும், மேகத்தை உண்டாக்குவதற்கு இரசத்தைக் கவர்வதும், விரித்துள்ள சிறகுபோன்றதும், மேகமாய் மேகமண்டலத்தை மறைப்பதும், புகையை யுண்டாக்குவதும், தனது வயிற்றில் நீரை வைத்துக்

கொண்டு மறைத்திருக்கின்றதுமாகிய மூங்கில் கொடிமாவிலிருந்தெழும்புகை வானில் பரவுகின்றது. இது இப்பொழுதே நெய் போன்ற தண்ணீரால் பூமியை நனைக்கும் என்பதாம்.

---

எரிக்கும்போது எழும்புகையைத் துதிக்கும் மந்திரம்.

இருபதாவது மந்திரம்

**हिरण्यकेशोरजसो विसारेऽहिर्धुनिर्वात इव ध्रजीमान् । शुचिभ्राजा उषसो नवेदा यशस्वतीरपस्युवो न सत्याः ।**

என்பது

உரை

தீயின் கேசமென்னுஞ் சுவாலையுடன் எழுவதும், வானில் மேகங்களை விரியச்செய்வதற்குச் செல்வதும், வாயுவைப்போல் வேகத்தாலெழும் ஒலியையுடையதும், அழுக்கில்லாத ஒளியையுடையதுமாகிய சத்திச்சாரணையின் தண்டிலிருந்தெழுகின்றபுகை எம்பொருட்டு மழையை யுண்டாக்குவதாகுக. விடியற்காலத்தில் இரவி தெரியாதபடிமறைக்குக. பயிருண்டாகும் நிலங்களில பயிரையுண்டாக்குவதால் பெருமையடைக. நீரைவிரும்பும் நல்ல விளைநிலங்களுக்கு இனிமை செய்வதன் பொருட்டு இப்புகை மழையை யுண்டாக்குக என்பதாம்.

---

இப்புகையைத் துதிக்கின்ற விகற்ப மந்திரங்கள் மூன்றனுள் முதலாம் மந்திரம்

இருபத்தோராவது மந்திரம்

**आते सुपर्णा अमिनन्त एवैः कृष्णो नोनाव वृषभो यदीदम् । शिवाभिर्न स्मयमानाभिरागात्पतन्ति मिहस्तनयन्त्यभ्रा ।**

என்பது

உரை

சத்திச்சாரணையே! உனதுபுகை, மீண்டும் மீண்டும் எழுவதால் மேகம் நீரைப்பெய்கின்றது. கறுத்து மீண்டும் மீண்டும் கர்ச்சிக்கின்றது. இவ்வாறு எழுந்தபோது அநுக்கிரகிப்பதுபோலும், நகைப்பது போலுமாய் மழையுடன் கூடவே மேகம் வருகின்றது. பின்னர் மழை பெய்கின்றது. மேகங்கள் முழங்குகின்றன. சத்திச்சாரணையின்புகை இத்துணை மகிமை யுடைத்து என்பதாம்.

புரோநு வாக்கியம்)

இரண்டாவது மந்திரம்.

இருபத்திரண்டாவது மந்திரம்

वाश्रेव विद्युन्मिमाति वत्सं न माता सिषक्ति । यदेषां वृष्टिरसर्जि ।

என்பது

உரை.

மருத்துக்கள் மழையை யுண்டாக்கும்போது, முழக்கமுடைய மின்னல், பெண்யானை ஒலிப்பதுபோல் விளங்குகின்றது. அதாவது மருத்துக்களோடு கூடுகின்றது என்பதாம். பால் சுரந்துள்ளபசு, கன்றைக் குறித்துக் கதறி மனிதரை நோக்குகின்றது பிறகு கன்றுடன் சேர்கின்றதைப்போல் என்பதாம்.

---

மூன்றுவது மந்திரம்'

இருபத்துமூன்றுவது மந்திரம்

पर्वतश्चिन्महि वृद्धो बिभाय दिवश्चित्सानु रेजत स्वने वः । यत्क्रीडथ मरुत ऋष्टिमन्त आप इव सध्रियञ्चो धवध्वे ।

என்பது.

உரை

மருத்துக்களே! வச்சிராயுதத்தையுடைய நீங்கள், விளையாடும்போது எழும் ஒலியால், வானையளாவியுள்ளதும், பெருஞ்சிகரங்களையுடையது மாகிய மலையும் பயப்படுகின்றது. மற்றும், மருத்துக்களே! நீவிர் நீரைப்போல் வியாபித்துக் கொண்டு விளையாடுகின்றீர்கள். இத்தகைய மருத்துக்களுடன் கூடிய சத்திச்சாரணைப்புகை மழையையுண்டாக்குக என்பது இரண்டு மந்திரங்களின் கருத்து என்பதாம்.

---

அங்குள்ள கருங்குதிரை துன்பம் பொறுக்க முடியாமல் கத்தும்படி கரிய துணியால் அதைத் தேய்த்தல் வேண்டும் அதற்குரிய மந்திரம்.

இருபத்துநான்காவது மந்திரம்

अभिक्रन्द स्तनय गर्भमा धा उदन्वता परि दीया रथेन । दृतिं सु कर्ष विषितं न्यञ्चं समा भवन्तूद्वता निपादाः ।

என்பது

உரை

குதிரையே நீ, மேகம்போல் மிக முழுங்குவாயாக. மேகத்தின் வயிற்றில் நீராகிய கருப்பத்தை வைப்பவயாக. மற்றும், நீரையுடைய தேர்போன்ற மேகத்துடன் யாண்டுஞ் செல்வாயாக. நீருக்கிடமாகிய தோற்பை போன்ற மேகத்தை இனிது வலிப்பாயாக. தாழ்ந்துள்ள நீர்நிலேகள் உயரமாகுக என்பதாம்.

---

அக்னயே தாமச்சதே புரோடாசமஷ்டாகபாலம், மாருதம் சப்தகபாலம்; சௌர்ய மேககபாலம், என்னும் அவிகட்கு முறையே புரோநுவாக்கியங்கள் கூறப் படுகின்றன. அவற்றுள்முதலாவது அவியின் புரோநு வாக்கியம்

இருபத்தைந்தாவது மந்திரம்

**त्वं त्या चिदच्युताग्ने पशुर्न यवसे । धामा ह यत्ते अजर वना वृश्चन्ति शिक्वसः ।**

என்பது

உரை.

கேடிலாத அக்கினியே! வனங்கள், நீர்நிலேகள் என்னும் உன்னுடைய இடங்கள் நாசமாகின்றன. ஈண்டு அவைகளே! நீ, கேடிலாதனவாகச் செய்வாயாக என்பது எஞ்சி நின்றது. அதற்குவமை:— பசுக்கள் புற்களேயுண்டு கேடிலாத பாலேத் தருவதுபோல் என்பதாம்.

---

மேற்கூறியதற்கே யாஜ்யாவாக்கியம்

இருபத்தாறுவது மந்திரம்

**अग्ने भूरीणि तव जातवेदो देव स्वधावोऽमृतस्य धाम । याश्च माया मायिनां विश्वमिन्व त्वे पूर्वीस्संदधुः पृष्टबन्धो ।**

என்பது

உரை

தோன்றியவற்றை யுணர்வதும், விளக்கமுடையதும், கேடிலாததும் அன்னங்களேயுடையதுமாகிய அக்கினியே! உன்னுடைய இடங்கள் பல. அநாதியான மாயைகளேயுடைய இந்திரசாலக்காரனுடைய மாயைகள் உன்னிடத்திலிருக்கின்றன. உலகைப் பிரியப்படுத்துவோய்! மாயாவியாகிய உனது மகிமை யாது? என்று வினவுகின்றவனே சுற்றத்தானுக எண்ணுவோய்! மாயா சக்திகள் உன்னிடத்திலிருக்கின்றதால் மிகுந்த மழையைப் பெய்விப்பாயாக என்பது கருத்து என்பதாம்.

இரண்டாவது அவியின் புரோநுவாக்கியம்

இருபத்தேழாவது மந்திரம்

**दिवोनो वृष्टिं मरुतो ररीध्वं प्र पिन्वत वृष्णो अश्वस्यधाराः। अर्वाङेतेन स्तनयित्नुनेह्यपो निषिञ्चन्नसुरः पितानः।**

என்பது

உரை.

*மருத்துக்காள்! நீவிர், எம்பொருட்டு, வானிலிருந்து மழையைப் பொழிவிப்பீர்களாக. பிறகு விரிந்த இந்திரனுடைய மழைத்தாரையை பெய்விப்பீர்களாக. உயிர் கொடுக்கின்றவனும், எமக்குத் தந்தையுமாகிய இந்திர! நீயும், முழங்கும் மேகத்துடன் கூட இங்கு வருவாயாக என்பதாம்.*

---

மேற்கூறிய அதற்கே யாஜ்யாவாக்கியம்

இருபத்தெட்டாவது மந்திரம்

**पिन्वन्त्यपो मरुतस्सुदानवः पयो घृतवद्विदथेष्वाभुवः। अत्यं न मिहे वि नयन्ति वाजिनमुत्संदुहन्तिस्तनयन्तमक्षितम्।**

என்பது

உரை

*மிகுந்தமழையை அளிக்கின்ற மருத்துக்கள், வேள்விச் செயலாளர்கள் வேள்வியில் பாலையும் நெய்யையும் தெளிப்பதுபோல் நீரைத்தெளிக்கின்றார்கள் என்னலாம், மற்றும், குதிரையை, குதிரைப்பாகன் பழக்குவதுபோல் மேகத்தை மழைபெய்யுமாறு சீர்ப்படுத்துகின்றனர். பிறகு, கெடாததும், ஒலிக்கின்றதுமாகிய மேகத்தை மழை பெய்விக்கும்படி செய்விக்கின்றார்கள் என்பதாம்.*

---

மேற்கூறிய அதற்கே விகற்பமாகிய மற்றொரு புரோநுவாக்கியங் கூறப்படுகின்றது.

இருபத்தொன்பதாவது மந்திரம்

**उदप्रुतो मरुतस्ताँ इयर्त वृष्टिंये विश्वे मरुतो जुनन्ति। क्रोशाति गर्दा कन्येव तुन्ना पेरुं तुञ्जाना पत्येव जाया।**

என்பது

உரை

வேள்விச் செயலாளர்காள்! வேள்வித் தலைவர்காள்! நீவிர், உலகிற்கு மழை பெய்விக்கும் மருத்துக்களை வேண்டுவீர்களாக. யாரைப்போலெனின்? பெண்குழந்தை பசியால் தாய்தந்தையர்களைக் குறித்து அழுவது போல் என்க. இனி அருள் செய்வதற்கு உவமை:—தாக முதலியவைகளைப்பற்றி அழும் பெண்ணை, அன்போடு, பெண்ணே! உனக்கு யாது வேண்டும்? என்று இன் சொற்கூறி அன்பு பாராட்டுவதுபோல் மருத்துக்கள், வேள்வித் தலைவர்களுக்கும் வேள்விச்செயலாளர்கட்கும் அநுக்கிரகஞ்செயவார்களாக என்பதாம்

---

மேற்கூறிய அதற்கே விகற்பமாகிய மற்றொரு யாஜ்யாவாக்கியம்.

முப்பதாவது மந்திரம்

**घृतेन द्यावापृथिवी मधुना समुक्षत पयस्वतीः कृणुताऽऽप ओषधीः । उर्जं च तत्र सुमतिं चपिन्वथ यत्रा नरो मरुतः सिञ्चथा मधु ।**

என்பது

உரை

மருத்துக்காள்! நெய்போன்ற நீரால் மண் விண்கட்கு மழையைப் பெய்விப்பீர்களாக. அம்மழையால், கொடி செடிகளைச் சாரமுடையவைகளாகச் செய்வீர்களாக. மற்றும், நீருக்குத் தலைவர்களான மருத்துக்காள்! நீவிர், மென்சுவையுடைய மழையைப் பெய்விக்குமிடத்தில் சாரமுடைய உணவுப் பொருள்களையும் நல்லபுத்தியையுடைய பிரசைகளையும் உண்டாக்குவீர்களாக. இன்பதாம்.

---

மூன்றவது அவியின் யாஜ்யாநுவாக்கியங்களின் தலைப்புச் சொற்களை விளக்குகின்றது

முப்பத்தொன்று,முப்பத்திரண்டாவது மந்திரங்கள்

**उदुत्यं चित्रम् ।**

என்பது

உரை

"உதுத்யம் ஜாதவேதஸம், என்பது புரோநுவாக்கியம். 'சித்ரம் தேவாநும், என்பது யாஜ்யாவாக்கியம். இவ்விரண்டிற்கும் முதற்காண்டம் நான்காம் பிரபாடகத்தில் உரை கூறப்பட்டிருக்கின்றது என்பதாம்.

---

புரோநு வாக்கியம்)

மூன்றாகுதிகளுள் முதலாவதாகுதி

முப்பத்துமூன்றாவது மந்திரம்

**औंर्वभृगुवच्छुचिमप्नवानवदा हुवे। अग्निꣳ समुद्रवाससम्।**

என்பது

உரை.

ஔர்வர் பிருகு முதலான இருடிகளைப் போன்று சுத்தமாக கடலில் வசிக்கும் அக்கினிக்கு ஹோமஞ் செய்கின்றேன் என்பதாம்.

---

இரண்டாம் ஆகுதி

முப்பத்துநான்காவது மந்திரம்.

**आसवꣳ सवितुर्यथा भगस्येव भुजिꣳ हुवे। अग्निꣳ समुद्रवाससम्।**

என்பது.

உரை

சவிதா தேவதையின் ஏவலைப்போலும், பகதேவதையின் போகத்தைப் போலும் என்பது விசேடம். மற்றவை முன் போன்றன என்பதாம்.

---

மூன்றாம் ஆகுதி

முப்பத்தைந்தாவது மந்திரம்.

**हुवे वातस्वनं कविं पर्जन्यक्रन्द्यꣳ सहः। अग्निꣳ समुद्रवाससम्।**

என்பது

உரை.

எரிகின்ற ஒலியையுடையதுப், அறிவுடையதும், எல்லாருக்கும் காயுந் தன்மை வேண்டப்படுதலின் அனைவராலும் விரும்பப்படுவதும், வன்மை யுடையதும், கடலில் வசிப்பதுமாகிய அக்கினிக்கு ஆகுதி செய்கின்றேன் என்பதாம்.

பதினொராம் அநுவாகம்

முற்றிற்று

---

கிருஷ்ண எசுர்வேதம் தைத்திரீய சங்கிதை

மூன்றாங் காண்டம் முதற் பிரபாடகம்

முடிந்தது.

பிரபாடக விடயச்சுருக்கம்.

यन्न्यूनं प्रकृतौ तत्तु वर्ण्यतेऽस्मिन्प्रपाठके ।

*முன்பிரபாடகத்திற் கூறியவற்றிற்கே சில மந்திரங்கள் இப்பிரபாடகத்திலுங் கூறப்படுகின்றன.*

முதலநுவாக விடயச்சுருக்கம்.

श्येनस्त्रीन्पवमानेषु त्रिषु मन्त्रान्क्रमाज्जपेत् ।

प्रजेन्द्राविश्वेमन्त्रास्स्युरुपयामादिकास्त्रयः ॥ १ ॥

तैर्द्रोणकलशादीनां स्पर्शो मन्त्रास्तुषणमताः ।

*மூன்றுபவமானங்களிலும், நடு இருக்கில் பாடும்போது செபிக்க வேண்டியமூன்று மந்திரங்களும், அதன் விதியும், துரோண கலசம் ஆதவனீயம், பூதபிருத் என்னுங் குடங்களைத்தொடுதலும், அதற்குரிய மந்திரங்களுங் கூறப்படுகின்றன என்பது.*

---

## மூன்றும் காண்டம் இரண்டாம் பிரபாடகம்

## முதலாம் அநுவாகம்.

*இரண்டு பஞ்சாதிகட்குமேல் நாற்பத்திரண்டு பதங்களைக் கொண்டது.*

மூன்று பவமானத்துதிகளைப் போற்றும் வகையைக்கூறும் மந்திரங்களும் பிராமணங்களும்.

यो वै पव॑मानानामन्वारोहान्विद्वान्यजतेऽनु पव॑मानाना रोह॑ति न पव॑मानेभ्योऽव॑ च्छिद्यते श्येनो॑ऽसि गायत्रछ॑न्दा अनु त्वाऽऽर॑भे स्वस्ति मा सं पा॑रय सुपर्णो॑ऽसि त्रिष्टुप्छ॑न्दा अनु त्वाऽऽर॑भे स्वस्ति मा सं पा॑रय सघा॑ऽसि जग॑तीछन्दा अनु त्वाऽऽर॑भे स्व-स्ति मा सं पा॑रयेत्या॑हैते ॥ १ ॥ वै पव॑मानानामन्वारोहास्तान्य एवं विद्वान्यजतेऽनु पव॑मानाना रोह॑ति न पव॑मानेभ्योऽव॑ च्छिद्यते

பவமானத்தைப் போற்றல்)

यो वै पवमानस्य संततिं वेद सर्वमायुरेति न पुराऽऽयुषः प्रमीयते पशुमान्भवति विन्दते प्रजां पवमानस्य ग्रहा गृह्यन्तेऽथ वा अस्यैते-ऽगृहीता द्रोणकलश आधवनीयः पूतभृत्तान्यदगृहीत्वोपाकुर्यात्प-वमानं वि ॥ २ ॥ छिन्द्यात्तं विच्छिद्यमानमध्वर्योः प्राणोऽनु वि च्छिद्येतोपयामगृहीतोऽसि प्रजापतये त्वेति द्रोणकलशमभि मृशे-दिन्द्राय त्वेत्याधवनीयं विश्वेभ्यस्त्वा देवेभ्य इति पूतभृतं पवमान-मेव तत्सं तनोति सर्वमायुरेति न पुराऽऽयुषः प्र मीयते पशुमान्भ-वति विन्दते प्रजाम् ॥ ३ ॥

சோமயாகத்தில் மும்முறை சோமரசம் பிழியும்போது, முதலில், பகிஷ்ப் பவமானம், மாத்தியந்தின பவமானம், ஆர்ப்பவ பவமானம் என மூவகைத் தோத்திரங்கள் உள்ளன. இவை, அசுவினிகளைப் புநிதர்களாக்குதற் பொருட்டாம். இதை வேறிடத்திற் காண்க. ஈண்டு, அத்தகைய பவமானங் களைத் துதிக்கும்போது இதைச் சபித்தல் வேண்டுமென்பதாம். அவ்வாறு போற்றும்மந்திரங்கள் அந்வாரோஹங்களெனப்படும்.

---

அத்தகைய அந்வாரோகங்களைப் புகழ்தல்

பிராமணம் 1

यो वै पवमानानामन्वारोहान्विद्वान्यजतेऽनु पवमानाना रोहति न पव-मानेभ्योऽव च्छिद्यते ।

என்பது

உரை.

பவமானத்தோத்திரங்களில் ஏறும் வகையை (போற்றும் வகையை) உணர்ந்து யாகஞ்செய்கின்றவன் பவமானத் தோத்திரங்களைப் பின்பற்றிக் கொண்டு கரைபேறிவிடுகின்றான். அவன், பவமானத் துதிகளிலிருந்து நழுவுவதில்லையென்பதாம்,

அம்மந்திரம் இதுவெனக் கூறுகின்றது.

மந்திரம் 1

**श्येनोऽसि गायत्रछन्दा अनु त्वाऽऽ रभे स्वस्ति मा सं पारय ।**

என்பது

உரை

பகிழ்ப்பவமானம் என்னுந் துதியே! நீ, பருந்துப் புள்ளாக இருக்கின்றாய். காயத்திரிச் சந்தமுடையதாயுமிருக்கின்றாய். ஆதலின், உன்னைப், பின்பற்றி ஏறுகிறேன். (அடைகின்றேன்). நீ, தடையின்றிக் கரையேற்றி வைப்பாயாக என்பதாம்.

எசமானன், பகிழ்ப்பவமானத் துதிகளுள் நடுவிலுள்ள இருக்கு மந்திரத்தால் போற்றும்போது இம்மந்திரத்தைச் செபித்தல் வேண்டுமென்பதாம்.

இது, முதற்காண்டம் நான்காம் பிரபாடகம் பதின்மூன்றாம் அநுவாகத்தில் விநியோகிக்கப் படுகின்றது.

---

மாத்தியந்தின பவமானத்தில் செபிக்கவேண்டிய மந்திரம்.

மந்திரம் 2

**सुपर्णोऽसि त्रिष्टुप्छन्दा अनुत्वाऽऽरभे स्वस्ति मा सं पारय ।**

என்பது

உரை

மாத்தியந்தின பவமானத்துதியே! என்பது விசேடம் மற்றவை முன்போல என்பதாம்

இது, மாத்தியந்தின பவமானத்தின் நடு இருக்கு மந்திரத்தை ஓதும்போது எசமானன் செபிக்கவேண்டியது.

இதுவும், முதற்காண்டம், நான்காம் பிரபாடகம், பதினெட்டாமநுவாகத்தில் விநியோகிக்கப்படுகின்றது.

---

ஆர்ப்பவபவமானத்தில் செபித்தற்குரிய மந்திரம்.

மந்திரம் 3

**सघाऽसि जगतीछन्दा अनु त्वाऽऽ रभे स्वस्ति मा सं पारय ।**

என்பது

பவமானங்களைப் போக்றல்)

உரை

ஆர்ப்பவபவமானமே! நீ, 'பாசம், என்னும் பறவையைப் போன்று விழுவதற்கு வன்மையுடையதாயிருக்கின்றாய், மற்றவை முன்போல் என்பதாம்.

இது, ஆர்ப்பவபவமானத்தின் நடு இருக்கு மந்திரத்தை ஓதும்போது எசமானன் செபிக்கவேண்டியதாம்.

இதுவும், முதற்காண்டம், நான்காம் பிரபாடகம், இருபத்திரண்டாம் அநுவாகத்தில் உபயோகிக்கப் படுகின்றது.

---

மேற்கூறிய மந்திரங்களைப் புகழ்கின்றது.

பிராமணம் 2

**इत्याहैते वै पवमानानामन्वारोहास्तान्य एवं विद्वान्यजतेऽनु पवमानाना रोहति न पवमानेभ्योऽव च्छिद्यते ।**

என்பது.

உரை

இவ்வாறுணர்ந்து எவன்வேட்கின்றானே, அவன் பவமானங்களிலிருந்து நழுகான் என்பது.

---

துரோணகலச முதலியவைகளைத் தொட்டுப் போற்றுவதற்கு அதைப்புகழ்கின்றது.

பிராமணம் 3.

**यो वै पवमानस्य संततिं वेद सर्वमायुरेति न पुराऽऽयुषः प्र मीयते पशुमान्भवति विन्दते प्रजां पवमानस्य ग्रहा गृह्यन्तेऽथ वा अस्यैतेऽगृहीता द्रोणकलश आधवनीयः पूतभृत्तान्यदगृहीत्वोपाकुर्यात्पवमानं वि च्छिन्द्यात्तं विच्छिद्यमानमध्वर्योः प्राणोऽनु वि च्छिद्येत ।**

என்பது

உரை

'பவமானம், என்னும் மூன்று துதிகளின் தொடர்பை அறிகின்ற எசமானன் நீண்ட ஆயுளையடைகின்றான். அவனுக்கு பிறப்பில் ஏற்பட்ட ஆயுள் அவமிருத்துவாற் கெடுவதில்லை என்பதாம், மற்றும், பசுக்களையடைகின்றான் பிரசைகளைப் பெறுகின்றான் என்பது.

இனி, துரோண கலசம், ஆதவனீயம், பூதபிருத் என்னும் மூன்று சோம ரசக் குடங்களும், ஐந்திரவாயுக்கிரகம் முதலானவைகளைப்போல மந்திரங்களால் கிரகிக்கத்தக்கவைகள் என்பது பெறப்படுகின்றது. பெறப்படவே, பவமான சம்பந்தமான இக்கிரக பாத்திரங்களும் தொடர்பு கெடாதிருப்பதற்கு சோமரசம் பிடித்துக் கொள்ளற்குரியன என்பதுதானே வருகின்றது அவ்வாறு விதியோ இல்லை. இன்றேல், கிரகத்தொடர்பு கெடுகின்றது. அதை நீக்குதற்கு மந்திரங்களால் அம்மூன்றையுந் தொடுதலே சோமரசம் பிடித்தலாம் ஆதலின் குற்றமில்லை என்பதாம்.

---

மந்திரங்களால் அவைகளைத் தோடுவதை விதிக்கின்றது.

பிராமணம் 4

**उपयामगृहीतोऽसि प्रजापतये त्वेति द्रोणकलशमभि मृशेदिन्द्राय त्वेत्याधवनीयं विश्वेभ्यस्त्वा देवेभ्य इति पूतभृतं पवमानमेव तत्सं तनोति सर्वमायुरेति न पुराऽऽयुषः प्र मीयते पशुमान्भवति विन्दते प्रजाम्।**

என்பது

உரை

சோமரசமே! நீ, மரப்பாத்திரத்திற் பிடிக்கப்பெற்றிருக்கின்றாய். பிடிக்கப் பெற்ற உன்னை, பிரசாபதி தேவதையின் பொருட்டுத் தொடுகின்றேன். மற்றும், மரப்பாத்திரத்திற் பிடிக்கப்பெற்ற உன்னை இந்திரன் பொருட்டுத் தொடுகின்றேன். இன்னும், மரப்பாத்திரத்திற் பிடிக்கப்பெற்ற உன்னை விசுவதேவர்களின பொருட்டுந் தொடுகின்றேன்.

இவ் வாறு பவமானக்கிரக சந்ததியையுணர்ந்த எசமானன் நீண்ட ஆயுளையடைகின்றான். அவமிருத்துவால் அவனுடைய ஆயுள் குறைகிறதில்லை. பசு, புத்திரன் முதலானவற்றையடைகின்றான்.

மேற்கூறிய மூன்று மந்திரங்களாலும் முறையே துரோண கலசம், ஆதவனீயம், பூதபிருத் என்னும் மூன்று சோமரசக் குடங்களையுந் தொடல் வேண்டுமென்பதாம்.

இவ்வன்வாரோஹ மந்திரங்களும், தொடுதல் மந்திரங்களும், 'மூர்த்தானம் மதுச்ச, என்னும் இரண்டநுவாகங்கட்கும் நடுவில் விநியோகிக்கத்தக்கவைகள் என்று உணரற்பாலன.

சோமரசம் பிழிதல்)

இவை, முதற்காண்டம், நான்காம் பிரபாடகம். பதின்மூன்றும் அநுவாகத்தில் விநியோகிக்கபபடுகின்றன.

ஈண்டுத்தொடுதலே சோமரசம் பிடித்தலாம். இவை, பவமானக்கிரகங்கள் என வழங்கப்படுகின்றன.

முதலநுவாகம்

முற்றிற்று.

---

இரண்டாம் அநுவாக விடயச்சுருக்கம்.

द्वावित्यवेक्षते पूतभृतं चाऽऽधवनीयकम् ।

द्रोणकलशंपश्यन्मन्त्रौ द्वाविह वर्णितौ ॥ १ ॥

இதில் பூதபிருத், ஆதவனீயம், என்னுமிரண்டு குடங்களைப்போற்றுவதற்கும், துரோண கலசத்தைப் போற்றுவதற்கும் மந்திரங்களும், சோமயாக விதியும் கூறப்படுகின்றன என்பது.

---

## மூன்றுங் காண்டம் இரண்டாம் பிரபாடகம்

## இரண்டாம் அநுவாகம்

மூன்று பஞ்சாதிகட்குமேல் மூன்று பதங்களைக்கொண்டது.

சவனங்களை (சோமரசம் பிழிவதை)க் கூறுகின்ற மந்திரங்களும், பிராமணங்களும்.

त्रीणि वाव सवनान्यथ तृतीयꣳ सवनमव लुम्पन्त्यनꣳशु कुर्वन्त उपाꣳशुꣳ हुत्वोपाꣳशुपात्रेऽꣳशुमवास्य तं तृतीयसवनेऽपिसृज्याभि षुणुयाद्यदाप्याययति तेनाꣳशुमद्यदभिषुणोति तेनर्जीषि सर्वाण्येव तत्सवनान्यꣳशुमन्ति शुक्रवन्ति समावद्वीर्याणि करोति द्वौ समुद्रौ विततावजूर्यौ पर्यावर्तेते जठरेव पादाः । तयोः पश्यन्तो

अति यन्त्यन्यमपश्यन्तः ॥ १ ॥ सेतुनाऽति यन्त्यन्यम् । द्वे द्रध्सी सततो वस्त एकः केशी विश्वा भुवनानि विद्वान् । तिरोधायैत्यसितं वसानःशुक्रमा दत्ते अनुहाय जायै । देवा वै यद्यज्ञेऽकुर्वत तदसुरा अकुर्वत ते देवा एतंमहायज्ञमपश्यन्तमतन्वताग्निहोत्रं व्रतमकुर्वत तस्माद्द्विर्व्रतस्स्याद्द्विर्ह्यग्निहोत्रं जुह्वति पौर्णमासं यज्ञमग्नीषोमीयम् ॥ २ ॥ पशुमकुर्वत दार्श्यं यज्ञमाग्नेयं पशुमकुर्वत वैश्वदेवं प्रातःसवनमकुर्वत वरुणप्रघासान्माध्यंदिनꣳ सवनꣳ साकमेधान्पितृयज्ञं त्र्यम्बकाꣳस्तृतीयसवनमकुर्वत तमेषामसुरा यज्ञमन्ववाजिगाꣳसन्तं नान्ववायन्तेऽब्रुवन्नध्वर्तव्या वा इमे देवा अभूवन्निति तदध्वरस्याध्वरत्वं ततो देवा अभवन्पराऽसुरा य एवं विद्वान्त्सोमेन यजते भवत्यात्मना पराऽस्य भ्रातृव्यो भवति ॥ ३ ॥

*இதில், சவனங்கள் கூறப்படுகின்றன.*

---

காலையிற் சோமரசம் பிழிந்த 'உபாம்சுக்கிரகம்' என்னும் பாத்திரத்தில் ஒரு சோமக்கொடித் துண்டைப்போட்டுவைத்திருந்து, அதை, சோமக்கொடிச் சக்கைக ளுடன் சேர்த்து மூன்று முறை பிழிவதைக் கூறுகின்றது.

பிராமணம் 1

त्रीणि वाव सवनान्यथ तृतीयꣳ सवनमवलुम्पन्त्यनꣳशु कुर्वन्त उपाꣳशुꣳहुत्वोपाꣳशुपात्रेऽꣳशुमवास्य तं तृतीयसवनेऽपिसृज्याभि षुणुयाद्यदाप्याययति तेनाꣳशुमद्यदभिषुणोति तेनर्जीषि सर्वाण्येव तत्सवनान्यꣳशुमन्ति शुक्रवन्ति समावद्वीर्याणि करोति ।

உரை.

சவனம் = சோமரசத்தைப் பிழிந்தெடுத்தலாம். இது, காலை, உச்சி மாலை என்னும் முக்காலங்களிலும் முக்கியமாகச் செய்யத்தக்கன. இதில், மூன்று முறை பிழியும்போது முன் பிழிந்துவிட்ட சோமக்கொடிச் சக்கைகளையே பிழிதல்வேண்டும். ஆனால் அதில் சோமரசம் வராது; வராவிட்டால் 'சவனம், என்னுஞ் சொற்பொருள் பொருந்தப்படாது. மற்றும், மூன்றுமுறை பிழிவதில் சோமரசம் பிழிவதின்றெனில் சோமயாகங்கெடுவதுடன் எசமானனுங் கெடுகின்றான்; ஆதலின், உபாம்சுக்கிரகம், என்னும் பாத்திரத்திலுள்ள சோமரசத்தை ஹோமஞ் செய்துவிட்டு, அதில் இரசமெடுக்காத அந்த ஒரு சோமக்கொடித்துண்டையும்போட்டு வைத்திருந்து மூன்றும் முறை பிழியும்போது அச்சக்கைகளுடன் அத்துண்டுக் கொடியைப்போட்டு சேர்த்து இடித்துப்பிழியில் மூன்று சவனங்களும் சோமரசம் பிழிகின்றவைகளாய் நல்ல வன்மையைச் செய்கின்ற வைகளாகின்றன என்பதாம்.

———

பூதபிருத், ஆகவனீயம் துரோணகலசம் என்னுஞ் சோமரசக் குடங்களைப் பார்த்தல்.

மந்திரங்கள் 1-2.

द्वौ समुद्रौ विततावजूर्यौ पर्यावर्तेते जठरेव पादाः। तयोः पश्यन्तो अति यन्त्यन्यमपश्यन्तस्सेतुनाऽति यन्त्यन्यम्। द्वे द्रधसी सतती वस्त एकः केशी विश्वा भुवनानि विद्वान्। तिरोधायैत्यसितं वसानश्शुक्रमा दत्ते अनुहाय जार्यै।

என்பது.

உரை

இக் குடங்களிரண்டும் கடல்போல் விரிந்தவைகள், எப்போதும் வற்றாதவைகள், கடலின் அலைகள்போன்று ஒன்றின் பின்னொன்றுயெழும் அலைகளையுடையவைகள், இது குடங்களிரண்டையும் கடலெனத் துதித்தல். இனி, பகல்வடிவான இக்குடங்களைப்பார்த்து மக்கள் கரை யேறுகின்றார்கள். இரவு வடிவான இவைகளைப் பார்க்க முடியாமல் தோணியால் கடக்கின்றார்கள். இவை, வண்டியில் மறைதலாலும் மறையமையாலுங் கற்பிக்கப்பட்டன என்பது.

இனி, துரோண கலசமாகிய இரவி, தன்னை, நீங்காத பகலிரவுச் செயல்களால் மறைத்துக்கொள்கின்றது. அது எத்தன்மையதெனின்? ஒன்று, கேசம் போன்ற கிரணங்களையுடையது. எல்லாவுலகங்களையும் விளக்குகின்றது. இரவாகிய அழுக்குத் துணியையும், பகலாகிய வெண்மைத் துணியையும் உடுத்தியிருக்கின்றது.

பிறகு, அநுக்கிரகத்தின் பொருட்டு இரவென்னுங் கிழிந்த ஆடையை நீக்கிவிட்டு பகலென்னும் நல்ல ஆடையை அணிந்துகொள்கின்றது. இது, துரோணகலத்தை இரவியாகப்போற்றுவது என்பதாம்.

இம் மந்திரங்கள் இரண்டாலும் பூதபிருக் ஆகவனீயம் துரோண கலசம் என்னும் மூன்று குடங்களையும் எசமானன் முதலானோர்கள் பார்த்தல் வேண்டும் என்பதையுணர்க. இது, முதற்காண்டம், நான்காம் பிரபாடகம், பதின்மூன்றும் அநுவாகத்தில் விநியோகிக்கப்படுகின்றது.

---

சோமயாகத்தின் விதி மந்திரங்களைத் தவிர்த்து எஞ்சின விதிகளையும் மந்திரங்களையுங் காண்பித்தற்பொருட்டு, இந்த ஔபான வாக்கியம் என்னுங் காண்டத் தொடக்கமாகிய சோமயாகத்தை விதிப்பதன்பொருட்டுப் புகழ்கின்றது.

பிராமணம் 2

देवा वै यज्ञेऽकुर्वत तदसुरा अकुर्वत ते देवा एतं महायज्ञमपश्यन्तमतन्वताग्निहोत्रं व्रतमकुर्वत तस्माद्द्विव्रतस्स्याद्द्विर्ह्यग्निहोत्रं जुह्वति पौर्णमासं यज्ञमग्नीषोमीयं पशुमकुर्वत दार्श्यं यज्ञमाग्नेयं पशुमकुर्वत वैश्वदेवं प्रातस्सवनमकुर्वत वरुणप्रघासान्माध्यंदिनꣳ सवनꣳ साकमेधान्पितृयज्ञं त्र्यम्बकाꣳस्तृतीयसवनमकुर्वत तमेषामसुरा यज्ञमन्ववाजिगाꣳसन्तं नान्ववायन्तेऽब्रुवन्नध्वर्तव्या वा इमे देवा अभूवन्निति तदध्वरस्याध्वरत्वं ततो देवा अभवन्पराऽसुराः ।

என்பது

உரை

முன்னர், தேவர்கள், அசுரர்களைச் செயித்தற்பொருட்டு யாகங்கள் செய்தனர். அந்த யாகங்கள் இன்னதின்னதென்றுணர்ந்து அசுரர்களுஞ் செய்தனர். ஆதலின் தேவர்கட்கு வெற்றியில்லை. பிறகு, அசுரர்கட்குத் தெரியாதபடி ஒரு பெரும் வேள்வி செய்யவேண்டுமென்று துணிந்து வெளியில் யாங்கள் அக்கினி ஹோத்திரஞ் செய்கின்றோம் என்று மாறு கூறி

சோமரசம் பிழிதல்)

செய்துவிட்டு, உள்ளே, தீட்சையின் விரதத்தைச் செய்து முடித்துவிட்டார்கள். அங்ஙனமே, இரண்டுமுறை அக்கினி ஹோத்திரஞ் செய்கிறோமென்று அக்கினிஷோமீய பசுயாகஞ்செய்தனர். அமாவாசை இஷ்டி செய்கின்றோமென்று சவனீய பசுயாகத்தைச் செய்தனர். சாதுர்மாசியத்திலடங்கும் வைசுவ தேவபர்வம், என்னும் யாகஞ் செய்கின்றோமென்று பிராதசவனத்தை (காலையிற் சோமம்பிழிவதை) செய்து முடித்தனர். வருணப்பிரகாசம் என்னும் யாகஞ் செய்கின்றோம் என்று கூறிவிட்டு மாத்தியந்தின சவனத்தை (உச்சியில் சோமரசம் பிழிவதை)ச் செய்தனர். சாகமேத பர்வமென்னும் யாகஞ்செய்கின்றோமென்று மூன்றாவது சோமரசம் பிழிவதைச் செய்துமுடித்துவிட்டனர். அதையுணர்ந்த அசுரர்கள் வெளியிற் சொல்லிய வாறெலாஞ் செய்துபார்த்துத் தோல்வியடைந்தனர். அப்போது, அசுரர்கள், தேவர்களை நோக்கி, நீவிர் அத்வரர்கள் என்றனர். அதாவது எங்களால் கெடுக்க முடியாத வேள்வியைச்செய்து விட்டீர்கள் என்பது கருத்து. இதனாலன்றோ, வேள்விக்கு 'அத்வரம், என்னுங்காரணப் பெயரும் இனிது பொருந்துவதாயிற்று. இவ்வாறு, தேவர்கள் சோமயாகத்தால் அசுரர்களை வென்றனர் என்பது திரண்டபொருள் என்பதாம்.

---

இப்போது சோமயாகத்தை விதிக்கின்றது.

பிராமணம் 3

**य एवं विद्वान्त्सोमेन यजते भवत्यात्मना पराऽस्य भ्रातृव्यो भवति ।**

என்பது

உரை

சோமயாகம் இவ்வாறுளதென்று சோமயாகப் பெருமையையுணர்ந்து சோமயாகஞ் செய்கின்றவன் பகைவரைச் செயிக்கின்றான் என்பதாம்.

இரண்டாம் அநுவாகம்

முற்றிற்று.

---

மூன்றாம் அநுவாக விடயச்சுருக்கம்

आदौ समष्टिरूपेण परिभूस्सोममीक्षते ।

प्राणेत्युपांशु मन्येषु मे वर्चेत्यनुषज्यते ॥ १ ॥

अपाऽऽन्तर्यामिकं व्यानायेत्युपांशुसवनं वाचैन्द्रवायवे ।

दक्षेति मैत्रावरुणं चक्षुश्शुक्रं च मन्थिनम् ॥ २ ॥
श्रोत्रेत्याश्विनमात्माऽऽग्रयणमङ्गेभ्य उक्थ्यकम् ।
आधुर्व्वीषोडशिनं विष्णोस्तु द्रोणकुम्भकम् ॥ ३ ॥
इन्द्रेत्याधवनीयाख्यं जठशेषस्तयोर्द्वयोः ।
विश्वे पूतभृतं कोऽसि वीक्षेताऽऽहवनीयकम् ॥ ४ ॥
विश्वपश्येत्सर्वं सोमान्मन्त्रास्सप्तदशेरिताः ॥ ४ ॥

*பொதுவாகச் சோமத்தைப் பார்த்தல், உபாம்சு, அந்தர்யாமம், கூழாங்கல், ஐந்திரவாயவம், மைத்திராவருணம், ஆசுவினம், சுக்கிரமந்தி, ஆக்ரயணம், உக்த்யம், துருவம், என்னுங் கிரகங்களைப் பார்த்தல், மேற்படி மந்திரங்களை அனுஷங்கஞ் செய்துக்கொள்ளவேண்டும் எனல், இவைகளின் விதி என்பவைகள் கூறப்படுகின்றன என்பது.*

---

## மூன்றுங் காண்டம் இரண்டாம் பிரபாடகம்

### மூன்றுவது அநுவாகம்

*மூன்று பஞ்சாதிகட்குமேல் நாற்பத்தைந்து பதங்களைக் கொண்டது.*

சோமத்தை நோக்கும் வகைகளைக்கூறும் பிராமணங்களும் மந்திரங்களுங் கூறப்படுகின்றன.

परिभूरग्निं परिभूरिन्द्रं परिभूर्विश्वान्देवान्परिभूर्माꣳ सह ब्रह्मवर्चसेन सनः पवस्व शं गवे शं जनाय शमर्वते शꣳ राजन्नोषधीभ्योऽच्छिन्नस्य ते रयिपते सुवीर्यस्य रायस्पोषस्य ददितारस्स्याम । तस्य मे रास्व तस्य ते भक्षीय तस्य त इदमुन्मृजे । प्राणाय मे वर्चोदा वर्चसे पवस्वापानाय व्यानाय वाचे ॥ १ ॥ दक्षक्रतुभ्यां चक्षुर्भ्यां मे वर्चोदौ वर्चसे पवेथाꣳ श्रोत्रायाऽऽत्मनेऽङ्गेभ्य आयुषे वीर्याय

சோமத்தை நோக்கல்)

विष्णोरिन्द्रस्य विश्वेषां देवानां जठरमसि वर्चोदा मे वर्चसे पवस्व कोऽसि को नाम कस्मै त्वा काय त्वा यं त्वा सोमेनातीतृपं यं त्वा सोमेनामीमदꣳ सुप्रजाः प्रजया भूयासꣳ सुवीरो वीरैस्सुवर्चा वर्चसा सुपोषः पोषैर्विश्वेभ्यो मे रूपेभ्यो वर्चोदाः ॥ २ ॥ वर्चसे पवस्व तस्य मे रास्व तस्य ते भक्षीय तस्य त इदमुन्मृजे। बुभूषन्नवेक्षेतैष वै पात्रियः प्रजापतिर्यज्ञः प्रजापतिस्तमेव तर्पयति स एनं तृप्तो भूत्याऽभि पवते ब्रह्मवर्चसकामोऽवेक्षेतैष वै पात्रियः प्रजापतिर्यज्ञः प्रजापतिस्तमेव तर्पयति स एनं तृप्तो ब्रह्मवर्चसेनाभि पवत आमयावी ॥ ३ ॥ अवेक्षेतैष वै पात्रियः प्रजापतिर्यज्ञः प्रजापतिस्तमेव तर्पयति स एनं तृप्त आयुषाऽभि पवतेऽभिचरन्नवेक्षेतैष वै पात्रियः प्रजापतिर्यज्ञः प्रजापतिस्तमेव तर्पयति स एनं तृप्तः प्राणापानाभ्यां वाचो दक्षक्रतुभ्यां चक्षुर्भ्याꣳ श्रोत्राभ्यामात्मनोऽङ्गेभ्य आयुषोऽन्तरेति ताजक्प्र धन्वति ॥ ४ ॥

இதில் சோமத்தை நோக்கும் வகைகளைக்கூறும் பிராமணங்களும் மந்திரங்களுங் கூறப்படுகின்றன.

பொதுவாக சோமரசமுள்ள பாத்திரங்களனைத்தையும் நோக்குதல்

மந்திரம் 1.

परिभूरग्निं परिभूरिन्द्रं परिभूर्विश्वान्देवान्परिभूर्माꣳ सह ब्रह्मवर्चसेन स नः पवस्व शं गवे शं जनाय शमर्वते शꣳ राजन्नोषधीभ्योऽच्छिन्नस्य ते रयिपते सुवीर्यस्य रायस्पोषस्य ददितारस्स्याम। तस्य मे रास्व तस्य ते भक्षीय तस्य त इदमुन्मृजे।

என்பது.

உரை

சோமமே! நீ, அக்கினியை நாற்புறமுஞ் சூழ்ந்துகொண்டவனாக இருக்கின்றாய். இவ்வாறே இந்திரனையும், விசுவதேவர்களையுஞ் சூழ்ந்துகொண்டவனாக இருக்கின்றாய். பிரம தொனியுடன்கூடி இருக்கும் என்னையுஞ் சூழ்ந்துகொண்டிருக்கின்றாய். அரச! எமது, பசுக்கள், குதிரை, கொடி செடி என்பவைகட்குச் சுகங் கொடுப்பாயாக. தனத்திற் கிறைவ! உனது அருளால் யாம் கேடிலாத பராக்கிரம முடையவனும், அழகுடையவனுமாகிய புத்திரனுடன் கூடித் தனத்தை அளிக்கின்றவராவோமாக. அத்தகைய ஈகையை விரும்புகின்ற எமக்குத் தனத்தைக் கொடுப்பாயாக. அத்தகைய உனது இரசத்தையருந்துவோமாக. உனதருளால் வேண்டிய பயனை மேலுக்குக் கொண்டுவரச் செய்கின்றேன் என்பதாம்.

இம் மந்திரத்தால் சோமரசமிருக்கின்ற எல்லாப் பாத்திரங்களையும் பொதுவாகப் பார்த்தல் வேண்டுமென்பது பொருள். மேல்வரும் மந்திரம், சோமரசமுள்ள பாத்திரங்களுள் ஒவ்வொன்றை தனித்தனியே நோக்குதற்காம் என்பதை யுணர்க.

---

சிறப்பாக ஒவ்வொரு சோமரச பாத்திரத்திற்கு இது பதினாறு மந்திரங்களையுடையது

மந்திரம் 2-17

**प्राणाय मे वर्चोदा वर्चसे पवस्वापानय व्यानाय वाचे दक्षक्रतुभ्यां चक्षुर्भ्यां मे वर्चोदौ वर्चसे पवेथा॑ श्रोत्रायाऽऽत्मनेऽङ्गेभ्य आयुषे वीर्याय विष्णोरिन्द्रस्य विश्वेषां देवानां जठरमसि वर्चोदा मे वर्चसे पवस्व कोऽसि को नाम कस्मै त्वा काय त्वा य न्त्वासोमेनातीतृपं यं त्वा सोमेनामीमद॑ सुप्रजाः प्रजया भूयास॑ सुवीरो वीरैस्सुवर्चा वर्चसा सुपोषः पोषैर्विश्वेभ्यो मेरूपेभ्यो वर्चोदा वर्चसे पवस्वतस्य मे रास्व तस्य ते भक्षीय तस्य त इदमुन्मृजे ।**

என்பது

உரை

உபாம்சு பாத்திரமே! நீ, வன்மையைக் கொடுப்பதாயிருக்கின்றாய். ஆதலின், எனது மேல் மூச்செறிதற் பொருட்டும், வன்மையின் பொருட்டும் என்னைப் பரிசுத்தப்படுத்துவாயாக. இவ்வாறே, அபானன் வியானன், வாக்கு, பிராண அபானன்கள், (யோகக்ஷேமங்கள்) கண்கள், செவிகள், ஆன்மா, அங்கங்கள், ஆயுள், வீரியம் என்பவைகட்கும் வன்மையைக் கொடுப்பதாயிருக்கின்றாய் என்பதைச் சேர்த்துப் பொருளுரைத்துக்கொள்க என்பது.

சோமத்தைப் பார்த்தல்)

மற்றும், துரோணகலசமே! நீ விஷ்ணு, இந்திரன் என்பவர்களின் வயிறாக இருக்கின்றாய், முன்போல் வன்மை முதலியவற்றையுஞ் சேர்த்துப் பொருளுரைத்துக் கொள்க. இவ்வாறே, பூதபிருத், ஆகவனீய மென்னுங் குடங்கட்கும் பொருளுரைத்துக்கொள்க என்பது.

ஆகவனீயமே! நீ, 'க' என்னும் பொருளாகிய பிரமன் வடிவாயிருக்கின்றாய் ஆதலின், பிரமா களிப்புறுதற் பொருட்டு உன்னைப் பார்க்கின்றேன். ஆகவனீயமே! இத்தகைய உன்னை எவ்வாற்றால் சோமரசத்தால் திருத்தியடைவித்தவனாயிருக்கின்றேனோ, அவ்வாறே, சோமத்தால் களிப்புண்டாக்கியவனாயுமிருக்கின்றேன். ஆதலின் உனது அருளால், நல்ல குழந்தை ஏவலாளர்களை உடையவனாவேனாக. நல்ல வன்மையை யுடையவனுமாவேனாக. தனமுதலியவைகளால் தைரிய முடையனாவேனாக. எல்லாவற்றிலும் பொதுவாயுள்ள சோமமே! மேற்கூறிய எமது பிராணன் முதலானவைகளின் பொருட்டு வன்மையளிக்கும் நீ பேராற்றலைத் தருவாயாக. முன்போல் மற்றவைகளையுஞ் சேர்த்துப் பொருளுரைத்துக் கொள்க என்பது.

ஈண்டு, மேற்கூறிய மந்திரங்களனைத்தும், முதற் காண்டம், நான்காம் பிரபாடகம், பதின்மூன்றாம் அநுவாகத்தில் தனித்தனியே சிறப்பாக விநியோகப்பட்டிருக்கின்றன ஆண்டுக் காண்க. ஆனால், சோடசிக்கிரகத்தைப் பார்க்கும், 'வீர்யாய' என்னும் மந்திரம் ஒன்று மாத்திரம் ஆண்டு விநியோகிக்கப்படவில்லை என்பதையு முணர்க என்பதாம்.

---

சில காமிகள் சோமத்தைப் பார்ப்பதை விதிக்கின்றது

பிராமணம் 1

बुभूषन्नवेक्षेतैष] वै पात्रियः प्रजापतिर्यज्ञः प्रजापतिस्तमेव तर्पयति स एनं तृप्तो ब्रह्मवर्चसेनाभि पवत आमयाव्यवेक्षेतैष वै पात्रियः प्रजापतिर्यज्ञः प्रजापतिस्तमेव तर्पयति स एनं तृप्तः प्राणापानाभ्यां वाचो दक्षक्रतुभ्यां चक्षुर्भ्यां श्रोत्राभ्यामात्मनोऽङ्गेभ्य आयुषोऽन्तरेति ताजक्प्र धन्वति ।

என்பது.

உரை

ஐசுவரியத்தை விரும்பியவன் இச்சோமரசங்களைப் பார்ப்பானாக. இப் பாத்திரத்திலுள்ள சோமரசம் பிரசாபதியின் வடிவமாகும். அதனாற் செய்யப் படும் யாகமும் பிரசாபதியின் வடிவாம். ஆதலின், பார்த்தலால் பிரசாபதியைக் களிப்படைவிக்கின்றான். இவ்வாறு களிப்புற்ற பிரசாபதி, இவ்வெசமானனை ஐசுவரியத்தின் பொருட்டு பரிசுத்தப் படுத்துகின்றான். இவ்வாறே, பிரம வொளியை விரும்புகின்றவர்கட்கும் ஆயுளை விரும்புகின்றவர்கட்குமாம் என்பதை யுணர்க.

எதிரியைக் கொல்வதற்கு மாத்திரம், பிரசாபதி களிப்புற்று பகைவரின் யோகக்ஷேமங்களையும், செவிகளையும், கண்களையும், மற்றுமுள்ள அங்கங்களையும் பிரித்துவிடுகின்றான், பிரித்துவிடவே, அவனும் இறந்து போவான் என்று பொருள் கொள்க என்பதாம்.

மூன்றும் அநுவாகம்
முற்றிற்று.

---

நான்காம் அநுவாக விடயச் சுருக்கம்.

स्फय उत्करेपरि क्षिप्तं स्फयं तत्रैवोपतिष्ठते ।
उपद्युभूमी अन्येषूप माइत्यनुषज्यते ॥ १ ॥
आस्ताचेति स्तोत्रदेशं कलेति द्रोणकुम्भकम् ।
सोमस्सोमंचाग्निरग्निमुप देवेति देवताः ॥ २ ॥
उपयज्ञेति यज्ञं तमुपमेति तु होत्रकान् ।
नमस्त्रयविधि स्पष्टो हृदेस्थो द्युभुवौभजेत् ॥ ३ ॥
सूर्यस्सूर्यं वायुर्वायुं पत्नित्येषोऽनुषपूज्यते ।
अग्निर्यमः सरेत्येतान्देद्वारौ संदसोप्युभे ॥ ४ ॥
सदोब्रह्माचर्त्विजो द्योर्भूर्नमः पञ्चभिः क्रमात् ।
अहतृणं निरस्योन्नीत्युपविश्यात्र पाजपेत् ॥ ५ ॥
आगन्त दक्षिणं पश्येदष्टा विंशतिरीरितः ।

முதலானவைகளைப் போற்றல்)

*உத்கரத்தில் வேதியைச் செய்த கத்தி முதலியவைகளை எறிந்துவிட்டுப் போற்றல், விண் மண், பகிழ்பவமாதனத் துதியைப்பாடும் இடம், துரோண கலசம், சோமன், அக்கினி, தேவர்கள், யக்ஞம், ஹோதாக்கள் என்பவர்களைப் போற்றுதற்குரிய மந்திரங்களும் அவற்றின் விதியும், மீண்டும் ஆகவனீயம் ஆக்னீத்ரம், ஹோதாவின் மேடை, என்பவைகளைப் போற்றுதற்குரிய மந்திரங்களும், அவைகளின் விதியும், மண், விண், சூரியன், வாயு, அக்கினி, எமன், சரசுவதி, சதசின்துவாரங்கள், சதசு, பிரமன், இருத்துவிக்குக்கள், ஆகாசம், பூமி என்பவைகளைப் போற்றுதற்குரிய மந்திரங்களுங் கூறப்படு கின்றன என்பது.*

---

## மூன்றுங் காண்டம் இரண்டாம் பிரபாடகம்

## நான்காவது அநுவாகம்

*நான்கு பஞ்சாதிகட்குமேல் முப்பத்துமூன்று பதங்களைக் கொண்டது.*

ஸ்ப்யம், என்னும் மரக்கத்தி முதலியவைகளைப் போற்றுவதற் குரிய மந்திரங்களும் பிராமணமும்

स्फ्यस्स्वस्तिर्विघनः स्वस्तिः पर्शुर्वेदिः परशुर्नस्स्वस्तिः । यज्ञिया यज्ञकृतः स्थ ते माऽस्मिन्यज्ञ उप ह्वयध्वमुप मा द्यावापृथिवी ह्वयेतामुपाऽऽस्तावः कलशस्सोमो अग्निरुप देवा उप यज्ञ उप मा होत्रा उपहवे ह्वयन्तां नमोऽग्नये मखघ्ने मखस्य मा यशोऽर्यादित्याहवनीयमुप तिष्ठते यज्ञो वै मखः ॥ १ ॥ यज्ञंवाव स तद्हन्तस्मा एव नमस्कृत्य सदः प्र सर्पत्यात्मनोऽनार्त्यै नमो रुद्राय मखघ्ने नमस्कृत्या मा पाहीत्याग्नीध्रं तस्मा एव नमस्कृत्य सदः प्र सर्पत्यात्मनोऽनार्त्यै नम इन्द्राय मखघ्न इन्द्रियं मे वीर्यं मा निर्वधीरिति होत्रीयमाशिषमेवैतामा शास्त इन्द्रियस्य वीर्यस्यानिर्घाताय

या व ॥ २ ॥ देवतास्सदस्यार्ति मार्पयन्ति यस्ता विद्वान्प्रसर्पति न सदस्यार्तिमार्छति नमोऽग्नये मखघ्न इत्याहैता वै देवतास्सदस्यार्ति-माऽर्पयन्ति ता य एवं विद्वान्प्रसर्पति न सदस्यार्तिमार्छति दृढे स्थः शिथिरेसमीची माऽꣳहसस्पातꣳ सूर्यो मा देवो दिव्यादꣳहसस्पातु वायुरन्तरिक्षात् ॥ ३ ॥ अग्निः पृथिव्या यमः पितृभ्यस्सरस्वती मनुष्येभ्यो देवी द्वारौ मा मा सं ताꣳ नमस्सदसे नमस्सदस-स्पतये नमस्सखीनां पुरोगाणां चक्षुषेनमो दिवे नमः पृथिव्या अहे दैधिषव्योदतस्तिष्ठान्यस्य सदने सीद योऽस्मत्पाकतर उन्निवत उदुद्वतश्च गेषं पातं मा द्यावापृथिवी अद्याह्नस्सदो वै प्रसर्पन्तम् ॥ ४ ॥ पितरोऽनु प्र सर्पन्ति त एनमीश्वरा हिꣳसितोः सदः प्रसृप्य दक्षिणार्धं परेक्षेताऽगन्त पितरः पितृमानहंयुष्माभिर्भूयासꣳ सुप्रजसो मया यूयं भूयास्तेति तेभ्य एव नमस्कृत्य सदः प्र सर्प-त्यात्मनोऽनार्त्यै ॥ ५ ॥

இவ்வநுவாகத்தில் 'ஸ்ப்யம்' என்னும் மரக்கத்தி முதலியவைகளைப் போற்றுகின்ற மந்திரங்கள் கூறப்படுகின்றன.

---

மரகத்தியைப் போற்றுதற்குரிய மந்திரம்

மந்திரம் 1

स्फ्यस्स्वस्तिर्विघनस्स्वस्तिः पर्शुर्वेदिः परशुर्नस्स्वस्तिः । यज्ञिया यज्ञकृतः स्थ ते माऽस्मिन्यज्ञ उप ह्वयध्वम् ।

முதலானவைகளைப் போற்றல்)

உரை.

மண்ணைக் கெல்லுவதற்குக் கருவியாகிய ஸ்ப்யம் என்னும் மரக்கத்தியானது கேடிலாமைக்குக் காரணமாகுக. மண்ணை மட்டப் படுத்துவதற்குக் கருவியாகிய விகனம் என்பதும் கேடிலாமைக்குக் காரணமாகுக. புற்களைச் செதுக்குவதற்குக் கருவியாகிய பரசும் கேடிலாமைக்குக் காரணமாகுக. மரமுதலியவைகளை வெட்டுதற்குக் கருவியாகிய பரசும் கேடிலாமைக் காரணமாகுக. வேதிகையும் எமக்கு நலமதாகுக. மரக்கத்தி முதலியவைகளே! நீங்கள் வேள்விக்குரியவர்கள் ஆதலின் வேள்வி செய்கின்றவர்களாக இங்கு இருக்கின்றீர்கள். நீங்கள் எக்ஞத்தைத் தேடுகின்றவராவீர்களாக. இவ் வேள்வியில் எம்மை உணர்ந்துகொள்வீர்களாக என்பதாம்.

இம் மந்திரத்தால் வேதிகைசெய்த மரக்கத்தியைக் குப்பைக்குழியில் எறிந்துவிட்டுப் போற்றல் வேண்டுமென்பதாம்.

---

வான் மண் முதலியவைகளைப் போற்றுதல்.

மந்திரம் 2 - 9

उपमा द्यावापृथिवी ह्वयेतामुपाऽऽस्तावः कलशस्सोमो अग्निरुप देवा उप यज्ञ उप मा होत्रा उपहवे ह्वयन्ताम् ।

என்பது

உரை

வான் மண்களே! எம்மை நீவிர் உணர்வீர்களாக. இது பகிழ்ப்பவமானம் என்னும் துதி செய்யப்பட்டவிடம். இவ்வாறே, துரோண கலசம், சோமம், அக்கினி, தேவதைகள், எக்ஞம் என்பவைகட்கும் பொருளுரைத்துக்கொள்க. இவ்வேள்வியில், பிரசாஸ்தா, பிராமணாச்சம்ஸி முதலானோர்களான ஹோதாக்கள் எம்மை அறிவார்களாக என்பதாம். இது எட்டு விநியோக மந்திரங்களை கொண்டது.

---

ஆகவனீயத்தைப் போற்றுதல்

மந்திரம் 10

नमोऽग्नये मखघ्ने मखस्य मा यशोऽर्यादित्याहवनीयमुपतिष्ठते यज्ञो वै मखो यज्ञं वाव स तद्हन्तस्मा एव नमः कृत्य सदः प्रसर्पत्यात्मनोऽनार्त्यै ।

என்பது

உரை

தன்னை வணங்காவிடில் வேள்வியைக் கெடுக்கும் அக்கினியின்பொருட்டு வணக்கம். அதனுடைய அருளால் வேள்விபைச்செய்த பெருமை எமக்குக் கிடைக்குக. ஈண்டு யக்ஞம் என்பது மகமாரம். எக்ஞமே அக்கினி. அது தன்னை வணங்காவிடில் எரித்துவிடுகின்றது. ஆதலின் அக்கினியை வணங்கிக் கொண்டு சபையை அடையில் எசமானனுடைய உடம்பு துன்பிலாததாகின்றது என்பதாம்

---

ஆக்னீத்ரனுடைய மேடையிலுள்ள தீயைப்போற்றுதல்

மந்திரம் 11

**नमो रुद्राय मखघ्ने नमस्कृत्या मा पाहीत्याग्नीध्रं तस्मा एव नमस्कृत्य सदः प्र सर्पत्यात्मनोऽनार्त्यै ।**

என்பது

உரை

ஆக்னீத்ரனுடைய மேடையில் இருக்கின்ற தீ மகத்தைக் கெடுக்குங் கோரமுடையது அதற்கு வணக்கம் இவ்வணக்கத்தால், உருத்திர! நீ எம்மைப் பாதுகாப்பாயாக. என்பதால் ஆக்னீத்ரனுடைய மேடையிலுள்ள தீயைப் போற்றல் வேண்டும். மற்றவை முன்போல் என்பதாம்.

---

ஹோதாவின் மேடையைப்போற்றல்

மந்திரம் 12

**नम इन्द्रायमखघ्न इन्द्रियं मे वीर्यं मा निर्वधीरिति होत्रीयमाशिषमेवैतामा शास्त इन्द्रियस्य वीर्यस्यानिर्घाताय ।**

என்பது.

உரை

மிகுந்த ஐசுவரியமுடைமையின் இந்திரன் என்னும் ஹோதாவின்மேடை வேள்வியைக் கெடுப்பதாம். ஆதலின் அதற்கு வணக்கம். இந்திர! எமது இந்திரியத்தையும், வீரியத்தையும் கெடுக்காதே. இம்மந்திரத்தால் ஹோதாவின் மேடையைப் போற்றில் ஆசீர்வாதத்தை வேண்டிக்கொண்டவனாகின்றான். அவ்வாசீர்வாதம், இந்திரியங்களையும், வீரியத்தையும் கெடாமலிருக்குமாறு செய்வதற்கு உதவிபுரிவது என்பதாம்.

---

முதலானவைகளைப் போற்றல்)

மேற்கூறிய மூன்று மந்திரங்களையும் புகழ்கின்றது

பிராமணம் 1

या वै देवतास्सदस्यार्तिमार्पयन्ति यस्ता विद्वान्प्रसर्पति न सदस्यार्तिमार्छति नमोऽग्नये मखघ्न इत्याहैता वै देवतास्सदस्यार्तिमार्पयन्ति ता य एवं विद्वान्प्रसर्पति न सदस्यार्तिमार्छति ।

என்பது

உரை.

சபையில் உள்ள, அக்கினி, உத்திரன், இந்திரன் என்னும் தேவர்கள் எசமானன் முதலானோர்க்குப் பூசைசெய்விக்கின்றவர்கள். அவர்களை, எசமானன் வணக்கத்தால் வழிபடுகின்றான். ஆதலின், அவர்கள் சபையில் இருப்பினும் துன்பை அடையான் என்பதாம்

---

மண் விண் முதலானவைகளைப்போற்றல்

மந்திரம் 13

दृढे स्स्थश्शिथिरे समीची माऽꣳहसस्पातम् ।

என்பது

உரை

மண் விண்களே! நீங்களிருவரும், போற்றுதவனைக் குறித்து வலிவற்றவர்களாக இருப்பினும், போற்றுகின்றவனுக்கு உறுதியுடையவர்களாய் நலஞ்செய்துகொண்டிருக்கின்றீர்கள். ஆதலின், தடையாகிய பாவத்தினின்றும் என்னைப் பாதுகாப்பாற்றுவீர்களாக என்பதாம்.

---

சூரியனைப் போற்றுதல்.

மந்திரம் 14

सूर्यो मा देवो दिव्यादꣳहसस्पातु ।

என்பது

உரை

சூரியன், சுவர்க்கம்பற்றி யான் செய்துள்ள பாவங்களிலிருந்து எம்மைப் பாதுகாப்பானாக என்பதாம்.

வாயுமுதலிய ஐந்தைப்போற்றல்.

மந்திரம் 15 - 19

**वायुरन्तरिक्षादग्निः पृथिव्या यमः पितृभ्यस्सरस्वती मनुष्येभ्यो देवी द्वारौ मा मा सं ताप्तम् ।**

என்பது

உரை

வாயு, அக்கினி, எமன், சரசுவதி என்னும் மூவரும், அந்தரிக்ஷம், மண், பிதிர்க்கள், மக்கள் என்பவைகட்குச் செய்த பாவங்களிலிருந்து எம்மைப் பாதுகாப்பாற்றுவார்களாக. இரண்டு வாசல்கள் என்னுந்தேவிகளும் எம்மை தாபப்படுத்தாதிருப்பார்களாக என்பதாம். இது ஐந்து மந்திரங்களைக் கொண்டது.

---

சபை முதலியவைகளைப் போற்றல்

மந்திரம் 20-24

**नमस्सदसे नमस्सदसस्पतये नमस्सखीनां पुरोगाणां चक्षुषे नमो दिवे नमः पृथिव्यै ।**

என்பது.

உரை.

சபைக்கு வணக்கம், பிரமனுக்கு வணக்கம், கண்கள் போன்ற இருத்துவிக்குக்களுக்கு வணக்கம். வானுக்கு வணக்கம், மண்ணுக்கு வணக்கம் என்பதாம்.

இம் மந்திரங்களால், சபை, பிரமன், வேள்விச் செயலாளர், விண், மண் என்பவைகளைப் போற்றல் வேண்டுமென்பதாம்.

---

எசமானனுடைய தருப்பை ஆசனத்திலிருந்து ஒரு தருப்பையை வெளியில் எடுத்தெறிதல்

மந்திரம் 25.

**अहे दैधिषव्योदतस्तिष्ठान्यस्य सदने सीद योऽस्मत्पाकतरः ।**

என்பது

முதலியவைகளைப் போற்றல்)

உரை

எசமானனுடைய இடமாகிய தருப்பைப் புல்லே! நீ, பாம்புபோல் துன்பந் தருகின்றதற்குரியாய். ஆகலின், இங்கிருந்து எழும்புவாயாக. நீ, என்னிலும் மிகுந்த உணர்வு உதியாதவனிடத்திலிருப்பாயாக என்பதாம்.

---

எசமாசனன் தனதிடத்தில் அமர்தல்

மந்திரம் 26

**उन्निवत उदुद्वतश्च गेषम् ।**

என்பது

உரை.

என்னில் வேறுயுள்ளவர்களிலும் நான் மேலாகவிருக்கின்றேன். என்னிலுயர்ந்திருக்கின்றவர்களி லிருந்தும் நான் மேன்மையை யடைந்திருக்கின்றேன். அதாவது அவர்களைத்தாண்டி மேலேபோய் இருக்கின்றேன் என்பதாம்

---

எசமானன் சேபித்தல்.

மந்திரம் 27

**पातं मा द्यावापृथिवी अद्याह्नः ।**

என்பது

உரை

வான்மண்களே! நீங்கள் இன்று செய்யும் அக்கினிஷ்டோமம் குறைவுபாடிலாது முடியுமாறு பாதுகாப்பீர்களாக என்பதாம்.

---

சபையின் தெற்குப் பக்கத்தைப் பார்த்தல்

**सदो वै प्रसर्पन्तं पितरोऽनु प्र सर्पन्ति त एनमीश्वरा हिꣳसितोस्सदः प्रसृप्य दक्षिणार्धं परेक्षेताऽगन्त पितरः पितृमानहं युष्माभिर्भूयासꣳ सुप्रजसो मया यूयं भूयास्तेति तेभ्य एव नमस्कृत्य सदः प्र सर्पत्यात्मनोऽनार्त्यै ।**

என்பது.

உரை

சபையை அடைகின்ற எசமானனை, தம்மை வணங்காத பிதிர்க்கள் துன்புறுத்துவார்கள். ஆதலின், சபையையடைந்து சபையின் தென்புறத்தை நோக்கி, (மந்திரம்) "பிதிர்க்களே! நீவிர் எமது சபைக்கு வருவீர்களாக. வந்த உங்களால் யான் பிதிர்க்களையுடையவனாவேனாக. நீங்களும், என்னால், நல்ல புத்திரர்களை யடைவீர்களாக என்பது. இம் மந்திரத்தால் பிதிர்க்களை வணங்கியதால் எசமானனுக்கு அவர்களால் வரும் துன்பம் உண்டாகா என்பதாம்.

நான்காம் அநுவாகம்
முற்றிற்று.

---

ஐந்தாம் அநுவாக விடயச்சுருக்கம்.

भक्षे भक्ष्यं प्रतीक्ष्याश्विगृहीत्वा नृचक्षीक्षते।
मन्द्रेति भक्षयेत्त्रेधा वसुरुद्रादि भेदतः ॥ १ ॥
आप्या भाक्षितमाप्याय्य हिन्व नाभ्यभिमर्शनम् ।
अपाम कृत्वाऽवभृथं समायान्त्यप्रतीक्षणम् ॥ २ ॥
यन्मेपुनर्भजेदाग्निमिष्टाद्धार्द्धारियोजनम् ।
आपूर्वेद्यां शेषवाप एतत्तेत्रिभि रावपेत् ॥ ३ ॥
पुरोडाशांशकान्भूमौ नमश्चमसिनांजमः ।
प्रजा चमसिनोयान्ति दवेवह्नौ समित्त्रयम् ॥ ४ ॥
अप्सुजिघ्रन्ति तच्छेषं द्वाविंशतिरिहोदिताः ।

சோமரசம் அருந்தும் பாத்திரத்தைக் கொடுக்கும்போது பார்த்தல், அதைவாங்கிக்கொள்ளல், அதைப்பார்த்தல், அருந்தல், சமசங்களில் சோமத்தை மீண்டும் நிறைத்தல், நாபியைத் தொடுதல், அவபிருதத்திலிருந்து திரும்பிப்பாராமல் வருதல், ஆஹவனீயத்தைப் போற்றல், ஹாரியோசனக்கிரகரசத்தை யருந்தல், ஷை ஹாரியோசனக்கிரகத்தில் மீந்ததை உத்திரவேதிகையில் கொட்டுதல், பிதிருக்களுக்குப் புரோடாசத் துண்டுகளை அர்ப்பணஞ்செய்தல், ஜபஞ்செய்தல், இருத்துவிக்குகள் திரும்பிப்போதல், ஆறு மந்திரங்களால் ஆறு சமித்துகளைத் தீயில் வைத்தல், சமசத்திலுள்ள ரசத்தை முகர்ந்துபார்த்தல் என்பது.

---

## மூன்றாங் காண்டம் இரண்டாம் பிரபாடகம்

## ஐந்தாவது அநுவாகம்

*ஆறு பஞ்சாதிகட்குமேல் நாற்பத்துநான்கு பதங்களைக் கொண்டது*

சோமரசம் அருந்தலைக் கூறு மந்திரங்கள்.

भक्षेहि माऽऽ विश दीर्घायुत्वाय शंतनुत्वाय रायस्पोषाय वर्चसे सुप्रजास्त्वायेहि वसो पुरोवसो प्रियो मे हृदोऽस्यश्विनोस्त्वा बाहुभ्याꣳ सघ्यासं नृचक्षसं त्वा देव सोम सुचक्षा अव ख्येषं मन्द्राऽभिभूतिः केतुर्यज्ञानां वाग्जुषाणा सोमस्य तृप्यतु मन्द्रा स्वर्वाच्यदितिरनाहतशीर्ष्णी वाग्जुषाणा सोमस्य तृप्यत्वेहि विश्वचर्षणे ॥ १ ॥ शंभूर्मयोभूस्स्वस्ति मा हरिवर्ण प्र चर क्रत्वे दक्षाय रायस्पोषाय सुवीरतायै मा मा राजन्वि बीभिषो मा मे हार्दि त्विषा वधीः । वृषणे शुष्मायाऽऽयुषे वर्चसे । वसुमद्गणस्य सोम देवते मतिविदः प्रातस्सवनस्य गायत्रछन्दस इन्द्रपीतस्य नराशꣳसपीतस्य पितृपीतस्य मधुमत उपहूतस्योपहूतो भक्षयामि रुद्रवद्गणस्य सोम देवते मतिविदो माध्यंदिनस्य सवनस्य त्रिष्टुप्छन्दस इन्द्रपीतस्य नराशꣳसपीतस्य ॥ २ ॥ पितृपीतस्य मधुमत उपहूतस्योपहूतो भक्षयाम्यादित्यवद्गणस्य सोम देवते मतिविदस्तृतीयस्य सवनस्य जगतीछन्दस इन्द्रपीतस्य नराशꣳसपीतस्य पितृपीतस्य मधुमत उपहूतस्योपहूतो भक्षयामि । आ प्यायस्व समेतु ते विश्वतस्सोम वृष्णियम् । भवा वाजस्य संगथे । हिन्व मे गात्रा हरिवो गणान्मे

मा वि तीतृषः । शिवो मे सप्तर्षीनुप तिष्ठस्व मा मेऽवाङ्नाभिमति
॥ ३ ॥ गाः । अपाम सोमममृता अभूमादर्श्म ज्योतिरविदाम देवा-
न् । किमस्मान्कृणवदरातिः किमु धूर्तिरमृत मर्त्यस्य । यन्म आ-
त्मनो मिन्दाऽभूदग्निस्तत्पुनराऽहाऽर्जातवेदा विचर्षणिः । पुनर-
ग्निश्चक्षुरदात्पुनरिन्द्रो बृहस्पतिः । पुनर्मे अश्विना युवं चक्षुरा धत्त-
मक्ष्योः । इष्टयजुषस्ते देव सोम स्तुतस्तोमस्य ॥ ४ ॥ शस्तो-
क्थस्य हरिवत इन्द्रपीतस्य मधुमत उपहूतस्योपहूतो भक्षयामि ।
आपूर्यास्थाऽऽमापूरयत प्रजया च धनेन च । एतत्ते ततये च त्वाम-
न्वेतत्त्ते पितामह प्रपितामह ये च त्वामन्वत्र पितरो यथाभागं मन्द
ध्वं नमो वः पितरो रसाय नमो वः पितरः शुष्माय नमो वः पितरो जीवाय
नमो वः पितरः ॥ ५ ॥ स्वधायै नमो वः पितरो मन्यवे नमो वः पितरो
घोराय पितरो नमो वो य एतस्मिंल्लोके स्थ युष्मा स्तेऽनु येऽस्मिं-
ल्लोके मां तेऽनु य एतस्मिंल्लोके स्थ यूयं तेषां वसिष्ठा भूयास्त येऽ-
स्मिंल्लोकेऽहं तेषां वसिष्ठो भूयासं प्रजापते न त्वदेतान्यन्यो विश्वा
जातानि परि ता बभूव ॥ ६ ॥ यत्कामास्ते जुहुमस्तन्नो अस्तु वय-
स्याम पतयो रयीणाम् । देवकृतस्यैनसोऽवयजनमसि मनुष्यकृतस्यै-
नसोऽवयजनमसि पितृकृतस्यैनसोऽवयजनमस्यप्सु धौतस्य सोम
देव ते नृभिस्सुतस्येष्टयजुषस्स्तुतस्तोमस्य शस्तोक्थस्य यो भक्षो

अश्वसनियो गोसनिस्तस्य ते पितृभिर्भक्षकृतस्योपहूतस्योपहूतो भक्ष-

यामि ॥ ७ ॥

*இதில் சோமரசத்தை அருந்துதற்குரிய மந்திரங்கள் கூறப்படுகின்றன.*

கொடுக்குஞ் சோமரசத்தைப் பார்த்தல்.

மந்திரம் 1.

**भक्षेहि माऽऽ विश दीर्घायुत्वाय शंतनुत्वाय रायस्पोषाय वर्चसे सुप्रजा-स्त्वायेहि वसो पुरोवसो प्रियो मे हृदोऽसि ।**

*என்பது.*

உரை

*அருந்துதற்குரிய சோமரசமே! நீ, நீண்ட ஆயுள், உடம்பில் நலமுண்டாதல், தனங்கிடைத்தல், அழகையடைதல், புத்திரர்களைப் பெறுதல் என்பவைகள் கைவருதற் பொருட்டு இங்கு வருவாயாக. என்னுட் புகுவாயாக. வாழ்விற்குக் காரணமே! எம்மை வாழ்வித்தற் பொருட்டு வருவாயாக. தனமுதலியவைகளுள் முதலாவது வாழ்விப்பதா மாதலின் எமது உள்ளத்திற்கு ஒத்த விருப்புடையதா யிருக்கின்றாய் என்பதாம்.*

---

சோமரசத்தை வாங்கிக்கொள்ளல்

மந்திரம் 2

**अश्विनोस्त्वा बाहुभ्याꣳ सघ्यासम् ।**

*என்பது.*

உரை.

*அருந்துதற்குரிய சோமரசமே! உன்னை, தேவர்கட்கு வைத்தியர்களான அசுவினிகளின் கைகளால் எடுத்துக் கொள்கின்றேன் என்பதாம்.*

---

வாங்கிக்கொண்டதைப் பார்த்தல்

மந்திரம் 3

**नृचक्षसं त्वा देव सोम सुचक्षा अवख्येषम् ।**

*என்பது.*

உரை

மக்களை நோக்கும் சோமரசமே! உன்னை, இனிது பார்க்கின்றேன் என்பதாம்.

இம்மூன்றும், முதற் காண்டம், நான்காம் பிரபாடகம் பதின்மூன்றும் அநுவாகத்தில் விநியோகிக்கப் படுகின்றன.

---

காலையில் சோமரசத்தை யருந்தல்

மந்திரம் 4.

**मन्द्राभिभूतिः केतुर्यज्ञानां वाग्जुषाणा सोमस्य तृप्यतु मन्द्रा स्वर्वाच्यदितिरनाहतशीर्ष्णी वाग्जुषाणा सोमस्य तृप्यत्वेहि विश्वचर्षणे शंभूर्मयोभूः स्वस्ति मा हरिवर्ण प्र चर क्रत्वे दक्षाय रायस्पोषाय सुवीरतायै मा मा राजन्वि बीभिषो मा मे हार्दि त्विषा वधीः। वृषणे शुष्माय ऽऽयुषे वर्चसे। वसुमद्गणस्य सोम देवते मतिविदः प्रातस्सवनस्य गायत्रछन्दस इन्द्रपीतस्य।**

என்பது.

உரை

களிப்பிற்குக் காரணமும், தடைகளை நீக்குவதும், வேள்விக்குக் காரணமுமாகிய வாக்குத் தேவதை (முகத்திலுள்ள தேவதை) சோமத்தை யருந்திக் களிப்படைக. மற்றும், களிப்பிற்குக் காரணமும், நேரில் இனிதிருப்பதும், கண்டிக்கப் படாததும், தடையிலாது தொடங்கப் பெறுவதுமாகிய வாக்குத் தேவதை, மற்றவை முன்போல். ஈண்டு, களிப்பிற்குக் காரணம் என்று இரட்டித்துக் கூறியது அன்பின் பொருட்டென்க என்பது.

இனி, சாந்தியைத் தருவதும், சுகத்தைத் தருவதும், எல்லா மக்களையுந் தனதாகவுடையதுமாகிய சோமரசமே! நீ, வருவாயாக.

பசுமையாகிய சோமரசமே! வேள்வியில் உற்சாக முதலியவைகள் சித்தியாதற் பொருட்டு வாந்தி முதலிய பீடையை யுண்டாக்காமல் உள்ளே பிரவேசிப்பாயாக.

சோமராஜனே! வாந்தி முதலிய துன்பங்களால் பெரிதும் பயமுறுத்தாதே. உள்ளத்தைத் துன்புறுத்தாதே, உள்ளந் துன்புறு திருத்தல், இந்திரியம் வன்மை முதலியவைகள் கிடைத்தற் பொருட்டென்க,

சோமரசமருந்துதல்)

எட்டு வசுக்களைக் கொண்ட கணமுடையதும், அன்புடைய எசமானனுடைய புத்தியை யுணர்வதுமாகிய சோமரசமே! காயத்திரிச் சந்தத்தையுடையதும், இந்திரனால் சோமரச மருந்தப்படுவதுமாகிய உனது காலைச் சவனத்தில் (காலையில் சோமரசம் பிழிவதில்) ஏனையோர்களால் அழைக்கப்பெற்ற யான் அருந்துகின்றேன் என்பதாம்.

---

நாராசம்சமென்னுஞ் சோமரசத்தை யருந்தல்

மந்திரம் 5

**नराशꣳसपीतस्य पितृपीतस्य मधुमत उपहूतस्योपहूतो भक्षयामि।**

என்பது

உரை

நரர்கள் என்னும் மக்களாற் போற்றப்படும் பிதிர்க்கள் அருந்தும் சோமரச பாத்திர விசேடத்தில் உள்ள சோமரசத்தை இம்மந்திரத்தால் அருந்தல் வேண்டுமென்பதாம்.

ஈண்டு இம்மந்திரத்தை, நராசம்ச பாத்திர சோமரசத்தை யருந்துவதற்கு மாத்திரம் உபயோகித்தல் வேண்டு மென்பர் சிலர். சிலரோ, யாண்டும் இதை ஓதலா மென்பர் என்பதை யுணர்க. இதன் காரணம் மேல்வரும்.

---

உச்சிப்போதில் சோமரச மருந்தல்

மந்திரங்கள் 6—7.

**रुद्रवद्गणस्य सोम देवते मतिविदोमाध्यंदिनस्य सवनस्य त्रिष्टुप्छन्दस इन्द्रपीतस्य नराशꣳसपीतस्य पितृपीतस्य मधुमत उपहूतस्योपहूतो भक्षयामि।**

என்பது.

உரை

உருத்திரனைக் கொண்ட கணத்தை யுடையதும், எசமானனுடைதி புத்தியை யுணர்ந்து கொள்வதும், திரிஷ்டுப் சந்தத்தை யுடையதுமாகிய மத்யயான வேளையிற் சோமரசம் பிழிதலில் என்பது விசேடம். ஏனையவைகளை முன்போல் முன்னும் பின்னுஞ் சேர்த்துக் கொள்க என்பதாம்.

இதிலும் ,முன்போல் நராசம்சத்தை யருந்துதலையும் அறிந்துக்கொள்ளல் வேண்டும்.

---

மூன்றும் முறை பிழியும்போது அருந்தல்

மந்திரங்கள் 8—9

**आदित्यवद्गणस्य सोमदेवते मतिविदस्तृतीयस्य सवनस्य जगती-छन्दस इन्द्रपीतस्य नराशंसपीतस्य पितृपीतस्य मधुमत उपहूतस्योपहूतो भक्षयामि ।**

என்பது.

உரை.

இதில் ஆதித்தனைக் கொண்ட கணமுடையதும், சகதிச்சந்த முடையது மாகியமூன்றாவது பிழிதலில் உள்ள சோமரசமே! என்பது விசேடம். முன்போல் ஏனையவைகளை முன்னும் பின்னுஞ் சேர்த்துப் பொருளுரைத்துக் கொள்க என்பதாம்.

ஈண்டும், முன்போல் நராசம்சத்தை அருந்துதலையும் அறிந்துக் கொள்க.

இனி, சோமயாகப் பிரகரணத்தில் சோமத்தை அருந்துவதற்குக் கூறியுள்ள மந்திரமோ, சூத்திரத்தைத் தழுவி, விகற்ப பக்ஷத்திலுள்ளதும், பிரயோகக்காரர் எடுத்துக் கொண்டதுமாம் என்பதை உய்த்துணர்ந்து கொள்க.

---

அருந்திவிட்ட பாத்திரத்தை மீண்டும் நிறைத்தல்

மந்திரம் 10

**आ प्यायस्व समेतु ते विश्वतस्सोम वृष्णियम् । भवा वाजस्य संगथे ।**

என்பது.

உரை

சோமமே! நீ, எல்லாவகையாலும் வளர்வாயாக. உனது வீரியம் உலகமெங்குஞ் செல்க. நீயும் உணவுப் பொருளடைதலில நிமித்தமாவாயாக என்பதாம். இதுவே நராசம்சம் என்று வழங்கப் பெறுவது. மற்றும், இது, முதற்காண்டம் நான்காம் பிரபாடகம் பதின்மூன்றும் அநுவாகத்தில் விநியோகிக்கப்படுகின்றதென்பதையு முணர்க.

---

நாபியைத் தொடுதல்

மந்திரம் 11

**हिन्व मे गात्रा हरिवो गणान्मे मा वितीतृषः । शिवो मे सप्तर्षीनुप तिष्ठस्व मा मेऽवाङ्नाभिमति गाः ।**

என்பது

உரை

பசுமை நிறமுடைய சோமமே! எனது அங்கங்களைப் பிரியப்படுத்துவாயாக. எமது சுற்றத்தார் கணங்களை சோமரசத்தை யருந்துவதில் விருப்பில்லாதவர்களாகச் செய்யாதே; மற்றே, எப்போதும் அதில் விருப்புடையவர்களாகச் செய்வாயாக. மற்றும், நீ, சிவமாகி தலையிலுள்ள ஆறு துளைகளினுமுள்ள பிராணன்களைக் களிப்படைவிப்பாயாக. அஃதன்றியும், எனது நாபியைக் கடந்து கீழ்த்துவாரத்திற் செல்லாதே என்பதாம்.

---

முடிவில் நீராடி வரும்போது செபிக்குமந்திரம்

மந்திரம் 12.

**अपाम सोमममृता अभूमादर्श्म ज्योतिरविदाम देवान् । किमस्मान्कृणव-दरातिः किमु धूर्तिरमृत मर्त्यस्य ।**

என்பது.

உரை.

யாம் எல்லோரும் சோமரசத்தை யருந்தினம்; அதனுல் தேவர்களாயினேம். ஆதித்தனைக் கண்டோம். இந்திரன் முதலானோரை யடைந்தனம். இத்தகைய எமமை பாவமாகிய பகை என்ன செய்யும்? இறக்குந் தன்மையையுடைய மனிதர்களைப் பற்றிய துன்பங்கள் இறப்பிலாமையை யடைந்த எம்மைப் பற்றிய பீடைகள் தொலைந்தன. அவை, எம்மைத துன்புறுத்தும் என்பது எங்கே? என்பதாம்.

---

ஆகவனீயத்தைப் பார்த்தல்

மந்திரம் 13

**यन्म आत्मनो मिन्दाऽभूदग्निस्तत्पुनराऽहार्जातवेदा विचर्षणिः ।**

என்பது

உரை.

உண்டாகிய வேள்வியின் இடையூற்றை யுணர்ந்ததும், மீண்டும் இனிது அமைப்பதற்கு வன்மையதுமாகிய அக்கினி, துன்புறுத்திய எமது வேள்விச் செயலாளர்களின் அங்கத்தை மீண்டும் எரிப்பதாகுக என்பதாம்.

---

மேற்கூறிய அதற்கே விகல்ப மந்திரம்.

மந்திரம் 14

**पुनरग्निश्चक्षुरदात्पुनरिन्द्रो बृहस्पतिः। पुनर्मे अश्विना युवं चक्षुराधत्तमक्ष्योः।**

என்பது

உரை.

வேள்வியில் அங்கங் குறைவுபடில் எசமானனுடைய கண்கெடும். ஆதலின், இவ்வக்கினி எசமானனாகிய எனக்குக் கண்ணைக் கொடுத்தது. அங்ஙனமே, இந்திரனும் பிருகற்பதியும். எக்ஞ அங்கத்தை நிறைவாக்கி எனது கண்ணைக் கொடுத்தார்கள். அசுவினிகளான உங்கட்கும் எமது கண்ணைப் பார்க்கும் வன்மையைக் கொடுத்தனர் என்பதாம்.

---

அரிசிப்பொரி கலந்த சோமரசத்தை யருந்தல்.

मந்திரம் 15

**इष्टयजुषस्ते देव सोम स्तुतस्तोमस्य शस्तोक्थस्य हरिवत इन्द्रपीतस्य मधुमत उपहूतस्योपहूतो भक्षयामि।**

என்பது

உரை

சோமமே! வேண்டியவைகட்குச் சாதனமாகிய யாகத்தையுடையதும் சாமமறைப்பாடலாகிய துதிமஞ்சரியையுடையதும், சஸ்திரம் என்னும் ஒரு வகைத் துதியையுடையதும், பீத (மஞ்சள்) நிறமுடையதும, இந்திரனால் அருந்தப் படுவதும், தித்திப்பையுடையதுமாகிய உனது ரசத்தை, பிறரால் அநுக்ஞைபெற்றுக் கொண்டயான் அருந்துகின்றேன் என்பதாம்.

---

அருந்தி மீந்ததை உத்தரவேதியிற் கொட்டுதல்.

மந்திரம் 16

**आपूर्यास्थाऽऽमा पूरयत प्रजया च धनेन च।**

என்பது

உரை

சோம அரிசிப் பொரிகளே! நீங்கள், எப்போதும் நிறைந்திருப்பீர்கள் ஆதலின், எனக்கு, தனங்களையும் புத்திரர்களையும் நிறையக் கொடுப்பீர்களாக என்பதாம்.

இம்மூன்று மந்திரங்களும், முதற்காண்டம், நான்காம் பிரபாடகம், இருபத்தெட்டாம் அநுவாக பரிசேடத்தில் விநியோகிக்கப்படுகின்றன.

---

சமசங்களை அருந்துகின்றவர்கள், பிதிர்க்கட்கு மூன்றுபுரோடாசத் துண்டுகளைவைத்தல்.

மந்திரம் 17

**एतत्ते तत ये च त्वामन्वेतत्ते पितामह प्रपितामह ये च त्वामन्वत्रपितरो यथाभागं मन्दध्वम् ।**

என்பது.

உரை

தகப்பனே! உனக்கு இப்புரோடாசத்துண்டு அன்னமாகுக. பாட்டனே! உனக்கு இப்புரோடாசத் துண்டு அன்னமாகுக. முப்பாட்டனே உனக்கு இப்புரோடாசத் துண்டு அன்னமாகுக. மற்றும், உம்மைச் சேர்ந்தோர்கட்கும் இது அன்னமாகுக. ஆதலின், பிதிர்க்களான அனைவரும் இவ் வேள்வியில் அவரவர்கள் பங்கை யுண்டு களிப்பீர்களாக என்பதாம்.

---

பிதிர்க்களை வணங்கல்.

மந்திரம் 18

**नमो वः पितरो रसाय नमो वः पितरश्शुष्माय नमो वः पितरो जीवाय नमो वः पितरस्स्वधायै नमो वः पितरो मन्यवे नमो वः पितरो घोराय पितरो नमो वो य एतस्मिँल्लोके स्थ युष्मा्ँस्तेऽनु येऽस्मिँल्लोकेमां तेऽनु य एतस्मिँल्लोकेस्थयूयं तेषां वसिष्ठा भूयास्त येऽस्मिँल्लोऽहं तेषां वसिष्ठो भूयासम् ।**

என்பது

உரை.

பிதிர்க்களே! உங்களுடைய சாரத்தின் பொருட்டு வணக்கம். மற்றும், உங்களுடைய வண்மை, சீவன், அவியளிப்பவன், கோபம், உக்கிரச்செயல் என்பவைகட்கும் வணக்கம். உங்கட்கும் வணக்கம். நீவிர் ஏனையோர்களுடன் பிதிர்க்களினுலகில் இருப்பீர்களாக. உங்களைப்பற்றிக்கொண்டு ஏனையோர்களும் இருப்பார்களாக. எம்மைப்பற்றிக் கொண்டுள்ள மக்களையும் வாழ்விப்போர்களாக்குவீர்களாக என்பதாம்.

இம் மந்திரங்கள் மூன்றும், முதற்காண்டம், நான்காம் பிரபாடகம் இருபத்தெட்டாம் அநுவாகத்தில் விநியோகிக்கப்படுகின்றன.

---

பிரிந்து செல்லுதல்.

மந்திரம் 19

प्रजापते न त्वदेतान्यन्यो विश्वा जातानि परि ता बभूव। यत्कामास्ते जुहुमस्तन्नो अस्तु वयꣳ स्याम पतयो रयीणाम्।

என்பது

உரை.

பிரமனே உன்னைத்தவிர்த்து மற்றெவரும் காணப்படும் உலகங்களை உண்டாக்கமாட்டார். அழிக்கவுமாட்டார். ஆதலின், எவ்விருப்பால் உன்னை வேள்வியால் வழிபடுகின்றேமோ, அதன் பயன் எமக்குண்டாகுக. யாம் தனங்கட்கு முதலாளியாவோமாக என்பதாம். 'ஏதத்தே, என்பது முதலிய மந்திரங்கள், "வாமமத்திய, என்னும் அநுவாகத்திற்கு முன் கொள்ளப் படுவன என்பது.

இம் மூன்று மந்திரங்களும், முதற் காண்டம், நான்காம் பிரபாடகம் இருபத்திரண்டாம் அநுவாகத்தில் விநியோகிக்கப்படுகின்றன.

---

மூன்று மந்திரங்களால் விறகுத் துண்டுகளைத்தீயில் வைத்தல்.

மந்திரங்கள் 20 - 21 - 22.

देवकृतस्यैनसोऽवयजनमसि मनुष्यकृतस्यैनसोऽवयजनमसि पितृकृतस्यैनसोऽवयजनमसि।

என்பது

உரை.

விறகுத்துண்டே! நீ, தேவர்கட்குச் செய்த எமது பாவத்தைப் போக்குவதாயிருக்கின்றாய். இவ்வாறே மற்றிரண்டிற்கும் உரை உரைத்துக் கொள்க என்பதாம்.

---

ஏகதனமென்னுங் குடத்தில் அறுகைப்போட்டு முகந்து பார்த்தல்.

மந்திரம் 23.

**अप्सु धौतस्य सोम देवते नृभिस्सुतस्येष्टयजुषस्स्तुतस्तोमस्यशस्तोक्थ-स्ययो भक्षो अश्वसनिर्योगोसनिस्तस्यते पितृभिर्भक्षंकृतस्योपहूतस्योप हूतोभक्षयामि ।**

என்பது

உரை

கழுவுதல் முதலியவைகளால் புனிதப்பட்ட சோமமே! குதிரையைக் கொடுப்பதற்குரியதாய் அருந்தும் பாகமும், பசுக்களை யளித்தற்குரியதாய் அருந்தும் பாகமும், பிறர்களால் அழைக்கப்பெற்ற என்னால் அருந்தப்படுகின்றன. அவற்றை அருந்துகின்றேன் என்பதாம். இது, முதற்காண்டம், நான்காம்பிரபாடகம், இருபத்தெட்டாம் அநுவாகத்தில் விநியோகிக்கப்படுகின்றது.

ஐந்தாம் அநுவாகம்
முற்றிற்று.

---

ஆறுவது அநுவாக விடயச் சுருக்கம்.

महीति पृषदाज्ये स्याद्यावतीति दधिग्रहे
इदं विष्णुर्वैष्णवी स्यादिहमन्त्रास्त्रयो मताः ॥ १ ॥

தயிர்கலந்த நெய்யை யெடுத்தல், தயிரைக் கிரகித்தல் என்பது.

---

## மூன்றும் காண்டம் இரண்டாம் ப்ரபாடகம்
## ஆறாம் அநுவாகம்

மூன்று பஞ்சாதிகட்குமேல் இருபத்திரண்டு பதங்களைக் கொண்டது.

தயிர்கலந்த நெய்யைக் கூறுமந்திரங்களும் ப்ராமணங்களும்.

महीनांपयोऽसि विश्वेषां देवानां तनूः ऋध्यासमद्य पृषतीनां ग्रहं पृषतीनां ग्रहोऽसि विष्णोर्हृदयमस्येकमिष विष्णुस्त्वाऽनु वि चक्रमे भूतिर्दध्ना घृतेन वर्धतां तस्य मेष्टस्य वीतस्य द्रविणमा गम्याज्ज्योतिरसि वैश्वानरं पृश्निनयै दुग्धं । यावती द्यावापृथिवी महित्वा यावच्च सप्त सिन्धवो वितस्थुः । तावन्तमिन्द्र ते ॥ १ ॥ ग्रहꣳ सहोर्जा गृह्णाम्यस्तृतम् । यत्कृष्णशकुनः पृषदाज्यमवमृशेच्छूद्रा अस्य प्रमायुकाः स्युर्यच्छ्वाऽवमृशेच्चतुष्पादोऽस्य पशवः प्रमायुकास्स्युर्यत्स्कन्देद्यजमानः प्रमायुकस्स्यात्पशवो वै पृषदाज्यं पशवो वा एतस्य स्कन्दन्ति यस्य पृषदाज्यꣳ स्कन्दति यत्पृषदाज्यं पुनर्गृह्णाति पशूनेवास्मै पुनर्गृह्णाति प्राणो वै पृषदाज्यं प्राणो वै ॥ २ ॥ एतस्य स्कन्दति यस्य पृषदाज्यꣳ स्कन्दति यत्पृषदाज्यं पुनर्गृह्णाति प्राणमेवास्मै पुनर्गृह्णाति हिरण्यमवधाय गृह्णात्यमृतं वै हिरण्यं प्राणः पृषदाज्यममृतमेवास्य प्राणे दधाति शतमानं भवति शतायुः पुरुषः शतेन्द्रिय आयुष्येवेन्द्रिये प्रति तिष्ठत्यश्वमव घ्रापयति प्राजापत्यो वा अश्वः प्राजापत्यः प्राणस्स्वादेवास्मै योनेः प्राणं निर्मिमीते वि वा एतस्य यज्ञश्छिद्यते यस्य पृषदाज्यꣳ स्कन्दति वैष्णव्यर्चा पुनर्गृह्णाति यज्ञो वै विष्णुर्यज्ञेनैव यज्ञꣳ सं तनोति ॥ ३ ॥

ஐந்து முறை தயிர்கலந்த நெய்யை எடுப்பதற்கு மந்திரம்

மந்திரம் 1

**महीनां पयोऽसिविश्वेषां देवानां तनूर्ऋध्यासमद्य पृषतीनां ग्रहंपृषतीनां ग्रहोऽसि विष्णोर्हृदयमस्येकमिष विष्णुस्त्वाऽनु वि चक्रमे भूतिर्दध्ना घृतेन वर्धतां तस्यमेष्टस्य वीतस्य द्रविणमा गम्याज्ज्योतिरसि वैश्वानरं पृश्नियै दुग्धम्।**

என்பது

உரை

*தயிர்கலந்த நெய்யே! நீ, பசுக்களின் பாலாக இருக்கின்றாய். இன்று, பிருஷத்துக்களாக இருக்கும் உன்னை வளர்க்கின்றேன். விஷ்ணுவின் (யக்ஞத்தின்) இதயமாக இருக்கின்றாய். எல்லாத் தேவர்களாலும் விரும்பும் விஷ்ணுவாகிய யக்ஞமே உன்னை முக்கியமாக ஏற்றுக்கொண்டுள்ளேன். இங்குள்ள தயிர் நெய்களால் உனது மகிமை வளருக. தேவர்கட்கு ஆகுதி செய்தல், தேவர்கள் அருந்தல் என்பவற்றின் பயன் எமக்கு வருக. நீ, எல்லா மக்கட்கும் இனிய விளக்கமாயிருக்கின்றாய். வெள்ளைப் பசுவின் பாலாயிருக்கின்றாய் என்பதாம். இத்தயிர்கலந்த நெய், பசு அநுயாசையின் பொருட்டாமாதலின் அக்கினி ஷோமீய பசுப்பிரபாடகத்தின் 'பிருதிவ்யைத்வா, என்னும் அநுவாகத்திற்கு முன் இம்மந்திர விநியோகம் என்று தெரிந்துகொள்க. பிருஷத்துக்கள் = மருத்துக்களின் அசுவங்கள்.*

*இது, முதற்காண்டம், மூன்றும் பிரபாடகம் நான்காவது அநுவாகத்தில் விநியோகிக்கப்படுகின்றது.*

---

ததிகர்மம், என்னுந் தயிரை எடுத்தல்

மந்திரம் 2

**यावती द्यावापृथिवी महित्वा यावच्च सप्त सिन्धवो वितस्थुः। तावन्तमिन्द्र ते ग्रहꣳ सहोर्जा गृह्णाम्यस्तृतम्।**

என்பது

உரை

*எழுகடல்களும், வானும் மண்ணும் எதுவரை நிலைபெற்றிருக்கின்றனவோ, அதுவரை, இந்திர! உன்னுடைய கிரகத்தை, அதாவது உனக்குத் தயிர் எடுப்பதை எடுத்துக் கொண்டே யிருப்பேன். அதாவது எக்காலும் உனக்குத் தயிரெடுத்துக்கொண்டிருப்பேன் என்பதாம்.*

*இது, முதற்காண்டம், நான்காம் பிரபாடகம் பதினெட்டாம் அநுவாகத்தில் விநியோகிக்கப்படுகின்றது.*

---

நெய்கலந்த தயிர் கீழேகொட்டிப் போய்விடில் மீண்டும் அதை வார்த்துக்கொள்ளல் வேண்டும் என்று விதிக்கின்றது.

பிராமணம் 1.

**यत्कृष्णशकुनः पृषदाज्यवमृशेच्छूद्रा अस्य प्रमायुकास्स्युर्यच्छ्वावमृशेच्चतुष्पादोऽस्य प्रमायुकास्स्युर्यत्स्कन्देद्यजमानः प्रमायुकः स्यात्पशवो वै पृषदाज्यं पशवो वा एतस्य स्कन्दन्तियस्य पृषदाज्य९ स्कन्दति यत्पृषदाज्यं पुनर्गृह्णाति पशूनेवास्मै पुनर्गृह्णामि ।**

*என்பது*

உரை

*தயிர்கலந்த நெய்யைக் காகந்தீண்டில் இவ்வேள்வித் தலைவனுடைய ஏவற்றொழிலாளர் கெடுகின்றனர். நாய் தீண்டிவிடில் பசுக்கள் கெடுக்கின்றன. கீழே ஊற்றிப் போய்விட்டால் வேள்வித் தலைவன் கெடுகின்றான். இவற்றுள் யாதானு மொன்று நேரினும் மீண்டும் அப்பாத்திரத்தில் தயிர்கலந்த நெய்யை நிறைத்துக் கொள்ளல் வேண்டும். இதுவே இதற்குபிராயச்சித்தமாம். ஆதலின் இவனுடைய பசுக்கள் கெடமாட்டா என்பதாம்.*

---

இதனால் பிராணன் போகாமலிருக்கு மென்று புகழ்கின்றது

பிராமணம் 2

**प्राणो वै पृषदाज्यं प्राणोवा एतस्य स्कन्दति यस्य पृषदाज्य९ स्कन्दति यत्पृषदाज्यं पुनर्गृह्णाति प्राणमेवास्मै पुनर्गृह्णाति ।**

*என்பது*

உரை.

*தயிர்கலந்த நெய் உயிராதலின் அது கீழே தவறிப் போய்விடில் அவனுடைய பிராணனும் போம். ஆதலின், மீண்டும், தயிர்கலந்த நெய்யை நிறைத்துக்கொள்ளில் உயிர் போகாது என்பதாம்.*

---

நெய்யெடுத்தல்)

மீண்டும், தயிர்கலந்த நெய்யை யெடுக்கும் பாத்திரத்தில் வைக்கவேண்டியதை யும் விதிக்கின்றது.

பிராமணம் 3

**हिरण्यमवधाय गृह्णात्यमृतं वै हिरण्यं प्राणः पृषदाज्यममृतमेवास्य प्राणे दधाति शतमानं भवति शतायुः पुरुषश्शतेन्द्रिय आयुष्येवेन्द्रिये प्रति तिष्ठति ।**

என்பது.

உரை

*பொன் அமுதமாம். தயிர் கலந்த நெய் உயிராம். பொன்னைவைத்து அதை நிறைத்தால் அமுதத்தில் உயிரைவைத்ததாகின்றது; ஆதலின் பொன் வைத்தல் வேண்டும். அப்பொன், நூறு வராகனிடை இடையுடையதா யிருத் தல்வேண்டும். அதனால் நூறு வயதுடையவனாகின்றான் என்பதாம்.*

---

நிறைத்துள்ள தயிர்கலந்த நெய்யை, குதிரை முகந்துபார்த்தல் வேண்டுமென விதிக்கின்றது.

பிராமணம் 4

**अश्वमव घ्रापयति प्राजापत्यो वा अश्वः प्राजापत्यः प्राणस्स्वादेवास्मै योनेः प्राणं निर्मिमीते ।**

என்பது

உரை

*உயிர், பிரசாபதியா லுண்டாக்கப் பெற்றது, குதிரையும் பிரசாபதியின் கண்ணிலிருந்துண்டானதா மாதலின் இவ்விரண்டும் ஒரு காரணத்திற் றோன் றியன. இதனால், உயிர், தனது காரணமாகிய குதிரையிலிருந்து உண்டாதல் கூடுமென்பதாம்.*

---

மீண்டும், தயிர்கலந்த நெய்யை நிறைக்கும்போது, 'விஷ்ணேத்வம்' என்பது முதலிய மந்திரத்தை ஓதல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம் 5.

**वि वा एतस्य यज्ञश्छिद्यते यस्य पृषदाज्यꣳ स्कन्दति वैष्णव्यर्चा पुनर्गृह्णाति यज्ञो वै विष्णुर्यज्ञेनैव यज्ञꣳ सं तनोति ।**

என்பது

உரை

தயிர் கலந்த நெய் கீழேகொட்டிப்போய்விடில் அவனுடைய எக்ஞமுங் கெடுகின்றது. ஆதலின், "விஷ்ணோத்வம் என்பது முதலிய வைஷ்ணவ மந்திரத்தை ஓதி மீண்டும் தயிர் கலந்த நெய்யை நிரப்பிக் கொள்ளல் வேண்டும். இதனால், எக்ஞங் கெடுதலின்றி எப்போதும் வளர்ந்துகொண்டிருக்கும்.

ஈண்டு, ஆபஸ்தம்பத்தைத் தழுவியதாயிருக்கில் 'இதம் விஷ்ணு:, என்பது முதலிய மந்திரத்தால் மீண்டும் தயிர்கலந்த நெய்யை நிரப்பிக்கொள்ளுதல் வேண்டும் என்பதை யுணர்க என்பதாம்.

ஆறும் அநுவாகம்
முற்றிற்று.

---

ஏழாம் அநுவாக விடயச்சுருக்கம்.

देवब्रह्मा सौति गातॄन्स्तुतस्य यजमानकः ॥
स्तोत्रं संमन्त्र्य शस्त्रस्य मन्त्रयेच्छस्त्रमेतयोः ॥ १ ॥
इन्द्रश्शेषस्सणामन्तो मन्त्रा अत्र त्रयोमताः ॥

பிரமன்செபித்தல், வேள்வித் தலைவனை ஓதும்படி செய்வித்தல் என்பது

---

## மூன்றுங் காண்டம் இரண்டாம் பிரபாடகம்

## ஏழாம் அநுவாகம்

மூன்று பஞ்சாதிகட்குமேல் இருபத்திரண்டு பதங்களைக் கொண்டது.

துதியையும் சஸ்திரத்தையும் போற்றுவதைக் கூறு மந்திரங்களும் பிராமணங்களும்.

देव सवितरेतत्ते प्राऽऽह तत्प्र च सुव प्र च यज बृहस्पति-
र्ब्रह्माऽऽयुष्मत्या ऋचो मा गात तनूपात्साम्नस्सत्या व आशिषः
सन्तु सत्या आकूतय ऋतं च सत्यं च वदत स्तुत देवस्य सवितुः

प्रसवे स्तुतस्य स्तुतमस्यूर्जं मह्यꣳ स्तुतं दुहामा मा स्तुतस्य स्तुतं गम्याच्छस्त्रस्य शस्त्रम् ॥ १ ॥ अस्यूर्जं मह्यꣳ शस्त्रं दुहामा मा शस्त्रस्य शस्त्रं गम्यादिन्द्रियावन्तो वनामहे धुक्षीमहि प्रजामिषम् । सा मे सत्याऽऽशीर्देवेषु भूयाद्ब्रह्मवर्चसं माऽऽ गम्यात् । यज्ञो बभूव स आ बभूव स प्र जज्ञे स वावृधे । स देवानामधिपतिर्बभूव सो अस्माꣳ अधिपतीन्करोतु वयꣳ स्याम पतयो रयीणाम् । यज्ञो वा वै ॥ २ ॥ यज्ञपतिं दुहे यज्ञपतिर्वा यज्ञं दुहे स यस्स्तुतशस्त्रयोर्दोहमविद्वान्यजते तं यज्ञो दुहे स इष्ट्वा पापीयान्भवति य एनयोर्दोहं विद्वान्यजते स यज्ञं दुहे स इष्ट्वा वसीयान्भवति स्तुतस्य स्तुतमस्यूर्जं मह्यꣳ स्तुतं दुहामा मा स्तुतस्य स्तुतं गम्याच्छस्त्रस्य शस्त्रमस्यूर्जं मह्यꣳ शस्त्रं दुहामा मा शस्त्रस्य शस्त्रं गम्यादित्याहैष वै स्तुतशस्त्रयोर्दोहस्तं य एवं विद्वान्यजते दुह एव यज्ञमिष्ट्वा वसीयान्भवति ॥ ३ ॥

இதில் சஸ்திரத்தையும் ஸ்துதியையும் போற்றுதல் கூறப்படுகின்றது.

---

துதிப்போன், பிரமனை ஆணை கேட்கும்போது பிரமன் செபிக்கவேண்டியமந்திரம்.

மந்திரம் 1

देव सवितरेतत्ते प्राऽऽह तत्प्र च सुव प्र च यज बृहस्पतिर्ब्रह्माऽऽयुष्मत्या ऋचो मा गात तनूपात्साम्नः सत्या व आशिषः सन्तु सत्या आकूतय ऋतं च सत्यं च वदत स्तुत देवस्य सवितुः प्रसवे ।

என்பது

உரை

சவிதாதேவ! பாடுவோன், 'துதிப்பேனுக' என்று உன்னை ஆணை கேட்கும்போது அதற்கு நீ ஆணை கொடுப்பாயாக. யாகத்தையும் நன்கு முடிப்பாயாக. பாடுவோய்! பிரமனுகிய நான் பிருகற்பதியே யான் மனிதன் மாத்திரன் அல்லன். அத்தகையனுகிய யான் சொல்கின்றேன் என்பது எஞ்சி நின்றது. ஆயுளை வளர்க்கு மந்திரத்தை எழுத்துப் பிழையற ஓதுவீர்களாக. இருக்குவடிவாகிய சாமப் பாடலிலிருந்து விலகாதீர்கள். பாட்டில் உள்ள உங்களுடைய எசமான சம்பந்த ஆசீர்வாதங் (வாழ்த்துக்)கள் உண்மைகளாகுக. உங்களுடைய அழைப்புக்களும் உண்மைகளாகுக. நீங்கள் மனதில் உண்மைகளை எண்ணுவீர்களாக. வாக்கால் மெய்மை கூறுவீர்களாக. சவிதா தேவனுடைய ஆணையால் துதிப்பீர்களாக என்பதாம்.

இது, முதற்காண்டம், நான்காம் பிரபாடகம் பதின்மூன்ரும் அநுவாகத்தில் விநியோகிக்கப் படுகின்றது.

---

எசமானன், சாமப் பாடலைத் துதிக்கும்போது செபித்தல்

மந்திரங்கள் 2-3.

स्तुत-यस्तुतमस्यूर्जं मह्यꣳ स्तुतं दुहामा मा स्तुतस्य स्तुतं गम्याच्छस्त्र-
स्य शस्त्रमस्यूर्जं मह्यꣳ शस्त्रं दुहामा मा शस्त्रस्य शस्त्रं गम्यादिन्द्रिया
वन्तो वनामहे धुक्षीमहि प्रजामिषम्। सा मे सत्याऽऽशीर्देवेषु भूया-
द्ब्रह्मवर्चसं माऽऽगम्यात्। यज्ञो बभूव स आ बभूव स प्र जज्ञे स
वावृधे। स देवानामधिपतिर्बभूवस्सो अस्माꣳ अधिपतीन्करोतुवयꣳ
स्याम पतयो रयीणाम्।

என்பது

உரை.

சாமம்பாடுவோர்களால் துதிக்கப் பெறும் துதியே! நீ, துதிகளுக்குள் சிறந்த துதியாயிருக்கின்ருய். அத்தகைய துதியாகிய உனது சாரத்தைக் கறக்கின்றேன். அத்தகைய சிறப்புவாய்ந்த துதியானது எம்பொருட்டு வருக. அங்கனமே, இருக்குமறையை ஓதுவோர்களால் ஓதப்படும் சஸ்திரமென்னுந் துதியே! நீ, சஸ்திரமென்னும் சங்கீதமிலாத் துதிகளுள் சிறந்த சஸ்திரமாயிருக்கின்ருய். அத்தகைய உனது சாரத்தைக் கறக்கின்றேன். சஸ்திரதுதிகளிற் சிறந்த சஸ்திரம் எம்பொருட்டு வருக. இத்தகைய இவ்விரண்டு துதிகளின் அருளால் இந்திரியங்களின் உறுதியுடையவர்களாய் விரும்பிய பயன்களை அடைவோமாக. மக்கள் பேரன்மார்கள் உணவுப்பொருள் முதலியவை

துதிகளைப்போற்றல்)

*களையுந் தேடிக்கொள்வோமாக. தேவர்களிடத்துள்ள எமது ஆசீர்வாதம் மெய்யாகுக. வேள்வியாற்றும் எமக்கு பிரமவொளி உண்டாகுக. அதாவது வேள்வி மேன்மேலும் வளர்க என்பது. தொடங்கிய வேள்வி முடிவுபெறுக. வேள்வியானது மீண்டும் வளருக. அவ்வேள்வி, எனது சோம்பலை உணர்ந் துள்ளது ஆதலின் எமது வீட்டில் மீண்டும் மீண்டும் அநுட்டானத்தால் வளருக. அதுவும், அநுட்டிக்கும் எம்மை நன்கு பரிபாலிப்பதாகுக. அவ் வேள்வி எமக்கு தலைமையதாகுக. யாமும் அதனருளால் தனங்கட்குத் தலைமையனுவேனுக என்பதாம்.*

*சாமப்பாடல் முடிந்தவுடனும் சஸ்திரம் ஓதி முடிந்தவுடனும் இம் மந் திரங்களிரண்டாலும் அவ்விரண்டையும் போற்றல்வேண்டும்.*

*ஈண்டு இந்திரிய வந்த :* (இந்திரியங்களின் உறுதியுடையவர்களாய்) *என் பது முதலியவற்றை சஸ்திர மந்திரத்திலுஞ் சேர்த்துக்கொள்ளல் வேண்டும்,*

*இது முதற்காண்டம், நான்காம் பிரபாடகம், பதின்மூன்றும் அநுவாகத் தில் விநியோகிக்கப்படுகின்றது.*

*சஸ்திரத்தின் செபம் முதற்காண்டம், நான்காம் பிரபாடகம் பதினோர் ந்தாம் அநுவாகத்தில் விநியோகிக்கப் படுகின்றது.*

---

மேற்கூறிய துதிகளின் செபத்தையும், சஸ்திரத்தின் செபத்தையும், 'தோஹ னம்' என்பர் வேதமரபுணர்ந்தோர். அத்தகைய தோஹனத்தை (கறத்தலை) துதித்தல் புகழ்தலெனினுமாம்.

பிராமணம் 1

यज्ञो वा वै यज्ञपतिं दुहे यज्ञपतिर्वा यज्ञं दुहे स यः स्तुतशस्त्रयोर्दोहम-
विद्वान्यजते तं यज्ञो दुहे स इष्टा(व) पापीयान्भवति य एनयोर्दोहं विद्वा-
न्यजते स यज्ञं दुहे स इष्टा(व) वसीयान्भवति स्तुतस्य स्तुतमस्यूर्जं मह्यᳪ-
स्तुतं दुहामा मा स्तुतस्य स्तुतं गम्याच्छस्त्रस्य शस्त्रमस्यूर्जं मह्यᳪ शस्त्रं
दुहामा मा शस्त्रस्य शस्त्रं गम्यादित्याहैष वै स्तुतशस्त्रयोर्दोहस्तं य एवं
विद्वान्यजते दुह एव यज्ञमिष्टा(व) वसीयान्भवति ।

என்பது

**உரை**

வேள்வி, வேள்வி செய்கின்றவனை வெறும் ஆளாக்கி விடுகின்றதா? அல்லது வேள்வி செய்கின்றவன், வேள்வியை வெறிதாக்கிவிடுகின்றானா? என்னிலோ, எவன், இத்தோஹன தோத்திரங்களை யுணராமல் வேள்வி செய்கின்றானோ, அவனை, எக்ஞம் வெறுங்கையனாக்கிவிடுகின்றது. அவனும், வறியனும் பாவியுமாகின்றான். உணர்ந்து செய்கின்றவன் எகஞத்தை வெறிதாக்கி விடுகின்றான். வாழ்வுடையனாகின்றான் 'இவ்வாறே சஸ்திரத்திற்கும் ஆகும் என்பதையும் உணர்ந்துகொள்க என்பதாம். இத்துதி எங்குமிருப்பினும் பகிழ்ப்பவமானத்திலும், ஆஜ்ய சஸ்திரத்லும் பெரும்பான்மை பிரயோகிக்கப் படுகின்றது. ஆதலின், ருதுக்கிரக அநுவாகத்திற்கு முன்னும், ஐந்திராக்னக் கிரக 'அநுவாகத்தின் முன்னும்' ஓதற்பாலது.

ஏழாம் அநுவாகம்
முற்றிற்று.

---

எட்டாவது அநுவாக விடயச்சுருக்கம்.

श्येना तृतीयसवने सप्तभिश्चमसाहुतिः ।
वषट्कृते मन्त्रहोमो बडित्यनुवषट्कृते ॥ १ ॥
तृम्पन्तां सर्वचमसान्हुत्वा जपति मध्यमे ।
सवने वैश्वकर्माख्य होमा मन्त्रैस्तुपञ्चमिः ॥ २ ॥
यज्ञ – घोरा – अनन्या - येभक्षयन्तो - नमः पिभिः ।
पूत भृत्याशिरं त्वस्मेक्षिपन्मन्त्रचतुष्टयात् ॥ ३ ॥
भूतं ध्रुवमवेक्षेत प्रातिप्रस्थातृ कर्मतत् ।
द्यावाऽञ्जलौ गृहीत्वा विश्वहोतृचमसे नयेत् ॥ ४ ॥
ध्रुवमेकी करोत्यत्र मन्त्रान्तोऽसन्नितीरितः ।
अष्टमेत्वनुवाकेस्मिन्नष्टाविंशतिरीरिताः ॥ ५ ॥

திருதீய சவனத்தில், பிரஸ்திதஹோமம், ஷடி ஹோமங்களில் அநுவஷட்காரஞ் சொல்லும்போது செய்யும் ஹோமம், ஷடி ஹோமங்களைச் செய்துவிட்டு ஜபித்தல், மாத்தியந்தின சவனத்தில் தக்ஷிணைக் கொடுத்தபிறகு வைசுவ கருமம், என்னும் ஐந்து ஹோமங்கள், ஆசிரம் என்னும் மோரை

நான்கு மந்திரங்களால் வார்த்தல், துருவஸ்தாலியைப் பார்த்தல், இருகைகளாலும் அத் துருவஸ்தாலியை எடுத்துக்கொள்ளல், அதை ஹோதிருசமசத்திலிடத்திற் கொண்டுவருதல், ஹோதுருசமத்தில் அதை ஊற்றிவிடல் என்பது.

---

## மூன்றுங் காண்டம் இரண்டாம் பிரபாடகம்

### எட்டாம் அநுவாகம்

*ஐந்து பஞ்சாதிகட்குமேல் நாற்பது பதங்களைக் கொண்டது.*

உச்சியிலும், மூன்றுமுறையும் சோமரசம் பிழியும்போது செய்யும் ஹோமங்களின் மந்திரங்கள்.

श्येनाय पत्वने स्वाहा वट्स्वयमभिगूर्ताय नमो विष्टम्भाय धर्मणे स्वाहा वट्स्वयमभिगूर्ताय नमः परिधये जनप्रथनाय स्वाहा वट्स्वयमभिगूर्ताय नम ऊर्जे होत्राणाꣳ स्वाहा वट्स्वयमभिगूर्ताय नमः पयसे होत्राणाꣳ स्वाहा वट्स्वयमभिगूर्ताय नमः प्रजापतये मनवे स्वाहा वट्स्वयमभिगूर्ताय नम ऋतमृतपास्सुवर्वाट्स्वाहा वट्स्वयमभिगूर्ताय नमस्तृम्पन्ताꣳ होत्रा मधोर्घृतस्य यज्ञपतिमृषय एनसा ॥ १ ॥ आहुः । प्रजा निर्भक्ता अनुतप्यमाना मधव्यौ स्तोकावप तौ रराध । सं नस्ताभ्याꣳ सृजतु विश्वकर्मा घोरा ऋषयो नमो अस्त्वेभ्यः । चक्षुष एषां मनसश्च संधौ बृहस्पतये महि षद्द्युमन्नमः । नमो विश्वकर्मणे स उ पात्वस्मानन्यान्त्सोमपान्मन्यमानः । प्राणस्य विद्वान्त्समरे न धीर एनश्चकृवान्महि बद्ध एषाम् । तं विश्वकर्मन् ॥ २ ॥ प्र मुञ्चा स्वस्तये ये भक्षयन्तो न

वसून्यानृहुः । यानग्नयोऽन्वतप्यन्त धिष्णिया इयं तेषामवया दुरिष्टचै स्विष्टि नस्तां कृणोतु विश्वकर्मा । नमः पितृभ्यो अभि ये नो अख्य-न्यज्ञकृतो यज्ञकामाः सुदेवा अकामा वो दक्षिणां न नीनिम मा नस्तस्मादेनसः पापयिष्ट । यावन्तो वै सदस्यास्ते सर्वे दक्षिण्यास्ते-भ्यो यो दक्षिणां न ॥ ३ ॥ नयेदेभ्यो वृश्च्येत यद्वैश्वकर्मणानि जुहोति सदस्यानेव तत्प्रीणात्यस्मे देवासो वपुषे चिकित्सत यमा-शिरा दंपती वाममश्नुतः । पुमान्पुत्रो जायते विन्दते वस्वथ विश्वे अरपा एधते गृहः । अशीर्दाया दंपती वाममश्नुतामरिष्टो रायः सचताꣳ समोकसा । य आऽसिचत्संदुग्धं कुम्भ्या सहेष्टेन यामन्न-मतिं जहातु सः । सर्पिर्ग्रीवी ॥ ४ ॥ पीवर्यस्य जाया पीवानः पुत्रा अकृशासो अस्य । सहजानिर्यस्सुमखस्यमान इन्द्रायाऽऽ-शिरꣳ सह कुम्भ्याऽदात् । आशीर्म ऊर्जमुत सुप्रजास्त्वमिषं दधातु द्रविणꣳ सवर्चसम् । संजयन्क्षेत्राणि सहसाऽहमिन्द्र कृण्वानो अन्याꣳ-अधरान्त्सपत्नान् । भूतमसि भूते मा धा मुखमसि मुखं भूयासं द्यावापृथिवीभ्यां त्वा परिगृह्णामि विश्वेत्वादेवा वैश्वानराः ॥ ५ ॥ प्र च्यावयन्तु दिविदेवान्दꣳहान्तरिक्षे वयाꣳसि पृथिव्यांपार्थिवान्ध्रुवं ध्रुवेण हविषाऽव सोमं नयामसि । यथा नः सर्वमिज्जगदयक्ष्मꣳ-सुमना असत् । यथा न इन्द्र इद्विशः केवलीः सर्वाः समनसः करत् । यथा नःसर्वा इद्दिशोऽस्माकं केवलीरसन् ॥ ६ ॥

இதில் மூன்றாவது ஸவனப் பிரஸ்தித யாஜ்யா மந்திரங்களைச் சொல்லும்போது, ஒதி ஹோமஞ் செய்யவேண்டிய மந்திரங்கள் கூறப்படுகின்றன.

---

பிரஸ்தித யாஜ்யஹோம மந்திரங்கள்

மந்திரம் 1—14

**श्येनाय पत्वने स्वाहा वट्स्वयमभिगूर्ताय नमो विष्टम्भाय धर्मणे स्वाहा वट्स्वयमभिगूर्ताय नमः परिधये जनप्रथनाय स्वाहा वट्स्वयमभिगूर्ताय नम ऊर्जे होत्राणाꣳ स्वाहा वट्स्वयमभिगूर्ताय नमः पयसे होत्राणाꣳ स्वाहा वट्स्वयमभिगूर्ताय नमः प्रजापतये मनवे स्वाहा वट्स्वयमभिगूर्ताय नम ऋतमृतपास्सुवर्वाट्स्वाहा वट्स्वयमभिगूर्ताय नमः ।**

என்பது.

உரை

'இந்திர ருதுபி:' என்னும் யாஜ்யாவாக்கியத்தாற் கூறப்பெறுவதும், கீழ்விழும் பருந்துவடிவுடையதுமாகிய தேவதையின் பொருட்டு இவ்வாகுதி அர்ப்பணமாகுக. தானாகவே சோமத்திற்கருகில் செல்வதன் பொருட்டு வணக்கம். பகைவரைக்கொல்வதும், எம்மைப் பாதுகாப்பதும், "இந்திரா வருணாசுதபௌ" என்னும் யாஜ்யாவாக்கியத்தாற் கூறப்படுவதுமாகிய தேவதையின் பொருட்டு இது அர்ப்பணமாகுக. எவ்வாற்றானும் பரிபாலிப்பதும், சனங்களை யுணர்ந்துவைப்பதும், 'இந்திரச் சோமம் பிபதாம்' என்னும் யாஜ்யாவாக்கியத்தாற் கூறப்படுவது மாயதிற்கு இது அர்ப்பணமாகுக. ஹோமம் செய்கின்றவர்கட்கு அன்னத்தையளிக்கின்றதும், ஆமேவாவஹது சபதய:, என்னும் யாஜ்யாவாக்கியத்தாற் கூறப்படுவது மாவதற்கு இது அர்ப்பணமாகுக. ஹோமஞ் செய்கின்றவர்கட்குப் பாலையளிப்பதும், "அமேவந: ஸுஹவா:, என்னும் யாஜ்யாவாக்கியத்தாற் கூறப்படுவதுமாவதற்கு இது அர்ப்பணமாகுக." "இந்திரா விஷ்ணூ பிபதம், என்னும் யாஜ்யா வாக்கியங்களாற் கூறப்படுவது மாவதற்கு இது அர்ப்பணமாகுக. சத்தியததைக் காப்போய்! சுவர்க்கத்தை யடைவிப்போய்! நீ எமது எக்ஞத்தைப் பாதுகாப்பாயாக என்பது எஞ்சிநின்றது, தஸ்மை துப்யம், என்னும் யாஜ்யா வாக்கியத்தாற் கூறப்படுவதற்கு இது அர்ப்பணமாகுக என்பதாம்.

இது, மூன்றுமுறை சோமரசம் பிழியும்போது செய்யப்படும் சமசாகுதிகள் ஏழு எனப்படும். வஷட்காகாரங்கள் பதினன்கிலுஞ் செய்யும் போது பதினன்கு ஆகின்றது. இது முதற்காண்டம், நான்காம் பிரபாடகம் இருபத்திரண்டாம் அநுவாகத்தில் விநியோகிக்கப் படுகின்றது.

---

ஹோம முடிந்ததுஞ் சேபஞ்செய்தல்

மந்திரம் 15

**तृम्पन्ताᳪ होत्रा मधोर्घृतस्य ।**

என்பது

உரை

ஹோதாவால் அழைக்கப்பெற்ற தேவர்கள் இன்சுவையுடைய நெய்யால் களிப்புறுவார்களாக என்பதாம்.

இதுவும், மேலேகாட்டியவிடத்தில் விநியோகிக்கப் படுகின்றது.

---

ஆக்னீத்ரத்தீயில் ஹோமஞ் செய்தலில் முதல்ஹோமம்

மந்திரம் 16

**यज्ञपतिमृषय एनसाऽऽहुः । प्रजा निर्भक्ता अनुतप्यमाना मधव्यौ स्तोकावप तौ रराध । सं नस्ताभ्याᳪ सृजतु विश्वकर्मा ।**

என்பது.

உரை

எல்லா உயிர்களும் உணவின்றி வாடி வருந்தும்போது வேள்விக்குத் தலைமையாயுள்ளவனுடைய குற்றத்தால் மழையின்றி அன்னமில்லா தொழிந்தது, அதுவே, வேள்விகட்கு அநுட்டானத்தால் வழிபட்டுத் துதித்தற்குரிய மது வசந்தங்களின் காலமாகிய சித்திரை வைகாசி மாதங்களில் வேள்வி யநுட்டான மில்லாதிருத்தலே வேள்வித் தலைவனுடைய குற்றமாம் என்று மகரிஷிகள் கூறியுள்ளார்கள். ஆதலின், இவ் விசுவகருமன் எம்மைக் குறித்து அம்மாதங்களில் வேள்வித் தலைவனைத் தோற்றுவிப்பானாக. அதாவது அம்மாதங்களிரண்டிலும் சோதிட்டோம முதலியவைகளைச் செய்யும்படி செலுத்துவானாக என்பதாம்.

---

இரண்டாவது ஹோமம்

மந்திரம் 17

घोरा ऋषयोनमो अस्त्वेभ्यः । चक्षुष एषां मनसश्च संधौ बृहस्पतये महिषद्युमन्नमः । नमो विश्वकर्मणे स उ पात्वस्मान् ।

என்பது.

உரை.

முற்கூறிய இருடிகள், பல்லோர்கட்கு முன் இவன் பாவியென்று எம்மைப்பழித்தலின் கோரமுடையவர்களாவார்கள் ஆகலின் அவர்கட்கு வணக்கம் மற்றும், இத்தகைய இருடிகளின் திருக்கண்களுக்கும் எமதுமனத்திற்குஞ் சேர்க்கையுண்டாக்குதற் பொருட்டு பிருகற்பதிக்கு வணக்கம். இருடிகளின் கடைக்கண் பார்வைப்படி யாம் குற்றமற்றவராயிருந்து மனதால் பத்தி பண்ணும்படி பிருகற்பதி அருள்செய்வாராக என்பது கருத்து. மகத்தாகிய வணக்கமுடையவனும், பத்தியால் வெளிப்படுவோனும், உலகின் படைப்பு முதலிய செயல்களையுடையவனுமாகிய பிரமனுக்கு வணக்கம். அவன் எம்மை அநுட்டானத்திற் செலுத்திப் பாதுகாப்பானாக என்பதாம்.

---

மூன்றாம் ஹோமம்

மந்திரம் 18

अनन्यान्त्सोमपान्मन्यमानः । प्राणस्य विद्वान्त्समरे न धीर एनश्चकृवान्महि बद्ध एषाम् । तं विश्वकर्मन्प्र मुञ्चा स्वस्तये ।

என்பது

உரை.

விசுவகரும! உனைத்தவிர்த்து வேறுகதி இம்மையின், இவர்கள் சோமத்தை யருந்தினவர்கள் என்று அருள்புரிந்து, உலகில், வீரன், பிறருடைய உயிர்க்கு ஆபத்தென்றுணர்ந்து போரில் அவர்களைப் பாதுகாப்பது போல் எம்மைப் பாதுகாப்பாயாக என்பது எஞ்சி நின்றது. இவ்வேள்வித் தலைவன், சோம்பல் முதலிய குணங்களால் இருடிகட்குப் பாவியாயினன். அத்தகைய பாவத்தை நலத்தின் பொருட்டு விலக்கி குற்றத்தைப் போக்கி நிலைத்த இன்பத்தைக் கொடுத்துக் காப்பாயாக என்பதாம்.

---

நான்காம் ஹோமம்

மந்திரம் 19

**ये भक्षयन्तो न वसून्यानृहुः। यानग्नयोऽन्वतप्यन्त धिष्णिया इयं तेषा-
मवया दुरिष्ट्यै स्विष्टिं नस्तां कृणोतु विश्वकर्मा।**

என்பது.

**உரை.**

வேள்விக்கு என இரந்து தனந்தேடி வெள்விசெய்யாமல் பொருட்சேர்க்கின்றவர்களும், மேடைகளிலுள்ள தீக்களால், இவன் தீயன் என்று கிலேசமடையச்செய்யப்படுகின்றர்களுமான வேள்விச் செயாளர்களின் தீயயாகத்தை விசுவகருமன் நல்லயாகமாய்ச் செய்வானுக என்பதாம்.

---

ஐந்தாவது ஹோமம்

மந்திரம் 20

**नमः पितृभ्यो अभि ये नो अख्यन्यज्ञकृतो यज्ञकामास्सुदेवा अकामा वो
दक्षिणां न नीनिम मा नस्तस्मादेनसः पापयिष्ट।**

என்பது.

**உரை**

எம்மை அன்போடு காண்கின்றவர்களும், வேள்வியைச் செய்விக்கின்றவர்களும், தேவர்களுமான பிதிர்க்களே! மறதி சோம்பல் முதலியவைகளால் வேள்விசெய்ய விருப்பிலாதவர்களாய் தென்திசையிலுள்ள உங்களுடைய யாகத்தைச் செய்திலோம். அப்பாவத்தால் எம்மைப் பாவிகளாக்காதீர்கள் என்பதாம்.

இவ் வோமங்கட்கு வைசுகர்மண ஹோமங்கள் என்று பெயர்கள். இம்மந்திரங்களின் ஈற்றில் சுவாஹா என்பதைச் சேர்த்துக்கொள்ளல் வேண்டும்.

இது, முதற்காண்டம், நான்காம்பிரபாடகம். பதினெட்டாம் அநுவாகத்தில் விநியோகிக்கப்படுகின்றது.

---

மேற்கூறிய மந்திரங்களால் ஹோமஞ் செய்யும் வகையை நிமித்தங்கூறி விதிக்கின்றது

பிராமணம் 1

**यावन्तो वै सदस्यास्ते सर्वे दक्षिण्यास्तेभ्यो यो दक्षिणां न नयेदैभ्यो वृश्च्येत यद्वैश्वकर्मणानि जुहोति सदस्यानेव तत्प्रीणाति ।**

என்பது

உரை.

வேள்வியைப்பார்க்கவந்த அந்தணர்களனைவருக்கும் தட்சிணை கொடுத்தல்வேண்டும். அவர்களும் தட்சிணை யேற்க உரியராவர். ஆதலின் அவ்வாறு தட்சிணை கொடுக்காவிடிற் பாவமாம் அப்பாவத்தைப் போக்குவதற்கு மேற்கூறிய மந்திரங்களால் வைசுவகருமங்கள் என்னும் ஓமஞ்செய்தல்வேண்டும். செய்யில், அது, சபையிலுள்ளார்களைக் களிப்படைவிக்கின்றது என்பதாம்.

இவ்வோமம் இருத்துவிக்குக்களின் தட்சிணைக்குப் பிறகு செயற்பாலதாமாதலின், அம்மந்திரங்கள், 'உதுத்யம் ஜாதவேதஸம்' என்பதன் முடிவில் உளதென உணர்க.

---

பூதபிருத் என்னும் பாத்திரத்தில் கடைந்த மோர் விடுதலில் முதல்மந்திரம்

மந்திரம் 21

**अस्मे देवासो वपुषे चिकित्सतयमाशिरा दंपती वाममश्नुतः। पुमान्पुत्रो जायते विन्दते वस्वथ विश्वे अरपा एधते गृहः ।**

என்பது

உரை.

தேவர்களே! நீவிர், எமது உடம்பை பாவமற்றவைகளாக்குவீர்களாக. பால்கறந்த பாத்திரத்தில் அரிசி முதலியவைகளைப் போட்டதால் உறைந்துள்ள மோர் ஆசிரம் எனப்படும். அதை அருந்திய கணவனும் மனைவியும் அழகையடைகின்றனர். குழந்தையைப் பெறுகின்றனர். அவர்கட்கு தனங் கிடைக்கின்றது. அவர்களுடைய சுற்றத்தார்கள் அனைவரும் அறிவாளிகளாகின்றனர். அவர்களுடைய வீடு வளர்கின்றது என்பதாம்.

---

இரண்டாம் மந்திரம்

மந்திரம் 22

**आशीर्दाया दंपती वाममश्नुतामरिष्टो रायस्सचताꣳ समोकसा । य आऽसिचत्संदुग्धं कुम्भ्या सहेष्टेन यामन्नमतिं जहातु सः ।**

என்பது,

உரை

ஒரேவீட்டில் வாழ்கின்றவர்களும், முற்கூறிய மோரையளித்தவர்களுமான தம்பதிகள் மங்களத்தை யடைவார்களாக. கொலைத் தொழிலின்றியவனும், மனைவியுடன் கூடியவனுமாகிய வேள்வித்தலைவன் தனத்தையடைவானாக. அன்னத்திற்கு ஆதாரமாகிய சோமத்தில் தயாராகிய பாலை நிறைய ஊற்றியவன் நோயையும் தீயமதியையும் விட்டுவிடுவான் என்பதாம்,

---

மூன்றுமந்திரம்

மந்திரம் 23

**सर्पिर्ग्रीवी पीवर्यस्य जाया पीवानः पुत्रा अकृशासो अस्य । सहजानिर्यः सुमखस्यमान इन्द्रायाऽऽशिरꣳ सह कुम्भ्याऽदात् ।**

என்பது

உரை.

வேள்விசெய்யும் விருப்பால் குடத்தில் மோரை நிறைய வார்த்த வேள்வித் தலைவனுடன் கூடவே இருக்கும் மனைவி, மெதுவான கழுத்தையும், இனிய குரலையும், எல்லா அவயவங்களின் வன்மையையும் உடையவளாகுக. அவனுடைய மகனும், உறுதியான அவயவங்களையும், பிணியால் எப்போதும் மெலிவுறாத உடம்பையும் உடையவனாகுக என்பதாம்.

---

நான்காம் மந்திரம்

மந்திரம் 24

**आशीर्म ऊर्जमुत सुप्रजास्त्वमिषं दधातु द्रविणꣳ सवर्चसम् । संजयन्क्षेत्राणि सहसाऽहमिन्द्र कृण्वानो अन्याꣳ अधरान्त्सपत्नान् ।**

என்பது.

உரை

இந்திர! என்பொருட்டு ஆற்றலை ஏற்றுக்கொள்வாயாக. மற்றும், நல்லமகற்பேறு, உணவுப்பொருள், அழகுடன்கூடிய தனம் என்பவற்றைக் கொடுப்பாயாக. யான், உனது அருளின் வன்மையால் பகைவனுடைய நிலங்களைப்பிடித்துக்கொண்டு அவனையும் எனக்கு அடிமையாகச் செய்வேனாக என்பதாம். இதை, வாமமத்ய, என்னும் அநுவாகங்கட்கு இடையிற் காண்க.

இது, முதற்காண்டம், நான்காம் பிரபாடகம், இருபத்திரண்டாம் அநுவாகத்தில் விநியோகிக்கப்படுகின்றது.

---

துருவஸ்தாலியைப் பார்த்தல்

மந்திரம் 25

**भूतमसि भूते मा धा मुखमसि मुखं भूयासम् ।**

என்பது

உரை

துருவஸ்தாலியே! நான் என்றுமுள்ள வடிவுடையனாக இருக்கின்றேன். ஆதலின், என்னை என்றுமுள்ள சுவர்க்கத்தில், அல்லது, பரமான்மாவில் இருக்கச்செய்வாயாக. மற்றும், எல்லாக் கிரகங்களுக்குள்ளும் நான் முக்கியனாயிருக்கின்றேன். ஆதலின், உனதருளால் என்னை எல்லாவற்றுள்ளும் முக்கியனாகச் செய்வாயாக என்பதாம்.

---

துருவஸ்தாலியைக் கையிலெடுத்துக் கொள்ளல்

மந்திரம் 26

**द्यावापृथिवीभ्यां त्वा परि गृह्णामि ।**

என்பது.

உரை

துருவஸ்தாலியே! உன்னை; வான் மண்கள்போன்ற கைகளால் எடுத்துக்கொள்ளுகின்றேன் என்பதாம்.

---

துருவஸ்தாலியை ஹோத்ருசமசம் இருக்குமிடத்திற்குக் கொண்டுபோதல்

மந்திரம் 27

**विश्वेत्वा देवा वैश्वानराः प्र च्यावयन्तु दिवि देवान्दृꣳहान्तरिक्षे वयाꣳसि पृथिव्यां पार्थिवान् ।**

என்பது

உரை.

துருவஸ்தாலியே! எல்லாமக்கட்கும் இதஞ்செய்யும் தேவர்களனைவரும் உனதிட்டத்தின்படி நடப்பிப்பார்களாக. நீயும், வானிலுள்ள தேவர்களை உறுதியுடையவர்களாகச் செய்வாயாக. அந்தரிட்சத்திலுள்ள பறவைகளை உறுதிப்படுத்துவாயாக. பூமியிலுள்ள மலைகளையும் வலிப்படுத்துவாயாக என்பதாம்.

---

துருவஸ்தாலியிலுள்ள சோமரசத்தை ஹோதுருசமசத்தில் வார்த்தல்

மந்திரங்கள் 28

**ध्रुवं ध्रुवेण हविषाऽव सोमं नयामसि । यथा नस्सर्वमिज्जगदयक्ष्मꣳ सुमना असत् । यथा न इन्द्र इद्विशः केवलीस्सर्वास्समनसः करत् । यथा नस्सर्वा इद्दिशोऽस्माकं केवलीरसन् ।**

என்பது

உரை

யாங்கள் இப்போதுவார்த்த துருவஸ்தாலியிலுள்ள சோமரசத்தை, முன்னர் ஹோதுரு சமசத்தில் வைத்துள்ள சோமரசத்துடன் சேர்க்கின்றோம். எவ்வாற்றால் உலகிலுள்ள விலங்கெலாம் பிணிகளற்றவைகளாகுமோ, எவ்வாற்றால் எமது பிரசைகள் எல்லாம் நோயற்றவைகளும், நன்மனமுடையவைகளுமாகுமோ, அவ்வாறு இந்திரன் செய்வானாக. ஈண்டு எல்லாத் திக்குகளிலுமுள்ள பிரசைகள் எமது அடிமைகளாகுக என்பது எஞ்சிநின்றது. மற்றும், இவைகளெல்லாம் சிறப்பாக இருக்குமாறு ஹோதாவின் சமசத்தில் இச்சோமரசத்தை வார்க்கின்றோம் என்பது திரண்டபொருள் என்பதாம்.

எட்டாம் அநுவாகம்

முற்றிற்று.

ஒன்பதாவது அநுவாக விடயச்சுருக்கம்

प्रत्याह्वयेत शोंसावों सवनेषु त्रिषूच्चरेत् ॥

उक्थादिमन्त्रां स्त्रीनत्र मन्त्राश्चत्वार इरिताः ॥

சஸ்திரஞ் சொல்லும்போது சொல்லவேண்டிய நான்கு மந்திரங்கள் கூறப்படுகின்றன என்பது.

---

## மூன்றுங் காண்டம் இரண்டாம் பிரபாடகம்

### ஒன்பதாவது அநுவாகம்

*ஏழு பஞ்சாதிகட்குமேல் எட்டுப்பதங்களைக்கொண்டது.*

பிரதிகரத்திற்குப்பிறகு கூறவேண்டிய மந்திரங்களும் பிரதி கரத்தின் பிராமணங்களும்

यद्वै होताऽध्वर्युमभ्याह्वयते वज्रमेनमभि प्र वर्तयत्युक्थशा इत्याह प्रातस्सवनं प्रतिगीर्य त्रीण्येतान्यक्षराणि त्रिपदा गायत्री गायत्रं प्रातस्सवनं गायत्रियैव प्रातस्सवने वज्रमन्तर्धत्त उक्थं वाचीत्याह माध्यंदिनꣳ सवनं प्रतिगीर्य चत्वार्येतान्यक्षराणि चतुष्पदा त्रिष्टुप्त्रैष्टुभं माध्यंदिनꣳ सवनं त्रिष्टुभैव माध्यंदिने सवने वज्रमन्तर्धत्ते ॥ १ ॥ उक्थं वाचीन्द्रायेत्याह तृतीयसवनं प्रतिगीर्य सप्तैतान्यक्षराणि सप्तपदा शक्करी शाक्करो वज्रो वज्रेणैव तृतीयसवने वज्रमन्तर्धत्ते ब्रह्मवादिनो वदन्ति स त्वा अध्वर्युस्स्याद्यो यथासवनं प्रतिगरे छन्दाꣳसि संपादयेत्तेजः प्रातस्सवन आत्मन्दधीतेन्द्रियं माध्यंदिने सवने पशूꣳस्तृतीयसवन इत्युक्थशा इत्याह प्रातस्सवनं प्रतिगीर्य त्रीण्येतान्यक्षराणि ॥ २ ॥ त्रिपदा

गायत्री गायत्रं प्रातस्सवनं प्रातस्सवन एव प्रतिगरे छन्दाꣳसि सं पादयत्यथो तेजो वै गायत्री तेजः प्रातस्सवनं तेज एव प्रातस्सवन आत्मन्धत्त उक्थं वाचीत्याह माध्यंदिनꣳ सवनं प्रतिगीर्य चत्वार्येतान्यक्षराणि चतुष्पदा त्रिष्टुप्त्रैष्टुभं माध्यंदिनꣳ सवनं माध्यंदिन एव सवने प्रतिगरे छन्दाꣳसि सं पादयत्यथो इन्द्रियं वै त्रिष्टुगिन्द्रियं माध्यंदिनꣳ सवनम् ॥ ३ ॥ इन्द्रियमेव माध्यंदिने सवन आत्मन्धत्त उक्थं वाचीन्द्रायेत्याह तृतीयसवनं प्रतिगीर्य सप्तैतान्यक्षराणि सप्तपदा शक्वरी शाक्कराः पशवो जागतं तृतीयसवनं तृतीयसवन एव प्रतिगरे छन्दाꣳसि सं पादयत्यथो पशवो वै जगती पशवस्तृतीयसवनं पशूनेव तृतीयसवन आत्मन्धत्ते यद्वै होताऽध्वर्युमभ्याह्वयत आव्यमस्मिन्दधाति तद्यन्न ॥ ४ ॥ अपहनीत पुराऽस्य संवत्सराद्गृह आ वेवीरञ्छोꣳसा मोद इवेति प्रत्याह्वयते तेनैव तदप हते यथा वा आयतां प्रतीक्षत एवमध्वर्युः प्रतिगरं प्रतीक्षते यदभिप्रतिगृणीयाद्यथाऽऽयतया समृच्छेत ताहगेव तद्यदर्धर्चाल्लुप्येत यथा धावद्भ्यो हीयते ताहगेव तत्प्रबाहुग्वा ऋत्विजामुद्गीथा उद्गीथ एवोद्गातृणाम् ॥ ५ ॥ ऋचः प्रणव उक्थशꣳसिनां प्रतिगरोऽध्वर्यूणां य एवं विद्वान्प्रतिगृणात्यन्नाद एव भवत्याऽस्य प्रजायां वाजी जायत इयं वै होताऽसावध्वर्युर्यदासीनः शꣳसत्यस्या एव तद्धोता नैत्यास्त इव हीयमथो इमामेव तेन यजमानो दुहे यत्तिष्ठन्प्रतिगृणात्यमुष्या एव तदध्वर्युर्नैति ॥ ६ ॥

तिष्ठतीव ह्यसावथो अमूमेव तेन यजमानो दुहे यदसीनः शꣳसति तस्मादितःप्रदानं देवा उपजीवन्ति यत्तिष्ठन्प्रतिगृणाति तस्मादमुतः प्रदानं मनुष्या उप जीवन्ति यत्प्राङासीनः शꣳसति प्रत्यङ्तिष्ठन्प्रतिगृणाति तस्मात्प्राचीनꣳ रेतो धीयते प्रतीचीः प्रजा जायन्ते यद्वै होताऽध्वर्युमभ्याह्वयते वज्रमेनमभि प्र वर्तयति पराङा वर्तते वज्रमेव तन्नि करोति ॥ ७ ॥

ஈண்டு இருக்கோதுவோன் சஸ்திரம் என்னும் ஒருவகைச் சந்தத்துதியை ஓதும்போது அவனுக்குக் களிப்புண்டாதற் பொருட்டு பிரதிகரம் (விடைகூறல்)சொல்லல் வேண்டும். அதற்குப் பிறகு, சிலமந்திரங்களை ஓதல் வேண்டும். அவைகளுள் முதல் மந்திரத்தைத் தோற்று விற்று அதை விநியோகிக்கின்றது

பிராமணம் 1

यद्वै होताऽध्वर्युमभ्याह्वयते वज्रमेनमभि प्र वर्तयत्युक्थशा इत्याह प्रातस्सवनं प्रतिगीर्य त्रीण्येतान्यक्षराणि त्रिपदा गायत्री गायत्रं प्रातस्सवनं गायत्रियैव प्रातस्सवने वज्रमन्तर्धत्ते ।

என்பது

உரை

*ஹோதா (இருக்கோதுவோன்) அத்வரியுவை (வேட்போனை,) சோம்ஸாவோம், அதாவது, "வேட்போய்! சஸ்திரம் படிக்கின்றேன் அப்போது பிரதிகரஞ் சொல்வதற்கு தயாராயிருப்பாயாக". என்பதாம். இச்சொல் வச்சிராயுதமாகிக்கொல்லுகிறது அதைத் தடுப்பதற்கு காலையில் சோமரசம் பிழியும்போது பிரதிகரங்களின் முடிவில் "உக்தஶா:" என்று ஹோதாவைப் போற்றல்வேண்டும். அதாவது, 'நீ நன்கு சஸ்திரமோதினை என்பதாம். இச்சொல் மூன்றெழுத்துக்களையுடையதாதலின் மூன்றெழுத்துக்களைக் கொண்ட காயத்திரிச் சந்தமாகி காயத்திரியென்னும் காலையிற் சோமரசம் பிழிதலில் அவ்வாறுண்டாகிய வச்சிராயுதத்தைத் தடுத்துவிடுகின்றது என்பதாம். இது முதற்காண்டம், நான்காம்பிரபாடகம், பதினைறாம் அநுவாகத்தில் விநியோகிக்கப்படுகின்றது.*

அத்தகைய மற்றொருமந்திரத்தை விதிக்கின்றது

பிராமணம் 2

उक्थं वाचीत्याह माध्यंदिनꣳ सवनं प्रतिगीर्य चत्वार्येतान्यक्षराणि चतुष्पदा त्रिष्टुप्त्रैष्टुभं माध्यन्दिनꣳ सवनं त्रिष्टुभैव माध्यंदिने सवने वज्रमन्तर्धत्ते ।

என்பது

உரை

மத்தியானம் சோமரசம் பிழியும்போது பிரதிகரங்கள் சொல்லிமுடிந்தவுடன் 'உக்தம்வாசி, என்று கூறல்வேண்டும். இந்த நான்கெழுத்துக்களும் 'திரிஷ்டுப்ச்சந்தமாகி திரிஷ்டுப்ச்சந்தமென்னும் மாத்தியந்தினசவனத்தில் முன்போல் உண்டாகிய வச்சிராயுதத்தைத் தடுக்கின்றது. ஏனையவைகளை முன்போல் உரைத்துக்கொள்க என்பதாம். இது முதற்காண்டம், நான்காம் பிரபாடகம், இருபத்தோராம் அநுவாகத்தில் விநியோகப்படுகின்றது.

---

மீண்டும் மற்றொரு மந்திரத்தை விதிக்கின்றது

பிராமணம் 3

उक्थं वाचीन्द्रायेत्याह तृतीयसवनं प्रतिगीर्य सप्तैतान्यक्षराणि सप्तपदा शाक्करी शाक्करो वज्रोवज्रेणैव तृतीयसवने वज्रमन्तर्धत्ते ।

என்பது

உரை.

மூன்றுமுறை சோமரசம் பிழியும்போதும் பிரதிகரங்களைக் கூறிவிட்டு முடிவில், "உக்தம்வாசிந்த்ராய" என்னல்வேண்டும். இச்சொல் ஏழு எழுத்துக்கள்கொண்ட 'சாக்வரி, என்னுஞ் சந்தமாய் ஹோதாவாலாய சாக்குவரி என்னும் வச்சிராயுதத்தைத் தடுக்கின்றது. ஏனையவைகளை முன்போல் உரைத்துக்கொள்க என்பதாம்.

இது, முதற்காண்டம், நான்காம் பிரபாடகம், இருபத்தேழாம் அநுவாகத்தில் விநியோகிக்கப்படுகின்றது.

---

பிரதிகர மந்திரமும் பிராமணமும்)

மேற்கூறிய மூன்று மந்திரங்களையும் புகழ்வதற்கு உபோற்காதஞ் செய்கின்றது

பிராமணம் 4

**ब्रह्मवादिनो वदन्ति स त्वा अध्वर्युस्स्याद्यो यथासवनं प्रतिगरे छन्दांसि संपादयेत्तेजः प्रातस्सवन आत्मन्दधीतेन्द्रियं माध्यन्दिने सवने पशूंस्तृतीयसवन इति ।**

என்பது

உரை

காலையில் சோமரசம் பிழியும்போது காயத்திரியும், உச்சிப்போதில் திரிஷ்டுபும், மூன்றாமுறையில் சகதியும் என்னும் இம்முறைப்படி எவன் சந்தங்களைத்தேடிக் கொள்கின்றானோ, மற்றும், மூன்றாமுறை சோமரசம் பிழிந்து முடிந்த அம்முறையே, அழகையும், இந்திரியத்தையும், பசுக்களையுமடைகின்றானோ, அத்தகைய வேட்போன் மிகச்சிறந்தவனென்று பிரமன் முதலானோர்கள் கூறுகின்றனர் என்பதாம்.

---

காலைச்சவனத்திற்குரிய சந்தத்தையும் அதனால் வரும்பயனையும் இன்னதென்று காட்டுகின்றது

பிராமணம் 5

**उक्थशा इत्याह प्रातस्सवनं प्रतिगीर्य त्रीण्येतान्यक्षराणि त्रिपदा गायत्री गायत्रं प्रातस्सवनं प्रातस्सवन एव प्रतिगरे छन्दांसि सं पादयत्यथो तेजो वै गायत्री तेजः प्रातस्सवनं तेज एव प्रातस्सवन आत्मन्धत्ते ।**

என்பது

உரை

காலையில், உக்தசா:, என்று கூறுவதால், இச்சொல் மூன்றெழுத்துக்களையுடையதாமாதலின் இது காயத்திரி என்னுஞ் சந்தமாகிறது. காலைச்சவனமும் காயத்திரியாம். காலைச்சவனபிரதிகரத்தில் சந்தந் தேடப்படுகிறது. சந்தம் என்பது அழகாம். ஆதலின் காலைச் சவனத்தில் வேட்போன் அழகை யடைகின்றான். இவ்வாறே சஸ்திரங்கட்கு முணர்க. ஈண்டு, காயத்திரியுபதேசத்தால் பிரமாணத்தன்மை அழகுடையதாமாதலின் காயத்திரியும் அழகெனப்பட்டது என்பதாம்.

ஈண்டுத்துதி, உபாஸ்மைகாயத, என்பது முதலியவைகளும், ஆச்யஸ்தோத்திரத்திலுள்ள, "அக்ன ஆயாஹி, என்பது முதலியவைகளுமாம். இவை காயத்திரிச் சந்தங்கள்.

உச்சிப் போதிற் துரீய சந்தமும் பயனுங் கூறப்படுகின்றது

பிராமணம் 6

उक्थं वाचीत्याह माध्यंदिनꣳ सवनं प्रतिगीर्य चत्वार्येतान्यक्षराणि चतुष्पदा त्रिष्टुप्त्रैष्टुभं माध्यंदिनꣳ सवनं माध्यंदिन एव सवने प्रतिगरे छन्दाꣳसि सं पादयत्यथो इन्द्रियं वै त्रिष्टुगिन्द्रियं माध्यदिनꣳ सवनमिन्द्रियमेव माध्यंदिने सवन आत्मन्धत्ते ।

என்பது

உரை

உச்சிப்போதில் 'உக்தம்வாசி' என்று கூறப்படுகின்றது. அது நான்கு எழுத்துக்களாகின்றன. அதுவே திரிஷ்டுப்ச்சந்தமாம். பிராதத்ராவா, என்பது முதலிய சூக்தம் திரிஷ்டுப்ச்சந்தமா மாதலின் மாத்தியந்தின சவனமும் திரிஷ்டுப்ச்சந்தமாம். இதுவே, பிரதிகரத்தில் தேடப்படுகின்றது. இந்திரியம் திரிஷ்டுபாம் ஆதலின் மாத்தியந்தினசவனம் இந்திரியமாம். ஆகையால் இதில், இந்திரியம் அடையப்படுகின்றது என்பதாம். பிரசாபதியின் கைகளிருந்து இந்திரனுடன் உதித்ததால் இந்திரனுற்றோன்றியது இந்திரியமாம் என்பதை யுணர்க.

---

மூன்றாவதுமுறை பிழியும்போது ஒத்தசந்தமும் அதன்பயனுங் கூறப்படுகின்றது

பிராமணம் 7

उक्थं वाचीन्द्रायेत्याह तृतीयसवनं प्रतिगीर्य सप्तैतान्यक्षराणि सप्तपदा शाक्करी शाक्कराः पशवो जागतं तृतीयसवनं तृतीयसवन एव प्रतिगरे छन्दाꣳसि सं पादयत्यथो पशवो वै जगती पशवस्तृतीयसवनं पशूनेव तृतीयसवन आत्मन्धत्ते ।

என்பது

உரை

மூன்றுமுறை சோமரசம் பிழியும்போது, "உக்தம் வாசீந்த்ராய" என்று கூறப்படுகின்றது. இச்சொல் ஏழு எழுத்துக்களை யுடையதாமாதலின் இது, 'சாக்வரி' என்னுஞ் சந்தமாம். சாக்வரிச்சந்தம் பசுக்களாம். மூன்றுமுறை பிழியும்போது கூறும் பிரதிகரத்தில் சந்தந்தேடப்படுகின்றது இச்சந்தம் சாக்குவரியாம் இதனால் பசுக்களடையப்படுகின்றன என்பதாம்.

கூப்பிட்டதற்குப் பதில் கூப்பிடுதல்

பிராமணம் 8

**यद्वै होताऽध्वर्युमभ्याह्वयत आव्यमस्मिन्दधाति तद्यन्नाऽपहनीत पुराऽस्य संवत्सराद्गृह आ वेपीरञ्छोंऽसा मोद इवेति प्रत्याह्वयते तेनैव तदप हते ।**

என்பது

உரை

ஹோதா (இருக்கோதுவோன்) வேட்போனை, சோம்ஸாவோம், என்று விளுவுதற்குக் கூப்பிடும்போது வேட்போனுக்கு ஆவ்யம் என்னும் ஒரு வகை நோயையுண்டாக்கியதாயிற்று. அந்நோயை நீக்கிக்கொள்ளாவிடில் ஒருவருடத்திற்குள் அவன்வீட்டில் குழந்தைகள் பெரும்பிணியை யடைவார்கள். அதை நீக்குதற்பொருட்டு, தானும், சோம்ஸாமோத இவ, என்பதால் வேட்போனை மறித்து தானுங் கூப்பிடுதல்வேண்டும். இதனுல், உண்டாகிய பிணிநீங்கி விடுகின்றது. மந்திரப்பொருள்:—ஹோதாவே! நீ எப்போதும் எமக்குக் களிப்புடையனுகவே யிருக்கின்றுய் என்பதாம்.

---

இப்போது வேட்போன் கவனத்தோடு இருத்தல் வேண்டுமென்று விதிக்கின்றது

பிராமணம் 9

**यथा वा आयतां प्रतीक्षत एवमध्वर्युः प्रतिगरं प्रतीक्षते ।**

என்பது

உரை

உலகில், விளுவுகின்றவனைக்குறித்து, பிரதிவாதி ஒரே முகமாய்க் கவனத்துடன் நோக்கிக்கொண்டிருப்பதுபோலும், அரசன் மந்திரிமுதலானோர்களுக்கு ஏவளாளர் பதில் கூறுவதற்கு எதிர்பார்த்துக் கொண்டிருப்பதுபோலும் வேட்போன் பிரதிகரம் அதாவது பிரத்யுத்தரங் கூறுவதற்கு எதிர்பார்த்துக்கொண்டித்தல் வேண்டும் என்பதாம்.

---

பிரதிகரஞ் சொல்லுங் காலத்தைக் கடந்தேனும் அல்லது அதற்கு முந்தியேனும் பிரதிகரஞ் சொல்லில் கேடுதி வருமென்று காட்டுகின்றது

பிராமணம் 10

**यदभिप्रतिगृणीयाद्यथाऽऽयतया समृच्छते तादृगेव तत् ।**

என்பது

உரை

*பிரதிகரத்திற்குரிய பாதி இருக்குக்காலத்திற்கு முன்னேனும், பின்னேனும் பிரதிகரஞ் சொல்லில், சொல்லும் உத்தரம் எழாமல் பேசாமல் நின்றுவிடுவன். காலங்கடந்த பிரதிகரமும் அவ்வாறேயாம் என்பதாம்.*

---

பிரதிகரஞ் சோல்வதை மறந்து விடில் கேடுதி வருமென்றுகாட்டுகின்றது

பிராமணம் 11

**यदर्धर्चाल्लुप्येत यथा धावद्भ्यो हीयते तादृगेव तत् ।**

*என்பது*

உரை

*பாதி இருக்கைக்கூறி முடித்தவுடன் பிரதிகரஞ் சொல்லல் வேண்டும் இன்றெனின்? பெருங்காட்டில் புலிமுதலியவைகட்குப் பயந்து ஓடுப்போது ஓடமுடியாத ஒருவனை புலிமுதலியவை வெருட்டுவதுபோல் துன்புறுவன் என்பதாம்.*

---

ஹோதா உத்காதாக்கட்கு ஒப்பாக்கி வேட்போனுடைய் பிரதிகரத்தைப் புகழ்கின்றது

பிராமணம் 12

**प्रबाहुग्वा ऋत्विजामुद्गीथा उद्गीथ एवोद्गातृणामृचः प्रणव उक्थशं॒सिनां प्रतिगरोऽध्वर्यूणां ।**

*என்பது*

உரை.

*உத்காதா, ஹோதா, அத்வரியு என்பவர்கட்கு உத்கீதம் அதாவது சிறந்த சங்கீதம் ஒப்பாம். எவ்வாறெனின்? உத்காதாவிற் (சாமமறைபாடுவோனுக்)கு உத்கீதம் என்னும் பாடல் விசேடம் வெளிப்படையாம். எடுத்துக்கொண்ட மந்திரத்திற்கு மேலேயுள்ள பந்தி உத்கீதமாம். அதுவும் பிரணவத்துடன் பாடப்படுகின்றது. இவ்வாறே, உக்தம், அதாவது, சஸ்திரஞ் சொல்லுகின்றவனுடைய பிரணவம் உத்கீதமாம். அத்வரியுக்கு பிரதிகரம் உத்கீதமாம் என்னும் இவ்வாற்றால் ஒப்பாம் என்பதாம்.*

---

பிரதிகரத்தின் ஞானத்தைப் புகழ்கின்றது

பிராமணம் 13

य एवं विद्वान्प्रतिगृणात्यन्नाद एव भवत्याऽस्य प्रजायां वाजी जायते ।

என்பது

உரை

இவ்வாறு பிரதிகரத்தை யுணர்ந்தவன், உணவுப்பொருள் மக்கள் முதலான சம்பத்துக்களை யடைகின்றான் என்பதாம்.

---

ஓதுங்கால் ஹோதா உட்காரவேண்டியதையும் அத்வரியு எழுந்து நிற்றலையும் விதிக்கின்றது

பிராமணம் 14

इयं वै होताऽसावध्वर्युर्यदासीनश्शꣳसत्यस्या एव तद्धोता नैत्यास्त इव हीयमथो इमामेव तेन यजमानो दुहे यत्तिष्ठन्प्रतिगृणात्यमुष्या एव तदध्वर्युर्नैति तिष्ठतीव ह्यसावथो अमूमेव तेन यजमानो दुहे ।

என்பது.

உரை

ஹோதா பூமிவடிவாதலின் அவன் உட்கார்ந்துகொண்டு சொல்லுகின்றான். அதனால் அவன் இவ்வுலகின் சாரத்தைக் கறந்துகொள்ளுகின்றான். வேட்போன் சுவர்க்கவடிவாதலின் நின்றுகொண்டு சொல்கின்றான். அதனால், அவன் சுவர்க்கத்திலேயே இருக்கின்றான். அவன் மேலே நிற்றலின் என்க. அத்வரியு எழுந்துநிற்றலின் ஏசமானன் சுவர்க்கத்தின் சாரத்தைக் கறக்கின்றான் என்பதாம்.

---

மற்றொரு வகையால் நிற்றலையும் உட்கார்ந்திருத்தலையும் புகழ்கின்றது.

பிராமணம் 15

यदासीनश्शꣳसति तस्मादितःप्रदानं देवा उप जीवन्ति यत्तिष्ठन्प्रतिगृणाति तस्मादमुतःप्रदानं मनुष्या उप जीवन्ति ।

என்பது

உரை

*எழுந்து நின்று கொண்டு பிரதிகரஞ் சொல்வதால் மழையால் மக்கள் வாழ்கின்றனர். இருந்துகொண்டு சஸ்திரஞ் சொல்வதால் அவியேற்றுக் கொண்டு தேவர்கள் வாழ்கின்றனர் என்பதாம்.*

---

வேட்போன் மேற்குமுகமாகவும் ஹோதா கிழக்குமுகமாகவும் இருத்தல்வேண்டு மென்று விதிக்கின்றது

பிராமணம் 16.

**यत्प्राङासीनश्शꣳसति प्रत्यङ्तिष्ठन्प्रतिगृणाति तस्मात्प्राचीनꣳ रेतो धीयते प्रतीचीः प्रजा जायन्ते ।**

*என்பது*

உரை

*ஹோதா கிழக்குமுகமாய் உட்கார்ந்துகொண்டு சொல்வதால் பத்தினியை நோக்கி கிழக்காய் இரேதசை விடுகின்றான்: அத்வரியு மேற்கு முகமாய் நின்றலால் குழந்தை, அல்குலுக்கு மாறுமுகமாய்ப் பிறக்கின்றது என்பதாம்.*

---

வேட்போன் ஹோதா அழைத்தற்குப் பிறகு வலமாகத் திரும்பல் வேண்டு மென்று விதிக்கின்றது

பிராமணம் 17

**यद्वै होताऽध्वर्युमभ्याह्वयते वज्रमेनमभि प्र वर्तयति पराङा वर्तते वज्र-मेव तन्नि करोति ।**

*என்பது.*

உரை

*ஹோதா, 'சோம்ஸாவோம்' என்று அழைக்கும்போது அது வச்சிராயுதமாகப் பாய்கின்றது. அப்போது திரும்பிக்கொண்டு பிரதிகரஞ் சொல்லில் அது வச்சிராயுதமாய் அதை நீக்குகின்றது என்பதாம்.*

ஒன்பதாம் அநுவாகம்

முற்றிற்று.

---

துவிதேவத்யம் போன்ற ஆதித்தியக் கிரகம்)

பத்தாம் அநுவாக விடயச்சுருக்கம்,

उपैति प्रतिनिग्राह्या गृहीतव्यास्त्रिभिः क्रमात् ॥
देवेभ्यो निनयेच्छेषांस्त्रिभिरादित्यपात्रके ॥ १ ॥
विष्णो तत्पात्रमाच्छाद्य द्विदेवत्य ग्रहानपि ।
होत्रे दद्यात्त्रिभिः सूर्यमुपतिष्ठेत भूर्द्वयात् ॥ २ ॥
योनस्त्रिभिस्तर्जनीं ता मंगुष्ठेनोपपीडनं ।
इन्द्रमिन्द्राश्विनीर्भिन्ना मन्त्राः पंचदशात्रते ॥

*துவிதேவத்தியப் பிரதிநிக்ராகியத்தின் பொருட்டு ஆதித்ய பாத்திரத்தில் மூன்று முறை சோமத்தைப் பிடித்தல், மூன்று மந்திரங்களால் மீந்ததை ஆதித்ய பாத்திரத்தில் மூன்றுமுறை விடுதல், ஆதித்யஸ்தாலியை மூடுதல், துவிதேவத்யகிரகங்கள் மூன்றையும் ஹோதாவினிடம் கொடுத்தல், மூன்று முறை சூரியனைப்பார்த்தல், ஆள்காட்டி விரலால் கட்டைவிரலை அமிழ்த்தல் என்பது.*

---

## மூன்றாங் காண்டம் இரண்டாம் பிரபாடகம்

## பத்தாவது அநுவாகம்

*இரண்டு பஞ்சாதிகட்குமேல் பதின்மூன்று பதங்களைக் கொண்டது*

இரண்டு தேவதைகட்குரிய பாத்திரத்தைப் போல்மற்றோரு பாத்திரத்திலுஞ்சோமரசத்தை எடுத்தற்குரிய மந்திரங்கள்

उपयामगृहीतोऽसि वाक्षसदसि वाक्पाभ्यां त्वा क्रतुपाभ्यामस्य यज्ञस्य ध्रुवस्याध्यक्षाभ्यां गृह्णाम्युपयामगृहीतोऽस्यृतसदसि चक्षुष्पाभ्यां त्वा क्रतुपाभ्यामस्य यज्ञस्य ध्रुवस्याध्यक्षाभ्यां गृह्णाम्युपयामगृहीतोऽसि श्रुतसदसि श्रोत्रपाभ्यां त्वा क्रतुपाभ्यामस्य यज्ञस्य ध्रुवस्याध्यक्षाभ्यांगृह्णामि देवेभ्यस्त्वा विश्वदेवेभ्यस्त्वा विश्वेभ्यस्त्वा देवेभ्यो विष्णवुरुक्रमैष ते सोमस्तꣳ रक्षस्व ॥ १ ॥ तं ते दुश्चक्षा

माऽवरुयन्मयि वसुः पुरोवसुर्वाक्पा वाचं मे पाहि मयि वसुर्वि-
दद्वसुश्चक्षुष्पाश्चक्षुर्मे पाहि मयि वसुः संयद्वसुः श्रोत्रपाः श्रोत्रं मे
पाहि भूरसि श्रेष्ठो रश्मीनां प्राणपाः प्राणं मे पाहि धूरसि श्रेष्ठो
रश्मीनामपानपा अपानं मे पाहि यो न इन्द्रवायू मित्रावरुणा-
वश्विनावभिदासति भ्रातृव्य उत्पिपीते शुभस्पती इदमहं तमधरं
पादयामि यथेन्द्राहमुत्तमश्चेतयानि ॥ २ ॥

இதில் துவிதேவத்யங்கள்போல் ஆதித்யப்பாத்திரத்தில் சோமரசம் பிடிப்பதற்குரிய மந்திரங்கள் சொல்லப்படுகின்றன.

ஐந்திர வாயவீய பிரதிநிக்கிராகிய மந்திரம்

மந்திரம் 1

उपयामगृहीतोऽसि वाक्षसदसि वाक्पाभ्यां त्वा क्रतुपाभ्यामस्य यज्ञस्य ध्रुव-
स्याध्यक्षाभ्यां गृह्णामि ।

என்பது

உரை

பிரதிநிக்கிராஹிய மென்னுஞ் சோமரசமே! நீ மரப்பாத்திரத்தில் எடுக்கப்பெற்றிருக்கின்றாய். வாக்கிந்திரியத்திலிருக்கின்றாய். ஐந்திரவாயவீயம் வாக்கு என்பது சுருதி. அத்தகைய உன்னை, வாக்கையும், வேள்வியையும் பாதுகாக்கின்றவர்களும், கெடாத இவ்வேள்விக்குத் தலைவர்களுமான இந்திரன் வாயு என்னும் இருவர்களின் பொருட்டு உன்னை எடுத்துக்கொள்கின்றேன் என்பது.

---

மைத்திராவருணப் பிரதிநிக்கிராஹிய மந்திரம்

மந்திரம் 2

उपयामगृहीतोऽस्यृतसदसि चक्षुष्पाभ्यां त्वा क्रतुपाभ्यामस्य यज्ञस्य ध्रुव-
स्याध्यक्षाभ्यां गृह्णामि ।

என்பது

உரை.

வேள்வியில், அல்லது, உண்மையில் இருக்கின்றாய். கண்களைப் பரிபாலிக்கின்றவர்களும், வேள்வியைப்பாது காக்கின்றவர்களும், நிலைத்த வேள்விக்கு அதிட்டானர்களுமான மைத்திராவருணர்களின் பொருட்டு உன்னை எடுத்துக்கொள்கின்றேன் என்பதாம். ஏனையவைமுன்போல்.

---

ஆசுவினப் பிரதிநிக்கிராஹிய மந்திரம்

மந்திரம் 3

**उपयामगृहीतोऽसि श्रुतसदसि श्रोत्रपाभ्यां त्वा क्रतुपाभ्यामस्य यज्ञस्य ध्रुवस्याध्यक्षाभ्यां गृह्णामि ।**

என்பது

உரை

நீ செவியிலிருக்கின்றாய், உன்னை, செவியைப் பாதுகாக்கின்றவர்களும், வேள்வியைப் பரிபாலிக்கின்றவர்களும், நிலைத்த வேள்விக்கு அதிட்டானர்களுமாகிய அசுவினிகளின்பொருட்டு எடுத்துக்கொள்கின்றேன். ஏனையவை முன்போல் என்பது.

---

ஐந்திரவாயுக்கிரகத்தில் மீந்திருப்பதை ஆதித்தியஸ்தாலியில் வார்ப்பதற்கு மந்திரம்

மந்திரம் 4

**देवेभ्यस्त्वा ।**

என்பது

உரை

பிரதிநிக்கிராஹியத்தில் மீந்த சோமரசமே! உன்னை, தேவர்களின் பொருட்டு இதில் வார்க்கின்றேன் என்பது.

---

மைத்திராவருணப் பிரதிநிக்கிராகியத்தில் மீந்ததை வார்க்கு மந்திரம்

மந்திரம் 5

**विश्वदेवेभ्यस्त्वा ।**

என்பது

உரை.

எல்லாத் தேவர்களின் பொருட்டு உன்னை இதில் வார்க்கின்றேன் என்பதாம்.

---

ஆசுவினப் பிரதிநிக்கிராஹியத்தில் மீந்துள்ளதை வார்க்கும் மந்திரம்

மந்திரம் 6

**विश्वेभ्यस्त्वा देवेभ्यः ।**

என்பது

உரை

விசுவதேவர்களின் பொருட்டு இதில் வார்க்கின்றேன் என்பது.

---

ஆதித்திய பாத்திரத்தா (தட்டா)ல் ஆதித்தியக்கிரக பாத்திரத்தை மூடிவிடல் வேண்டும் அதற்குரிய மந்திரம்

மந்திரம் 7

**विष्णवुरुक्रमैष ते सोमस्त२ रक्षस्व तं ते दुश्चक्षा माऽवख्यत् ।**

என்பது.

உரை

அழகிய திருமேனிகொண்ட விஷ்ணுவே! பாதுகாப்பதற் பொருட்டே சோமம் உன் வசமாயிற்று. ஆதலின் பாதுகாப்பாயாக. அத்தகைய உனது சோமத்தை பாவநோக்குடையார் பார்க்கமாட்டாதவர்களாகுக என்பது.

---

ஐந்திர வாயுக்கிரகத்தை ஹோதாவினிடத்திற் கொடுப்பதற்கு மந்திரம்

மந்திரம் 8

**मयि वसुः पुरोवसुर्वाक्पा वाचं मे पाहि ।**

என்பது

உரை

எல்லாத் தனங்களையும் முதலிற்கொண்ட, அல்லது, பிராணன் முதலியவைகளை வாழவைப்பதாகிய தனம் என்னிடத்திலிருக்கிறது. அத்தகைய நீ, வாக்கைப் பரிபாலிப்பவனுவாய். அதாவது ஆதலின் எனது வாக்கைப் பாதுகாப்பாயாக என்பதாம்.

மைத்திராவருணக்கிரகம் ஆசுவினக் கிரகங்களிரண்டையும் ஹோதாவினிடத்திற் கொண்டுவருதற்குரிய மந்திரம்

மந்திரங்கள் 9-10

**मयि वसुर्विदद्वसुश्चक्षुष्पाश्चक्षुर्मे पाहि मयि वसुस्संयद्वसुश्श्रोत्रपाः श्रोत्रं मे पाहि ।**

என்பது

உரை

*என்னிடத்தில் எல்லாத் தனங்களையும் பெறுதற்குரிய தனமாயிருக்கிறது. கண்களைக் காப்போய்! எனது கண்களைப் பாதுகாப்பாயாக. பெறத்தக்க எல்லாத் தனங்களையுமுடைய தனம் என்னிடத்திலிருக்கின்றது. செவியைப் பாதுகாப்போய் எனது செவியைப் பாதுகாப்பாயாக என்பதாம்.*

---

ஐந்திரவாயுக்கிரகங்களை ஓமஞ்செய்தானதும் சூரியனைப் போற்றுதல்

மந்திரம் 11.

**भूरसि श्रेष्ठो रश्मीनां प्राणपाः प्राणं मे पाहि ।**

என்பது

உரை

*கையிலிருக்கின்ற சோமமே! நீ, சுகங்களையுண்டாக்குவதாயிருக்கின்றாய். சுகத்தை விளக்கும் பொருள்களுக்குள் நீயே சிறந்தோனா யிருக்கின்றாய். நீயே பிராணனுக்குப் பயனளிக்கின்றவன். ஆதலின் எனது பிராணனைப் பாதுகாப்பாயாக என்பதாம்.*

---

மைத்திராவருணக் கிரகத்தை ஓமஞ்செய்தவுடன் சூரியனைப் போற்றல்

மந்திரம் 12

**धूरसि श्रेष्ठो रश्मीनामपानपा अपानं मे पाहि ।**

என்பது

உரை.

*மைத்திராவருணக் கிரகபாத்திரமே! நீ, துன்பத்தைத் தொலைப்போனாயிருக்கின்றாய். மற்றவை முன்போல் என்பதாம்.*

*மேற்கூறிவந்த மந்திரங்கள் பன்னிரண்டும், முதற்காண்டம், நான்காம் பிரபாடகம் பதின்மூன்றும் அநுவாகத்தில் விநியோகிக்கப் படுகின்றவைகள்.*

இனி, பகையிநக்கில் ஆட்காட்டிவிரல் கட்டைவிரல்களிரண்டாலும் பிரதிநிக்கிராஹியஞ் செய்வதைக் கூறுகின்றது

மந்திரங்கள் 13 - 14 - 15

**यो न इन्द्रवायू मित्रावरुणावश्विनावभिदासति भ्रातृव्य उत्पिपीते शुभस्पती इदमहं तमधरं पादयामि यथेन्द्राहमुत्तमश्चेतयानि ।**

என்பது

உரை.

*இந்திரவாயுக்களே! என்னைத் துன்புறுத்துகின்றவனும், வலிந்து சோமரசத்தை அருந்துகின்றவனுமாகிய பகைவனைக் கீழே விழவைக்கின்றேன். நற்கருமத்தைப் பாதுகாப்பவர்களே! ஆள்காட்டிவிரல் கட்டை விரலாலும் நிக்கிராஹிய பாத்திரத்தை எடுக்கும் இதனால் பகைவனை கீழே வீழ்த்துகின்றேன். யான் பகைவனிலும் மேலாக இருந்துகொண்டு இரண்டுலக ஞானத் அடையுமாறு அருள் செய்வாயாக என்பதாம்.*

பத்தாம் அநுவாகம்

முற்றிற்று.

---

பதினோராவது அநுவாகவிடயச்சுருக்கம்

प्रसोत्रैधातवीयेष्टौ द्वे धाय्ये अग्न इत्यसौ ॥
तत्रैव परि धानीया ह्यनुवाक्या समित्यसौ ॥ १ ॥
उभेतियाज्यात्रीणीति संयाज्यातिस्र ईरिताः ॥
इन्द्रानुवाक्योतयाज्या दशमन्त्रा इहोदिताः ॥ २ ॥

*திரைதாதவீயேஷ்டியின் சாமிதேனியில் சேர்ப்பதற்கு இரண்டுமந்திரங்களும், ஷை சாமிதேனியின் முடிவு மந்திரமும், யாஜ்யா புரோநு வாக்கியங்களும், சுவிஷ்டகிருத்து யாக யாஜ்யாபுரோநு வாக்கியங்களும், ஷை சுவிஷ்டகிருத்துக்கு விகல்பமாக ஒருயாஜ்யையும், ஷை இஷ்டியில் பிரதான யாகத்திற்கு விகற்பமாக ஒரு யாஜ்யாபுரோநு வாக்கியங்களுங் கூறப்படுகின்றன என்பது.*

---

## மூன்றுங் காண்டம் இரண்டாம் பிரபாடகம்

### பதினோராவது அநுவாகம்

*மூன்று பஞ்சாதிகட்குமேல் பதின்மூன்று பதங்களைக்கொண்டது.*

**திரைதாதவீய இஷ்டிகளைப்பற்றிய யாஜ்யா புரோநுவாக்கியங்களைக்கூறு மந்திரங்கள்.**

प्र सो अ॑ग्ने तवो॒तिभि॑स्सु॒वीरा॑भिस्तरति॒ वाज॑कर्मभिः। यस्य॒ त्वꣳ स॒ख्यमावि॑थ। प्र हो॒त्रे पू॒र्व्यं वचो॒ऽग्नये॑ भरता बृ॒हत्। वि॒पां ज्योतीꣳषि॒ बिभ्र॑ते॒ न वे॒धसे॑। अग्ने॒ त्री ते॒ वाजि॑ना॒ त्री ष॒धस्था॒ तिस्र॒स्ते॑ जि॒ह्वा ऋ॑तजात पू॒र्वीः। ति॒स्र उ॑ ते त॒नुवो॑ दे॒ववा॑ता॒स्ताभि॑र्नः पा॒हि गिरो॒ अप्र॑युच्छन्। सं वां॒ कर्म॑णा॒ समि॒षा ॥ १ ॥ हि॒नोमीन्द्रा॑विष्णू॒ अप॑सस्पा॒रे अ॒स्य। जु॒षेथां॑ य॒ज्ञं द्रवि॑णं च धत्त॒मरि॑ष्टैर्नः प॒थिभिः॒ पा॒रय॑न्ता। उ॒भा जि॑ग्यथु॒र्न परा॑ जयेथे॒ न परा॑ जिग्ये कत॒रश्च॒नैनोः॑। इन्द्र॑श्च विष्णो॒ यदप॑स्पृधेथां त्रे॒धा स॒हस्रं॒ वि तदै॑रयेथाम्। त्रीण्यायूꣳ॑षि॒ तव॑ जातवेदस्ति॒स्र आ॒जानी॑रु॒षस॑स्ते अग्ने। ताभि॑र्दे॒वाना॒मवो॑ यक्षि वि॒द्वानथ॑ ॥ २ ॥ भव॒ यज॑माना॒य शं योः। अ॒ग्निस्त्रीणि॑ त्रि॒धातू॒न्या क्षे॑ति॒ वि॒दथा॑ क॒विः। स त्रीꣳरे॑कादशाꣳ इ॒ह। यक्ष॑च्च पि॒प्रय॑च्चनो॒ विप्रो॑ दू॒तः परि॑ष्कृतः। नभ॑न्तामन्य॒के स॑मे। इन्द्रा॑विष्णू दृꣳहि॒ताः शम्ब॑रस्य॒ नव॒ पुरो॑ नव॒तिं च॑ श्नथि॒ष्टम्। श॒तं व॒र्चिनः॑ स॒हस्रं॑ च सा॒कꣳ ह॒थो अ॑प्र॒त्यसु॑रस्य वी॒रान्। उ॒त मा॒ता म॑हि॒षमन्व॑वेनद॒मी त्वा॑ जहति पुत्र दे॒वाः। अथा॑ब्रवीद्वृ॒त्रमिन्द्रो॑ हनि॒ष्यन्त्सखे॑ विष्णो वित॒रं वि क्र॑मस्व ॥ ३ ॥

தலைப்புச் சொற்களைக்கொண்ட இப் பிரபாடக அநுவாக எண்:—

**यो वै पवमानानां त्रीणिपरिभूः स्फ्यः स्वस्तिर्भक्षेहि महीनां पयोऽसि देवसवितरेतत्ते श्येनाय यद्वै होतोपयाम गृहीतोऽसि वाक्षसदसि प्रसो अग्न एकादश ॥ (११)**

தலைப்புச்சொற்களைக் கொண்ட பஞ்சாதி எண் :—

**यो वै स्फ्यः स्वस्तिः स्वधायै नमः प्रमुञ्चतिष्ठतीव षट्चत्वारिꣳशत् ॥४६॥**

இரண்டு தாய்யமந்திரங்களுள்

முதல் மந்திரம்

**प्रसोअग्ने तवोतिभिस्सुवीराभिस्तरति वाजकर्मभिः। यस्यत्वꣳसख्यमाविथ।**

என்பது

உரை

அக்கினியே! நீ, எவ்வெசமானன் மீது நட்பாகிய சிநேகத்தைப் பாது காத்துக் கொண்டிருக்கின்றாயோ, அவன், அழகிய மக்களுடனும், உணவுப் பொருட்குக் காரணமாகிய முயற்சிகளுடனுங் கூடிய உனது பாதுகாப்புக்களால் குடும்பத் துன்பங்களை எளிதில் கடக்கின்றான் என்பது.

---

இரண்டாவது தாய்யமந்திரம்

மந்திரம் 2

**प्र होत्रे पूर्व्यं वचोऽग्नये भरता बृहत्। विपां ज्योतीꣳषि बिभ्रते न वेधसे।**

என்பது

உரை

வேள்விச் செயலாளர்களே! நீவிர், பண்டைய மக ரிஷிகளால் ஓதப் பெற்றதும், மிகவுறுதியையுடையதும், எம்மை நன்கு பரிபாலிப்பதும், துதி வடிவுமாகிய வாக்கை அக்கினியின்பொருட்டு இனிது பாதுகாத்துக் கொள் வீர்களாக. அதிலுவமை.—கிரணங்களான ஒளிகளையுடைய சூரியனைப் போற்றுவதுபோல் என்பது. ஹோமத்தை யுண்டாக்குவதும், எமக்கு இனிமை செய்வதும், ஒளியுடையதுமாகிய அக்கினியையும் போற்றுவீர்களாக என்பது. தாய்யம் = சேர்க்கப்படுவது.

பரிதானீய மந்திரத்தைக் கூறுகின்றது

மந்திரம் 3

**अग्ने त्री ते वाजिना त्री षधस्थातिस्रस्ते जिह्वा ऋतजात पूर्वीः। तिस्र उ ते तनुवो देववातास्ताभिर्नः पाहि गिरो अप्रयुच्छन्।**

என்பது

உரை

அக்கினியே! உனக்கு அவ்விஷ்டியில் மூன்றுபுரோடாசங்கள் விதிக்கப் பட்டதால், மூவகையன்னங்கள், அல்லது, சோமக்கொடி, சாம்நாய்யிகள்(பால் தயிர்கள்) மூன்று, மற்றும், உனக்கு, மூன்றுலகங்கட்கு ஒப்பான காருகபத்தியம், ஆகவனியம், தக்ஷிணாக்கினி என்னும் மூவகையிடங்கள். ஞானன்மாவிலிருந்துண்டாகிய உனக்கு மூன்று நாக்குக்கள், மற்றும் உனக்கு, அக்கினி, மின்னல், சூரியன் என்னும் மூவகை யுடம்புகள், அத்தகைய நீ, மூவகைத் திருமேனிகளாலும், துதியிலுள்ள எமது மறதியை நீக்கி எம்மைப் பரிபாலிப்பாயாக என்பது.

---

இனி, புரோநுவாக்கியம்

மந்திரம் 4

**सं वां कर्मणा समिषा हिनोमीन्द्राविष्णू अपसस्पारे अस्य। जुषेथां यज्ञं द्रविणं च धत्तमरिष्टैर्नः पथिभिः पारयन्ता।**

என்பது

உரை.

இந்திர, விஷ்ணுக்களே! உங்களை இவ்வேள்விக் கருமத்தாற் களிப்புறுவிக்கின்றேன். அவியாகிய அன்னத்தாலும் களிப்படைவிக்கின்றேன். எதன்பொருட்டெனின்? செய்யும் வேள்வி இனிது முடிதற்பொருட்டென்க, மற்றும், கேட்டில்லாத அநுட்டானநெறியால் எமது கருமத்தைக் கரையேற்றி வைக்கின்றவர்களாயும், எமக்குத் தனத்தைத் தேடுகின்றவர்களாயுமிருந்து எமது வேள்வியின் அவிர்ப்பாகத்தை அருந்துவீர்களாக என்பதாம்.

---

யாஜ்யா வாக்கியம்

பிராமணம் 5.

**उभा जिग्यथुर्न परा जयेथे न परा जिग्ये कतरश्चनैनोः। इन्द्रश्च विष्णो यदपस्पृधेथां त्रेधा सहस्रं वि तदैरयेथाम्।**

என்பது,

உரை.

இந்திர விஷ்ணுக்களே! நீவிரிருவரும் வெற்றியை யுடையவர்கள். ஒரு போதும் தோல்வியை யடையமாட்டீர்கள். ஒருவர்க்கொருவர் பொருமைப் படும் நீவிர், தானமாய் கொடுக்கத்தக் ஆயிரம் பசுக்களைக் கொண்டுபோனீர் கள் என்பது.

---

சுவிஷ்டகிருதின் புரோநுவாக்கியவடிவாகிய யாஜ்யா வாக்கியங் கூறப்படுகின்றது

மந்திரம் 6

त्रीण्यायूꣳषि तव जातवेदस्तिस्र आजानीरुषसस्ते अग्ने । ताभिर्देवाना-
मवो यक्षि विद्वानथा भव यजमानाय शं योः ।

என்பது.

உரை

தோன்றியவற்றை யுணர்வோய்! உனது ஆயுளைவளர்க்கும் அவிகள், சோமம், பால், தயிர், புரோடசம் என்னும் மூன்றுமாம். அக்கினியே! உஷாக்காலப்போ லெழுகின்ற உனது சுவாலைகள் ஆகவனீய முதலிய விடங்க ளில் மூவகைத்தாகின்றன. அவற்றால், தேவர்களைப் பாதுகாக்கும் அவியை யுணர்ந்த நீ யாகஞ்செய்வாயாக. பிறகு, எசமானனுக்குச் சுகங்கொடுப்போ னுவாயாக. துன்பை நீக்குவோனுமாவாயாக என்பது.

---

மற்றும் சுவிஷ்டகிருதின் யாஜ்யா வடிவாகிய சம்யாஜ்யா வாக்கியங் கூறப்படு கின்றது

மந்திரம் 7.

अग्निस्त्रीणि त्रिधातून्या क्षेति विदथा कविः । स त्रीꣳरेकादशाꣳ इह ।

என்பது.

உரை.

மூவகைத் தாதுக்கள் போன்ற மூவகை அவிகளையும் கவியாகிய இவ் வக்கினிச் சூழ்ந்துகொள்கின்றது. அத்தகைய அக்கினி இவ்வேள்விக் கருமத்தில் பதினொரு தேவர்களைக்கொண்ட மூன்று கணங்களைக் களிப்படை விக்குக என்பது.

---

மேற்கூறிய அதற்கே விகற்பமாகிய சம்யாஜ்யாவாக்கியங் கூறப்படுகின்றது

மந்திரம் 8

**यश्च पिप्रयच्च नो विप्रो दूतः परिष्कृतः । नभन्तामन्यके समे ।**

என்பது

உரை

தூதுவ அலங்காரம்பூண்ட அக்கினியைத் தேவர்கட்கு தூதுவன் என்ற தால் இவ்வக்கினி தேவர்கட்கு யாகஞ் செய்வதாகுக. பிராமணர்களின் அபி மானியாதலின் எம்மைப் பிரியப்படுத்துக. என்னில் வேறுகிய பகைவர்கள் அனைவருங் கெடுவார்களாக என்பதாம்.

---

பிரதான (முக்கிய) அவியின் விகற்பமுடைய புரோநுவாக்கியம்

மந்திரம் 9

**इन्द्राविष्णू दृꣳहिताश्शम्बरस्य नव पुरो नवतिं च श्नथिष्टम् । शतं वर्चिनः सहस्रं च साकꣳ हथो अप्रत्यसुरस्य वीरान् ।**

என்பது.

உரை.

இந்திர விஷ்ணுக்களே! நீவிரிவரும், சம்பரன் என்னும் அசுரனுடைய உறுதியான தொண்ணூற்றென்பதுநகரங்களையும் நாசமாக்கினீர்கள். மற்றும் வீரர்களும் சூரர்களுமான அசுரர்களுடைய மந்திரி முதலானோர்களும் நூற் றுக்கணக்கணக்காகவும் ஆயிரக்கணக்காகவும் ஒழிந்தனர் என்பது.

---

மேற்கூறிய அதற்கே விகற்பமாகிய யாஜ்யா வாக்கியங் கூறப்படுகின்றது

மந்திரம் 10

**उत माता महिषमन्ववेनदमी त्वा जहति पुत्र देवाः । अथाब्रवीद्वृत्रमिन्द्रो हनिष्यन्त्सखे विष्णो वितरं वि क्रमस्व ।**

என்பது.

உரை.

இந்திரனுடைய மாதாவானவள், மகனாகிய இந்திரனுக்கு, மைந்த! நீ பகைவனைக்கொன்று சும்மாவிருக்கில் தேவர்களெல்லாரும் உன்னைக் கைவிடுவார்கள். ஆதலின், மாதா உணர்த்திய பிறகு விருத்திரனைக்கொல்வது உசிதம் ஆதலின் நண்பனாகிய விஷ்ணுவே! நீ மிகச் சிறந்த பராக்கிரமமுடையோனாவாயாக. அதாவது விரைவில் விருத்திரனைக் கொல்வாயாக என்பதாம்.

பதினோராம் அநுவாகம்

முற்றிற்று.

---

இரண்டாம் பிரபாடகம் முடிந்தது.

---

மூன்றுங் காண்டம் மூன்றும் பிரபாடக விடயச்சுருக்கம்

प्रतिनिर्ग्राह्य पर्यन्ताः पवमानग्रहादयः ।

प्रपाठकेद्वियेतु मन्त्रयुक्ताःप्रपाञ्चिताः ॥ १ ॥

अथावशिष्टा मन्त्राद्यास्तृतीयेऽस्मिन्प्रपाठके ।

उच्यन्ते वैकृताचान्ये समन्त्रविधयःक्रमात् ॥ २ ॥

இரண்டாம் பிரபாடகத்தில், பவமானக்கிரகந் தொடங்கி பிரதி நிக்கிராஹியக்கிரகம் வரைக்குமுள்ள மந்திரங்கள் கூறப்பட்டன. இம்மூன்றும் பிரபாடகத்தில் மாகேந்திரக் கிரஹத்தைப்பற்றிச் செய்யும் அதிக்கிராஹியக் கிரகங்கள் முதலான கிரஹங்கட்குள்ள மந்திரங்கள் கூறப்படுகின்றன.

---

முதலநுவாக விடயச்சுருக்கம்

अग्नेऽतिग्राह्य माग्नेयं हुत्वा तेज उपस्थिति : ।

तथैन्द्र सौर्ययोर्भक्षेन्मयीति त्रीन्नवोदिताः ॥ १ ॥

அதிக்கிராகியக் கிரகங்களை ஹோமஞ் செய்தல், அவைகளைப் போற்றல், அவைகளையருந்தல் என்பது.

---

## மூன்றுங் காண்டம் மூன்றும் பிரபாடகம்

### முதலநுவாகம்

*இரண்டு பஞ்சாதிக்குமேல் இருபத்துமூன்று பதங்களைக் கொண்டது.*

அதிக்கிராஹிய மந்திரங்கள்.

अग्ने तेजस्विन्तेजस्वी त्वं देवेषु भूयास्तेजस्वन्तं मामायुष्मन्तं वर्चस्वन्तं मनुष्येषु कुरु दीक्षायै च त्वा तपसश्च तेजसे जुहोमि तेजोविदसि तेजो मा मा हासीन्माऽहं तेजो हासिषं मा मां तेजो हासीदिन्द्रौजस्विन्नोजस्वी त्वं देवेषु भूया ओजस्वन्तं मामायुष्मन्तं वर्चस्वन्तं मनुष्येषु कुरु ब्रह्मणश्च त्वा क्षत्रस्य च ॥ १ ॥ ओजसे जुहोम्योजोविदस्योजो मा मा हासीन्माऽहमोजो हासिषं मा मामोजो हासीत्सूर्य भ्राजस्विन्भ्राजस्वी त्वं देवेषु भूया भ्राजस्वन्तं मामायुष्मन्तं वर्चस्वन्तं मनुष्येषु कुरु वायोश्च त्वाऽपां च भ्राजसे जुहोमि सुवर्विदसि सुवर्मा मा हासीन्माऽहꣳ सुवर्हासिषं मा माꣳ सुवर्हासीन्मयि मेधां मयि प्रजां मय्यग्निस्तेजो दधातु मयि मेधां मयि प्रजां मयीन्द्र इन्द्रियं दधातु मयि मेधां मयि प्रजां मयि सूर्यो भ्राजो दधातु ॥ २ ॥

பிரதிப்பிரஸ்தாதாசெய்யும் ஆக்னேய அதிக்கிராஹிய சோமரச ஹோம மந்திரம்

மந்திரம் 1

अग्ने तेजस्विन्तेजस्वी त्वं देवेषु भूयास्तेजस्वन्तं मामायुष्मन्तं वर्चस्वन्तं मनुष्येषु कुरु दीक्षायै च त्वा तपसश्च तेजसे जुहोमि ।

என்பது.

உரை

ஒளியுடைய அக்கினியே! நீ, தேவர்களுக்குள் ஒளி மிக்கோனாய் விளங்குகின்றாய். ஒளியுடைய என்னை, மக்களுக்குள், ஆயுளும், அழகும் மிக்குடையவனாகச் செய்வாயாக. தீட்சையில், அழகு, வன்மை, தவம் என்பவைகள் சித்தியாதற் பொருட்டு அக்கினி சம்பந்தமாகிய அதிக்கிராஹியக் கிரகமே! (சோமரசமே) உன்னை ஹோமஞ்செய்கின்றேன் என்பதாம்.

---

ஹோமத்தைப் போற்று மந்திரம்

மந்திரம் 2

**तेजोविदसि तेजो मा मा हासीन्माऽहं तेजो हासिषं मा मां तेजो हासीत्।**

என்பது.

உரை.

அக்கினியே! நீ ஒளியை உள்ளவாறுணர்கின்றவனா யிருக்கின்றாய். ஆதலின், உனதருளால் ஒளி என்னை விட்டுவிலகாததாகுக. யானும் ஒளியை விடாதவனா யிருக்கின்றேன். இவ்வாற்றால், எப்போதும் ஒளி என்னுடன் கூடவே இருப்பதாகுக என்பது.

---

நேஷ்டா செய்யும் ஐந்திர அதிக்கிராஹியக் கிரஹஹோம மந்தரம்

மந்திரம் 3

**इन्द्रौजस्विन्नोजस्वी त्वं देवेषु भूया ओजस्वन्तं मामायुष्मन्तं वर्चस्वन्तं मनुष्येषु कुरु ब्रह्मणश्च त्वा क्षत्रस्य चौजसे जुहोमि।**

என்பது.

உரை.

இந்திர! நீ, போற்றப்பெறுகின்றவன். தேவர்களுக்குள் நீ வன்மை மிக்கோனாயிருக்கின்றாய் என்னை, மக்களுக்குள் ஆயுளும், அழகும்மிக்குடையவனாகச் செய்வாயாக. இந்திரனுடைய அதிக்கிராஹியக்கிரக (சோமரச)மே! உன்னை, அந்தணர், அரசர் என்பவர்கட்கு வன்மையுண்டாக்குதற் பொருட்டு ஹோமஞ்செய்கின்றேன் என்பது.

---

நேஷ்டா ஹோமத்தைப் போற்று மந்திரம்

மந்திரம் 4

**ओजोविदस्योजोमा मा हासीन्माऽहमोजो हासिषं मा मामोजो हासीत् ।**

என்பது.

உரை.

அக்கினியே! நீ எட்டாவது தாதுவை உணர்ந்தோனாயிருக்கின்றாய். அத்தகைய தாது என்னைவிட்டு விலகாததாகுக. யானும் அதைவிடேன். எப்போதும் அத்தகைய தாது என்னுடன்கூடியே இருக்குக என்பதாம்

---

உன்னேதா செய்யும் சூரியக்கிரக ஹோம மந்திரம்

மந்திரம் 5

**सूर्य भ्राजस्विन्भ्राजस्वी त्वं देवेषु भूया भ्राजस्वन्तं मामायुष्मन्तं वर्चस्वन्तं मनुष्येषु कुरु वायोश्च त्वाऽपां च भ्राजसे जुहोमि ।**

என்பது

உரை.

சூரிய! நீ, அழகுடைய கிரணவொளியுடையோனா யிருக்கின்றாய். தேவர்களுக்குள்ளும் மிக வொளியுடையோனாயிருக்கின்றாய். என்னை, மக்களுக்குள் மிகுந்த ஆயுளையும் அழகையுமுடையோனாகச் செய்வாயாக. சூரிய அதிக்கிராஹியமே! உன்னை, வாயு, நீர் என்னு மிரண்டையும் பற்றிய ஒளி விசேடங்களின் பொருட்டு ஹோமஞ் செய்கின்றேன் என்பதாம்.

---

உன்னேதா ஹோமத்தைப் போற்றல்

மந்திரம் 6

**सुवर्विदसि सुवर्मा मा हासीन्माऽह२ सुवर्हासिषं मा मा२ सुवर्हासीत् ।**

என்பது.

உரை.

சூரிய நீ, சுவர்க்க நெறியை நன்குணர்ந்தோனா யிருக்கின்றாய். சுவர்க்கத்திலிருந்து என்னை விலக்கிவிடாதே. யானும் சுவர்க்கநெறியைக் கைவிடமாட்டேன் என்பது.

---

மூவநுஞ் சோமரசத்தையநந்து மந்திரம்

மந்திரம் 7 - 8 - 9

**मयि मेधां मयि प्रजां मय्यग्निस्तेजो दधातु मयि मेधां मयि प्रजां मयीन्द्र इन्द्रियं दधातु मयि मेधां मयि प्रजां मयि सूर्यो भ्राजो दधातु ।**

என்பது.

உரை.

அக்கினி எமக்கு மந்திரம் மந்திரப் பொருள்களிரண்டையும் உள்ளத்தின் வன்மையையும் மக்களையும் அளிக்குக. இந்திரன் எமக்கு, இந்திரியத்தையும், மற்றவை முன்போல். சூரியன், மிகுந்த ஒளியையும், மற்றவை முன்போல் என்பதாம். இவைகள், முதற்காண்டம் நான்காம் பிரபாடகம், இருபத்தோராம் அநுவாகத்தில் விநியோகிக்கப் படுகின்றவைகள்.

முதலநுவாகம்

முற்றிற்று.

---

இரண்டாம் அநுவாகவிடச் சுருக்கம்.

वायुः स्तोत्रमुपाकुर्याच्छस्त्रं प्रतिगरिष्यता ।

जपितव्य इडामन्त्रो द्वौ मन्त्राविह कीर्तितौ ॥ १ ॥

தோத்திரத்தை உபாகரணஞ் செய்வதற்கும், பிரதிகரஞ் செய்வதற்கு முன் செபிப்பதற்கும் மந்திரங்கள் கூறப்படுகின்றன என்பது.

---

**மூன்றும் காண்டம் மூன்றும் பிரபாடகம்**

**இரண்டாவது அநுவாகம்**

ஒரு பஞ்சாதிக்குமேல் இருபத்தெட்டுப் பதங்களைக் கொண்டது.

துதியைக் குறிப்பிடுவதற்கும், பிரதிகரத்திற்கும் அங்கமாகிய மந்திரங்கள்.

वायुर्हिङ्कर्ताऽग्निः प्रस्तोता प्रजापतिः साम बृहस्पतिरुद्गाता विश्वे देवा उपगातारो मरुतः प्रतिहर्तार इन्द्रो निधनं ते देवाः प्राणभृतः प्राणं मयि दधत्वेतद्वै सर्वमध्वर्युरुपाकुर्वन्नुद्गातृभ्य उपाकरोति ते

देवाः प्राणभृतः प्राणं मयि दधत्वित्याहैतदेव सर्वमात्मन्धत्त इडा देवहूर्मनुर्यज्ञनीर्बृहस्पतिरुक्थामदानि शꣳसिषद्विश्वे देवाः ॥ १ ॥
सूक्तवाचः पृथिवि मातर्मा मा हिꣳसीर्मधु मनिष्ये मधु जनिष्ये मधु वक्ष्यामि मधु वदिष्यामि मधुमतीं देवेभ्यो वाचमुद्यासꣳ शुश्रूषेण्यां मनुष्येभ्यस्तं मा देवा अवन्तु शोभायै पितरोऽनु मदन्तु ॥२॥

இதில் துதியின் உபாகரண மந்திரங்கள் கூறப்படுகின்றன.

---

துதிக்கு உபாகரணஞ் செய்யும் மந்திரம்

மந்திரம் 1

वायुर्हिङ्कर्ताऽग्निः प्रस्तोता प्रजापतिस्साम बृहस्पतिरुद्गाता विश्वे देवा उपगातारो मरुतः प्रतिहर्तार इन्द्रो निधनं ते देवाः प्राणभृतः प्राणं मयि दधतु ।

என்பது.

உரை.

வாயு ஹிம் என்றது, அக்கினி பிரஸ்தோதா, (துதிப்போன்) பிரசாபதி, சாமம், பிருகற்பதி, உத்காதா, விசுவ தேவர்கள், உபகாதாக்கள், (அருகில் பாடுவோர்கள்) மருத்து, பிரதிகர்த்தா, இந்திரன், நிதனஞ் சொல்கின்றவன் என்னுமிவர்கள் பிராணனைக் காப்பாற்றுகின்றவர்களாவார்கள். இவர்கள் எம்மிடத்தில் பிராணனை நிலைப்படுத்துவார்களாக என்பதாம்.

ஈண்டு, பவமான துதிகளைப் பாடுவதற்குமுன் வேட்போன் ஒரு தருப்பைமுடியை எடுத்து பிரஸ்தோதாவினிடத்தில், நீ இதைப் பாடுவாயாக என்று சொல்லிக்கொடுத்தல் வேண்டும்; இது உபாகரண மெனப்படும்.

இது, முதற்காண்டம், நான்காம் பிரபாடகம் பதின்மூன்றும் அநுவாகத்தில் விநியோகிக்கப்படுகின்றது.

மற்றும், பாடுஞ்சாமமானது, ஹிம்காரம், பிரஸ்தாவம், உத்கீதம், பிரதிஹாரம், நிதனம் என ஐகைப்படும் என்பதையுணர்க.

இவற்றுள், ஹிங்காரமும் நிதனமும் யாவரும் படிக்கலாம். மற்றவை மூன்றும் முறையே, பிரஸ்தோதா, உத்காதா, பிரதிஹர்தா ஓதற்பாலன.

மேற்கூறிய இம்மந்திரத்தை விநியோகப் படுத்துகின்றது

பிராமணம் 1

**एतद्वै सर्वमध्वर्युरुपाकुर्वन्नुद्गातृभ्य उपाकरोति ते देवाः प्राणभृतः प्राणं मयि दधत्वित्याहैतदेव सर्वमात्मन्धत्ते ।**

என்பது.

உரை.

*வேட்போன், உத்காதாக்கட்கு உபாகரணஞ் (தருப்பையைக் கொடுத்துக் குறிப்புச்) செய்யுங்கால், ஹிம்கர்த்தா முதலான எல்லாத் தேவர்களுங் குறிப்பிட்டவர்ளே யாவர்கள். ஆதலின் 'வாயுர் ஹிம்கர்த்தா, என்பது முதலிய மந்திரத்தால் தருப்பை முடிச்சைக் கொடுத்தலாகிய உபாகரணஞ் செய்தல்வேண்டும் என்பது கருத்து. அதில், அத்தேவர்கள், என்னும் பகுதி வேட்போன் ஓதல்வேண்டியது. அதாவது, பிராணனைப் பாது காக்கும் இத்தேவர்கள் எம்மிடத்துப் பிராணனை நிலைநாட்டுன்கிறவர்களா கின்றார்கள் என்பது.*

---

வேட்போன், பிரதிகரஞ் சொல்வதற்கு முன் செபிக்கவேண்டிய மந்திரம்

மந்திரம் 2

**इडा देवहूर्मनुर्यज्ञनीर्बृहस्पतिरुक्थामदानि शंसिषद्विश्वे देवास्सूक्तवाचः पृथिवि मातर्मा मा हिंसीर्मधु मनिष्ये मधु जनिष्येमधुवक्ष्यामि मधु वदिष्यामि मधुमतीं देवेभ्यो वाचमुद्यासं शुश्रूषेण्यां मनुष्येभ्यस्तं मा देवा अवन्तु शोभायै पितरोऽनु मदन्तु ।**

என்பது.

உரை

*தெய்வப்பசுவடிவ இடையாகிய தேவதை தேவர்களை அழைப்பதாம். மநு என்பது எக்ஞத்தைச் செய்விப்பது. பிருகற்பதி, களிப்புண்டாக்குஞ் சஸ்திரமோதுகின்றவன், விசுவதேவர்கள் சூக்தங்களை ஓதுகின்றவர்கள். மாதாவாகிய பூமியே! இடைமுதலான தேவதைகளின் அருளால் பிழை யிலாத எம்மைத் துன்புறுத்தாதே. உனதருளால் இனிசெயலையே மனதி லெண்ணுகின்றேன். அங்ஙனமே இனிய கருமபயனை யுண்டாக்குவேன். இன்சொல் கூறுவேன். தேவர்கட்குப் பிரியமானதும், மக்கட்குக்கேட்க இனியதுமாகிய பிரதிகரத்தை மூன்று சவனங்களிலுஞ் சொல்லுவேன். அத்தகைய இன்சொற் கூறும் என்னை மறதி முதலியவைகளற்றதாய அழகின்பொருட்டு மேற்கூறிய 'தேவர்கள் பாதுகாப்பாற்றுவார்களாக என்பது.*

இரண்டாம் அநுவாகம் முற்றிற்று.

மூன்றும் அநுவாக விடயச்சுருக்கம்.

वसत्रिभिर्गृहीतऽया नद्धसोमांशवस्त्रयः ।
मान्दाद्द्वादश मन्त्रास्तैश्चमसस्था अपोंऽशुभिः ॥ १ ॥
आधूनोत्यथशुक्रं तेऽदाभ्यपात्रे दधिग्रहः ॥
आऽस्मिन्नदाभ्यमादत्ते ककुहं सोऽपनीयते ॥ २ ॥
यत्ते जुहोत्युशिक्प्रोक्तानंशूनभिषवत्रये ।
त्रिभिस्संसृजते ह्यानः स्वर्णोपरि समुच्छ्वसेत् ॥
इन्द्रास्पृश्योदकं होमो दधन्वे पञ्चविंशतिः ॥ ३ ॥

மூன்று சோமக்கொடிகளை யெடுத்தல், நான்கு முறை சோமக்கொடியால் வசதீவரி நீரையலைத்தல், வசதீவரி நீர் அல்லது பால், அல்லது தயிர் என்பவற்றுள் ஒன்றைக் கிரகித்தல், (அதை எடுத்துக்கொள்ளல்) அதை ஆகவனீயத்திற்குக்கொண்டுபோதல், அதையே ஹோமஞ்செய்தல், சோமக்கொடிகளை மகாபிஷவங்களிற் சேர்த்துக்கொள்ளல், மூச்சு விட்டுவிடில் பிராயச்சித்தம், தண்ணீரைத்தொடுதல், அம்சுக்கிரத்தை ஹோமஞ்செய்தல் என்பவைகட்கு மந்திரங்கள் கூறப்படுகின்றன என்பது.

---

## மூன்றுங் காண்ட மூன்றும் பிரபாடகம்
## மூன்றும் அநுவாகம்

மூன்று பஞ்சாதிகட்குமேல் இருபத்தைந்து பதங்களைக் கொண்டது.

அதாப்யம் அம்சு என்னுங் கிரகங்கட்கு வேண்டிய மந்திரங்கள் கூறப்படுகின்றன.

वसवस्त्वा प्र वृहन्तु गायत्रेण छन्दसाऽग्नेः प्रियं पाथ उपेहि
रुद्रास्त्वा प्र वृहन्तु त्रैष्टुभेन छन्दसेन्द्रस्य प्रियं पाथ उपेह्यादित्या-
स्त्वा प्र वृहन्तु जागतेन छन्दसा विश्वेषां देवानां प्रियं पाथ उपेहि
मान्दासु ते शुक्र शुक्रमा धूनोमि भन्दनासु कोतनासु नूतनासु
रेशीषु मेषीषु वाशीषु विश्वभृत्सु माध्वीषु ककुहासु शक्करीषु ॥१॥

शुक्रासु ते शुक्र शुक्रमा धूनोमि शुक्रं ते शुक्रेण गृह्णाम्यह्नो रूपेण सूर्यस्य रश्मिभिः । आऽस्मिन्नुग्रा अचुच्यवुर्दिवो धारा असश्चत । ककुहꣳ रूपं वृषभस्य रोचते बृहत्सोमस्सोमस्य पुरोगाश्शुक्रः शुक्रस्य पुरोगाः । यत्ते सोमादाभ्यं नाम जागृवि तस्मै ते सोम सोमाय स्वाहोशिक्त्वं देव सोम गायत्रेण छन्दसाऽग्नेः ॥ २ ॥ प्रियं पाथो अपीहि वशी त्वं देव सोम त्रैष्टुभेन छन्दसेन्द्रस्य प्रियं पाथो अपीह्यस्मत्सखा त्वं देव सोम जागतेन छन्दसा विश्वेषां देवानां प्रियं पाथो अपीह्या नः प्राण एतु परावत आऽन्तरिक्षाद्दिवस्परि । आयुः पृथिव्या अध्यमृतमसि प्राणाय त्वा । इन्द्राग्नी मे वर्चः कृणुतां वर्चस्सोमो बृहस्पतिः । वर्चो मे विश्वे देवा वर्चो मे धत्तमश्विना । दधन्वे वा यदीमनु वोचद्ब्रह्माणि वेरु तत् । परि विश्वानि काव्या नेमिश्चक्रमिवाभवत् ॥ ३ ॥

இதில் அதாப்யம், அம்சு, என்னும் கிரகங்கட்குவேண்டிய மந்திரங்கள் கூறப்படுகின்றன.

- மூன்று சோமகோடித்துண்டுகளை எடுப்பதில் முதல் மந்திரம்

மந்திரம் 1

वसवस्त्वा प्र वृहन्तु गायत्रेण छन्दसाऽग्नेः प्रियं पाथ उपेहि ।

என்பது.

உரை.

சோமக்கொடித்துண்டே! உன்னை, காயத்திரிச்சந்தத்தால், 'வசு, என்னுந் தேவதை, துணியாற்கட்டியுள்ள சோமக்கொடிக் கட்டிலிலிருந்து வேறாக்குக. அத்தகைய நீ, அக்கினிக்கு பிரியமுடைய அன்னமாவாயாக என்பதாம்.

மந்திரம் 2

**रुद्रास्त्वा प्र वृहन्तु त्रैष्टुभेन छन्दसेन्द्रस्य प्रियं पाथ उपेहि ।**

என்பது.

உரை.

இதில் உருத்திரன், திரிஷ்டுப் சந்தத்தால் என்பது விசேடம். மற்றவை முன்போல் என்பது.

---

மந்திரம் 3

**आदित्यास्त्वा प्र वृहन्तु जागतेन छन्दसा विश्वेषां देवानां प्रियं पाथ उपेहि ।**

என்பது

உரை

இதில் ஆதித்தன், சாகதிச்சந்தத்தால் என்பது விசேடம். மற்றவை முன் போல் என்பது.

ஈண்டு இம்மந்திரங்கள் மூன்றுலும் மூன்று சோமக்கொடித்துண்டுகளை ஒவ்வொரு மந்திரத்திற்கு ஒவ்வொன்முக விரல்களுக்கிடையில் இடுக்கி எடுத்துக் கொள்ளல் வேண்டுமென்பதை யுணர்க.

---

மேற்கூறிய கிரகபாத்திரத்திலுள்ள வசதீவரி என்னும் நீரை அச் சோமத்துண்டுகளால் நான்குமுறை கலக்குதற்குரிய பன்னிரண்டு மந்திரங்கள்

மந்திரம் 4 - 15

**मान्दासु ते शुक्र शुक्रमा धूनोमि भन्दनासु कोतनासु नूतनासु रेशीषु मेषीषु वाशीषु विश्वभृत्सु माध्वीषु ककुहासु शकरीषु शुक्रासु ते शुक्र शुक्रमा धूनोमि ।**

என்பது.

உரை

விளங்குஞ் சோமமே! உன்னுடைய விளக்கமுடைய சாரத்தை மந்தப் போக்குள்ள நீரில் கலக்குகின்றேன். இவ்வாறே மங்களந்தரும் நீரிலும், ஞானந்தரும் நீரிலும், புதிய நீரிலும், துன்பந்தரும் மிகவேகமுடைய நீரிலும், போட்டியிடும் நீரிலும், இரையும் நீரிலும், உலகைத் தாங்கு நீரிலும், தித்திப்புடைய நீரிலும், உச்சிபோன்ற நீரிலும், சத்தியுடைய நீரிலும், விளக்கமுடைய நீரிலும் கலக்குகின்றேன் என்று முன்போற் சேர்த்து உரைத்துக் கொள்க என்பது.

ஐந்துமுறை, அல்லது, ஏழுமுறை கலக்குதலும் உண்டு.

அந்தக்கிரகத்தில் வசதீவரிஎனனும் நீரை எடுத்தற்குரிய மந்திரம்

மந்திரம் 16

**शुक्रं ते शुक्रेण गृह्णाम्यह्नो रूपेण सूर्यस्य रश्मिभिः ।**

என்பது

உரை.

*தயிரே! உன்னுடைய சாரத்தை, சோமமாகிய சாரத்துடன்கூட இரவியின் கிரணங்களால் எடுத்துக்கொள்கின்றேன் என்பது. இதை, முதலில் விநியோகித்துக்கொள்க.*

---

இடதுகையிலுள்ள பாத்திரத்தை வலதுகையில் வாங்கிக் கோள்வதற்குரிய மந்திரம்

மந்திரம் 17

**आऽस्मिन्नुग्रा अचुच्यवुर्दिवो धारा असश्चत ।**

என்பது.

உரை

*இப்பாத்திரத்தில் விரைவாகிய சோமரசத்தின் தாரைவந்து விழுகின்றது. விழுந்து பாத்திரத்தில் ஒன்றுபடுகின்றது என்பது.*

---

அக் கிரகபாத்திரத்தை எடுத்துக் கோண்டு ஆகவனீயத்திற்குச் செல்லுதற்குரியமந்திரம்

மந்திரங்கள் 18

**ककुहꣳ रूपं वृषभस्य रोचते बृहत्सोमस्सोमस्य पुरोगाश्शुक्रश्शुक्रस्य पुरोगाः ।**

என்பது

உரை

*மழையைப் பெய்விக்கும் இந்திரனுக்கு மழையின்வடிவம் இனிது விளங்குகின்றது. அதுவும் உறுதியானது. இச்சோமக்கொடி, சோமராசனுக்கு முன் போவது. விளங்கும் இச்மோமரசம் விளங்கும் இந்திரனுக்கு முன் போவது என்பது.*

---

அதாப்யக்கிரக சோமரச ஹோம மந்திரம்

மந்திரம் 19

**यत्ते सोमादाभ्यं नाम जागृवि तस्मै ते सोम सोमाय स्वाहा।**

என்பது.

உரை.

*சோமமே! உனது பெயர் அதாப்யமாம். அதாப்யம் = ஒருவராலும் பழிக்கப்படாமை. அதாவது எப்போதும் விழித்துக்கொண்டிருப்பதாம். அத்தகைய சோமமே! உனக்கு இது அர்ப்பணமாகுக என்பது.*

---

முன்னர் வசதீவரி நீரைக்கலக்கிவிட்ட மூன்று சோமக்கொடித் துண்டுகளையும் ஒவ்வொருன்றாக மும்முறை சோமரசம் பிழியும்போதுஞ் சேர்த்துக்கொள்வதற்குரிய மந்திரங்கள்.

மந்திரங்கள் 20 - 21 - 22

**उशिक्त्वं देव सोम गायत्रेण छन्दसाऽग्नेः प्रियं पाथो अपीहि वशी त्वं देव सोम त्रैष्टुभेन छन्दसेन्द्रस्य प्रियं पाथो अपीह्यस्मत्सखा त्वं देव सोम जागतेन छन्दसा विश्वेषां देवानां प्रियं पाथो अपीहि।**

என்பது.

உரை.

*சோமதேவ! செல்லுந்தன்மையுடைய முதலாவது துண்டாகிய நீ, அக்கினிக்குப் பிரியமாகிய அன்னமாகுமாறு சோமக் கொடிகளிலிருந்து தனியே எடுக்கப்பட்டாய். இப்போது அக்கொடிகளுடன் சேர்ந்துகொள்வாயாக. இவ்வாறே எல்லாவுயிர்களும் வாழ்வதற்கிடமாகிய இரண்டாவது சோமக்கொடித்துண்டே! மற்றவை முன்போல். நண்பன் போன்று பிரியமாகிய மூன்றாவது சோமக்கொடித்துண்டே! மற்றவை முன்போல் உரைத்துக்கொள்க என்பது. இவை, முதற்காண்டம், நான்காம் பிரபாடகம் மூன்றும் அநுவாகத்தில் விநியோகப் படுகின்றன.*

---

மூச்சடக்க முடியாமற்போனால் நூறுவராகனிடை பொன்னின்மீது மூச்சுவிடுதற்கு மந்திரம்.

மந்திரம் 23

**आ नः प्राण एतु परावत आऽन्तरिक्षाद्दिवस्परि। आयुः पृथिव्या अध्यमृतमसि प्राणाय त्वा।**

என்பது.

உரை.

தூரதேசத்திலிருந்து எம்பொருட்டு பிராணன் வருக. அந்தரிக்கத்திலிருந்து வருக. சுவர்க்கத்திலிருந்து வருக. பொன்னே! நீ, பூமியின்மீது அமுதமாகவும் ஆயுளுக்குக்காரணமாகவும் இருக்கின்றாய். அத்தகைய உன்மீது பிராணன் நிலைத்திருத்தற்பொருட்டு இவ்வாறு மூச்சுவிடுகின்றேன் என்பதாம்.

---

வேட்போன் கையில் நீரைத் தொடுதற்குரிய மந்திரம்.

மந்திரம் 24

**इन्द्राग्नी मे वर्चः कृणुतां वर्चस्सोमो बृहस्पतिः । वर्चो मे विश्वे देवा वर्चो मे धत्तमश्विना ।**

என்பது.

உரை.

இந்திரனும் அக்கினியும் எனக்கு வன்மையை யுண்டாக்குவார்களாக சோமனும் பிருகற்பதியும் அழகைச்செய்வார்களாக விசுவதேவர்களும் அழகைச் செய்வார்களாக. அசுவினிகளே! நீவிரும் எமக்கு அழகைத் தேடுவீர்களாக என்பதாம்.

---

அம்சுக்கிரகத்தின் சோமரச ஹோமம்

மந்திரம் 25

**दधन्वे वा यदीमनु वोचद्ब्रह्माणि वेरु तत् । परि विश्वानि काव्या नेमिश्चक्रमिवाभवत् ।**

என்பது.

உரை.

வேதமந்திரங்களில் முறையாய்க் கூறப்படும் தீட்சை முதலியவைகளை மனதில் நிறுத்துவேன். அதாவது சிறிதளவும் மறக்கமாட்டேன் என்பது பொருள். இவ்வேள்வி, வண்டிச்சக்கரக் கால்கள் இரிசிக்கட்டையைச் சூழ்ந்திருப்பதுபோற் சூழ்ந்திருக்கின்றது என்பது.

மூன்றும் அநுவாகம்

முற்றிற்று.

## மூன்றுங் காண்டம் மூன்றும் பிரபாடகம்

## நான்காம் அநுவாகம்

*மூன்று பஞ்சாதிகட்குமேல் மூன்று பதங்களைக் கொண்டது.*

அம்சு அதாப்யக்கிரக மந்திரங்களுக்குப் பிராமணங்கள்.

एतद्वा अपां नामधेयं गुह्यं यदाधावा मान्दासु ते शुक्र शुक्रमा धूनोमीत्याहापामेव नामधेयेन गुह्येन दिवो वृष्टिमव रुन्धे शुक्रं ते शुक्रेण गृह्णामीत्याहैतद्वा अह्नो रूपं यद्रात्रिस्सूर्यस्य रश्मयो वृष्ट्या ईशतेऽह्न एव रूपेण सूर्यस्य रश्मिभिर्दिवो वृष्टिं च्यावयत्याऽस्मिन्नुग्राः ॥ १ ॥ अचुच्यवुरित्याह यथायजुरेवैतत्ककुहꣳ रूपं वृषभस्य रोचते बृहदित्याहैतद्वा अस्य ककुहꣳ रूपं यद्वृष्टी रूपेणैव वृष्टिमव रुन्धे यत्ते सोमादाभ्यं नाम जागृवीत्याहैष ह वै हविषा हविर्यजति योऽदाभ्यं गृहीत्वा सोमाय जुहोति परा वा एतस्याऽऽयुः प्राण एति ॥ २ ॥ योऽꣳशुं गृह्णात्या नः प्राण एतु परावत इत्याहाऽऽयुरेव प्राणमात्मन्धत्तेऽमृतमसि प्राणाय त्वेति हिरण्यमभि व्यनित्यमृतं वै हिरण्यमायुः प्राणोऽमृतेनैवाऽऽयुरात्मन्धत्ते शतमानं भवति शतायुः पुरुषः शतेन्द्रिय आयुष्येवेन्द्रिये प्रति तिष्ठत्यप उप स्पृशति भेषजं वा आपो भेषजमेव कुरुते ॥ ३ ॥

*இதில் அம்சு அதாப்யக்கிரக மந்திரங்களுக்குப் பிராமணங்கள் கூறப் படுகின்றன.*

---

'மாந்தாசு (மந்தப் போக்குள்ளநீரில்) என்பது முதலிய மந்திரங்களின் கருத்தை விளக்குகின்றது.

## பிராமணம் 1

**एतद्वा अपां नामधेयं गुह्यं यदाधावा मान्दासु ते शुक्र शुक्रमा धूनोमी-त्याहापामेव नामधेयेन गुह्येन दिवो वृष्टिमव रुन्धे ।**

என்பது

### உரை

'மாந்தா, என்பது முதலிய பன்னிரண்டு பெயர்களும் உலகத்தில் வெளிப்படையின்றி வைதிக மந்திரத்திலேயே காணப்படுதலின் மிக இரகசியமான தண்ணீரின் பெயர்கள். இவைகள், தண்ணீரையழைப்பதற்குரிய மந்திரங்கள். ஆதலின், இவைகளை அபிமானித்துள்ள தேவதைகளின் பிரியத்தின் பொருட்டு இம்மந்திரத்தை ஓதல்வேண்டும். இரகசியப்பெயர்களால் தேவதைகள் களிப்புற்று சுவர்க்கத்திலிருந்து மழையைத் தேடுகின்றார்கள் என்பது.

---

'சுக்கிரம்தே' என்பது முதலிய வசதீவரிநீரை நிறைக்கும் மந்திரத்திலுள்ள 'சூரியனுடைய கிரணங்களால்' என்னும் பகுதிக்கு உரை கூறுகின்றது.

## பிராமணம் 2

**शुक्रं ते शुक्रेण गृह्णामीत्याहैतद्वा अह्नो रूपं यद्रात्रिस्सूर्यस्य रश्मयो वृष्ट्या ईशतेऽह्न एव रूपेण सूर्यस्य रश्मिभिर्दिवो वृष्टिं च्यावयति ।**

என்பது

### உரை.

சூரிய கிரணத்தால் உன்னை எடுத்துக்கொள்கின்றேன் என்றது, இரவானது பகல் இவ்வளவென்பதை உணர்த்துகின்றது. அத்தகைய இரவும், சூரியனுடைய கிரணங்களும் மழைக்குக் காரணங்கள். இரவு, சூரியகிரணங்களுடன்கூடிய காலங்களைத் தவிர்த்து மழைபெய்வதற்கென்று ஒருகாலம் தனியாய் இல்லை. ஆதலின், இத்தகைய மந்திரப்பகுதியை ஓதி இரவு சூரிய கிரணங்களுடன் கூடியகாலத்தால் சுவர்கத்திலிருந்து பூமியில் மழை விழச் செய்கின்றான் என்பது.

---

பாத்திரத்தை எடுத்துக்கொள்ளும்போது ஓதும் எசுரின்பொருள் வெளிப்படை யாம்என்கின்றது

பிராமணம் 3

**आऽस्मिन्नुग्रा अचुच्यवुरित्याह यथायजुरेवैतत् ।**

*என்பது*

உரை.

*விரைவாகிய சோமரசத்தின் தாரைவந்து விழுகின்றது என்பதுமுதலிய பொருள் மிகவெளிப்படையாம் என்பது.*

---

பாத்திரத்தை எடுத்துக் கொண்டுசெல்லும்போது ஓதும் மந்திரத்திலுள்ள 'ககுஹம்' ரூபம், என்னும் இரண்டு சொற்களும் மழையையே பொருளாகக் கொண்டவைகள் என்பதை விளக்குகின்றது

பிராமணம் 4

**ककुहꣳ रूपं वृषभस्य रोचते बृहदित्याहैतद्वा अस्य ककुहꣳ रूपं यद्वृष्टी-रूपेणैव वृष्टिमव रुन्धे ।**

*என்பது.*

உரை

*மழைபெய்விக்கும் இந்திரனுடைய தலைமை வடிவம் என்றது, மழையே யாம் என்பதால் மழை பெய்கின்றது என்கின்றதாம்.*

---

'யத்தேசோம' என்னும் சோமரசத்தை ஹோமஞ்செய்யும் மந்திரத்தில் சோமத்தைக் குறித்து தயிராகிய அவியை ஆகுதிசெய்வதின் கருத்தை விளக்குகின்றது

பிராமணம் 5

**यत्ते सोमादाभ्यं नाम जागृवीत्याहैष ह वै हविषा हविर्यजति योऽदाभ्यं गृहीत्वा सोमाय जुहोति ।**

*என்பது*

உரை

*அதாப்பியம் என்னும் கிரகத்தில் தயிரை எடுத்து என்றது, அவியால் (தயிரால்) அவி (சோமம்) வேட்கப்படுகின்றது என்கின்றது. எனவே சோமமானது மற்றவிடத்தில் அவியாகவும் இவ்விடத்தில் தேவதையாகவும் இருக்கின்றது என்பது கருத்தாம்.*

பொன்னின்மீது மூச்சுவிடும் மந்திரத்திலுள்ள 'பிராணன், என்னுஞ்சொல்லால் ஆயுள்குறிக்கப் படுகின்றதென்று காட்டுகின்றது

பிராமணம் 6

**परा वा एतस्याऽऽयुः प्राण एति योऽꣳशुं गृह्णात्या नः प्राण एतु परावत इत्याहाऽऽयुरेव प्राणमात्मन्धत्ते ।**

என்பது

உரை.

'அம்சு, என்னும் சோமரசத்தை பாத்திரத்தில் நிறைக்கின்றவனுடைய ஆயுள் பிராணனும். அது வெளியிற் செல்கிறது ஆதலால் ஆயுளைக்கொடுக்கும் பிராணனை ஆன்மாவில் நிலைநாட்டுகின்றான் என்று கூறுகின்றது என்பதாம்.

---

பொன்னின்மேல்விடும் மூச்சின்விடேத்தை விதிக்கின்றது

பிராமணம் 7

**अमृतमसि प्राणाय त्वेति हिरण्यमभि व्यनित्यमृतं हिरण्यमायुः प्राणोऽमृतेनैवाऽऽयुरात्मन्धत्ते ।**

என்பது

உரை.

'அமுதமஸி ப்ராணாயத்வா, என்று பொன்னின்மீது வியானனை விடுகின்றான். அமுதம் பிராணன், ஆயுள் பிராணன் அமுதத்தால் ஆன்மாவில் ஆயுள் நிலைக்கின்றது என்பது.

ஈண்டு, இரண்டுமூச்சுக்களும் வெளியில் வரல் பிராணனும் உள்ளே செல்லல் அபானனும். இடையில் நிற்பது வியானனும், இவ்வியானனே பொன்னின்மீதுவிடப்படுகின்றதென்பதை யுணர்க.

---

பொன் அளவைக் கொண்டுஆயுளின் அளவையை விதிக்கின்றது

பிராமணம் 8

**शतमानं भवति शतायुः पुरुषश्शतेन्द्रिय आयुष्येवेन्द्रिये प्रति तिष्ठति ।**

என்பது.

உரை

*மனிதனுடைய ஆயுள் நூறுகின்றது. பொன்னின் அளவும் நூறுவராக னிடையாம். ஆதலின் இதனால் ஆயுள் நிறைவாகின்றது என்பதாம்*

---

இந்திராக்கினீ, என்பது முதலிய மந்திரத்தால் நீரைத்தொட்டுக் கொள்ளல் வேண்டு மென்று விதிக்கின்றது.

பிராமணம் 9

**अपउपस्पृशति भेषजं वा आपो भेषजमेव कुरुते ।**

*என்பது*

உரை

*தண்ணீரைத் தொடுகின்றான். தண்ணீர் மருந்தாம். தண்ணீர் மருந் துண்டதுபோலாக்குகின்றது என்பதாம்.*

நான்காம் அநுவாகம்

முற்றிற்று.

---

ஐந்தாம் அநுவாக விடயச்சுருக்கம்.

वायुर्दश द्वादशाहे पृश्निग्रहणमन्त्रकाः ॥

**'துவாதசாஹம்'** என்னும் சோமயாகத்தில் உள்ள பிருசினி கிரகத்திற் குரிய மந்திரங்கள்.

---

**மூன்றாங் காண்டாம் மூன்றாம் பிரபாடகம்**

ஐந்தாம் அநுவாகம்

*நான்கு பஞ்சாதிகட்குமேல் நாற்பத்தாறு பதங்களைக் கொண்டது.*

விகிருதியாகிய துவாதசாஹத்தில் கிரகிக்கும் பிருசினிக் கிரகமந்திரமும் பிராமணமும்.

[illegible]ुरसि प्राणो नाम सवितुराधिपत्येऽपानं मे दाश्चक्षुरसि श्रोत्रं नाम धातुराधिप[illegible] आयुर्मे दा रूपमसि वर्णो नाम बृहस्पतेराधि-

पत्ये प्रजां मे दा ऋतमसि सत्यं नामेन्द्रस्याऽऽधिपत्ये क्षत्रं मे दा भूतमसि भव्यं नाम पितृणामाधिपत्येऽपामोषधीनां गर्भं धा ऋतस्य त्वा व्योमन ऋतस्य ॥ १ ॥ त्वा विभूमन ऋतस्य त्वा विधर्मण ऋतस्य त्वा सत्यायर्तस्य त्वा ज्योतिषे प्रजापतिर्विराज-मपश्यत्तया भूतं च भव्यं चासृजत तामृषिभ्यस्तिरोऽदधात्तां जम-दग्निस्तपसाऽपश्यत्तया वै स पृश्नीन्कामानसृजत तत्पृश्नीनां पृश्नि-त्वं यत्पृश्नयो गृह्यन्ते पृश्नीनेव तैः कामानूयजमानोऽव रुन्धे वायु-रसि प्राणः ॥ २ ॥ नामेत्याह प्राणापानावेवाव रुन्धे चक्षुरसि श्रोत्रं नामेत्याहाऽऽयुरेवाव रुन्धे रूपमसि वर्णो नामेत्याह प्रजामे-वाव रुन्ध ऋतमसि सत्यं नामेत्याह क्षत्रमेवाव रुन्धे भूतमसि भव्यं नामेत्याह पशवो वा अपामोषधीनां गर्भः पशूनेव ॥ ३ ॥ अव रुन्ध एतावद्वै पुरुषं परितस्तदेवाव रुन्ध ऋतस्य त्वा व्योमन इत्याहेयं वा ऋतस्य व्योमेमामेवाभि जयत्यृतस्य त्वा विभूमन इत्याहान्तरिक्षं वा ऋतस्य विभूमान्तरिक्षमेवाभि जयत्यृतस्य त्वा विधर्मण इत्याह द्यौर्वा ऋतस्य विधर्म दिवमेवाभि जयत्यृतस्य ॥ ४ ॥ त्वा सत्यायेत्याह दिशो वा ऋतस्य सत्यं दिश एवाभि जयत्यृतस्य त्वा ज्योतिष इत्याह सुवर्गो वै लोक ऋतस्य ज्योतिः सुवर्गमेव लोकमभि जयत्येतावन्तो वै देवलोकास्तानेवाभि जयति दश सं पद्यन्ते दशाक्षरा विराडन्नं विराड्विराज्येवान्नाद्ये प्रति तिष्ठति ॥ ५ ॥

ஈண்டுப்பிருசினி என்பது 'பிருசினி, என்னுங் காமதேனுக்களை உண்டாக்கிய 'வாயுரஸி, என்பது முதலிய பத்து மந்திரங்கட்கும் பெயராயிற்று.

இனி, இதுவரை கூறிவந்த அக்கினிட்டோம முதலியவற்றின் பரிசேடங்களைக்கூறுவதை விட்டுவிட்டு விகிருதியாகிய துவாதசாஹத்தின் (பன்னிரு நாளிற் சோமரசம் பிழியுஞ் சோமயாகத்தின்) பரிசேடமாகிய பிருசினிக் கிரஹங்கள் (சோமக்கொடியை அளந்தெடுத்தல்கள்) கூறப்படுகின்றன.

---

பிரகிருதியிலுள்ள, இந்திராயத்வா, என்பதுமுதலிய மந்திரங்களை ஓதிக்கொண்டு கீழ்வரும் பத்துமந்திரங்களாலும் சோமக்கொடிகளை அளந்தெடுத்துக் கொள்ளல்

மந்திரங்கள் 1 - 10

**वायुरसि प्राणो नाम सवितुराधिपत्येऽपानं मे दाश्चक्षुरसि श्रोत्रं नाम धातुराधिपत्य आयुर्मे दा रूपमसि वर्णो नाम बृहस्पतेराधिपत्ये प्रजां मे दा ऋतमसि सत्यं नामेन्द्रस्याऽऽधिपत्ये क्षत्रं मे दा भूतमसि भव्य नाम पितृणामाधिपत्येऽपामोषधीनां गर्भं धा ऋतस्य त्वा व्योमन ऋतस्य त्वा विभूमन ऋतस्य त्वा विधर्मण ऋतस्य त्वा सत्यायर्तस्य त्वा ज्योतिषे ।**

என்பது

உரை.

சோமமே! நீ, எசமானனுக்குப் பயந்துகொண்டு தாங்குதலால் வாயுவையும், நனைத்தலால் (வளர்த்தலால்) உடம்பின் நடுவில் பொதுவாய் வாயுவாகவும் விசேடமாகிய பிராணனுமாயிருக்கின்றாய். அதாவது வெளியில் வரும் மூச்சாயிருக்கின்றாய் என்பதாம். அத்தகைய நீ, ஏவுகின்ற பரமேசுவரனுடைய தலைமையின் கீழிருந்துகொண்டு, எனக்கு, உள்ளே செல்லும் அபானனைத் தருவாயாக. (2) அவ்வாறே கண்களையுஞ் செவிகளையும் வளர்த்தற்குக் காரணமாதலின கண்ணாகவும் செவியாகவும் இருக்கின்றாய். ஆதலின், உடம்பையுமிந்திரியங்களையு முண்டாக்குமு தாதுவின் கீழிருந்துகொண்டு எனக்கு ஆயுளைக்கொடுப்பாயாக. (3) அவ்வாறே, உடம்பின் அவயவங்களின் நலத்தையும், அதாவது அழகையும், நிறத்தையும் உண்டாக்குங் காரணமாதலால் அவ்விரண்டின் வடிவுகளாயிருக்கின்றாய்; ஆதலின், அவ்விரண்டையுஞ் செய்யும் பிருகற்பதியின் தலைமையின் கீழிருந்துகொண்டு எனக்கு மகன் பேரன்முதலான பிரசைகளைக் கொடுப்பாயாக. (4) அவ்வாறே, மனதால் எண்ணுகின்றவைகளின் உண்மைக்கும், வாக்கால் சொல்லுகின்றவைகளின் உண்மைக்குங் காரணமாதலால் அவ்விரண்டின் வடிவுகளாகவு மிருக்கின்றாய்.

ஆதலின், அவ்விரண்டையுஞ்செய்யும் இந்திரனுடைய தலைமையின் கீழிருந்து கொண்டு எனக்கு ஆற்றலைக் கொடுப்பாயாக. (5) அவ்வாறே, உடம்பின் நடுவி லுள்ள தாதுவின் மாறுபாடு, மேல்உண்டாகும் மாறுபாடு என்பவைகளை உண் டாக்குவதால் அவ்விரண்டின் வடிவாயிருக்கின்றாய். ஆதலின், அவ்விரண்டிற்கு முள்ள மாறுபாட்டைப் போக்கும் பிதிர்க்களின் தலைமையிலிருந்துகொண்டு தண்ணீர், கொடிசெடிகள் என்னு மிவற்றின் சம்பந்தப்பட்ட கருப்பம் பசுவடி வம் என்பதை எனக்குத் தேடுவாயாக. (6) சோமமே! வியோமமாகிய சத்தி யத்தை நன்கு பாதுகாத்தற் பொருட்டு உன்னை அளக்கின்றேன். (7) அந்தரிக் கத்திலுள்ள சத்தியம் சிறப்பாய் விரிதற்பொருட்டு உன்னை அளக்கின்றேன். (8) வாயுவின் சத்தியத்தை விசேடமாய்த் தாங்குதற்பொருட்டு உன்னை அளக் கின்றேன். (9) திசையின் சத்தியத்தின் மறதியாகிய பொய்யின் பொருட்டு உன்னை அளக்கிறேன். (10) சுவர்க்கத்தின் சத்தியத்தை விளக்குதற்பொருட்டு உன்னை அளக்கின்கின்றேன் என்பதாம்.

---

மேற்கூறிய மந்திரங்களால் பிருசினிக் கிரகத்தைவிதித்தற் பொருட்டுப் புகழ் கின்றது

### பிராமணம் 1

**प्रजापतिर्विराजमपश्यत्तया भूतं च भव्यं चासृजत तामृषिभ्यस्तिरोऽदधा- त्तां जमदग्निस्तपसाऽपश्यत्तया वै स पृश्नीन्कामानसृजत तत्पृश्नीनां पृश्नित्वम् ।**

என்பது

### உரை

பிரமன், ஆராய்ந்து படைப்பிற்குக் கருவியாக "வாயுரஸி" என்பது முதலியதும், பத்தெழுக்களைக் கொண்டதால் விராட் எனப் படுவதுமாகிய இம்மந்திரத்தால் இறந்தகால உலகம் வருங்கால உலகங்களைப் படைத்தனன். அதாவது, உலகங்களைப் படைத்து இதிற் சிறிது இறந்தகாலத்தது, சிலது வருங்காலத்ததுஎன்று பகுத்தனன்என்பதாம். பிறகு, அத்தகைய விராடை (மந்திரத்தை) இருடிகட்குக் காட்டவில்லை. ஆதலால், சமதக்கினிரிஷி தவஞ் செய்து பிரசாபதியின் அருளால் அந்த விராட்டைக் கண்டுபிடித்தனர். அத் தகைய விராட்டென்னு மந்திரத்தால் சமதக்கினி முனிவர் காமதேனுக்களைப் படைத்தனர். அக்காமதேனுவிற்குப் பிருசினி என்னும் பெயரானதால் அதன் படைப்பிறகுக் காரணமாயிருந்த அம்மந்திரங்கட்கும் 'பிருசினி' என் னும் பெயராயிற்று என்பது.

இனி, அதைவிதிக்கின்றது

பிராமணம் 2

यत्पृश्नयो गृह्यन्ते पृश्नीनेव तैः कामान्यजमानोऽव रुन्धे ।

என்பது.

உரை

ஈண்டுக் கிரகணம் என்பது, சோமரசத்தைப் பாத்திரத்தில் பிடித்த லில்லை. மற்றோ, சோமக்கொடியை அளத்தலாம் பிருசினி என்னும் 'வாயுரஸி' என்பது முதலிய மந்திரத்தால் அளந்தெடுக்கப்படும் சோமக் கொடியின் ஒரு பகுதி பிருசினியெனப்படும். சோமக் கொடியை அளவுப் படுத்தலாகிய கிரக ணத்தால் எசமானன் காமதேனுவைப் போன்ற போகத்தை அடைகின்றான் என்பது.

---

அவற்றுள் முதல் மந்திரத்தால் பிராண அபானன்களைப் பாதுகாத்தலாகிய விருப்பைக் காட்டுகின்றது.

பிராமணம் 3

वायुरसि प्राणो नामेत्याह प्राणापानावेवाव रुन्धे ।

என்பது.

உரை

பொதுவில் வாயுவாக இருக்கின்றாய். சிறப்பாய் பிராணனாகவும் இருக் கின்றாய் என்றது, பிராண அபானன்களைப் பாதுகாக்கின்றான் என்கின்றது.

---

இரண்டாமந்திரத்தால் ஆயுளின் பேற்றைக் காட்டுகின்றது

பிராமணம் 4

चक्षुरसि श्रोत्रं नामेत्याहाऽऽयुरेवाव रुन्धे ।

என்பது

உரை

கண்களாகவும் செவிகளாகவும் இருக்கின்றாய் என்றது, ஆயுளைக் காத்துக் கொள்கின்றான் என்கின்றது.

---

மூன்றும் மந்திரத்தால் அழகிய உறுப்புக்களுடன் கூடியமக்கட் பேற்றைக் காட்டுகின்றது

பிராமணம் 5

**रूपमसि वर्णो नामेत्याह प्रजामेवाव रुन्धे ।**

என்பது

உரை

உருவமாகவும் நிறமாகவும் இருக்கின்றாய் என்றது, புத்திரப் பேற்றை யுண்டாக்குகின்றான் என்கின்றது.

---

நான்காம் மந்திரத்தால் வாக்குமனங்களின் மெய்ச்சாதனங் கிடைக்கின்றதென்று காட்டுகின்றது

பிராமணம் 6

**ऋतमसि सत्यं नामेत्याह क्षत्रमेवाव रुन्धे ।**

என்பது.

உரை.

மெய்மையும் உண்மையுமாக இருக்கின்றாய் என்றது, ஆற்றலை யுண் டாக்கிக் கொள்கின்றான் என்கின்றது.

---

ஐந்தாம் மந்திரத்தால், உண்டானதும் உண்டாவதுமாகிய நலமின்மையை நீக்கி பசுக்களின் அடைவுகாட்டப் படுகின்றது

பிராமணம் 7

**भूतमसि भव्यं नामेत्याह पशवो वा अपामोषधीनां गर्भः पशूनेवाव रुन्धे ।**

என்பது.

உரை.

தண்ணீர் கொடி செடிகளின் கருப்பம் என்று அம்மந்திரத்திற் கூறப் பட்டது, அது, நீர் புல் என்பவைகளின் பரிணாம மாதலின் விலங்குக்களாம், விலங்குக்களான கருப்பமே இங்குக் குறிக்கப்பட்டுள்ளது என்பது.

---

ஐந்தாம் மந்திரத்தின் பயனைமுடிக்கின்றது

பிராமணம் 8

**एतावद्वै पुरुषं परितस्तदेवाव रुन्धे ।**

என்பது.

உரை

*பிராண அபானன்கள் நலமாயிருத்தல்முதல் பசுக்களை யடைதல்வரை உள்ள இதுவே ஒருவன் அடையவேண்டிய பயனும் என்பது.*

---

மேல்ஐந்து மந்திரங்களிலும் உள்ள வ்யோம்ந:, (விரிதற்போருட்டு) என்பது முதலிய நான்காம் வேற்றுமையைக் கொண்டபதங்களால், மூன்றுலகங்களின் திசைகளும் சுவர்க்கமுங் கொள்ளப் படுகின்றன. வெற்றியே இவைகளின் பயன் என்பதைக்காட்டுகின்றது

பிராமணம் 9

**ऋतस्य त्वा व्योमन इत्याहेयं वा ऋतस्य व्योमेमामेवाभि जयत्यृतस्य त्वा विभूमन इत्याहान्तरिक्षं वा ऋतस्य विभूमान्तरिक्षमेवाभि जयत्यृतस्य त्वा विधर्मण इत्याह द्यौर्वा ऋतस्य विधर्म दिवमेवाभि जयत्यृतस्य त्वा सत्यायेत्याह दिशो वा ऋतस्य सत्यं दिश एवाभि जयत्यृतस्य त्वा ज्योतिष इत्याह सुवर्गो वै लोक ऋतस्य ज्योतिस्सुवर्गमेव लोकमभि जयत्येतावन्तो वै देवलोकास्तानेवाभि जयति ।**

என்பது

உரை

*வியோமம், அந்தரிக்ஷம், வான், திசை, சுவர்க்கம் என்பவைகளின் சத்தியத்தன்மையே வெற்றியாம். ஆகவே இவ்வைந்தையும் வெல்கின்றான் என்பது பொருள். இவ்வைந்துதான் தேவலோகங்கள் என்பது.*

---

எண்ணிக்கையைப் புகழ்கின்றது

பிராமணம் 10

**दश सं पद्यन्ते दशाक्षरा विराडन्नं विराड्विराज्यैवान्नाद्ये प्रति तिष्ठति ।**

என்பது

உரை

பத்து என்பது பொருந்துகின்றது பத்து எழுத்துக்கொண்டது விராட் என்னுஞ் சந்தம், விராட் அன்னமாம். விராட்டே விளக்கமாம் அதாவது அன்ன முதலியவைகளில் பெருமையுற்றிருக்கின்றது என்பது.

ஐந்தாம் அநுவாகம்

முற்றிற்று.

---

ஆறும் அநுவாக விடயச்சுருக்கம்.

पराभिधा अतिग्राह्यास्ते गवामयनेत्वयः ॥

तेष्वभ्द्य ओषधीभ्यश्च प्रजाभ्यश्चेति मन्त्रकाः ॥ १ ॥

கவாமயனம் என்னும் விகிருதியாகிய சோமயாகத்தில் அதிக்கிராகியங் களைக்கிரகிக்கும் மந்திரங்களும், அவைகளின் விதிகளுங் கூறப்படுகின்றன என்பது.

---

## மூன்றுங் காண்டம் மூன்றும் பிரபாடகம்

## ஆறுவது அநுவாகம்

இரண்டு பஞ்சாதிகட்குமேல் நாற்பத்தெட்டுப் பதங்களைக் கொண்டது.

கவாமயனத்தின் அதிக்கிராகிய மந்திரங்களும் பிராமணங்களும்.

देवा वै यद्यज्ञेन नावारुन्धत तत्परैरवारुन्धत तत्पराणां परत्वं यत्परे गृह्यन्ते यदेव यज्ञेन नावरुन्धे तस्यावरुद्ध्यै यं प्रथमं गृह्णा-तीममेव तेन लोकमभि जयति यं द्वितीयमन्तरिक्षं तेन यं तृतीय-ममुमेव तेन लोकमभि जयति यदेते गृह्यन्त एषां लोकानामभि-जित्यै ॥ १ ॥ उत्तरेष्वहस्स्वमुतोऽर्वाञ्चो गृह्यन्तेऽभिजित्यैवेमाँल्लो-कान्पुनरिमं लोकं प्रत्यवरोहन्ति यत्पूर्वेष्वहस्स्वितः पराञ्चो गृह्यन्ते तस्मादितः पराञ्च इमे लोका यदुत्तरेष्वहस्स्वमुतोऽर्वाञ्चो गृह्यन्ते-तस्मादमुतोऽर्वाञ्च इमे लोकास्तस्मादयातयाम्नो लोकान्मनुष्या उप

जीवन्ति ब्रह्मवादिनो वदन्ति कस्मात्सत्याददूभ्य ओषधयः सं भव-न्त्योषधयः ॥ २ ॥ मनुष्याणामन्नं प्रजापतिं प्रजा अनु प्र जायन्त इति परानन्वितिं ब्रूयाद्यद्गृह्णात्यदूभ्यस्त्वौषधीभ्यो गृह्णामीति तस्माददूभ्य ओषधयस्सं भवन्ति यद्गृह्णात्योषधीभ्यस्त्वा प्रजाभ्यो गृह्णामीति तस्मादोषधयो मनुष्याणामन्नं यद्गृह्णाति प्रजाभ्यस्त्वा प्रजापतये गृह्णामीति तस्मात्प्रजापतिं प्रजा अनु प्र जायन्ते ॥ ३ ॥

ஈண்டு, 'கவாமயனம்' என்னும் ஒருவகைச் சத்ரயாகத்திலுள்ள, 'பரங்கள் என்னுந் தினங்களில் கிரகிக்கவேண்டிய அதிக்கிராஹிய விசேடத்தைக் கூறுகின்றது இவ்வநுவாகம்.

இனி, 'கவாமயனம், என்பது ஒருவருடத்திற் செய்யப்படும். சத்ரயாகமாம். இது முன்னாறு மாதங்கள் பின்னாறு மாதங்களையுடையது. அவற்றுள்ளும், முன்னூற்றறுபத்தொரு (361) சோமரசம் பிழியும் நாட்களிருக்கின்றன. அவற்றுள், முதல் 180 நாட்கள் பூர்வபட்சமாம். பிந்திய 180 நாட்கள் உத்தரபட்சமாம். இதில் முதலாவது 181 நாட்களாகின்றன. அவற்றுள் ஒருநாள் அதிக நாள் எனப்படும். அதுவே விஷுவான் எனப்படுவதுமாம். அந்த விஷுவான் என்னும் நாளுக்கு முன் பரசாமங்கள் என மூன்றுநாட்கள் உள்ளன. இது முன்பக்ஷத்து முடிவாம். அவ்வாறே விஷுவான் என்னும் நாளுக்குப் பிறகு உள்ளவை அர்வாக்சாமங்கள் என மூன்று நாட்களாம். இது, பின்பக்ஷத்து முதலாம். அந்த ஆறு நாட்களுள் பரசாமங்கள் என்னும் மூன் மூன்றுநாட்களிலும் மேல்வரும் மந்திரங்கள் மூன்றுலும் முறையே மூன்று அதிக்கிராகியங்கள் கிரகிக்கப்படுகின்றன. மற்றும், அர்வாக்சாமங்கள் என்னும் பின்மூன்று நாட்களிலும் மேல்வரும் மந்திரங்களைத் தலைகீழாய் ஓதிக்கொண்டு மூன்று அதிக்கிராகியங்கள் கிரகித்தல் வேண்டும். இதிலும், விஷுவான் என்னும் முக்கியநாளிலும் கூறியபடியே நேராகவும் தலைகீழாகவும் மந்திரங்களை ஓதி ஆறு அதிக்கிராகியங்களைக் கிரகித்தல் வேண்டுமென்பதையுணர்க. அதிக்கிராகியம் = ஒருவகைப் பாத்திரத்தில் சோமரசத்தை நிறைத்துவைத்தல்.

அதிக்கிராஹியங்களை (சோமரசம்பிடித்தலை) விதித்தற்பொருட்டு அதைப் புகழ்கின்றது.

பிராமணம் 1

**देवा वै यज्ञेन नावारुन्धत तत्परैरवारुन्धत तत्पराणां परत्वम् ।**

என்பது

உரை

*முன்னர், வேள்வி செய்த தேவர்கள், விதிக்கப்பட்ட இவ்வதிக்கிராகியங்களை விட்டுவிட்டு தனி வேள்வியால் பயனொன்றும் அடையாதவர்களாய் பரங்கள் என்னும் இவ்வதிக்கிராகியங்களால் விரும்பிய பயனை அடைந்தார்கள். பரங்கள் = விரும்பியவற்றைக் கொடுப்பன என்பது.*

---

அடையப்படாதவற்றை அடையலாமென விதித்தல்

பிராமணம் 2

**यत्परे गृह्यन्ते यदेव यज्ञेन नावरुन्धे तस्यावरुद्ध्यै ।**

என்பது

உரை

*வேள்வியால் அடையாத பயனையும் அடைவதன் பொருட்டு பரங்கள் எனும் அதிக்கிராகியங்களைக் கிரகித்தல் (சோமரசத்தைப் பிடித்தல்) வேண்டும் என்பதாம்.*

---

பொதுவாகப் புகழ்ந்துவிட்டுச்சிறப்பாகப் புகழ்கின்றது

பிராமணம் 3

**यं प्रथमं गृह्णातीममेव तेन लोकमभि जयति यं द्वितीयमन्तरिक्षं तेन यं तृतीयममुमेव तेन लोकमभि जयति यदेते गृह्यन्त एषां लोकानामभि-जित्यै ।**

என்பது

உரை

*முதலாவது சோமரசம் பிடித்தலால் இவ்வுலகை வெல்கின்றான். இரண்டாம் நாள் பிடித்தலால் அந்தரிக்ஷத்தை வெல்கின்றான். மூன்றும் நாள் பிடித்தலால் சுவர்க்கலோகத்தை வெல்கின்றான். இவ்வாறு சோமரசத்தை நிறைப்பது உலகங்களை வெல்லுதற் பொருட்டாம் என்பது.*

விழுவான் என்னு நாளுக்குப் பின்னுள்ள நாட்களில் தலைகீழாய்க் கிரகிக்கும் முறையை விதிக்கின்றது

பிராமணம் 4

**उत्तरेष्वहस्स्वमुतोऽर्वाञ्चो गृह्यन्तेऽभिजित्यैवेमाँल्लोकान्पुनरिमं लोकं प्रत्यवरोहन्ति ।**

என்பது.

உரை

'அர்வாக்' என்னும் நாட்களில் தலைகீழாக மந்திரத்தை மாறி ஓதிச் சோம ரசத்தைப் பிடித்தல் வேண்டும். அங்ஙனமாயின், முன் அநுட்டித்த அநு லோம முறையாயுள்ள சோமரசக் கிரகங்களால் மண் விண் சுவர்க்கம் என்ப வைகளின் வெற்றியேயாம். இதனால், மீண்டும் இவ்வுலகத்திற்கு இறங்கி வருகின்றான் என்பது.

---

கூறியமுறையையும் மாறகிய முறையையும் கலந்துமீண்டும் புகழ்கின்றது

பிராமணம் 5

**यत्पूर्वेष्वहस्स्वितः पराञ्चो गृह्यन्ते तस्मादितः पराञ्च इमे लोका यदुत्तरेष्वहस्स्वमुतोऽर्वाञ्चो गृह्यन्ते तस्मादमुतोऽर्वाञ्च इमे लोकास्तस्माद्यातयाम्नो लोकान्मनुष्या उप जीवन्ति ।**

என்பது

உரை

முன்மூன்று நாட்களில், முதலாவது, இரண்டாவது, மூன்றாவது என் னும் முறையாக நாளுக்கொன்றாய் அதிக்கிராகியங் கிரகிக்கப்படும். இது உத்தமமெனப்படும். இதனால், பூலோகத்திலிருந்து மேலே மேலே மூன் றுலகங்களும் அடையப்படுகின்றன. பின் மூன்று நாட்களில், மூன்றாவது, இரண்டாவது, முதலாவது என்னு முறையாய்த் தலைகீழாக மூன்று அதிக் கிராகியங்கள் கிரகிக்கப்படுகின்றன. இது அதமம் எனப்படும். சுவர்க்கத்தி லிருந்து கீழே கீழேயுள்ள மூன்றுலகங்களும் அடையப்படுகின்றன. உத்தமம் அதமம் என்னும் இவைகள் ஒன்றற்கொன்று வேறுபட்டவைகள். ஆதலின் மீண்டும் பிறவாமையில்லாததால் மக்கள் இவ்வுலகங்களில் வாழ்கின்றார்கள். மற்றும், விஷுவான் என்னும் முக்கிய நடுத்தினத்தில் நேராகவும் மாறாகவும் ஆறு அதிக்கிராகியங்களையும் கிரகித்தல் வேண்டும் என்பதாம்.

முதல்மூன்றுமந்திரங்களையும் விதித்தற் பொட்டுப் புகழ்கின்றது

பிராமணம் 6

**ब्रह्मवादिनो वदन्ति कस्मात्सत्याददृभ्य ओषधयस्सं भवन्त्योषधयो मनुष्याणामन्नं प्रजापतिं प्रजा अनु प्र जायन्त इति परानन्विति ब्रूयात् ।**

என்பது

உரை

உலகில், நீரிலிருந்து கொடிசெடிகளுண்டாகின்றன. அது எக்காரணத்தால்? கொடி செடிகள் மக்கட்கு உணவுப் பொருள் என்பது எதனால்? மநு, பிரசைகளை உண்டாக்கினுரென்பது எதனால்? என்றிவ்வாறு பிரமவாதிகள் கேட்கில், அதற்கொருவன், பரங்கள் என்னும் அதிக்கிராகியங்களால் என்று விடை கூறுவானுக. இவை மூன்று மந்திரங்களும் மிகச்சிறப்புடையவைகளாமாதலின் பரங்கள் எனப்படுகின்றன என்பதாம்.

---

அவற்றுள் முதல்மந்திரத்தை விதிக்கின்றது

பிராமணம் 7

**यदृगृह्णात्यदृभ्यस्त्वौषधीभ्यो गृह्णामीति तस्माददृभ्य ओषधयस्सं भवन्ति ।**

என்பது

உரை

முதலாம் அதிக்கிராகியமே! உன்னை, கொடிசெடிகள் உண்டாதற்பொருட்டு நீரிலிருந்து பிடித்துக்கொள்கின்றேன் என்பதால் முதலில் கிரகித்தல் (சோமரசத்தைப் பிடித்தல்) வேண்டும். அதனுல் நீரிலிருந்து கொடிகொடிகள் உண்டாகின்றன என்பது. அதிக்கிராகியம் = சோமரசபாத்திர விசேடம்.

---

இரண்டாம் மந்திரத்தை விதிக்கின்றது

பிராமணம் 8

**यदृगृह्णात्योषधीभ्यस्त्वा प्रजाभ्यो गृह्णामीति तस्मादोषधयो मनुष्याणामन्नम् ।**

என்பது

உரை

இரண்டாவது அதிக்கிராகியமே! உன்னை, பிரசைகள் பிழைத்தற் பொருட்டு கொடி செடிகளிலிருந்து பிடித்துக் கொள்கின்றேன். இம் மந்திரத்தால் இரண்டாம் அதிக்கிராகிய பாத்திரத்தில் சோமரசத்தைப் பிடித்துக் கொள்ளல் வேண்டும். அதனால் கொடி செடிகள் மக்களுக்கு உணவுப் பொருளாகின்றன என்பதாம்.

---

மூன்றாவது மந்திரத்தை விதிக்கின்றது

பிராமணம் 9

**यद्गृह्णाति प्रजाभ्यस्त्वा प्रजापतये गृह्णामीति तस्मात्प्रजापतिं प्रजा अनु प्रजायन्ते ।**

என்பது.

உரை

மூன்றாவது அதிக்கிராகியமே! உன்னை, பிரசாபதியிடத்திலிருந்து பிரசைகள் உண்டாகுக என்னுங் கருத்தால் எடுத்துக் கொள்கின்றேன் என்பதாம்.

ஆறும் அநுவாகம்

முற்றிற்று.

---

ஏழாம் அநுவாக விடயச் சுருக்கம்

**आश्रावयेत्यादयोऽत्र पञ्चमन्त्रा उदीरिताः ।**

**आश्रवणादसोमार्थमत्र प्राक्तनमिष्टिकम् ॥ १ ॥**

ஆஸ்ராவய, அஸ்து ஸ்ரௌஷட், யஜ, யேயஜா மஹே, வௌஷட் என்னும் ஐந்து மந்திரங்களும் சோம யாகத்தின் அங்கமென்று விதிக்கப்படுகின்றன என்பது.

---

## மூன்றாம் காண்டம் மூன்றாம் பிரபாடகம்

## ஏழாவது அநுவாகம்

*மூன்று பஞ்சாதிகட்குமேல் எட்டுப் பதங்களைக் கொண்டது.*

ஆஶ்ராவய, முதலிய மந்திரங்களும் சோமயாக அங்கமென விதிக்கும் பிராமணங்கள்.

प्रजापतिर्देवासुरानसृजत तदनु यज्ञोऽसृज्यत यज्ञं छन्दाꣳसि
ते विष्वञ्चो व्यक्रामन्त्सोऽसुराननु यज्ञोऽपाक्रामद्यज्ञं छन्दाꣳसि
ते देवा अमन्यन्तामी वा इदमभूवन्यद्वयꣳ स्म इति ते प्रजापति-
मुपाधावन्त्सोऽब्रवीत्प्रजापतिश्छन्दसां वीर्यमादाय तद्वः प्र दास्या-
मीति स छन्दसां वीर्यम् ॥ १ ॥ आदाय तदेभ्यः प्रायच्छत्तदनु
छन्दाꣳस्यपाक्रामन्छन्दाꣳसि यज्ञस्ततो देवा अभवन्पराऽसुरा य
एवं छन्दसां वीर्यं वेदाऽऽश्रावयास्तु श्रौषड्यज ये यजामहे वषट्-
कारो भवत्यात्मना पराऽस्य भ्रातृव्यो भवति ब्रह्मवादिनो वदन्ति
कस्मै कमध्वर्युरा श्रावयतीति छन्दसां वीर्यायेति ब्रूयादेतद्वै ॥२॥
छन्दसां वीर्यमा श्रावयास्तु श्रौषड्यज ये यजामहे वषट्कारो य
एवं वेद सवीर्यैरेव छन्दोभिरर्चति यत्किं चार्चति यदिन्द्रो वृत्रम-
हन्नमेध्यं तद्यद्यतीनपावपदमेध्यं तदथ कस्मादैन्द्रो यज्ञ आ सꣳ-
स्थातोरित्याहुरिन्द्रस्य वा एषा यज्ञिया तनूर्यद्यज्ञस्तामेव तद्यजन्ति
य एवं वेदोपैनं यज्ञो नमति ॥ ३ ॥

*இதில், சோமத்திற்கு அங்கமாகிய "ஆசிராவய" என்பது முதலிய மந்திரங்கள் விதிக்கப்படுகின்றன. இவை முதற் காண்டம் ஆறாம் பிரபாடகம் பதினோராம் அநுவாகத்திற் கூறப்பட்டிருப்பினும் அது முதலாவது இஷ்டிக்கு அங்கமாம். இங்குச் சோமயாகத்திற்கு அங்கமாகக் கூறப்படுகின்றன என்பதை யுணர்க.*

ஆஶ்ராவணத்தை விதிக்கின்றது

பிராமணம் 1

प्रजापतिर्देवासुरानसृजत तदनु यज्ञोऽसृज्यत यज्ञं छन्दाꣳसि ते विष्वञ्चो व्यक्रामन्त्सोऽसुराननु यज्ञोऽपाक्रामद्यज्ञं छन्दाꣳसि ते देवा अमन्यन्तामी वा इदमभूवन्यद्वयꣳ स्म इति ते प्रजापतिमुपाधावन्त्सोऽब्रवीत्प्रजापतिश्छन्दसां वीर्यमादाय तद्वः प्र दास्यामीति स छन्दसां वीर्यमादाय तदेभ्यः प्रायच्छत्तदनु छन्दाꣳस्यपाक्रामञ्छन्दाꣳसि यज्ञस्ततो देवा अभवन्पराऽसुराः ।

என்பது

உரை

ஒரு காலத்தில் பிரமன், தேவர்களையும் அசுரர்களையும் படைத்தனன். அதைத்தொடர்ந்து எக்ஞத்தையும் உண்டாக்கினுன். எக்ஞத்தைத்தொடர்ந்து சந்தங்களையும் உண்டாக்கினன். அப்போது தேவர்கள், தமக்குள் ஒற்றுமையில்லாததால் பிரிந்து பல்வேறிடங்களுக்குப் போய்விட்டனர். அப்போது, எக்ஞமானது அசுரர்களைப்பற்றிக்கொண்டு தேவர்களிடத்திலிருந்து நழுகி விட்டது. அதைப்பற்றி சந்தங்களும் தேவர்களை விட்டுவிட்டன. பிறகு அத் தேவர்கள் ஒன்றுகூடி யாம் அடைந்த ஐசுவரிய மனைத்தையும் அசுரர்களடைந்து கொண்டு இப்போது அசுரர்கள் மேலாய் இருக்கின்றுர்கள் என்று ஆராய்ந்து அவர்களுடைய மேம்பாட்டைப் பொறுக்க முடியாதவர்களாய் பிரமனிடம் ஓடினுர்கள். அப்போது, தேவர்களால் வழிபடப்பெறும் பிரமன், சந்தங்களுடைய வைதிக மந்திரங்களுக்குள் வீரியமுடைய சாரத்தை எடுத்து உங்கட்குக் கொடுக்கின்றேன் என்று கொடுத்தனன். அவ்வீரியம், சந்தங்களனைத்தையும் அசுரர்களிடத்திலிருந்து விலகச்செய்து தேவர்களை அடையும்படி செய்தது அதைத்தழுவி எக்ஞங்களும் அசுரர்களை விட்டுப்பிரிந்து தேவர்களிடம் வந்தன. அதனுல் தேவர்கட்கு வெற்றியும் அசுரர்கட்குத் தோல்வியும் உண்டாயிற்று என்பது.

---

அம்மந்திரங்களை விதிக்கின்றது

பிராமணம் 2

य एवं छन्दसां वीर्यं वेदाऽऽश्रावयास्तु श्रौषड्यज ये यजामहे वषट्कारो भवत्यात्मना पराऽस्य भ्रातृव्यो भवति ।

என்பது

உரை

இவ்வாறு, ஆச்ராவாய, அஸ்துசுரௌஷட், யஜ, யேயஜாமஹே, வஷட் என்னும் ஐந்து மந்திரங்களாகிய சந்தங்களின் சாரத்தை உணர்ந்தவன் தானே பகையை வென்றேறுகின்றான். அவனுடைய பகைவர் தோல்வியுறுகின்றனர். ஆதலின் வீரியத்தையுணர்ந்து பிரயோகிக்கவும் என்பதாம்.

---

அம்மந்திரங்களைப் புகழ்கின்றது

பிராமணம் 3

**ब्रह्मवादिनो वदन्ति कस्मै कमध्वर्युरा श्रावयतीति छन्दसां वीर्यायेति ब्रूयादेतद्वै छन्दसां वीर्यमा श्रावयास्तु श्रौषड्यज ये यजामहे वषट्-कारः ।**

என்பது.

உரை

பிரமவாதிகள், எதன் பொருட்டு? எதைக்குறித்து? வேட்போன் சந்தங்களின் வீரியமாகிய 'ஆச்ராவய' என்பது முதலிய மந்திரங்களைக் கூறுகின்றான் என்று வினவினால், இறக்கப்பட்ட சந்தங்களின் வீரியம் பிரமனால் மீண்டும் வீரியலாபமடைதற் பொருட்டு என்று அறிவுடையோன் விடை பகரல் வேண்டும் என்பதாம்.

---

வீரியவுணர்ச்சியைப் புகழ்கின்றது

பிராமணம் 4

**य एवं वेद सवीर्यैरेव छन्दोभिरर्चति यत्किं चार्चति ।**

என்பது.

உரை

இவ்வேள்வியில், அல்லது உலகியல் வழக்கில் மேற்கூறிய வீரியத்தையுணர்ந்து ஒரு சிறு தேவபூசை செய்பினும், அது, எல்லாவீரியச் சந்தங்களாலும் பூசிக்கப்பட்டதாகின்றது என்பதாம்.

---

முதலான மந்திரங்கள்)

இனி, அம்மந்திரங்களுடன் கூடியவேள்வியைப் புகழ்கின்றது

பிராமணம் 5

**यदिन्द्रो वृत्रमहन्नमेध्यं तद्यद्यतीनपावपदमेध्यं तदथ कस्मादैन्द्रो यज्ञ आ संस्थातोरित्याहुरिन्द्रस्य वा एषा यज्ञिया तनूर्यद्यज्ञस्तामेव तद्यजन्ति ।**

என்பது

உரை

இந்திரன், விருத்திரனைக் கொன்றனன் ஆதலினானும், துறவிகளை அறுத்துச் சென்னாய்க்குப்போட்டனன் ஆதலானும் பாவமுடையவனாயினன். ஆதலின் முடிவுவரை இந்திரனையே தேவதையாகக்கொண்ட வேள்வி எவ்வாறு புண்ணிய வேள்வியாகும்? என்று பிரமவாதிகள் வினாவில், புத்தியுள்ளான், இந்திரனுக்கு இருவகை வடிவுகளுள்ளன. அவற்றுள், ஒன்று பிறரைக் கொல்லும் இராசதத்திருமேனியாம் இது வேள்விக்குரியதன்று. மற்றொன்று வேள்விக்குத் தேவதையாகவுள்ள சாத்துவீக வடிவாம் இதுவே, வேள்வியாற் போற்றப் பெறுகின்றது. ஆதலின் வேள்வி பாவமுடையதன்று என்று விடைகூறவும் என்பதாம்.



எக்ஞத்திற்குரிய திருமேனியையுணர்தல் நலமெனப் புகழ்கின்றது

பிராமணம் 6

**य एवं वेदोपैनं यज्ञो नमति ।**

என்பது

உரை

எவன் இவ்வாறு உணர்கின்றானோ, அவனை எக்ஞம் வணங்குகின்றது என்பதாம்.

ஏழாம் அநுவாகம்

முற்றிற்று.



எட்டாம் அநுவாக விடயச்சுருக்கம்

आयुस्त्ववभृथप्रेप्सोर्होम आहवनीयके ।

यत्कुवेदिं दहेत्तत्र विश्व सक्त्वाहुतिर्भवेत् ॥ १ ॥

अयंत्रिभिरुपस्थानं षण्मन्त्रा अष्टमेस्थिताः

(அவபிருதத்தின்
*அவபிருத்திற்குப்போகும்போது செய்யும் ஹோமம், வேள்விசெய்த வேதிகையை எரித்தல், சத்துமாவை ஹோமஞ்செய்தல், மூன்று மந்திரங்களாற் போற்றல் என்பது.*

---

## மூன்றுங் காண்டம் மூன்றும் பிரபாடகம்

## எட்டாவது அநுவாகம்

*ஆறு பஞ்சாதிகளைக் கொண்டது.*

வேள்வியின் முடிவு நீராடலுக்கு அங்கமான ஹோம முதலியவைகளைக் கூறும் மந்திரங்களும் பிராமணங்களும்.

आयुर्दा अग्ने हविषो जुषाणो घृतप्रतीको घृतयोनिरेधि । घृतं पीत्वा मधु चारु गव्यं पितेव पुत्रमभि रक्षतादिमम् । आ वृश्च्यते वा एतद्यजमानोऽग्निभ्यां यदेनयोः शृतंकृत्याथान्यत्रावभृथमवैत्यायुर्दा अग्ने हविषो जुषाण इत्यवभृथमवैष्यञ्जुहुयादाहुत्यैवैनौ शमयति नाऽऽर्तिमार्छति यजमानो यत्कुसीदम् ॥ १ ॥ अप्रतीत्तं मयि येन यमस्य बलिना चरामि । इहैव सन्निरवदये तदेतत्तदग्ने अनृणो भवामि । विश्वलोप विश्वदावस्य त्वाऽऽसञ्जुहोम्यग्धादेकोऽहुतादेकस्समसनादेकः । ते नः कृण्वन्तु भेषजꣳ सदस्सहो वरेण्यम् । अयं नो नभसा पुरस्सꣳस्फानो अभि रक्षतु । गृहाणामसमर्त्यै बहवो नो गृहा असन् । स त्वं नः ॥ २ ॥ नभसस्पत ऊर्जं नो धेहि भद्रया । पुनर्नो नष्टमा कृधि पुनर्नो रयिमा कृधि । देव सꣳस्फान सहस्रपोषस्येशिषे स नो रास्वाज्यानिꣳ रायस्पोषꣳ सुवीर्यꣳ संवत्सरीणाꣳ स्वस्तिम् । अग्निर्वाव यम इयं यमी कुसीदं वा एतद्यमस्य यजमान आ दत्ते यदोषधीभिर्वेदिꣳ स्तृणाति यदनु-

पौष्य प्रयायाद्ग्रीवबद्धमेनम् ॥ ३ ॥ अमुष्मिँल्लोके नेनीयेरन्यत्कुसीदमप्रतीत्तं मयीत्युपौषतीहैव सन्यमं कुसीदं निरवदायानृणस्सुवर्गं लोकमेति यदि मिश्रमिव चेरदञ्जलिना सक्तून्प्रदाव्ये जुहुयादेष वा अग्निर्वैश्वानरो यत्प्रदाव्यस्स एवैन स्वदयत्यह्वां विधान्यामेकाष्टकायामपूपं चतुश्शरावं पक्त्वा प्रातरेतेन कक्षमुपौषेद्यदि ॥ ४ ॥ दहति पुण्यसमं भवति यदि न दहति पापसममेतेन ह स्म वा ऋषयः पुरा विज्ञानेन दीर्घसत्रमुप यन्ति यो वा उपद्रष्टारमुपश्रोतारमनुख्यातारं विद्वान्यजते सममुष्मिँल्लोक इष्टापूर्तेन गच्छतेऽग्निर्वा उपद्रष्टा वायुरुपश्रोताऽऽदित्योऽनुख्याता तान्य एवं विद्वान्यजते सममुष्मिँल्लोक इष्टापूर्तेन गच्छतेऽयं नो नभसा पुरः ॥५॥ इत्याहाग्निर्वै नभसा पुरोऽग्निमेव तदाहैतन्मे गोपायेति स त्वं नो नभसस्पत इत्याह वायुर्वै नभसस्पतिर्वायुमेव तदाहैतन्मे गोपायेति देव सꣳस्फानेत्याहासौ वा आदित्यो देवस्सꣳस्फान आदित्यमेव तदाहैतन्मे गोपायेति ॥ ६ ॥

*இதில் முடிவு நீராடலுக்கு அங்கமான ஹோம மந்திரங்கள் கூறப்படுகின்றன.*

முடிவு நீராடலுக்கு முன் செய்யும் ஹோமம்

மந்திரம் 1.

**आयुर्दा अग्ने हविषो जुषाणो घृतप्रतीको घृतयोनिरेधि । घृतं पीत्वा मधु चारु गव्यंपितेव पुत्रमभि रक्षतादिमम् ।**

*என்பது*

உரை.

*அவிகளை யருந்துகின்றதும், நெய்யால் தொடங்கப்படுவதும், நெய்யைக் காரணமாகவுடையதுமாகிய அக்கினியே! நீ, மிகுந்த இன்சுவையுடையதும்,*

சுத்திசெய்ததால் அழுக்கில்லாததுமாகிய நெய்யை அருந்தி தந்தை மகனைப் பாதுகாப்பதுபோல் எசமானனை நன்கு பாதுகாப்பாயாக என்பதாம். இது முதற்காண்டம் நான்காம்பிரபாடகம் நாற்பத்தைந்தாம் அநுவாகத்தில் விரிவாகிக்கப்படுகின்றது.

---

மேற்கூறிய மந்திரத்தாற் செய்யப்படும் ஹோமத்தை விதிக்கின்றது

பிராமணம் 1.

**आ वृश्च्यते वा एतद्यजमानोऽग्निभ्यां यदेनयोश्शृतंकृत्याथान्यत्रावभृथ-मवैत्यायुर्दा अग्ने हविषोजुषाण इत्यवभृथमवैष्यन्जुहुयादाहुत्यैवैनौ शमयति नाऽऽर्तिमार्छति यजमानः ।**

என்பது

உரை

ஆகவனீய காருக பத்தியங்களிரண்டின் அவியைப் பக்குவஞ்செய்துவிட்டு, அங்கு அவபிருதம் (முடிவு நீராடலின்) அவியைப் பக்குவஞ்செய்து ஹோமஞ் செய்யாமல் நீருக்கருகில் நீராடுங் கருமத்தின் பொருட்டுச் செல்கின்றான். இதனால் வேள்வித்தலைவன், ஆகவனீய காருகபத்திய அக்கினிகளிரண்டிலிருந்தும் விடுபட்டவனாகின்றான். ஆதலின், முடிவு நீங்குதற்பொருட்டுச் செல்லவிருப்புடையோன், "ஆயுர்தா அக்னே, என்னும் மந்திரத்தால் ஆகவனீயத் தீயில் நெய்யில் ஒருஹோமஞ்செய்தல்வேண்டும், இதனால் இரண்டு தீக்களும் பொறுமையுடையவைகளாகின்றன. வேள்வித் தலைவனுங் குற்றத்தையடையான் என்பதாம்.

---

ஆகவனீயக் கொள்ளியால் வேதிகையை எரித்தல்

மந்திரம் 2

**यत्कुसीदमप्रतीत्तं मयि येन यमस्य बलिना चरामि । इहैव सन्निरवदये तदेतत्तदग्ने अनृणो भवामि ।**

என்பது

உரை

எமனுக்குப் பலிகொடுக்க வேண்டியதாகிய கடனுடையவனாயிருக்கின்றேன். இப்போது இவ்வேள்வி செய்யுமிடத்தில் அக்கடனைத் தொலைத்தவனாகின்றேன். ஆதலின், அக்கினியே! எமவடிவ உத்தமக் கடனிலிருந்து விடுபட்டவனாகின்றேன் என்பதாம்.

சத்துமாவை இரண்டுகைகளாலும் ஹோமஞ் செய்தல்

மந்திரம் 3

**विश्वलोप विश्वदावस्य त्वाऽऽसञ्जुहोम्यग्धादेकोऽहुतादेकस्समसनादेकस्ते नः कृण्वन्तु भेषजꣳ सदस्सहो वरेण्यम् ।**

என்பது

உரை

எல்லாப் பாவங்களையும் போக்குவோய்! கூப்பிய கைகளிலுள்ள சத்து மாவே! எல்லாப் பாவங்களையும் போக்குவதற்கெழுந்த உன்னை அக்கினியின் வாயில் ஓமஞ்செய்கின்றேன். ஓமத்தாற்கிடைத்ததை அருந்துவது, ஹோம மின்றி அருந்துவது எல்லாவற்றையும் அருந்துவது என்னும் மூவகைத் தீக்களும் இவ்ஹோமத்தால் களிப்புற்று எமக்கு வைத்தியஞ் செய்வனவாக. அதாவது பசியைத் தணிப்பவைகளாக. அவ்வாறே வாழுமிடத்தைச் செய்கின்றவைகளாக. ஆற்றலைச் செய்வனவாக. தனமுதலிய மேம்பாட்டைச் செய்வனவாக என்பதாம்.

---

அக்கினியைப் போற்றுதல்

மந்திரம் 4

**अयं नो नभसापुरस्सꣳस्फानो अभि रक्षतु । गृहाणामसमर्त्यैबहवो नो गृहा असन् ।**

என்பது

உரை

இவ்வக்கினி, உண்மையாகிய பேரொளியால் வளர்வதாய் எமது வீடுகளை எரிக்காமல் பாதுகாப்பதாகுக. இதனால், அக்கினியின் பாதுகாப்பால் எமக்கு பலவிதமான வீடுகள் உள்ளனவாக என்பதாம்.

---

வாயுவைப் போற்றுதல்

மந்திரம் 5

**स त्वं नो नभसस्पत ऊर्जं नो धेहि भद्रया । पुनर्नो नष्टमा कृधि पुनर्नो रयिमा कृधि ।**

என்பது

உரை

ஆகாயத்தைப் பாதுகாக்கும் வாயுவே! அத்தகைய நீ அருளால் அன்னம் முதலிய இரசங்களை எமக்குக்கொடுப்பாயாக. மற்றும், எமக்கு கெட்டுப் போன அன்னமுதலிய ரசத்தை மீண்டுங் கொண்டுவந்து கொடுப்பாயாக என்பதாம்.

---

சூரியனைப் போற்றுதல்

மந்திரம் 6

देव सꣳस्फान सहस्रपोषस्येशिषे स नो रास्वाज्यानिꣳ रायस्पोषꣳ सुवीर्यꣳ संवत्सरीणाꣳ स्वस्तिम् ।

என்பது

உரை

நன்குவளரப்பெற்ற சூரியதேவ! நீ, ஆயிரக்கணக்கான தனங்களையும் பசு முதலானவைகளையும் வலுப்படுத்தும் வன்மையுடையோனாயிருக்கின்றாய். அத்தகைய நீ, எமக்கு வறுமையின்மை, தனங்களின் வன்மை, அழகிய மக்கள், அவ்வவ்வருடங்களிலுண்டாகும் வேண்டாதது விலகல் வேண்டியது கிடைத்தலாகிய சம்பத்தையுங் கொடுப்பாயாக என்பதாம்.

---

வேதிகையைக் கொளுத்தல் வேண்டு மென்பதை விதித்தற் பொருட்டுப் புகழ்கின்றது

பிராமணம் 2

अग्निर्वाव यम इयं यमी कुसीदं वा एतद्यमस्य यजमान आ दत्ते यदोषधीभिर्वेदिꣳ स्तृणाति यदनुपौष्य प्रयायाद्ग्रीवबद्धमेनममुष्मिँल्लोके नेनीयेरन् ।

என்பது

உரை.

"எமனுடைய் பலியால் அநுட்டிப்பேன்" என்னும் மந்திரத்தில் கூறப் பட்ட எமன் அக்கினியேயாவன். வேதிகையாகிய பூமி எமி (எமனுடைய ஏவலாளி). வேள்வித்தலைவன் வேதிகையைக் கொளுத்தாமல் அப்பூமியி லிருந்து கிளம்பி வெளியிற் செல்வானேல், எமனுடைய ஏவலாளியாகிய அவள், கழுத்தில் கயிற்றைப்போட்டுக்கட்டி இவனைச் சுவர்க்கத்திற்குக் கொண்டுபோய்விடுவாள் என்பதாம்.

மந்திரமும் பிராமணமும்)

இப்போது கொளுத்துவதை விதிக்கின்றது

பிராமணம் 3

**यत्कुसीदमप्रतीत्तं मयीत्युपौषतीहैव सन्यमं कुसीदं निरवदायानृणस्सुवर्गं लोकमेति ।**

என்பது

உரை

'எமனுக்குப் பலிகொடுக்கவேண்டியதாகிய கடன்காரனாயிருகின்றேன், என்னும் மந்திரத்தால் வேதிகையைக் கொளுத்திவிடல்வேண்டும். அதனால் இவ்வேள்விப் பூமியின்மீதே இப்பிறப்பில் எமனுடைய கடனை முழுதுந் தொலைத்தவனாகிச் சுவர்க்கத்தை அடைகின்றான் என்பதாம்.



வேள்வி யங்கங்களை ஒன்றேடொன்று கலந்த குற்றத்தைப் போக்குதற்கு மாவினால் ஓமஞ்செய்தல் வேண்டு மென்றுவிதிக்கின்றது

பிராமணம் 4

**यदि मिश्रमिव चरेदञ्जलिना सक्तून्प्रदाव्ये जुहुयादेष वा अग्निर्वैश्वानरो यत्प्रदाव्यस्स एवैनꣳस्वदयति ।**

என்பது.

உரை

வேள்வியின் அங்கசமுதாயங்களை கலப்புப்படுத்திசெய்த எசமானன் வேதிகையைக்கொளுத்திய தீயில் சத்துமாவை ஓமஞ்செய்தல்வேண்டும். அவ்வக்கினி, எல்லாமக்கட்கும் வேண்டியசெயல்களுக்குத் தக்கதாயிருத்தலினால் வைசுவா நரன் எனப்படும். அவ்வக்கினி, மாவினால் ஓமஞ்செய்த எசமானனை நல்லவனாக்குகின்றது. அதாவது வேள்வி அங்கங்கள் கலந்து போனகுற்றத்தைப் போக்குகின்றது என்பதாம்.



வேதிகையைக் கொளுந்துவதைக் கூறுவதற்கெழுந்து தொடர்புபற்றி இடையில் எண்ணிய மற்றொன்றைக் கொளுத்தல் கூறப்படுகின்றது.

பிராமணம் 5

**अह्नां विधान्यामेकाष्टकायामपूपं चतुश्शरावं पक्त्वा प्रातरेतेन कक्षमुपौषेद्यदि दहति पुण्यसमं भवति यदि न दहति पापसमम् ।**

என்பது

உரை.

பாட்டிமைமுதலிய நாட்களைத் தோற்றுவிப்பதால் வருடத்தின் மனைவி யாகிய மாசிமாதத் தேய்பிறை அஷ்டமியில், அல்லது கவாமயன மென்னும் யாகத்தில் பகலில் அநுட்டிக்கவேண்டிய கருமங்களைச்செய்வித்தலாலும் அதில் தொடங்குவதாலும் அந்நாட்களை யுண்டாக்குவது எனினும் அமையும். இரண்டுபடி கொள்ளும் நான்குபானைகளில் நிறையும் அரிசிகளாற்செய்த அப்பங்கள்செய்து அப்பங்கள் சூடாயிருக்கும்படி மறுநாள் அந்தஅப்பத்தின் மீதுகொள்ளியைவைத்து அதன்மேல் மடித்த் செத்தைகளைப் போட்டு வைக்கோலுக்குள் வைத்துக் காட்டில் கொளித்திவிடல்வேண்டும். அந்த அப் பங்கள் பக்குவங்களானுல் நினைத்த காரியத்தின்தடை நீங்கி அக்காரியம். முடிந்துவிடுகின்றது; அவ்வாறு கொளுத்திப் பக்குவமாகாவிடில் பாவத் துடன் சமமாகிய அக்காரியம்:கெட்டுவிடுகின்றது என்பதாம்.

---

பழைய வைக்கோலை எரித்ததால் உண்டாகிய வளர்ச்சி ஞானத்தால் சத்திர முதலிய மகா எக்ஞத்தைப் பெரியோர்கள் பரீட்சித்தனர் என்பதைக் காட்டுகின்றது

பிராமணம் 6

एतेन ह स्म वा ऋषयः पुरा विज्ञानेन दीर्घसत्रमुप यन्ति ।

என்பது.

உரை

இவ்வாறு வைக்கோலை எரித்தல் தடையின்றி நிறைவேறிய குறியைக் கொண்டு நெடுநாட்செய்யும் வருடசத்திரமுதலானயாகங்களைப் பெரியோர்கள் தொடங்கினுர்கள் என்பதாம்.

---

போற்றுகின்ற மந்திரங்கள் மூன்றிற்கும் உரை கூறுதற் பொருட்டுப் புகழ்கின்றது

பிராமணம் 7

यो वा उपद्रष्टारमुपश्रोतारमनुख्यातारं विद्वान्यजते सममुष्मिँल्लोक इष्टा-
पूर्तेन गच्छतेऽग्निर्वा उपद्रष्टा वायुरुपश्रोताऽऽदित्योऽनुख्याता तान्य
एवं विद्वान्यजते सममुष्मिँल्लोक इष्टापूर्तेन गच्छते ।

என்பது

உரை.

உபதிருஷ்டாவாகிய அக்கினியையும், உபசுருதாவாகிய வாயுவையும், அநுக்கியாதாரனாகிய ஆதித்தனையும் உணர்ந்து வேள்வியாற் போற்றுகின்றவர்கள் இவ்வுலகில், வைதிக கருமபயனையும் மிருதியின் கருமபயனையும் அடைந்து அதனால் சுவர்க்கத்தை அடைகின்றார்கள் என்பதாம்.

---

மந்திரங்கட்கு உரை கூறுகின்றது.

பிராமணம் 8

**अयं नो नभसा पुर इत्याहाग्निर्वै नभसा पुरोऽग्निमेव तदाहैतन्मे गोपायेति स त्वं नो नभसस्पत इत्याह वायुर्वै नभसस्पतिर्वायुमेव तदाहैतन्मे गोपायेति देवसꣳस्फानेत्याहासौ वा आदित्यो देवसꣳस्फान आदित्यमेव तदाहैतन्मे गोपायेति ।**

என்பது

உரை

இம்மந்திரத்தில், சுவாலையுடன் வெளியில் நேரேகாணப்படுதலின் வானில் நேர் என்னுஞ் சொற்களால் அக்கினி அறிவுறுத்தப்பட்டமை காண்க. அத்தகைய அக்கினியைப் போற்றுகின்றதாயிற்று. வானிற்சலித்துக்கொண்டு வானைப் பாதுகாப்பதால் வானுக்கு இறை வாயுவாம். அத்தகைய வாயுவைப் போற்றுகின்றான் என்க. கிரணங்களால் யாண்டும் வளர்வதால் ஆதித்தன் தேவர்களை வளர்ப்பவன் எனப்பட்டான் அத்தகைய ஆதித்தனைப் போற்றுகின்றான் என்பதாம்.

இவற்றுள், ஆயுர்தா:, என்பது முதலிய மந்திரம், 'உரும்ஹிராஜா, என்னும் அநுவாகத்திற்குமுன் உளதெனக்கொள்க. 'யத்குஸீதம், என்பது முதலிய மந்திரம் அதற்குமுன் உளதெனக்கொள்க.

எட்டாம் அநுவாகம்

முற்றிற்று.

---

ஒன்பதாம் அநுவாக விடயச்சுருக்கம்.

गोयूथे जीर्णे वृषभस्याऽऽलम्भयदिवाञ्छति ।
तदायुवानं वृषभं तत्रैतमिति योजयेत् ॥ १ ॥
नभा जीर्णामुपाकुर्याद्देवानां तद्वपाहुतिः ।
पिताऽङ्गहोमस्त्वांगावः स्विष्टकृत्पञ्चवर्णिताः ॥ २ ॥

*மாடுகளின் சமூஹத்தில் உள்ள பொலிகாளை கிழமாகிவிட்டால் அதற்குப் பதிலாக மற்றொரு இளம் மாட்டை மந்தையில் விடுதல் வழக்கம், அந்தப் பழைய எருதை இந்தரனுக்குக் கொன்று வேள்விசெய்யவேண்டும். அதில் வபா, அங்கம், சுவிஷ்டகிருத், உபாகரணம் என்பவைகட்கு முறையே மந்திரங்கள் கூறப்படுகின்றன.*

---

## மூன்றும் காண்டம் மூன்றும் பிரபாடகம்

### ஒன்பதாவது அநுவாகம்

*இரண்டுபஞ்சாதிக்குமேல் எட்டுப்பதங்களைக்கொண்டது.*

ஜீர்ணரிஷப வேள்வியைக்கூறும் மந்திரங்கள்.

एतं युवानं परि वो ददामि तेन क्रीडन्तीश्चरत प्रियेण । मा नश्शाप्त जनुषा सुभागा रायस्पोषेण समिषा मदेम । नमो महिम्न उत चक्षुषे ते मरुतां पितस्तदहं गृणामि । अनु मन्यस्व सुयजा यजाम जुष्टं देवानामिदमस्तु हव्यम् । देवानामेष उपनाह आसी-दपां गर्भ ओषधीषु न्यक्तः । सोमस्य द्रप्समवृणीत पूषा ॥ १ ॥ बृहन्नद्रिरभवत्तदेषाम् । पिता वत्सानां पतिरघ्नियानामथो पिता महतां गर्गराणाम् । वत्सो जरायु प्रतिधुक्पीयूष आमिक्षा मस्तु घृतमस्य रेतः । त्वां गावोऽवृणत राज्याय त्वां हवन्त मरुतस्स्व-

(இடபவேள்வி)

कर्तः । वर्ष्मन्क्षत्रस्य ककुभि शिश्रियाणस्ततो न उग्रो वि भजा वसूनि । व्यृद्धेन वा एष पशुनायजते यस्यै तानि न क्रियन्त एष ह त्वै समृद्धेन यजते यस्यैतानि क्रियन्ते ॥ २ ॥

பொலிகாளையைக்கொன்று வேள்விசெய்யும் ஒருவகைக் கருமத்தைக் கூறும் மந்திரங்கள் இவ்வநுவாகத்திற் கூறப்படுகின்றன.

ஈண்டு, சூத்திரத்தில் விதித்தபடியே, மூன்றுங்காண்டம் முதற்பிரபாடகம் பதினொராம் அநுவாகத்திலுள்ள 'பிசங்கரூப:, என்பது முதலிய இரண்டு மந்திரத்தையும், பசுமந்தையிலுள்ள கிழப்பொலிகாளையை மாற்றுவதற்குப் பிரியமுடையவன் மற்றொரு பொலிகாளையின் காதில் ஓதல்வேண்டும்.

---

அதன்பிறகு புதிய பொலிகாளையை பசுமந்தையிற் கொண்டுவந்து விடுவதற்குரிய மந்திரம்

மந்திரம் 1

एतं युवानं परि वो ददामि तेन क्रीडन्तीश्चरत प्रियेण । मा नश्शाप्त जनुषा सुभागा रायस्पोषेण समिषा मदेम ।

என்பது.

உரை.

கோக்களே! உங்கட்கு தருணமாகிய பொலிகாளையைக் கொடுக்கின்றேன் அன்புடன் அதனுடன் கூடிவிளையாடிக் கொண்டிருப்பீர்களாக. நீங்கள் பிறப்புத்தொட்டு நல்லபாக்கிய முடையோர்களாதலின் எங்கட்குச் சாபமிடாதீர்கள். மற்றும், இளமைவாய்ந்த பொலிகாளையைக்கொடுக்கின்றேன். ஆதலின் எமக்கு அருள் செய்வீர்களாக. உங்களுடைய கிருபையால் நாங்கள் தனத்தாலும் உணவுப்பொருள்களாலும் இனிது களிப்படைவோமாக என்பதாம்.

---

முன்னிருந்த கிழப்பொலிகாளையை, பிரசாபதி, இந்திரன், துவஷ்டா என்னும் மூவர்களுள் ஒருவரின் பொருட்டுக் கொல்லும்போது பிரகிருதியில் உள்ள மூன்று மந்திரங்களையும் ஓதுவதுடன் ஓதவேண்டிய மந்திரம்.

மந்திரம் 2

नमो महिम्न उत चक्षुषे ते मरुतां पितस्तदहं गृणामि । अनुमन्यस्व सुयजा यजाम जुष्टं देवानामिदमस्तु हव्यम् ।

என்பது.

உரை

தேவர்களை யுண்டாக்கும் பிரசாபதியே! உனது படைப்பாகிய மகிமையின்பொருட்டு வணக்கம். மற்றும், எல்லாவற்றையுங் கவரும் ஞானதிருஷ்டிக்கு வணக்கம். யான் கூறவிரும்பியதை உனக்குச் சொல்கின்றேன். யான் கூறியதை ஏற்றுக்கொள்வாயாக. அதாவது வேள்வியின் சாதனமாகிய, அழகிய பொலிகாளையைக் கொன்று வேட்பேன் என்பதாம். பொலிகாளையாகிய இந்த அவி தேவர்கட்குப் பிரியமுடையதாகுக என்பது.

---

பொலிகாளையின் வபா (ஈரல் சவ்வின்) ஹோமமந்திரம்

மந்திரம் 3

**देवानामेष उपनाह आसीदपां गर्भ ओषधीषु न्यक्तः । सोमस्य द्रप्समवृणीत पूषा बृहन्नद्रिरभवत्तदेषाम् ।**

என்பது

உரை.

இப்பொலிகாளை, தேவர்களைக் கட்டுவதற்குரியதாக இருந்தது. அதாவது கயிற்றால் காளை கட்டுப்படுவதுபோல் இப்பொலிகாளையின்மீது தேவர்கள் மிகுந்த ஆசையுடையவர்களாய்க் கட்டுண்டார்கள் என்பது பொருள். அத்தகைய பொலிகாளை ஹோமஞ் செய்யப்பட்டு மேகங்களில் நீரைப்பற்றிய கருப்பவடிவாகி மீண்டுங் கொடிசெடிகளின்மீது மழையாய் தலைகீழாய் விழுந்தது. அஃதெவ்வாறெனின்? பூஷா தேவதை சோமத்துளியை இழுத்துக் கொண்டது. ஆதித்தன், நீர்வடிவ சந்திரனுடைய நீர்த்துளியைக்கிரணங்களால் இழுத்துக்கொண்டனன். அத்துளிகள் கிரணசம்பந்தப்பட்டு மலைபோன்ற மேகமாயிற்று என்க. இனி, தேவர்கட்குப் பிரியமாகிய இப்பொலிகாளை தீயில் ஆகுதி செய்யப்பட்டு ஆதித்தனையடைந்து கிரணங்களாய் சந்திர சம்பந்தப்பட்ட நீரைப் பூமியிலிருந்து இழுத்து மேகத்தைப்பற்றி நீர்க்கருப்பமாகி மழையாய்க் கொடி செடிகளில் விழுந்தது என்க.

ஈண்டு, 'ஜாதவேத:, என்பது முதலிய மந்திரத்திற்குப்பதிலாக இம் மந்திரத்தை ஓதல்வேண்டுமென்பதை யுணர்க.

---

இதய முதலான அங்க ஹோம மந்திரம்

மந்திரம் 4

**पितावत्सानां पतिरघ्नियानामथो पिता महतां गर्गराणाम् । वत्सो जरायु प्रतिधुक्पीयूष आमिक्षा मस्तु घृतमस्य रेतः ।**

என்பது

உரை

இப்பொலிகாளை கோக்கட்குமாத்திரம் தலைமையதன்று. மற்றோ, கோவின் கன்றுகட்கும் பிதாவாம். மற்றும், பேரொலியுடன்கூடிய இடபக்கூட்டங் கட்கும் இது தந்தையாம். அஃதன்றியும், கோவின் கர்ப்பங்கட்கும், தருப்பப்பைகட்கும், கறக்கும் பாலுக்கும், பாற்பாத்திரத்திற்கும், அமுதமொத்த கோவின்மடியிலுள்ள பாலுக்கும், பாலாடை, நெய், காச்சிய நெய் என்னுமிவையனைத்திற்கும் பொலிகாளையின் தாதுவின் சாரமே காரண மாம். இத்தகைய பெருமை பொருந்திய பொலிகாளை, அவியாகித் தேவர்களைக் களிப்படைவிக்க என்பதாம்.

---

சுவிஷ்டகிருத் ஹோம மந்திரம்

மந்திரம் 5

त्वां गावोऽवृणत राज्याय त्वाꣳ हवन्त मरुतस्स्वर्काः । वर्ष्मन्क्षत्रस्य ककुभि शिश्रियाणस्ततो न उग्रोवि भजा वसूनि ।

என்பது

உரை.

பொலிகாளையே! உன்னை, கோக்களனைத்தும் எமக்கு இவரே அரசன் என்று சூழ்ந்துகொண்டிருப்பனவாகுக. மருத்துக்களும் உன்னையே அவி யின் வடிவமென்றழைக்கின்றனர். கொண்டையைப்போன்று உயர்ந்துள்ள அரசர்குலத்திற்சிறந்த அரசனுடைய உடம்பில் வன்மைவடிவாக நீயே புகுந்திருக்கின்றாய். கோக்களுள் பொலிகாளையினிடத்து மிகுந்த ஆற்றல் காணப்படுவதுபோல் எல்லாவற்றையும் நியாயஞ்செய்யும் ஆற்றல் அரசனுக் கிருத்தலின் அரசனுடைய் வடிவில் காளையிருக்கிறதென்பது உபசாரமாம். ஆதலின், அரசனுக்கொப்பாகிய உக்கிரமுடையோனாய் எமது பகைவர்க ளுடைய தனங்களை அவர்களிடத்திலிருந்து வேறாக்கிவிடுவாயாக என்பதாம்.

---

மேற்கூறிய மந்திரங்களால் முடிக்குங்கருமத்தை விதிக்கின்றது

பிராமணம் 1

व्यृद्धेन वा एष पशुना यजते यस्यैतानि न क्रियन्त एष ह्वै समृद्धे न यजते यस्यैतानि क्रियन्ते ।

என்பது

உரை

எவ்வெசமானன் இத்தகைய அங்கமான கருமங்களைச் செய்கின்றானோ, அவன், எல்லா அங்கங்களும் நிரம்பிய பசு யாகத்தை இனிதுசெய்துமுடிக்கின்றான் என்பதாம்.

ஒன்பதாம் அநுவாகம்

முற்றிற்று.

---

பத்தாம் அநுவாக விடயச்சுருக்கம்.

सूर्योहुत्वाऽऽज्यंगर्भिण्या यस्या इत्यनुमन्त्रणम् ॥

आवर्तगर्भमावृत्य वितेगर्भं छिनत्तिहि ॥ १ ॥

बहिर्गर्भं निरस्योर्वोरन्तरावी (रोर्वि) ति भाजनम् ॥

एकहोमो मही भस्माच्छादनं गर्भडाशयोः ॥ २ ॥

अनुवाकेतुदशमे मन्त्रा अष्टावुदीरिताः ॥

வசா (மலட்டுஆடு) என்று எண்ணி கொன்றபிறகு அது கருப்பமாக இருக்கில் பிராயச்சித்தமாகசெய்ய வேண்டிய இரண்டு ஹோமங்கள், அக்கருப்பத்தைப் போற்றல், அக்கருப்பத்தை வலம்வருதல், அதை அறுத்தல், அக்கருப்பத்தில் இருக்கும் குட்டியை அப்பசுவிற்கு பக்கத்தில் போடல், அக்கருப்பத்தில் இருக்கும் இரசத்தைப் பிடிப்பதற்கு ஒருபாத்திரத்தை வைத்தல், நெய்யோமஞ்செய்தல், அக்கருப்பத்தை தீயில்லாத சாம்பரால் மூடுதல் என்பது.

---

மூன்றுங் காண்டம் மூன்றும் பிரபாடகம்

பத்தாவது அநுவாகம்

ஒருபஞ்சாதிக்குமேல் நாற்பத்துநான்கு பதங்களைக்கொண்டது.

பசுப்பிராயச்சித்த விசேடத்தைக்கூறும் மந்திரங்கள்.

सूर्यो देवो दिविषभ्यो धाता क्षत्राय वायुः प्रजाभ्यः । बृहस्पतिस्त्वा प्रजापतये ज्योतिष्मतीं जुहोतु । यस्यास्ते हरितो गर्भोऽथो

योनिर्हिरण्ययी । अङ्गान्यहुता यस्यै तां देवैस्समजीगमम् । आवर्तन वर्तय नि निवर्तन वर्तयेन्द्र नर्दबुद । भूम्याश्चतस्रः प्रदिशस्ताभिरा वर्तया पुनः । वि ते भिनद्मि तकरीं वि योनिं वि गवीन्यौ । वि ॥ १ ॥ मातरं च पुत्रं च वि गर्भं च जरायु च । बहिस्ते अस्तु बालिति । उरुद्रप्सो विश्वरूप इन्दुः पवमानो धीर आनञ्ज गर्भम् । एकपदी द्विपदी त्रिपदी चतुष्पदी पञ्चपदी षट्पदी सप्तपद्यष्टापदी भुवनाऽनु प्रथताꣳ स्वाहा । मही द्यौः पृथिवी च न इमं यज्ञं मिमिक्षताम् । पिपृतां नो भरीमभिः ॥ २ ॥

*இதில் பசுவின் பிராயச்சித்த மந்திரங்கள் கூறப்படுகின்றன.*

ஈண்டு, அதிராத்தரமுதலான பசுவிகிருதிகளில் கொல்லப்படும் பெண்ஆட்டைக் கொன்ற பிறகு அது சினையெனத் தெரியில், முதற்காண்டம், நான்காம் பிரபாடகம்' நாற்பத்து நான்காம் அநுவாகத்தில் உள்ள, 'धातारातिः' (தாதாராதி:) என்பது முதலான மந்திரத்தால் ஒரு ஆகுதி செய்த பிறகு செய்யவேண்டிய ஹோமமந்திரம்.

மந்திரம் 1

सूर्यो देवो दिविषद्भ्यो धाता क्षत्राय वायुः प्रजाभ्यः । बृहस्पतिस्त्वा प्रजापतये ज्योतिष्मतीं जुहोतु ।

*என்பது*

உரை

*தேவர்கள் வளர்தற்பொருட்டு சூரியனும், அரசர்கள் வளர்தற்பொருட்டு தாதா தேவனும், பிரசைகள் வளர்தற்பொருட்டு வாயுவும், பிரசாபதியை அடைதற்பொருட்டு பிருகற்பதியும், சோதியையுடைய உன்னைக் குறித்து ஆகுதி செய்வார்களாக என்பது.*

---

அவ் வாட்டைப் போற்றும் மந்திரம்.

மந்திரம் 2

यस्यास्ते हरितो गर्भोऽथो योनिर्हिरण्ययी । अङ्गान्यहुता यस्यै तां देवैः समजीगमम् ।

*என்பது*

உரை

எவ்வாட்டின் கருப்பம் பச்சைநிறமோ, எவ்வாட்டின் யோநி பச்சை நிறமோ, எவ்வாட்டின் அங்கங்கள் வளையுடையவைகளோ, அத்தகைய அவ் வாட்டை தேவர்களுடன் ஒன்று சேர்க்கின்றேன் என்பதாம்,

---

ஆட்டை வலம்வரும் மந்திரம்

மந்திரம் 3

**आ वर्तन वर्तय नि निवर्तन वर्तयेन्द्र नर्दबुद। भूम्याश्चतस्रः प्रदिशस्ताभिरावर्तया पुनः।**

என்பது

உரை.

கருப்பத்தைச் செலுத்துங் தேவ! நீ, இவ்வாட்டின் கருப்பத்தைச் சுற்றுவாயாக. கருப்பத்தை வெளியிற்கொண்டுவரும் தேவ! நீ, வெளியிற் கொண்டுவருவாயாக. கருப்பத்தைக் கத்தும்படிசெய்யும் ஈச! நீ, மீண்டும் இக்கருப்பத்தை நான்கு திக்குகளிலும் வியாபிக்கும் (பரவும்)படி செய்வாயாக என்பதாம்.

---

கருப்பத்தை அறுப்பதற்கு மந்திரம்

மந்திரம் 4

**वि ते भिनद्मि तकरीं वि योनिं वि गवीन्यौ। वि मातरं च पुत्रं च वि गर्भं च जरायु च।**

என்பது

உரை

ஆடே! உனது கருப்பத்தையும் யோநியையும் அறுக்கின்றேன். மற்றும் யோநியின் உட்புறத்துள்ள இரண்டு உருண்டைகளையும், தாயையும் கருப் பத்தையும் கருப்பப்பையையும் வேறுக்குகின்றேன் என்பதாம்.

---

பசுப்பிராயச்சித்தம்)

கருப்பத்தை, அவ்வாட்டின் கால்கட்கிடையிற் போடுதற்கு மந்திரம்

மந்திரம் 5

**बहिस्ते अस्तु बालिति ।**

என்பது

உரை

*ஆடே! உனது பிராணவிருத்திவடிவ ஆன்மா எங்கும் வியாபி ஆகுக. ஈண்டு, இதை அறுக்கின்றேன், என்னும் முன் மந்திரத்துடன் சேர்த்துக் கொள்க என்பதாம்.*

---

அக்கருப்பத்தை, சூலத்தாற்குத்தி, பசுவைக் கொல்லுஞ்சாலையிலுள்ள தீயிற் காய்ச்சி அதில்ஒழுகும் இரசத்தைப் பிடித்துக்கொள்வதற்குப் பாத்திரத்தை வைக்கும் மந்திரம்.

மந்திரம் 6

**उरुद्रप्सो विश्वरूप इन्दुः पवमानो धीर आनञ्ज गर्भम् ।**

என்பது

உரை.

*மிகுந்த சாரமுள்ள அவயவங்களையுடையதும், பல்வேறுவகைப்பட்ட வடிவங்களையுடையதும், வெண்ணிறமுடையதும், பரிசுத்தமானதும், நிலையுடையதுமாகிய பிரஜைகள் பசுக்களாகிய அவயவசமுதாயமானது பிறந்த பின்னர் கருப்பத்தை அடைவதாகுக என்பதாம். அந்த இரசம் மூன்று வகையாக உபயோகப்படுத்துவதாம்.*

---

நெய் ஓமஞ்செய்யும் மந்திரம்

மந்திரம் 7

**एकपदी द्विपदी त्रिपदी चतुष्पदी पञ्चपदी षट्पदी सप्तपद्यष्टापदी भुवनाऽनु प्रथता२ स्वाहा ।**

என்பது

உரை.

இவ்வாடு, ஒருகால், இருகால்கள், மூன்றுகால்கள், நான்குகால்கள், ஐந்து கால்கள், ஆறுகால்கள், ஏழுகால்கள், எட்டுக்கால்கள்கொண்ட உயிர்கள் நிறைந்த புவனமாய்ப்பரவுக சுவாஹா என்பதாம்,



அக்கநப்பத்தை, சூடில்லாத சாம்பரில் புதைத்து மூடிவிடும் மந்திரம்

மந்திரம் 8

**मही द्यौः पृथिवी च न इमं यज्ञं सिमिक्षताम् । पिपृतां नो भरीमभिः ।**

என்பது.

உரை

பெரிய இவ்வானுலகமும் மண்ணுலகமும் எமது வேள்வியை இரச முடையனவாக்கி வளர்க்குக. பாதுகாக்கும் வகைகளால் எம்மையும் பாதுகாக்குக என்பதாம்.

பத்தாம் அநுவாகம்

முற்றிற்று.



பதினோராம் அநுவாக விடயச்சுருக்கம்

भवेदिदं वामित्यैन्द्रा बार्हस्पत्येचतुष्टयम् ।
विते विविचिमद्यागे धातेत्येतच्चतुष्टयम् ॥ १ ॥
देविकास्वाद्ययागे स्यादन्वित्यनुमतेचरौ ।
चतुष्टयं स्याद्राकां तु राकादेव्याश्चरौतथा ॥ २ ॥
सिनीयास्तु सिनीवाल्याः कुहुं कुह्वाश्चाविंशतिः ॥

இந்திராபிருகற்பதிக்கு இரண்டு யாஜ்யா புரோநு வாக்கியங்கள், அக்னி கலந்ததற்குச் செய்யும் இஷ்டியின் யாஜ்யா புரோநுவாக்கியங்கள், தேவிகா என்னும் ஐந்து அவிகளைக்கொண்ட இஷ்டியில் ஒவ்வொரு தேவதைக்கும் இரண்டிரண்டு இருக்குக்களாக முறையே யாஜ்யாபுரோநு வாக்கியங்கள் என்பது.



## மூன்றுங் காண்டம் மூன்றும் பிரபாடகம்

## பதினோராவது அநுவாகம்

ஐந்து பஞ்சாதிக்குமேல் இருபத்துநான்கு பதங்களைக்கொண்டது.

யாஜ்யா புரோநுவாக்கியங்களைக் கூறு மந்திரங்கள்.

इदं वामास्ये हविः प्रियमिन्द्राबृहस्पती। उक्थं मदश्च शस्यते। अयं वां परि षिच्यते सोम इन्द्राबृहस्पती। चारुर्मदाय पीतये। अस्मे इन्द्राबृहस्पती रयिं धत्तꣳ शतग्विनम्। अश्वावन्तꣳ सहस्रिणम्। बृहस्पतिर्नः परि पातु पश्चादुतोत्तरस्मादधरादघायोः। इन्द्रः पुरस्तादुत मध्यतोनस्सखा सखिभ्यो वरिवः कृणोतु। वि ते विष्वग्वातजूतासो अग्ने भामासः ॥ १ ॥ शुचे शुचयश्चरन्ति। तुविम्रक्षासो दिव्या नवग्वा वना वनन्ति धृषता रुजन्तः। त्वामग्ने मानुषीरीडते विशो होत्राविदं विविचिꣳ रत्नधातमम्। गुहा सन्तꣳ सुभग विश्वदर्शतं तुविष्मणसꣳ सुयजं घृतश्रियम्। धाता ददातु नो रयिमीशानो जगतस्पतिः। स नः पूर्णेन वावनत्। धाता प्रजाया उत राय ईशे धातेदं विश्वं भुवनं जजान। धाता पुत्रं यजमानाय दाता ॥ २ ॥ तस्मा उ हव्यं घृतवद्विधेम। धाता ददातु नो रयिं प्राचीं जीवातुमक्षिताम्। वयं देवस्य धीमहि सुमतिꣳ सत्यराधसः। धाता ददातु दाशुषे वसूनि प्रजाकामाय मीढुषे दुरोणे। तस्मै देवा अमृतास्सं व्ययन्तां विश्वे देवासो अदितिस्सजोषाः। अनु नोऽद्यानुमतिर्यज्ञं देवेषु मन्यताम्। अग्निश्च हव्य-

वाहनो भवतां दाशुषे मयः । अन्विदनुमते त्वम् ॥ ३ ॥ मन्यासै शं च नः कृधि । क्रत्वे दक्षाय नो हिनु प्र ण आयूंषि तारिषः । अनु मन्यतामनुमन्यमाना प्रजावन्तं रयिमक्षीयमाणम् । तस्यै वयं हेडसि माऽपि भूम सा नो देवी सुहवा शर्म यच्छतु । यस्या-मिदं प्रदिशि यद्विरोचतेऽनुमति प्रति भूषन्त्यायवः । यस्या उपस्थ उर्वन्तरिक्षं सा नो देवी सुहवा शर्म यच्छतु ॥ ४ ॥ राकामहं-सुहवां सुष्टुती हुवे शृणोतु नस्सुभगा बोधतु त्मना । सीव्य-त्वपस्सूच्याऽच्छिद्यमानया ददातु वीरं शतदायमुक्थ्यम् । यास्ते राके सुमतयस्सुपेशसो याभिर्ददासि दाशुषे वसूनि । ताभिर्नो अद्य सुमना उपागहि सहस्रपोषं सुभगे रराणा । सिनीवालि या सुपा-णिः । कुहूमहं सुभगां विद्मनापसमस्मिन्यज्ञे सुहवां जोहवीमि । सा नो ददातु श्रवणं पितृणां तस्यास्ते देवि हविषा विधेम । कुहूर्दे-वानाममृतस्य पत्नी हव्या नो अस्य हविषश्चिकेतु । सं दाशुषे किरतु भूरि वामं रायस्पोषं चिकितुषे दधातु ॥ ५ ॥

*இதில் காமிய யாஜ்யா புரோநுவாக்கியங்கள் கூறப்படுகின்றன.*

'யம்காமயேத, என்பது முதலியதிலுள்ள ஐந்திர பார்ஹஸ்பத்தியச் சருவிற்குப் புரோநுவாக்கியம்

மந்திரம் 1

इदं वामास्ये हविः प्रियमिन्द्राबृहस्पती । उक्थं मदश्च शस्यते ।

என்பது.

உரை.

இந்திர பிருகற்பதி என்பவர்களே! இந்த அவி உங்கட்கு விருப்புடைய தாருக. அல்லது இந்த அவி உங்கட்கு அர்ப்பிக்கப்படுகின்றது. மற்றும் உங்களைக் குறித்துக் களிப்புத்தரும் சஸ்திரம், பிரதிகரம் (துதிவிசேடம் பிரதியுத்தரம்) கூறப்படுகின்றன என்பதாம்.

---

மேற்கூறிய அதற்கே யாஜ்யாவாக்கியம்

மந்திரம் 2

**अयं वां परि षिच्यते सोम इन्द्राबृहस्पती । चारुर्मदाय पीतये ।**

என்பது.

உரை.

இந்த அவி, அல்லது சோமம் உங்கட்கு அர்ப்பிக்கப்படுகின்றது. அதாவது இந்திர பிருகற்பதிகளே! உங்கட்கு அருந்துதற் பொருட்டும் மாந்த முண்டாதற் பொருட்டும் அர்ப்பிக்கப்படுகின்றது என்பதாம்.

---

மேற்கூறிய அதற்கே விகற்பமாகிய புரோநுவாக்கியம்

மந்திரம் 3

**अस्मे इन्द्राबृहस्पती रयिं धत्तꣳ शतग्विनम् । अश्वावन्तꣳ सहस्रिणम् ।**

என்பது.

உரை.

இந்திர பிருகற்பதிகளே! நீங்கள், எங்கட்கு நூற்றுக்கணக்கான குதிரைகளையும், ஆயிரக்கணக்கான பொன்களையுங் கொடுப்பீர்களாக என்பது.

---

மேற்கூறிய அதற்கே விகற்ப யாஜ்யாவாக்கியம்:

மந்திரம் 4

**बृहस्पतिर्नः परिपातु पश्चादुतोत्तरस्मादधरादघायोः । इन्द्रः पुरस्तादुत मध्यतो नस्सखा सखिभ्यो वरिवः कृणोतु ।**

என்பது

உரை.

பிருகற்பதி, இப்போதும், பிறகும் மேல்கீழ்வருந் துன்பங்களிலிருந்து எம்மைப் பாதுகாப்பாராக. இந்திரன், முதலிலும் நடுவிலும் எம்மைப் பாதுகாப்பானாக. எமது நண்பர்களான பிருகற்பதியும் இந்திரனும் நட்புடையோர்களான எமக்குச் சுகத்தைச் செய்வார்களாக என்பதாம்.

---

'யஸ்யஆஹிதாக்னே: அந்யை: அக்னிபி: அக்னய: ஸம்ஸ்நஜ்யந்தே, என்னுமிடத்து விவிசி இஷ்டியில் புரோநுவாக்கியம். விவிசி = தீக்கலப்பு.

மந்திரம் 5

वि ते विष्वग्वातजूतासो अग्ने भामासश्शुचेशुचयश्चरन्ति । तुविम्रक्षासो दिव्या नवग्वा वना वनन्ति धृषता रुजन्तः ।

என்பது.

உரை.

அக்கினியே! வாயுவாய் எழுப்பப்படுகின்றவைகளும், வேறொரு அக்கினி கலந்ததால் கோபமிக்குடையவைகளும், பலவற்றைச் சோதனைசெய்கின்றவைகளும், வானிலிருக்கத்தக்கவைகளும், புதிய போக்கையுடையவைகளுமான உனது கிரணவொளிகள் மிருந்த குறைவைப் போக்குகின்றவைகளாய் நாற்புறங்களிலுஞ்செல்கின்றன. அவைகள் எமது அவியை அருந்துவனவாகுக என்பதாம்.

---

மேற்கூறிய அதற்கே யாஜ்யாவாக்கியம்.

மந்திரம் 6

त्वामग्ने मानुषीरीडते विशो होत्राविदं विविचिꣳ रत्नधातमम् । गुहा सन्तꣳ सुभग विश्वदर्शतं तुविष्मणसꣳ सुयजं घृतश्रियम् ।

என்பது.

உரை.

அக்கினியே! ஹோமவிசேடங்களை யுணர்கின்றவனும், கலந்த தீயைப் பிரித்துணர்கின்றவனும், மணிகளையும் தனங்களையுங் கொடுக்கின்றவனும், இரகசிய விடத்திலிருக்கின்றவனும், உலகத்தைத் தெரிவிக்கின்றவனும், பெருத்த மனதுடையவனும், இனிது வேட்கின்றவனும், நெய்யையருந்துகின்றவனுமாகிய உன்னை, மக்களாகிய பிரசைகள் துதிக்கின்றார்கள் என்பதாம்.

புரோநுவாக்கியம்)

'தாத்ரே புரோடாசம் த்வாதசகபாலம் நிர்வபதி, அநுமத்யைசருதம், ராகாயை சருதம், சிநீவால்யைசருதம், குஹ்வைசருதம் என்னும்தேவி அவிகளுள் முதல்அவிக்குப் புரோநுவாக்கியம்:—

மந்திரம் 7

**धाता ददातु नो रयिमीशानो जगतस्पतिः । स नः पूर्णेन वावनत् ।**

என்பது.

உரை.

*உலகைத் தாங்குகின்றவரும், பாதுகாக்கின்றவருமாகிய பரமேசுரர் எமக்குத் தனத்தைக்கொடுப்பாராக. அப்பரமேசுரர் என்னை நிறைந்த சம்பத்துடையவனாகச் செய்வாராக என்பதாம்.*

---

மேற்கூறிய அதற்கே யாஜ்யாவாக்கியம்

மந்திரம் 8

**धाता प्रजाया उत राय ईशे धातेदं विश्वं भुवनं जजान । धाता पुत्रं यज-मानाय दाता तस्मा उ हव्यं घृतवद्विधेम ।**

என்பது

உரை

*இப்பிரமன் பிரசைகட்கு இறைவனாகின்றான். மற்றும், தனங்கட்கும் தலைவனாகின்றான். இவன் உயிர்த்தொகுதிகளைப் படைத்தனன். இவன், எசமானனுக்குப் புதல்வனைக்கொடுக்கின்றான். அத்தகைய இத் தேவனுக்கு இந்த அவியை நெய்யுடையதாகச் செய்கின்றேன் என்பதாம்.*

---

மேற்கூறிய அதற்கே விகற்பமாகிய மற்றொரு புரோநுவாக்கியம்

மந்திரம் 9

**धाता ददातु नो रयिं प्राचीं जीवातुमक्षिताम् । वयं देवस्य धीमहि सुम-तिꣳ सत्यराधसः ।**

என்பது.

உரை

*அத்தகைய பிரமன், எமது வாழ்வுக்குப் போதுமானதும், எமக்கு அநுகூலமுமாகிய தனத்தை எமக்குக் கொடுப்பானாக. உண்மையாகிய வேள்வி*

யாற் போற்றும் யாங்கள் அவனை அருளோடுகூடிய மனத்தாற்றியானிப்போமாக என்பதாம்.

---

மேற்கூறிய் அதற்கே விகற்பமாகிய மற்றேநயாஜ்யாவாக்கியம்

மந்திரம் 10

**धाता ददातु दाशुषे वसूनि प्रजाकामाय मीढुषे दुरोणे । तस्मै देवा अमृतास्सं व्ययन्तां विश्वे देवासो अदितिस्सजोषाः ।**

என்பது.

உரை.

மக்கட்பேற்றை விரும்பியவனும், தூரத்தில் தனதுவீட்டில் தேவர்களை நெய்யால் ஆராதிக்கின்றவனும் அவியளிக்கும் எசமானனுமாகிய எனக்கு அப்பிரமன் தனத்தைக் கொடுப்பானாக. இறப்பிலாத எல்லாத்தேவர்களும் அத்தகைய எசமானன்பொருட்டு அவன் வீட்டில் வந்திருப்பார்களாக என்பதாம்.

---

இரண்டாவது அவித்துப் புரோநு வாக்கியமி:—

மந்திரம் 11

**अनु नोऽद्यानुमतिर्यज्ञं देवेषु मन्यताम् । अग्निश्च हव्यवाहनो भवतां दाशुषे मयः ।**

என்பது.

உரை.

இதில், அநுமதி என்னுந்தேவதை இவ்வேள்வியைப்பற்றி தேவர்கள் முன்னிலையிற் புகழுக. அவியைக்கொண்டுசெல்லும் அக்கினியும் அவிகொடுக்கும் எசமானனுக்குச் சுகத்தை உண்டாக்குக என்பதாம்.

---

மேற்கூறிய அதற்கே யாஜ்யாவாக்கியம்:—

மந்திரம் 12

**अन्विदनुमते त्वꣳ मन्यासै शं च नः कृधि । क्रत्वे दक्षाय नो हिनु प्र ण आयूꣳषि तारिषः ।**

என்பது.

உரை

அநுமதியென்னுந் தேவதையே! நீ, இதை எல்லாவகையாநும் ஏற்றுக் கொள்வாயாக. மற்றும், எமக்குச் சுகத்தைச்செய்வாயாக. அஃதன்றியும் எமது நலத்தின்பொருட்டுச்செய்யும் யாகத்தில் அன்புடையவனுவாய். மற்றும், எமக்கு நீண்டவாழ்நாளைச் சம்பாதிப்பாயாக என்பதாம்.

---

மேற்கூறிய அதற்கே விகற்பமாகிய புரோநுவாக்கியம்

மந்திரம் 13

**अनु मन्यतामनुमन्यमाना प्रजावन्तꣳ रयिमक्षीयमाणम्। तस्यै वयꣳ हेडसि माऽपि भूम सा नो देवी सुहवा शर्म यच्छतु।**

என்பது

உரை

இவ்வனுமதி தேவி, பிரசைகளையுடையதும், மக்களையுடையதும், கெடாததுமாகிய தனத்தை எமக்கு அநுமதிப்பாளாக. யாம் அத்தேவியின் கோபத்திற்குப்பாத்திரர்களாகாமலிருப்போமாக. விருப்பு வெறுப்பிலாமைக்கும் அப்படியே. மற்றே, அவளுடைய அருளில் இருப்போமாக. அத்தேவியும் இனிது அழைக்கப் பெற்றவளாய் எமக்குச் சுகத்தைக் கொடுப்பாளாக என்பதாம்.

---

மேற்கூறிய அதற்கே விகற்பமாகிய யாஜ்யாவாக்கியம்:—

மந்திரம் 14

**यस्यामिदं प्रदिशि यद्विरोचतेऽनुमतिं प्रति भूषन्त्यायवः। यस्या उपस्थ उर्वन्तरिक्षꣳ सा नो देवी सुहवा शर्म यच्छतु।**

என்பது

உரை.

பல்வேறு வகைகளாய்க் காணப்படும் உலகம் ஆணை செலுத்தும் அநுமதி தேவியின்பால் இருக்கின்றது. எல்லாம் அவள் ஆணைக்குட்பட்டது என்பது பொருள். அத்தகைய அநுமதி தேவியைக் குறித்து எசமானன் அவியை அலங்கரிக்கின்ருன். மற்றும், பரந்தவானும் எவள்பால் ஒரு சிறிதிடத்திலிருக்கின்றதோ, அவள், மற்றவை முன்போல் என்பதாம்.

இனி மூன்றாவது அவியின் புரோநுவாக்கியம்:—

மந்திரம் 15

राकामह१ सुहवा१ सुष्टुती हुवे शृणोतु नस्सुभगा बोधतु त्मना । सीव्य-
त्वपस्सूच्याऽच्छिद्यमानया ददातु वीर१ शतदायमुक्थ्यम् ।

என்பது.

உரை.

இனிது அழைக்கப்பெறும் ராகாதேவியை அழகிய துதியால் அழைக்கின்றேன். நற்பாக்கிய முடைய அத்தேவி, எமது அழைப்பைக்கேட்டு என தான்மாவின் கருத்தை யுணர்ந்துகொள்வாளாக. மற்றும், கெடாத அருள் செய்யும் மனத்தால் இக்கருமத்தைப் புரிதப்படுத்துவாளாக என்பதாம்.

---

மேற்கூறிய அதற்கே யாஜ்யாவாக்கியம்:—

மந்திரம் 16

यास्ते राके सुमतयस्सुपेशसो याभिर्ददासि दाशुषे वसूनि । ताभिर्नो मअद्य
सुमना उपागहि सहस्रपोष१ सुभगे रराणा ।

என்பது

உரை

ராகா தேவியே! நற்கருமங்களுடன் கூடியதும், அவியளிக்கும் எசமானனுக்குத் தனத்தைக் கொடுப்பதுமாகிய உனது அருள்புரியும் திருவுள்ளத்தால் எம்முடைய இவ் வேள்வியில் அருள்புரிவாயாக. நற்பாக்கியமுடையவளே! எவ்வாறு அருள்புரிவாயெனிலோ? ஆயிரக்கணக்கான வகையிய புஷ்டியைக் கொடுக்குமாற்றால் அருள் செய்வாயாக என்பதாம்.

---

நான்காவது அவிக்கு யாஜ்யா புரோநுவாக்கியங்களின் தலைப்புச் சொற்கள் காட்டபடுகின்றன,

மந்திரங்கள் 17 - 18

सिनीवालि या सुपाणिः ।

என்பது

புரோநுவாக்கியம்)

உரை

"சினீவாலிப்ருதுஷ்டகே" என்பது புரோநு வாக்கியம். 'யா சுபாணி: ஸ்வங்குரி:, என்பது யாஜ்யாவாக்கியம். இவ்விரணடிற்கும், "அக்னிநாரயிமஸ்நவத்" என்னும் அநுவாகத்தில் உரை கூறப்பட்டிருக்கின்றது என்பதாம்.

---

ஐந்தாம் அவியின் புரோநுவாக்கியம்

மந்திரம் 19

**कुहूमहꣳ सुभगां विद्मनापसमस्मिन्यज्ञे सुहवां जोहवीमि । सा नो ददातु श्रवणं पितॄणां तस्यास्ते देवि हविषा विधेम ।**

என்பது

உரை

நல்லபாக்கியத்துடன் கூடியதும், கருமங்களையுணர்ந்ததும், எளிதில் அழைக்கப் பெறுகின்றதுமாகிய 'குகு' என்னுந் தேவதையை இவ்வேள்வியில் மிகவும் அழைக்கின்றேன் என்பதாம்.

---

மேற்கூறிய அதற்கே யாஜ்யாவாக்கியம்

மந்திரம் 20

**कुहूर्देवानाममृतस्य पत्नी हव्या नो अस्य हविषश्चिकेतु । सं दाशुषे किरतु भूरि वामꣳ रायस्पोषं चिकितुषे दधातु ।**

என்பது.

உரை

தேவர்கட்குரிய தரிசபூரண வேள்விகளின் அவியாகிய அமுதத்தைப் பாது காக்கின்றவளும், அழைத்தற்குரியவளுமாகிய 'குகு, என்னும் தேவியானவள் எமது அவியின் சாரத்தை உணர்வாளாக. அத்தகைய தேவி, அவியளிக்கும் எசமானனுக்கு, போற்றத் தக்கதும் மிகுதியானதுமாகிய இவ்வுலக பரவுலக பயன்களையளிப்பாளாக. மற்றும், தேவியே! உனது மகிமையை யுணர்ந்த எசமானனுக்கு நிறைந்த தனத்தைக் கொடுப்பாயாக என்பதாம்.

பதினோராம் அநுவாகம்

முற்றிற்று.

மூன்றாங்காண்டம் மூன்றாம் பிரபாடகம்

முடிந்தது.

நான்காம் பிரபாடக விடயச்சுருக்கம்.

प्रपाठके चतुर्थेतुकिंचिन्नैमिमित्तकं तथा ॥
पशिवष्टिर्दर्विहोमाश्च वाच्याः काम्याश्चकेचन ॥ १ ॥

இந்நான்காம் பிரபாடகத்தில், சிலநைமித்திகங்களும், சில பசுக்களும் தர்விஹோமங்களும், முடிவில் காமிய யாஜ்யையுஞ் சொல்லப்படுகின்றன என்பதாம்.

---

## மூன்றுங் காண்டம் நான்காம் பிரபாடகம்

### முதலாவது அநுவாகம்

நான்கு பஞ்சாதிகட்குமேல் இருபத்தொரு பதங்களைக் கொண்டது.

மூற்கூறிய, ஆட்டின் சினையைக் கண்டதற்கு விதித்த மந்திரங்கட்கு உரை கூறும் பிராமணங்கள்.

वि वा एतस्य यज्ञ ऋध्यते यस्य हविरतिरिच्यते सूर्यो देवो दिविषद्भ्य इत्याह बृहस्पतिना चैवास्य प्रजापतिना च यज्ञस्य व्यृद्धमपि वपति रक्षांसि वा एतत्पशुं सचन्ते यदेकदेवत्य आलब्धो भूयान्भवति यस्यास्ते हरितो गर्भ इत्याह देवत्रैवैना गमयति रक्षसामपहत्या आ वर्तन वर्तयेत्याह ॥ १ ॥ ब्रह्मणैवैनमा वर्तयति वि ते भिनद्मि तकरीमित्याह यथायजुरेवैतदुरुद्रप्सो विश्वरूप इन्दुरित्याह प्रजा वै पशव इन्दुः प्रजयैवैनं पशुभिः समर्धयति दिवं वै यज्ञस्य व्यृद्धं गच्छति पृथिवीमतिरिक्तं तद्यन्न शमयेदार्तिमार्छेद्यजमानो मही द्यौः पृथिवी च न इति ॥ २ ॥ आह द्यावापृथिवीभ्यामेव यज्ञस्य व्यृद्धं चातिरिक्तं च शमयति नाऽऽर्तिमार्छति यजमानो भस्मनाऽभि समूहति स्वगाकृत्या अथो अनयोर्वा एष गर्भो-

மந்திரவுரை)

ऽनयोरेवैनं दधाति यदवद्येदति तद्रेचयेद्यन्नावद्येत्पशोरालब्धस्य नाव द्येत्पुरस्तान्नाभ्या अन्यदवद्येदुपरिष्टादन्यत्पुरस्ताद्वै नाभ्यै ॥३॥ प्राण उपरिष्टादपानो यावानेव पशुस्तस्याव द्यति विष्णवे शिपि-विष्टाय जुहोति यद्वै यज्ञस्यातिरिच्यते यः पशोर्भूमा या पुष्टिस्त-द्विष्णुः शिपिविष्टोऽतिरिक्त एवातिरिक्तं दधात्यतिरिक्तस्य शान्त्यौ अष्टाप्रूड्ढिरण्यं दक्षिणाऽष्टापदी ह्येषाऽऽत्मा नवमः पशोराप्त्या अन्तर-कोश उष्णीषेणाऽऽविष्टितं भवत्येवमिव हि पशुरुल्बमिव चर्मेव-माꣳसमिवास्थीव यावानेव पशुस्तमाप्त्वाऽव रुन्धे यस्यैषा यज्ञे प्रायश्चित्तिः क्रियत इष्ट्वा वसीयान्भवति ॥ ४ ॥

முதலாம் மந்திரத்திலுள்ள 'பிருகற்பதி,' பிரசாபதி என்னுஞ் சொற்களின் கருத்தை விளக்குகின்றது

பிராமணம் 1

वि वा एतस्य यज्ञ ऋध्यते यस्य हविरति रिच्यते सूर्यो देवो दिविषद्भ्य इत्याह बृहस्पतिना चैवास्य प्रजापतिना च यज्ञस्य व्यृद्धमपि वपति ।

என்பது

உரை

எவ்வேள்வித்தலைவனுக்கு ஆடொன்று அதன்வயிற்றிலுள்ள குட்டி ஒன்றாக அவி மிகுதியாகின்றதோ, அவனுடைய வேள்வி குணமற்றதாகின்றது. ஆகலின், அவன் அம்மந்திரத்தால் ஹோமஞ்செய்யில் அம்மந்திரத்திற்கூறியுள்ள பிருகற்பதி பிரசாதிபதி என்னும் இரண்டு தேவதைகளும் அக்குற்றத்தை நீக்கிவிடுகின்றார்கள் என்பதாம்.

---

ஆட்டைப் போற்றும் மந்திரத்திலுள்ள, ''ஸமஜீகமம்'' என்னுஞ் சொல்லின் கருத்தைவிளக்குகின்றது (ஸமஜீகமம் - தேவர்களுடன் சேர்த்தல்)

பிராமணம் 2

रक्षाꣳसि वा एतत्पशुꣳ सचन्ते यदेकदेवत्य आलब्धो भूयान्भवति यस्यास्ते हरितो गर्भ इत्याह देवत्रैवैनां गमयति रक्षसामपहत्यै ।

என்பது

உரை

ஒரு தேவதையை முன்னிட்டுக்கொல்லப்பட்ட ஆடு சினையாயிருந்தால் அவி அதிகமாயிற்று ; அக்குற்றத்தால் அசுரர்கள் ஆட்டைக் கொண்டுபோய் விடுவார்கள். அதன்பொருட்டு அவ்வாட்டைப் போற்றி அது தேவர்களிடத்தில் ஒப்படைக்கப்படுகின்றது. அசுரர்களுங் கொல்லப்படுகின்றனர் என்பது

---

உலகவழக்கம்போல் வலம்வராமல் மந்திரத்தால் ஆட்டை வலம் வரல் வேண்டுமென்று விளக்குகின்றது.

பிராமணம் 3

**आ वर्तन वर्तयेत्याह ब्रह्मणैवैनमा वर्तयति ।**

என்பது.

உரை

இதனால், பிரமனே அவ்வாட்டை வலம்வந்ததாக ஆகின்றது என்பதாம்.

---

கருப்பப்பையை அறுக்கும் மந்திரப் பொருளை வெளிப்படையாகக் கூறுகின்றது.

பிராமணம் 4

**वितेभिनद्मि तकरीमित्याह यथायजुरेवैतत् ।**

என்பது.

உரை

'ஆடே!, உனது கருப்பப்பையை அறுக்கின்றேன் என்றது முதலிய எசுர் மந்திரத்தின் பொருள் அவ்வாறே கொள்ளற்பாலது என்பதாம்,

---

ஆட்டுக் குட்டியைக் காய்ச்சும்போது ஒழுகும் இரசத்தைப் பிடித்துவைப்பதற்துரிய மந்திரத்தில், 'இந்து' (மிகுந்த ஐசுவரியம்) என்பதின் கருத்தைவிளக்குகின்றது

பிராமணம் 5

**उरुद्रप्सो विश्वरूप इन्दुरित्याह प्रजा वै पशव इन्दुः प्रजयैवैनं पशुभिः समर्धयति ।**

என்பது

உரை.

மிகுந்த ஐசுவரியம் என்னும் பொருள்கொண்ட இந்து என்னுஞ் சொல்லைக்கூறியதால் பிரசைகளும் பசுக்களும் ஐசுவரியவடிவங்களாதலின் இந்து எனப்படுகின்றன. இதனால் இவைகளிலிருந்து இந்தரசம் நிறைய உண்டாகும் என்பதாம்.

---

ஆட்டுக்குட்டியைச் சாம்பரால் மூடுகின்றமந்திரத்திலுள்ள, வான் மண் (த்யு பிருதிவி) என்னுஞ்சொற்களின் கருத்தைவிளக்குகின்றது

பிராமணம் 6

**दिवं वै यज्ञस्य व्यृद्धं गच्छति पृथिवीमतिरिक्तं तद्यन्न शमयेदार्तिमार्च्छेद्यज-मानो मही द्यौः पृथिवी च न इत्याह द्यावापृथिवीभ्यामेव यज्ञस्य व्यृद्धं चातिरिक्तं च शमयति नाऽऽर्तिमार्च्छति यजमानः ।**

என்பது

உரை

வேள்வியைப்பற்றிய அங்கத்தின் குறைவு மிகுதிகள், வானையும் மண்ணையும் அடைகின்றன; அதை நீக்காவிட்டால் வேள்வித்தலைவன் துன்புறுகின்றான். ஆதலின், வான் மண் என்னும் இரண்டுகளாலும் அதை நீக்கி, அதாவது ஆடுமாத்திரம் வேள்வியங்கமாக வேண்டியவிடத்து ஆட்டின் வயிற்றிலிருந்த குட்டி மிகுதியாய்விட்டமையை நீக்கிவிட்டு எசமானன் துன்பைவிலக்கிக்கொள்கின்றான் என்பதாம்.

---

ஆட்டுக்குட்டியைச் சாம்பரால் மூடிவைத்தல் வேண்டுமென்பதை விதிக்கின்றது

பிராமணம் 7

**भस्मनाऽभि समूहति स्वगाकृत्या अथो अनयोर्वा एष गर्भोऽनयोरेवैनं दधाति ।**

என்பது

உரை

கருப்பமானது ஆன்மாவுடன் கூடுதற்பொருட்டு குளிர்ந்த சாம்பரால் மூடப்படுகின்றது. மற்றும், இக்கருப்பம் வான் மண் என்னுமிரண்டினி மிருந்து உண்டானது; ஆதலின், இம்மந்திரத்தை ஓதி சாம்பரால் மூடலால் வானிலும் மண்ணிலும் இக்கருப்பம் வைக்கப்பட்டதாகின்றது என்பதாம்.

---

சூத்திரப்படி அவ்வாட்டுக்குட்டியின் நாபிக்குக்கீழ் ஒரு சிறிது அறுத்தெடுத்து அங்கயாகத்தோடும், ஒருசிறிது அறுத்தெடுத்து சுவிஷ்டகிருத்யாகத்திலுஞ் சேர்த்துக் கொள்ளல் வேண்டுமென்று விதிக்கின்றது

பிராமணம் 8

**यदवद्येदति तद्रेचयेद्यन्नावद्येत्पशोरालब्धस्य नाव द्येत्पुरस्तान्नाभ्या अन्यद्-वद्येदुपरिष्टादन्यत्पुरस्ताद्वै नाभ्यै प्राण उपरिष्टादपानो यावानेव पशुस्त-स्याव द्यति ।**

என்பது

உரை

*ஆட்டுக்குட்டியின் இதயமுதலிய அங்கங்களை அறுத்தெடுக்கில் ஆட்டின் அங்கங்களிலும் அதிகப்படுகின்றன. ஆதலின், அறுத்தெடுக்காவிடின் குறித்த ஆட்டின் அங்கங்கள் அறுத்தெடுக்காதனவாகின்றன. இவ்விருவகைக் குற்றங்களும் நீங்குதற்பொருட்டு ஆட்டுக்குட்டியின் நாபியின்மேலும் கீழும் சிறிதுசிறிது அறுத்தெடுத்தல் வேண்டுமென்பதாம். எனவே, மேலே பிராணனும் கீழே அபானனும் இருத்தலின் எல்லா அங்கங்களும் அறுத்தெடுத்ததற்கு ஒப்பாகின்றன என்பதாம்.*

---

அவ்வாட்டுக் குட்டியின் முன்காலை அறுத்து 'சிபிவிஷ்ட:' என்னுந்தேவதைக்கு ஓமஞ்செய்தல்வேண்டு மென்றுவிதிக்கின்றது

பிராமணம் 9

**विष्णवे शिपिविष्टाय जुहोति यद्वै यज्ञस्यातिरिच्यते यः पशोर्भूमा या पुष्टिस्तद्विष्णुश्शिपिविष्टोऽतिरिक्त एवातिरिक्तं दधात्यतिरिक्तस्य शा-न्त्यै ।**

என்பது

உரை

*விஷ்ணுவடிவம் வேள்வியாம், பசுக்கள் 'சிபிகள்' எனப்படுகின்றன என்று மற்றொருசுருதிகூறுதலின், பசுக்களுக்கு இறையாகிய ஒரு வேள்வித் தெய்வம் சிபிவிஷ்ட: எனப்படும். அதன்பொருட்டு ஹோமஞ்செய்தல்வேண்டு மென்பதாம். வேள்வியின் அங்கங்கள் குறிப்பிட்டதைவிட மிகுதிப்படல், குறித்ததைவிட வேறுதல், பசுவில் புஷ்டிவளர்தல் என்பன அனைத்தும் விஷ்ணுவின் அதீனங்களாகின்றன. ஆதலின், விஷ்ணுவிற்கு இவ்வோமஞ் செய்யில் மிகுதியானது நிலைநாட்டப்பட்டதாம் அக்குற்றமும் சாந்தப்படும் என்பதாம்.*

---

இவ்வேள்வியில் கொடுக்கவேண்டிய தட்சிணை இது வெனவிதிக்கின்றது

பிராமணம் 10

अष्टाप्रुडिरण्यं दक्षिणाऽष्टापदी ह्येषाऽऽत्मानवमः पशोराप्त्यै ।

என்பது

உரை.

எட்டுப்புள்ளிகள்வைத்த ஒருபொன் தகட்டை தட்சிணையாகக் கொடுத்தல்வேண்டும். ஏனெனின்? ஆட்டுக்கும் அதன் குட்டிக்கும் சேர்த்து எட்டுக்கால்களானதால் அவைகட்கொப்பாமென்க. பசுவின் உடம்பும் ஆன்மாவும் ஒன்பதாவதாம் எனவுணர்க. இதனால் பசுக்கள் கிடைக்கின்றன என்பதாம்.

---

மேற்கூறிய பொன்னை பட்டாடையின் நுனியில்முடிந்து இரண்டு மூன்று முறை அவ்வாடையாற் சுற்றிக்கொடுத்தல் வேண்டுமென்பதை விதிக்கின்றது

பிராமணம் 11

अन्तरकोश उष्णीषेणाऽऽविष्टितं भवत्येवमिव हि पशुरुल्बमिव चर्मेव माꣳसमिवास्थीव यावानेव पशुस्तमाप्त्वाऽव रुन्धे ।

என்பது

உரை

பொன்னைவைத்து முடிந்த முடிச்சின்மேல், பட்டாடையாற் சுற்றல் வேண்டும். அது, கருப்பத்தின்பைக்கு ஒப்பாகின்றது. அதற்கு மேலே சுற்றியது தோல்போலாம். அதற்குமேல் சுற்றுகின்றது எலும்புகளாகின்றது. அதற்குள்ளிருக்கும் பொன் ஆட்டுக்குட்டியாம். இவ்வாறு தட்சிணை கொடுக்கில் பசுவாந் தன்மை நிறைந்து பசு தனதுவசப்படுகின்றது என்பதாம்.

---

இப்போது இத்தகைய ஓமத்துடன் செய்யும் வேள்விக் கருமத்தை விதிக்கின்றது

பிராமணம் 12

यस्यैषा यज्ञे प्रायश्चित्तिः क्रियत इष्ट्वा वसीयान्भवति ।

என்பது

உரை

எவ்வேள்வித்தலைவன், ஆடு சினையாயிருந்ததை முன்னிட்டுச்செய்யும் இந்த ஹோமமாகிய வேள்வியங்கத்துடன் வேள்வியைச் செய்கின்றானோ' அவன் மிகுந்த தனமுடையவனாகின்றான் என்பதாம்.

முதலநுவாகம்

முற்றிற்று.

---

இரண்டாமநுவாக விடயச் சுருக்கம்

आ वायो इत्युपाकुर्यादाकूत्यै पञ्चभिर्हुतिः ।
त्वं गच्छन्तीं मन्त्रयित्वा हन्यमानामजेतिच ॥ १ ॥
तन्तुं वपाहुतिस्तद्वद्दनुत्वेति हविर्हुतिः ।
मन शेषान्भक्षयन्ति मन्त्रा एका दशेरिताः ॥ २ ॥

ஐசுவரியத்தை விரும்பிசெய்யும் வாயவீய பசுவில், உபாகரணஞ்செய்தல் ஐந்துஹோமங்கள்செய்தல், சாமித்திரத்திற்கு ஓட்டிக்கொண்டுபோகும்போது போற்றல், கொல்லும்போது போற்றல், வபையை ஹோமஞ்செய்தல், அவியை ஓமஞ்செய்தல், அவியின் மிச்சத்தை யருந்தல் என்பது.

---

மூன்றுங் காண்டம் நான்காம் பிரபாடகம்

இரண்டாவது அநுவாகம்

இரண்டுபஞ்சாதிக்குமேல் பதின்மூன்றுபதங்களைக் கொண்டது.

ஐசுவரிய முதலியவைகளை விரும்பியவனுக்கு ஆட்டைக்கொன்று வேட்கும் விதியைக்கூறும் மந்திரங்கள்.

आ वायो भूष शुचिपा उप नस्सहस्रं ते नियुतो विश्ववार ।
उपो ते अन्धो मद्यमयामि यस्य देव दधिषे पूर्वपेयम् । आकूत्यै
त्वा कामाय त्वा समृधे त्वा किक्किटा ते मनः प्रजापतये स्वाहा

किक्किटा ते प्राणं वायवे स्वाहा किक्किटा ते चक्षुस्सूर्याय स्वाहा किक्किटा ते श्रोत्रं द्यावापृथिवीभ्याꣳ स्वाहा किक्किटा ते वाचꣳ-सरस्वत्यै स्वाहा ॥१॥ त्वं तुरीया वशिनी वशाऽसि सकृद्यत्त्वा मनसा गर्भ आऽशयत्। वशा त्वं वशिनी गच्छ देवान्त्सत्यास्सन्तु यज-मानस्य कामाः। अजाऽसि रयिष्ठा पृथिव्याꣳ सीदोर्ध्वाऽन्तरिक्षमुप तिष्ठस्व दिवि ते बृहद्भाः। तन्तुं तन्वन्रजसो भानुमन्विहि ज्योति-ष्मतः पथो रक्ष धिया कृतान्। अनुल्बणं वयत जोगुवामपो मनुर्भव जनया दैव्यं जनम्। मनसो हविरसि प्रजापतेर्वर्णो गात्राणां ते गात्रभाजो भूयास्म ॥ २ ॥

இதில் ஐசுவரியத்தை விரும்பியவன் வாயவீய ஆட்டைக் கொன்று வேட்பானுக் என விதிக்கின்றது

உபாகரண மந்திரம்

மந்திரம் 1

आवायो भूष शुचिपा उप नस्सहस्रं ते नियुतो विश्ववार। उपो ते अन्धो मद्यमयामियस्य देव दधिषे पूर्वपेयम्।

என்பது

உரை

வாயுவே! நீ வந்து இவ்வாட்டை அலங்காரஞ்செய்வாயாக. சுத்தமாகிய அவியைப்பாதுகாப்போய்! நீ, எம்மைக்குறித்துவருவாயாக. உலகில் வியாபித்திருப்போய்! உனக்கு, நியுத், என்னுங் குதிரைகள் ஆயிரக்கணக்காய் இருக்கின்றன. உனது அவியாகிய அன்னம் (பசு) களிப்பைத் தருவதாம். ஆதலின் உனக்கருகில் வருகின்றேன். அதாவது, சோமத்திற்கு ஒப்பான தென்று கொள்ளும் பசுவாகிய அவியுடன் உனக்கருகில் வருகின்றேன் என்பது.

ஆட்டை, கொள்ளியாற் சுற்றும்போதுசெய்யும் ஐந்துஹோம மந்திரங்கள்

மந்திரம் 2 - 6

**आकूत्यै त्वा कामाय त्वा समृधे त्वा किक्किटा ते मनः प्रजापतये स्वाहा किक्किटा ते प्राणं वायवे स्वाहा किक्कटा ते चक्षुस्सूर्याय स्वाहा किक्कटा ते श्रोत्रं द्यावापृथिवीभ्याꣳ स्वाहा किक्किटाते वाचꣳसरस्वत्यैस्वाहा ।**

என்பது

உரை

பசுவே (ஆடே)! எனது எண்ணங்கைகூடுதற்பொருட்டு இந்தநெய் உன்னையடைந்து, வேண்டியவற்றை பாதுகாத்தற் பொருட்டு உன்னை அழைத்து நிறைந்தசம்பத்துக் கிடைத்தற்பொருட்டு உன்னையடைந்து நாக்கை மடித்து சீக்கா அடிக்கும் ஒலியோடுகூட உன் மனதைக் களிப்படையச் செய்து பிரசாபதியின் பொருட்டு அர்ப்பணமாகுக. ஈண்டு ஆடு முதலியவைகளை ஒன்றுசேர்த்து தன்னை நோக்கும்படி செய்தற்பொருட்டு சீக்கா அடித்தலாம்; அது, உனது பிராணனும். அப்பிராணனைக் களிப்படையச்செய்துவிட்டு இந்தநெய் வாயுவிற்கு அர்ப்பணமாகுக. சீக்கா அடித்தல் உனது கணணும் அதைக் களிப்பித்துவிட்டு இந்தநெய் சூரியனுக்கு அர்ப்பணமாகுக. சீக்கா அடித்தல் உனது செவியாம் அதைக் களிப்பித்து விட்டு இந்த நெய் வான் மண் என்னுமிரண்டிற்கும் அர்ப்பணமாகுக. சீக்கா அடித்தல் உனது வாக்காம் அதைக் களிப்பித்துவிட்டு இந்தநெய் சரசுவதிக்கு அர்ப்பணமாகுக என்பதாம்.

ஈண்டு, "எனது எண்ணங் கைகூடுதற்கும், வேண்டியவற்றைப் பாதுகாத்தற்பொருட்டும், நிறைந்த சம்பத்தையடைதற்பொருட்டும்" என்பதை ஏனைய மந்திரங்களுடனுஞ் சேர்த்துக்கொள்க.

ஆட்டைக் கொல்லுஞ்சாலைக்குக் கொண்டுபோம்போது அதைப்போற்றல்

மந்திரம் 7

**त्वं तुरीया वशिनी वशाऽसि सकृद्यत्त्वा मनसा गर्भ आऽशयत् । वशा त्वं वशिनी गच्छ देवान्त्सत्यास्सन्तु यजमानस्य कामाः ।**

என்பது

உரை

மலட்டு ஆடே! நீ மேலே கூறப்படும் மூவுலகங்களுக்கும்மேலாகிய நான்காவதாக இருக்கின்றாய். நீ இந்திரியத்தை அடக்கியதால் மலடாக இருக்கின்றாய். ஒருமுறை ஆண் சேர்க்கையை விரும்பியதால் உனது வயிற்றில்

கருப்பந்தங்கிற்று. ஆயினும் இரண்டாம்முறை மூன்றாமுறை சினைப்படாமையின் மலடுமானாய். அல்லது வேறுகுட்டியின்மையின் மலடாம். அத்தகைய நீ அவியாய் தேவர்களையடைவாயாக. அதனால் எசமானுடைய விருப்பம் உண்மையுடையனவாகுக என்பதாம்.

---

ஆட்டைக் கொல்லும்போது போற்றுதல்

மந்திரம் 8

**अजाऽसि रयिष्ठा पृथिव्यां सीदोर्ध्वाऽन्तरिक्षमुप तिष्ठस्व दिवि ते बृहद्भाः ।**

என்பது

உரை

ஆடே! நீ, ஆட்டுத்தன்மையாகிய சாதியையுடையதாயிருக்கின்றாய். வடிவில் தேவர்கட்கு அவியென்னுந்தனமாக இருக்கின்றாய். அத்தகைய நீ முதலில் மண்ணில் உட்காருவாவாயாக. அதினின்று மேல் அந்தரிக்கத்தை அடைவாயாக. பிறகு பேரொளியுடன் சுவர்க்கத்திலிருப்பாயாக. இவ்வாறு மூன்றுலகங்களிலும் இருப்பாயாக என்பதாம்.

---

வபையை (ஈரல்ஜவ்வை) ஹோமஞ்செய்தல்

மந்திரம் 9

**तन्तुं तन्वन्रजसो भानुमन्विहि ज्योतिष्मतः पथो रक्ष धिया कृतान् ।**

என்பது

உரை

ஆடே! நீ, இரசவடிவாகிய அவியை வளர்த்துக்கொண்டு சூரியனைப் பின்பற்றுவாயாக. மற்றும், தேடியதும் ஒளியுடையதுமாகிய எமது சுவர்க்க வழியிலிருந்து எம்மைப்பாதுகாப்பாயாக என்பதாம்.

---

ஆட்டின் அங்கங்களை ஹோமஞ்செய்தல்

மந்திரம் 10

**अनुल्बणं वयत जोगुवामपो मनुर्भव जनया दैव्यं जनम् ।**

என்பது

உரை

இதய முதலிய அங்கங்களே! நீங்கள், தடையின்றி அங்கஹோமம் முடிதற்பொருட்டு வேகப்போகின்ற எம்மை கருமங்கட்கு மாறுபடாதவர்களாகச் செய்வாயாக. பசுவே! நீ மநுவைப்போல் உற்பத்திசெய்வதாவாய். ஆதலின், திவ்ய மனிதரைப் படைப்பாயாக. அதாவது இவ்வேள்வித்தலைவனை மறுபிறப்பில் தேவனைப் பிறப்பிப்பாயாக என்பதாம்.

---

ஈந்த அவிகளை அருந்தல்

மந்திரம் 11

**मनसो हविरसि प्रजापतेर्वर्णो गात्राणां ते गात्रभाजो भूयास्म ।**

என்பது

உரை

பசுவே! நீ, மனதால் எண்ணத்தக்க தேவர்களின் அவியாக இருக்கின்றாய். பிரசாபதியின் வடிவாயிருக்கின்றாய். அத்தகைய உனது அங்கங்களை அருந்துவதால் யாம் உறுதியுடைய அங்கங்களை யுடையவர்களாவோமாக என்பதாம்.

இரண்டாம் அநுவாகம்

முற்றிற்று.

---

## மூன்றுங் காண்டம் நான்காம் பிரபாடகம்

## மூன்றுவது அநுவாகம்

ஏழு பஞ்சாதிகட்குமேல் நாற்பத்திரண்டு பதங்களைக்கொண்டது.

காமிய பசுவைக்கொன்று வேட்கும் விதியைக் கூறும் பிராமணங்கள்

**इमे वै सहाऽऽस्तां ते वायुर्व्यवात्ते गर्भमदधातां तꣳ सोमः प्राजनयदग्निरग्रसत स एतं प्रजापतिराग्नेयमष्टाकपालमपश्यत्तं निरवपत्तेनैवैनामग्नेरधि निरक्रीणात्तस्मादप्यन्यदेवत्यामालभमान आग्ने-**

थमष्टाकपालं पुरस्तान्निर्वपेदग्नेरेवैनामधि निष्क्रीयाऽऽ लभते यत् ॥ १ ॥ वायुर्व्यैवात्तस्माद्वायव्या यदिमे गर्भमदधातां तस्माद्द्यावापृथिव्या यत्सोमः प्राजनयदग्निरग्रसत तस्मादग्नीषोमीया यदनयोर्वियत्योर्वागवदत्तस्मात्सारस्वती यत्प्रजापतिरग्नेरधि निरक्रीणात्तस्मात्प्राजपत्या सा वा एषा सर्वदेवत्या यदजा वशा वायव्यामा लभेत भूतिकामो वायुर्वै क्षेपिष्ठा देवता वायुमेव स्वेन ॥ २ ॥ भागधेयेनोप धावति स एवैनं भूतिं गमयति द्यावापृथिव्यामा लभेत कृषमाणः प्रतिष्ठाकामो दिव एवास्मै पर्जन्यो वर्षति व्यस्यामोषधयो रोहन्ति समर्धुकमस्य सस्यं भवत्यग्नीषोमीयामा लभेत यः कामयेतान्नवानन्नादस्स्यामित्यग्निनैवान्नमव रुन्धे सोमेनान्नाद्यमन्नवानेवान्नादो भवति सारस्वतीमा लभेत यः ॥ ३ ॥ ईश्वरो वाचो वदितोस्सन्वाचं न वदेद्वाग्वै सरस्वती सरस्वतीमेव स्वेन भागधेयेनोप धावति सैवास्मिन्वाचं दधाति प्राजापत्यामा लभेत यः कामयेतानभिजितमभि जयेयमिति प्रजापतिस्सर्वा देवता देवताभिरेवानभिजितमभि जयति वायव्ययोपाकरोति वायोरेवैनामवरुध्याऽऽ लभत आकूत्यै त्वा कामाय त्वा ॥ ४ ॥ इत्याह यथायजुरेवैतत्किक्किटाकारं जुहोति किक्किटाकारेण वै ग्राम्याः पशवो रमन्ते प्राऽऽरण्याः पतन्ति यत्किक्किटाकारं जुहोति ग्राम्याणां पशूनां धृत्यै पर्यग्नौ क्रियमाणे जुहोति जीवन्तीमेवैनाꣳ सुवर्गं लोकं गमयति त्वं तुरीया वशिनी वशाऽसीत्याह देवत्रैवैनां गमयति सत्याः

सन्तु यजमानस्य कामा इत्याहैष वै कामः ॥ ५ ॥ यजमानस्य यदनार्तं उदृचं गच्छति तस्मादेवमाहाजाऽसि रयिष्ठेत्याहैष्वेवैनां लोकेषु प्रति ष्ठापयति दिवि ते बृहद्भा इत्याह सुवर्ग एवास्मै लोके ज्योतिर्दधाति तन्तुं तन्वन्रजसो भानुमन्विहीत्याहेमानेवास्मै लोका-ञ्ज्योतिष्मतः करोत्यनुल्बणं वयत जोगुवामप इति ॥ ६ ॥ आह यदेव यज्ञ उल्बणं क्रियते तस्यैवैषा शान्तिर्मनुर्भव जनया दैव्यं जनमित्याह मानव्यो वै प्रजास्ता एवाऽऽद्याः कुरुते मनसो हविर-सीत्याह स्वगाकृत्यै गात्राणां ते गात्रभाजो भूयास्मेत्याहाऽऽशिष-मेवैतामा शास्ते तस्यै वा एतस्या एकमेवादेवयजनं यदालब्धाया-मभ्रः ॥ ७ ॥ भवति यदालब्धायामभ्रस्स्यादप्सु वा प्रवेशयेत्सर्वां वा प्राश्नीयाद्यदप्सु प्रवेशयेद्यज्ञवेशसं कुर्यात्सर्वामेव प्राश्नीयादि-न्द्रियमेवाऽऽत्मन्धत्ते सा वा एषा त्रयाणामेवावरुद्धा संवत्सरसदः सहस्रयाजिनां गृहमेधिनस्त एवैतया यजेरन्तेषामेवैषाऽऽप्ता ॥ ८ ॥

இதில் காமியபசுவைக்கொன்று வேட்கும் விதியைக் கூறுவதில், முதலாவது அப்பசுவைக் கொல்லுவோன் செய்யத்தக்க எட்டுக்கபாலப் புரோடாசத்தை விதித் தற்பொருட்டுப் புகழ்கின்றது

பிராமணம் 1

इमे वै सहाऽऽस्तां ते वायुर्व्यवात्ते गर्भमदधातां तꣳ सोमः प्राजनयदग्नि-रग्रसत स एतं प्रजापतिराग्नेयमष्टाकपालमपश्यत्तं निरवपत्तेनैवैनामग्ने-रधि निरक्रीणात् ।

என்பது

காமியபசு)

உரை

முன்னொருபோது வானும் மண்ணும் ஒன்றுபட்டிருந்தன. அவற்றை வாயு பிரித்துவிட்டது. மீண்டும் அவை வாயுவுடன் கூடிக்கொண்டிருந்தன அப்போது மலட்டு ஆட்டை கருப்பங்கொண்டன. அதை, சோமன் பிறக்கும்படிசெய்தனன். உண்டாகிய இம்மலட்டு ஆட்டை அக்கினி விழுங்கிவிட்டது. பிறகு, அக்கினிக்குப் புரோடாசஞ்செய்துவைத்ததால் அக்கினியிடத்திலிருந்து மலட்டு ஆடு வெளியில் வரப்பெற்றது என்பதாம்.

---

மேற்கூறிய இஷ்டியை விதிக்கின்றது

பிராமணம் 2

तस्माद्ध्यन्यदेवत्यामालभमान आग्नेयमष्टाकपालं पुरस्तान्निर्वपेदग्नेरेवैना-
मधि निष्क्रीयाऽऽलभते ।

என்பது.

உரை.

பிரசாபதியானவர் அக்கினியிடத்திலிருந்து ஆட்டைக்கொண்டுவந்தனர் ஆதலின், அக்கினி, மலட்டு ஆட்டுக்கு வேறு தேவதையாகும். அங்கனமாயினும் எங்கும் ஆட்டைக் கொல்வதற்குமுன் அக்கினிக்குப் புரோடாசத்தைச் செய்தல் வேண்டும். அப்புரோடாசத்தால் அக்கினியிடத்திலிருந்து மலட்டு ஆட்டை எடுத்து அதைக்கொல்வதில் முயன்றவனுகின்ருன் என்பதாம்.

---

பசுவி (ஆட்டி)ன் தேவதையினுடைய சிறப்புக்கூறப்படுகின்றது

பிராமணம் 3

यद्वायुर्व्यवात्तस्माद्वायव्या यदिमे गर्भमदधातां तस्माद्द्यावापृथिव्या य-
त्सोमः प्राजनयदग्निरग्रसत तस्मादग्नीषोमीया यदनयोर्वियत्योर्वागवद-
त्तस्मात्सारस्वती यत्प्रजापतिरग्नेरधि निरक्रीणात्तस्मात्प्राजापत्या सा वा
एषा सर्वदेवत्या यदजा वशा ।

என்பது.

உரை.

கூடியிருந்த வானையும் மண்ணையும் வாயு பிரித்துவிட்டு வாயுவால் கருப்பந் தரித்ததால் வாயுவும், பிறப்பித்ததால் சோமமும், விழுங்கியதால் அக்கினியும் இவ்வாட்டிற்குத் தேவதைகளாகின்றன. வானையும் மண்ணையும் பிரிக்கும்

போது மூங்கிலைப்போல் ஒலியுண்டானதால் ஒலிவடிவாகிய சரசுவதியும் தேவதையாவள். அக்கினியிடத்திலிருந்து வாங்கியதால் பிரசாபதியும் இம் மலட்டு ஆட்டிற்குத் தேவதையாவன் என்பதாம்.

---

அவற்றுள் ஐசுவரியத்தையடைதற் பொருட்டு இன்னதேவதை என்று விதிக்கின்றது

## பிராமணம் 4

**वायव्यामा लभेत भूतिकामो वायुर्वै क्षेपिष्ठा देवता वायुमेव स्वेन भागधेयेनोप धावति स एवैनं भूतिं गमयति ।**

என்பது.

### உரை.

ஐசுவரியத்தை விருப்பியவன் வாயுவின் ஆட்டைக் கொன்று வேள்வி செய்யில், மிகவிரைவில் பயனையளிக்கும் வாயு தேவதை இவனுக்கு ஐசுவரியத்தைக்கொடுக்கின்றது என்பதாம்.

---

பயிரிடுகின்றவன் பயிர்கள் தழைப்ப விரும்பில் இன்னதேவதை என்றுவிதிக்கின்றது

## பிராமணம் 5

**द्यावापृथिव्यामा लभेत कृषमाणः प्रतिष्ठाकामो दिव एवास्मै पर्जन्यो वर्षति व्यस्यामोषधयो रोहन्ति समर्धुकमस्य सस्यं भवति ।**

என்பது

### உரை.

பயிர்கள் தழைத்து வளரவேண்டுமென்று விரும்பியவன், வானுலக மண்ணுலகங்களின் பொருட்டு மேற்கூறிய மலட்டு ஆட்டைக்கொன்று வேட்பானுக. அதனால் வானில் மழைபெய்யும். மண்ணில் பயிர்கள் வளரும். இவ்வாறு இவனுக்கு பயிரின் சம்பத்து நிறைய உண்டாகின்றது என்பதாம்.

---

உணவுப் பொருள் நிறையைடம், அதை அருந்தும் வன்மையையும் விரும்பியவனுக்கு இன்ன தேவதையென்று விதிக்கின்றது

## பிராமணம் 6

**अग्नीषोमीयामा लभेत यः कामयेतान्नवानन्नादस्स्यामित्यग्निनैवान्नमव रुन्धे सोमेनान्नाद्यमन्नवानेवान्नादो भवति ।**

என்பது

காமியபசு)

உரை

உணவுப் பொருளையும் அருந்தும் வன்மையையும் விரும்பியவன், அக்கினி சோமர்களின்பொருட்டு மேற்கூறிய மலட்டு ஆட்டைக்கொன்று வேட்கில் அதனால் களிப்புற்ற அவர்களால் அவ்விரண்டையும் அடைகின்றான் என்பதாம்.

---

அரசன் முதலானோர் சபைகளிலுள்ள சபையோர் இரமிக்கும்படி செய்யும் வாக்கை விரும்பியவனுக்கு இன்னதேவதை என்றுவிதிக்கின்றது

பிராமணம் 7

**सारस्वतीमा लभेत य ईश्वरो वाचो वदितोस्सन्वाचं न वदेद्वाग्वै सरस्वती सरस्वतीमेव स्वेन भागधेयेनोप धावति सैवास्मिन्वाचं दधाति ।**

என்பது

உரை

வேத சாத்திரங்களைக்கற்று பெரும் பேச்சாளனாயிருந்தும் அவையில் பேசுவதற்கு நாவெழாதவன் மேற்கூறிய மலட்டு ஆட்டை, சரசுவதிதேவதையின்பொருட்டுக்கொன்று வேட்கில் அதனாற் களிப்புற்ற சரசுவதிதேவி இவனுக்கு வாக்குவளப்பத்தைக் கொடுக்கின்றாள் என்பதாம்.

---

வேறேதுபாயத்தாலும் அடைய முடியாத பயனையடைய விரும்பியவனுக்கு இன்னதேவதை என்று விதிக்கின்றது

பிராமணம் 8

**प्राजापत्यामा लभेत यः कामयेतानभिजितमभि जयेयमिति प्रजापतिः सर्वा देवता देवताभिरेवानभिजितमभि जयति ।**

என்பது

உரை.

வெல்ல முடியாததை வெல்ல விரும்பியவன் எல்லாத் தேவதைகளின் வடிவாகிய பிரசாபதிக்கு மேற்கூறிய ஆட்டைக்கொன்று வேள்விசெய்யில் எல்லாத் தேவதைகளாலும் வெல்லமுடியாததையும் வெல்கின்றான் என்பதாம்.

'ஆவாயோபூஷக, என்னும் இருக்கை விநியோகப் படுத்துகின்றது

பிராமணம் 9

**वायव्ययोपाकरोति वायोरेवैनामवरुध्याऽऽलभते ।**

என்பது.

உரை.

வாயுவின் ஆட்டை உபாகரணஞ் செய்கின்றவன், வாயுவிற்கே இவ்வாட்டைத்தேடி கொன்று வேட்கின்றவனாகின்றான் என்பதாம்.

---

இனி, ஹோம மந்திரங்களின் விளக்கவுரையைக் கூறுகின்றது

பிராமணம் 10

**आकूत्यै त्वा कामाय त्वेत्याह यथायजुरेवैतत् ।**

என்பது

உரை.

'ஆகூத்யை, என்பது முதலிய மந்திரங்களால் ஹோமஞ்செய்தல் வேண்டுமென்றது அவ்வெசுரிற் சொல்லியவண்ணமேயாம் என்பது.

---

ஆட்டிற்கு விருப்பமாகிய நாவினுற் சீட்டியடிக்கும் ஒலியுடன் ஹோமத்தை விதிக்கின்றது

பிராமணம் 11

**किक्किटाकारं जुहोति किक्किटाकारेण वै ग्राम्याः पशवो रमन्ते प्राऽऽरण्याः पतन्ति यत्किक्किटाकारं जुहोति ग्राम्याणां पशूनां धृत्यै ।**

என்பது.

உரை

'ஆகூத்யை, என்னும் மந்திரத்தை ஓதி நாவினுனியால் சீட்டியடிக்கும் ஒலியைச் செய்துகொண்டு பிறகு ஹோமஞ்செய்தல்வேண்டும். அவ்வொலியால் காட்டு விலங்குகள் ஓடுகினறன. நாட்டுவிலங்குக்களும் விளையாடுகின்றன. ஆதலின் இவ்வொலி நாட்டிலுள்ள பசு எருமை முதலியவைகளின் நலத்தின் பொருட்டாகின்றது என்பதாம்.

---

இவ்வோமத்திற்கு காலம் இதுவென விதிக்கின்றது

பிராமணம் 12

**पर्यग्नौ क्रियमाणे जुहोति जीवन्तीमेवैनाꣳ सुवर्गं लोकं गमयति त्वं तुरीया वशिनी वशाऽसीत्याह देवत्रैवैनां गमयति ।**

என்பது

உரை.

கொள்ளியால் ஆட்டைச் சுற்றும்போது இவ்வோமங்களைச் செய்தல் வேண்டும் செய்யில், உயிருடன் ஆட்டை சுவர்க்கத்திற்கு அனுப்பியதாகும். ஏனெனின்? மந்திரங்களில் மனமுதலானவைகளை பிரசர்பத்தியமுதலியவை களில் ஓமஞ்செய்தல்வேண்டுமெனக் கூறியிருத்தலின் என்க.

---

கொண்டுபோதும் பசுவைத்துதிக்கும் மந்திரத்திலுள்ள, (தேவான்கச்ச) தேவர்களைக்குறித்து அடைவாயாக என்பதன்பொருளை விளக்குகின்றது

பிராமணம் 13

**सत्यास्सन्तु यजमानस्य कामा इत्याहैष वै कामो यजमानस्य यदनार्तं उदृचं गच्छति तस्मादेवमाह ।**

என்பது.

உரை

இவ்வேள்வி, தடையின்றி இனிது முடியவேண்டுமென்பது எசமானனுடைய முக்கிய விருப்பமாம். அது முடிவடைவதால் அப்பயன் உறுதியாய் உண்டாமாதலின் வேட்போனுடைய விருப்பம் உண்மையதாகுக என்று கூறுகின்றான் என்பதாம்.

---

கொல்லும்போது போற்றும் மந்திரத்தில் " மண்ணில் உட்காருவாயாக,, என்பதன்கருத்தை விளக்குகின்றது.

பிராமணம் 14

**अजाऽसि रयिष्ठेत्याहैष्वेवैनां लोकेषु प्रतिष्ठापयति ।**

என்பது.

உரை

நீ ஆடாயிருக்கின்றாய் மண்ணில் உட்காருவாயாக என்றதால், மூன்றுலககங்களிலும் இப்பசு அமர்த்தப்பெற்றதாகின்றது என்பதாம்.

---

மந்திரத்தின்முடிவிலுள்ள பகுதியின்கருத்தை விளக்குகின்றது.

பிராமணம் 15

**दिविते बृहद्भा इत्याह सुवर्ग एवास्मै लोके ज्योतिर्दधाति ।**

என்பது

உரை

சுவர்க்கத்தில் பேரொளி என்றது, இவ்வெசமானன் பொருட்டு சுவர்க்கத்தில் ஒளியை உண்டாக்குகின்றான் என்பதாம்.

---

வபையைஹோமஞ் செய்யும் மந்திரத்திரத்திலுள்ள 'பதः, என்னுஞ்சோல் 'உலகம், என்னும் பொருண் மேல் நிற்கின்றது என்று காட்டுகின்றது

பிராமணம் 16

**तन्तुं तन्वन्रजसो भानुमन्विहीत्याहेमानेवास्मै लोकाञ्ज्योतिष्मतः करोति ।**

என்பது

உரை.

அவியை வளர்த்து ஒளியைப் பெருக்குகின்றது என்றது, இம்மந்திரத்தால் ஹோமஞ்செய்யில் இவன்பொருட்டு உலகங்களை ஒளியுடையவைகளாகச் செய்கின்றான் என்பதாம்.

---

அவியின்ஹோம மந்திரத்தின் கருத்தை விளக்குகின்றது.

பிராமணம் 17

**अनुल्बणं वयत जोगुवामप इत्याह यदेव यज्ञ उल्बणं क्रियते तस्यैवैषा शान्तिः ।**

என்பது.

உரை.

விதியைக்கடந்து செய்யாமை என்றது, விதியைக்கடந்துசெய்த குற்றத்திற்குச் சாந்தியாகின்றது என்பதாம்.

---

அம்மந்திரத்தின் இரண்டாங்கூற்றிலுள்ள 'மநு, என்பதன் கருத்தைக் கூறுகின்றது

பிராமணம் 18

**मनुर्भव जनया दैव्यं जनमित्याह मानव्यो वै प्रजास्ता एवाऽऽद्याः कुरुते ।**

என்பது

உரை

மநுவாகுவாய் என்றது முதலியன, சுவாயம்புவ மநுப்பிரசாபதி வடிவரானதால் அவரால் படைக்கப்பட்டவைகளனைத்தும் மானவ்ய மெனப்படுகின்றன. இம்மந்திரத்தால் அவைகளனைத்தும் போக்கியங்களாக்கப்படுகின்றன என்பதாம்.

---

அவியின் சேடம் வயிற்றிற் சேரும்படிசெய்ம், மன, என்பது எனக்காட்டுகின்றது

பிராமணம் 19

**मनसो हविरसीत्याह स्वगाकृत्यै ।**

என்பது

உரை

மனத்திற்கு அவியாக இருக்கின்றாய் என்றது, சுவகாகாரமாகின்றது. அதாவது வயிற்றில் இனிதுபக்குவப்படுகின்றது எனக்கூறுகின்றது என்பதாம்.

---

மேற்கூறிய மந்திரத்தின் இரண்டாம் பகுதியானது ஆசீர்வாதத்தை மேற்கொண்டதுஎனக் காட்டுகின்றது.

பிராமணம் 20

**गात्राणां ते गात्रभाजो भूयास्मेत्याहाऽऽशिषमेवैतामा शास्ते ।**

என்பது

உரை

அவியையருந்தும் மந்திரத்தில் உடம்புகட்கு அவைகள் என்பது முதவியன சொல்லப்படுதலால் இவனுக்கு அது ஆசீர்வாதமாகின்றது என்பு தாம்.

---

இம் மலட்டு ஆட்டைக் கொன்று வேள்விச் செய்யக்கூடாதநாள் இதுவென, காட்டுகின்றது.

பிராமணம் 21

**तस्यै वा एतस्या एकमेवादेवयजनं यदालब्धायामभ्रो भवति ।**

என்பது.

உரை

வானம் மேகங்களால் மறைக்கப்பட்ட நாளில் இவ்வேள்வி கூடாது. மற்றோ, இன்று மேகங்கள் மறைக்கமாட்டா என்னும் உறுதிப்பாடு உண்டாகத்தக்க நாளில் இம்மலட்டு ஆட்டைக்கொன்று வேள்விசெய்தல்வேண்டும் என்பதாம்.

---

மறதியால் செய்து மேக மறைப்புக்காணில் பிராயச்சித்தத்தைக் கூறுகின்றது

பிராமணம் 22

**यदालब्धायामभ्रस्स्यादप्सु वा प्रवेशयेत्सर्वां वा प्राश्नीयात् ।**

என்பது

உரை.

வேள்வி செய்யத்தொடங்கியபின்னர் மேகங்கள் மூடிக்கொள்ளில், மீந்த அவியை நீரிற் போடல்வேண்டும் என்பது ஒருபட்சம். மீந்த அவிமுழுதையும் அருந்திவிடல் வேண்டுமென்பதே சித்தாந்தம் என்பதாம்.

---

மேற்கூறிய இருவகைகளையுந் தெளிவாக்குகின்றது.

பிராமணம் 23

**यदप्सु प्रवेशयेद्यज्ञवेशसं कुर्यात्सर्वामेव प्राश्नीयादिन्द्रियमेवाऽऽत्मन्धत्ते ।**

என்பது

காமியபசு)

உரை

நீரில் போட்டால் வேள்வி கெடும். முழுதையும் அருந்தில் தன்னிடத்தில் இந்திரியம் நிலைப்படுத்தியதாகின்றது என்பதாம். இது சூத்திரத்திலுங் கூறப்பட்டதாம்.

---

மலட்டு ஆட்டைக்கொன்று வேட்பதற்கு உரிய அதிகாரி இன்னவன் என்று விளக்குகின்றது

பிராமணம் 24

**सा वा एषा त्रयाणामेवावरुद्धासंवत्सरसदस्सहस्रयाजिनो गृहमेधिन-स्त एवैतया यजेरन्तेषामेवैषाऽऽप्ता ।**

என்பது

உரை.

"கவாமயனம் முதலிய" ஒருவருட சத்திரயாகத்தைச் செய்தவன், ஆயிரம பசுக்களைத் தட்சிணை கொடுத்து யாதானுமொரு யாகத்தைச் செய்தவன், ஒருவருடத்திற்குக் குறைந்த நாளில் யாதானுமொரு சத்திரயாகத்தைச செய்தவன என்னும் இமமூவரும் இத்தகைய மலட்டு ஆட்டால் வேள்வி செய்வதற்குரியவர்கள் என்பதாம.

மூன்றும் அநுவாகம்

முற்றிற்று.

---

4 - 5 - 7 மூன்று அநுவாக விடயச்சுருக்கம்

**अथत्रयोदश जयाश्चित्तं चेत्यादयश्श्रुताः ।**

**अग्निरभ्यातानमन्त्रा अष्टादश यथाश्रुताः ॥ १ ॥**

**ऋताराष्ट्रभृतस्तद्वद्द्वाविंशतिरुदीरिताः ।**

நான்காமநுவாகத்தில் ஜெயம் என்னும் பதின்மூன்று மந்திரங்களும், ஐந்தாவதில் பதினெட்டு அப்யாதான மந்திரங்களும், ஆறுவதில், 'இராஷ்ட்ர பிருத், என்னும் இருபத்திரண்டு மந்திரங்களுங கூறப்படுகின்றன. ஈண்டுப் பெரும்பாலும் இம்மூன்று அநுவாகங்களும் ஒன்றாகவே விநியோகப் படுவதால் விடயச் சுருக்கம் ஒன்றாகவே சொல்லப்பட்டது என்றுணர்க.

## மூன்றுங் காண்டம் நான்காம் பிரபாடகம்

### நான்காவது அநுவாகம்

*ஒரு பஞ்சாதிக்குமேல் இருபததைந்து பதங்களைக்கொண்டது.*

'ஜேயம், என்னும் ஹோமமந்திரங்களைக் கூறுவது. இது பகைவரை வெல்லுதற் பொருட்டு செய்யப்படுவது.

चित्तं च चित्तिश्चाऽऽकूतं चाऽऽकूतिश्च विज्ञातं च विज्ञानं च मनश्च शक्करीश्च दर्शश्च पूर्णमासश्च बृहच्च रथंतरं च प्रजापतिर्जयान्निन्द्राय वृष्णे प्रायच्छदुग्रः पृतनाज्येषु तस्मै विशस्समनमन्त सर्वाः स उग्रस्स हि हव्यो बभूव देवासुरास्संयत्ता आसन्त्स इन्द्रः प्रजापतिमुपाधावत्तस्मा एताञ्जयान्प्रायच्छत्तानजुहोत्ततो वै देवा असुरानजयन्यदजयन्तदज्जयानां जयत्वꣳ स्पर्धमानेनैते होतव्या जयत्येव तां पृतनाम् ॥ १ ॥

'ஜேயங்கள்' என்னும் பதின்மூன்று மந்திரங்களைக்கூறுகின்றது

மந்திரங்கள் 1 - 13

चित्तं च चित्तिश्चाऽऽकूतं चाऽऽकूतिश्च विज्ञातं च विज्ञानं च मनश्च शक्करीश्च दर्शश्च पूर्णमासश्च बृहच्च रथंतरं च प्रजापतिर्जयानिन्द्राय वृष्णे प्रायच्छदुग्रः पृतनाज्येषु तस्मै विशस्समनमन्त सर्वास्स उग्रस्स हि हव्यो बभूव ।

என்பது.

உரை.

பொதுவாய் நிருவிகற்ப வுணர்ச்சியாலுணரப்படும் சிகரம் என்னும பொருளும், சித்தி என்னும் நிருவிகற்பஞானமும் எம்பால் உளதாகுக. மற்றும், எண்ணிய பொருளும் எண்ணமும், தெளிந்த பொருளும் தெளிவும் அந்தக் காரணங்களும், கண் முதலிய வெளியிந்திரியங்களின் வன்மையும், தரிசபூரணமாத யாக விசேடங்களும், பிருகத் ரதந்தரங்கள் என்னும் சாமங்களும் எமக்கு உண்டாகுக. போருக்குச் செல்வதில் உக்கிரனாகிய பிரசாபதியானவன் வேண்டியதைப் பொழியும் இந்திரனுக்கு ஜெயத்திற்குக் காரணமான

இம் மந்திரங்களையளித்தனன். அவ்விந்திரன் பொருட்டு பிரசைகளனைவரும் வணக்கஞ் செய்தனர். அவ்விந்திரனும், அப்பிரசைகட்கு நலத்தைக் கற்பிக்கின்றவனுயினன். மற்றும், இந்திரன் பொருட்டு பிரசைகளனைவரும் வணக்கஞ் செய்தனர். அவ்விந்திரனும், அப்பிரசைகட்கு கற்பிக்கின்றவனுயினன். மற்றும், இந்திரன், ஹோமத்திற்குரியவனுமாகி விட்டனன் என்பதாம்.

ஈண்டு, இரண்டு பதங்களைக் கொண்ட மூன்று மந்திரங்களையுடையது. இவற்றுள் பதின்மூன்ருவது மந்திர மாத்திரம் பத்தொன்பது மந்திரங்களைக் கொண்டது. ஒவ்வொரு மந்திரத்திற்கும் சுவாஹா என்னுஞ் சொல்லைச் சேர்த்துக்கொள்ளல் வேண்டும் என்பதையுமுணர்க.

---

மேற்கூறிய மந்திரங்களால் ஹோமத்தைவிதித்தற்பொருட்டுப் புகழ்கின்றது

பிராமணம் 1

**देवासुरास्संयत्ता आसन्त्स इन्द्रः प्रजापतिमुपाधावत्तस्मा एताञ्जयान्प्रायच्छत्तानजुहोत्ततो वै देवा असुरानजयन्यदजयन्तज्जयानां जयत्वम् ।**

என்பது.

உரை.

முன்னர், தேவர்கட்கும் அசுரர்கட்கும் போருண்டானது. அக்கால் இந்திரன் பிரமாவையடைந்து எங்கட்கு வெற்றிவேண்டுமென்று வேண்டினன். அப்போது பிரமன் இம்மந்திரங்களைக் கூறினன். இவற்றைக் கொண்டு அசுரர்களை வென்றமையால் இவைகட்கு ஜெயம் என்று பெயர் என்பதாம்.

---

அதை விதிக்கின்றது

பிராமணம் 2

**स्पर्धमानेनैते होतव्या जयत्येव तां पृतनाम् ।**

என்பது

உரை.

பகைவனையுடையவன் இவ்வோமங்களைச் செய்யில் பகைவனை வெல்கின்ருன் என்பதாம்.

நான்காம் அநுவாகம்

முற்றிற்று.

## மூன்றும் காண்டம் நான்காம் பிரபாடகம்

## ஐந்தாவது அநுவாகம்

ஒருபஞ்சாதிக்கு மேல் பதினேழு பதங்களைக் கொண்டது.

இதில் பகைவரை வசப்படுத்தும் அப்யாதானம் எனனும் ஹோம மந்திரங்கள் கூறப்படுகின்றன.

अग्निर्भूतानामधिपतिस्स माऽवत्विन्द्रो ज्येष्ठानां यमः पृथिव्या वायुरन्तरिक्षस्य सूर्यो दिवश्चन्द्रमा नक्षत्राणां बृहस्पतिर्ब्रह्मणो मित्रः सत्यानां वरुणोऽपाᳲ समुद्रस्स्रोत्यानामन्नᳲ साम्राज्यानामधिपति तन्माऽवतु सोम ओषधीनाᳲ सविता प्रसवानाᳲ रुद्रः पशूनां त्वष्टा रूपाणां विष्णुः पर्वतानां मरुतो गणानामधिपतयस्ते माऽवन्तु पितरः पितामहाः परेऽवरेततास्तता महा इह माऽवत । अस्मिन्ब्रह्मन्नस्मिन्क्षत्रेऽस्यामाशिष्यस्यां पुरोधायामस्मिन्कर्मन्नस्यां देवहूत्याम्

॥ १ ॥

அப்யாதானம் என்னும் மந்திரங்கள்

மந்திரம் 1 - 18

अग्निर्भूतानानधिपतिस्स माऽवत्विन्द्रो ज्येष्ठानां यमः पृथिव्या वायुरन्तरिक्षस्य सूर्यो दिवश्चन्द्रमा नक्षत्राणां बृहस्पतिर्ब्रह्मणो मित्रस्सत्यानां वरुणोऽपाᳲ समुद्रस्स्रोत्यानामन्नᳲ साम्राज्यानामधिपति तन्माऽवतु सोम ओषधीनाᳲ सविता प्रसवानाᳲ रुद्रः पशूनां त्वष्टा रूपाणां विष्णुः पर्वतानां मरुतो गणानामधिपतयस्ते माऽवन्तु पितरः पितामहाः परेऽवरे ततास्ततामहा इह माऽवत । अस्मिन्ब्रह्मन्नस्मिन्क्षत्रेऽस्यामाशिष्यस्यां पुरोधायामस्मिन्कर्मन्नस्यां देवहूत्याम् ।

என்பது.

உரை

இவ்வக்கினி உயிர்களுக்கு இறைவனாகும் அத்தகைய அக்கினி என்னைப் பாதுகாப்பதாகுக. உலகபாலகர்களுக்குட் சிறந்தோனாகியவன் இந்திரன் அத்தகைய அவன் என்னைப்பாது காப்பானாக. இவ்வாறே, பிருதிவி, அந்தரிக்ஷம், சுவர்க்கம், நட்சத்திரம், பிராமணசாதி என்பவைகட்கு இறைவர்களான எமன் என்னும் அக்கினி, வாயு, சூரியன், சந்திரன், பிருகற்பதி என்பவர்களும் என்னைப் பாதுகாப்பார்களாக. மெய்கூறுதலுக்கு இறைவனான மித்திரன், கிணற்றுநீர் முதலியவைகட்கு இறைவனான வருணன், ஓடும் ஆறுகளுக்கு இறைவனான கடல், எல்லாப் பூமிகளையும் ஆளுகின்றவனுடைய போக்கியப் பொருள்களுக்கு இறைவனாகிய அன்னம் என்னுமிவர்கள் என்னைப்பாது காப்பார்களாக. மற்றும், கொடிசெடிகள், அறுக்னை பசு என்பவைகட்கு இறைவர்களான, சோமன், சவிதா, உருத்திரன் என்பவர்கள் எம்மைப் பாதுகாப்பார்களாக. அஃதன்றியும், கோவர்த்தனம் என்பதுமுதலான மலைகட்கு இறைவனாகிய விஷ்ணு ஆதித்தன் வசுக்கள் முதலானகணங்கட்கு இறைவர்களான வசுக்கள் என்பவர்கள் என்னைப் பாதுகாப்பார்களாக. மற்றும், தகப்பன், பாட்டன் என்பவர்களும் என்னைப் பாதுகாப்பார்களாக. நீண்டநாட்பட்ட பிதிர்க்களும், குறைந்தநாட்பட்ட பிதிர்க்களும், இப் பிராமணகுலத்தில், அரசனுடைய ஆசீர்வாதத்திலும் பிரசை பசுமுதலான பயன்களிலும், நேரில் செய்யப்படும் இவ்வநுட்டான கருமத்திலும் தேவர்களை அழைக்கும் விஷயத்திலும் என்னைப் பாதுகாப்பார்களாக. இவற்றையும், என்னையும் பாது காப்பார்களாக என்பதையும் எல்லா மந்திரங்களுடனுஞ் சேர்த்துக் கொள்க என்பதாம்

ஈண்டு இதில், பதினெட்டு மந்திரங்கள் உள்ளன. இவைகளால் பதினெட்டு ஹோமங்கள் செய்தல் வேண்டும். ஈற்றில் ஒவ்வொன்றிற்கும் 'சுவாஹா, என்பதையுஞ் சேர்த்துக் கொள்ளல்வேண்டு மென்பதையு முணர்க

---

## மூன்றுங் காண்டம் நான்காம் பிரபாடம்

## ஆறுவது அநுவாகம்

இரண்டுபஞ்சாதிக்கு மேல் பதினெட்டுப் பதங்களைக் கொண்டது

அப்யாதான (வசீகார) ஹோமங்களை விதிக்கும் பிராமணங்கள்.

**दे॒वा वै यद्य॒ज्ञेऽकु॑र्वत॒ तदसु॑रा अकुर्वत॒ ते दे॒वा ए॒तान॒भ्याता॒ना-न॑पश्यन्ता॒न॒भ्याते॑न्वत॒ यद्दे॒वानां॒ कर्मा॒ऽऽसीदार्ध्य॑त॒ तद्यद॑सु॑राणां॒ न**

तदार्ध्यत येन कर्मणेत्सेत्तत्र होतव्याः ऋध्नोत्येव तेन कर्मणा यद्विश्वे देवास्समभरन्तस्मादभ्याताना वैश्वदेवा यत्प्रजापतिर्जयान्प्रायच्छत्त-स्माज्जयाः प्राजापत्याः ॥ १ ॥ यद्राष्ट्रभृद्भी राष्ट्रमाऽददत तद्राष्ट्र-भृतां राष्ट्रभृत्त्वं ते देवा अभ्यातानैरसुरानभ्यातन्वत जयैरजयन्रा-ष्ट्रभृद्भी राष्ट्रमाददत यद्देवा अभ्यातानैरसुरानभ्यातन्वत तदभ्याता-नानामभ्यातानत्वं यज्जयैरजयन्तज्जयानां जयत्वं यद्राष्ट्रभृद्भी राष्ट्र-माऽददत तद्राष्ट्रभृतां राष्ट्रभृत्त्वं ततो देवा अभवन्पराऽसुरा यो भ्रातृव्यवान्त्स्यात्स एतान्जुहुयादभ्यातानैरेव भ्रातृव्यानभ्यातनुते जयैर्जयति राष्ट्रभृद्भी राष्ट्रमा दत्ते भवत्यात्मना पराऽस्य भ्रातृव्यो भवति ॥ २ ॥

*இதில் அப்யாதான மந்திரங்களின் விதிகூறப்படுகின்றது.*

வசீகார ஹோமஞ்செய்வதற்கு அதைப்புகழ்கின்றது

பிராமணம் 1

**देवा वै यद्यज्ञेऽकुर्वत तदसुरा अकुर्वत ते देवा एतानभ्यातानानपश्यन्ता-नभ्यातन्वत यद्देवानां कर्माऽऽसीदार्ध्यत तद्यदसुराणां न तदार्ध्यत ।**

*என்பது*

உரை

*தேவர்கள் வேள்வியில் எதைச் செய்தார்களோ, அதையே அசுரர்களுஞ் செய்தனர். அதையுணர்ந்து தேவர்கள் அப்யாதானம் (வசீகாரம்) என்னும் மந்திரஹோமங்களைக் கண்டுபிடித்து ஹோமஞ் செய்தனர். அதனால் தேவர்களுடைய வேள்விக்கருமங்கள் நற்பயனையடைந்தன, அசுரர்களின் கருமச் செயல்கள் பயனற்றவைகளாயின என்பதாம்.*

---

அதை விதிக்கின்றது

பிராமணம் 2

**येनकर्मणेर्त्सेत्तत्र होतव्या ऋध्नोत्येव तेन कर्मणा ।**

*என்பது*

உரை

எவன் எக்கருமத்தால் ஐசுவரியத்தை அடைய விரும்புகின்றானோ, அவன் அக்கருமத்தில் இத்தகைய அப்யாதானம் (வசீகாரம்) என்னும் ஹோமங்களைச்செய்தல் வேண்டுமென்பதாம்.

---

பகையுடையவன், ஒன்றயச்செய்யப்படும் ஜெயம், அப்யாதானம், ராஷ்டிர பிருத் என்னும் மூவகைக்கருமங்களிலுஞ் செய்யவேண்டியஹோமத்தை விதிக்கின்றது

பிராமணம் 3

यद्विश्वे देवास्समभरन्तस्मादभ्यातानां वैश्वदेवा यत्प्रजापतिर्जयान्प्राय-च्छत्तस्माज्जयाः प्राजापत्यायद्राष्ट्रभृद्भी राष्ट्रमाऽददत तद्राष्ट्रभृतां राष्ट्रभृत्त्वं ते देवा अभ्यातानैरसुरानभ्यातन्वत जयैरजयन्राष्ट्रभृद्भी राष्ट्र-माऽददत यद्देवा अभ्यातानैरसुरानभ्यातन्वत तदभ्यातानानामभ्या-तानत्वं यज्जयैरजयन्तज्जयानां जयत्वं यद्राष्ट्रभृद्भी राष्ट्रमाऽददत तद्राष्ट्र-भृतां राष्ट्र भृत्त्वं ततो देवा अभवन्पराऽसुराः ।

என்பது.

உரை

எல்லாத்தேவர்களுஞ் சேர்ந்து இந்த அப்யாதான மென்னும் ஹோமத்தைக் கண்டுபிடித்ததால் இது வைசுவதேவமெனப்படும். பிரமன், செயம் என்னும் ஹோமத்தை இந்திரன் பொருட்டு அருளிச்செய்ததால் அது பிராசாபத்தியம் எனப்படும். மேல்எழாமநுவாகத்திற் கூறப்படும் ஹோமம் தேவர்கள் ராஷ்டிர பிருத் என்னும் மந்திரத்தால் அசுரர்களுடைய இராச்சியத்தைக் கைப்பற்றிக் கொண்டார்களாதலின் அது ராஷ்டிர பிருத் எனப்படும். இவ்வாற்றால் அப்யா தான மந்திரஹோமத்தால் அசுரர்களை வசீகரணஞ்செய்து செய என்னும் மந்திரஹோமத்தால் அவர்களுடைய செல்வத்தைக் கெடுத்து, ராஷ்டிரபிருத் என்னும் மந்திரஹோமத்தால் அவர்களுடைய இராஜ்ஜியத்தையுங் கைபற்றிக் கொண்டார்கள். இம்மூன்று வகைகளாக தேவர்கள் வென்றனர் அசுரர்கள் தோற்றனர் என்பதாம்.

---

இனி, அந்த ஹோமத்தைவிதிக்கின்றது

பிராமணம் 4

यो भ्रातृव्यवान्स्यात्स एताञ्जुहुयादभ्यातानैरेव भ्रातृव्यानभ्यातनुते जयैर्जयति राष्ट्रभृद्भी राष्ट्रमा दत्त भवत्यात्मना पराऽस्य भ्रातृव्यो भवति ।

என்பது.

உரை.

பகையையுடையவன், அப்யாதானம், செயம் ராஷ்டிர பிருத் என்னும் மூவகை ஹோமங்களையுஞ் செய்தல் வேண்டும். அவற்றால் முறையே, பகைவனுடைய வசீகரணமும், அவனுடைய பொருள் நாசமும், அவனுடைய இராச்சியப்பிராப்தியும் உண்டாகின்றன என்பதாம்.

ஆறும் அநுவாகம்

முற்றிற்று.

---

## மூன்றுங் காண்டம் நான்காம் பிரபாடகம்

## ஏழாவது அநுவாகம்

இரண்டுபஞ்சாதிகட்கு மேல் நாற்பத்தாறு பதங்களைக் கொண்டது

இதில், ராஷ்டிரபிருத், என்னும் மந்திரங்கள் கூறப்படுகின்றன.

ऋताषाडृतधामाऽग्निर्गन्धर्वस्तस्यौषधयोऽप्सरस ऊर्जो नाम स इदं ब्रह्म क्षत्रं पातु ता इदं ब्रह्म क्षत्रं पान्तु तस्मै स्वाहा ताभ्यः स्वाहा सꣳहितो विश्वसामा सूर्यो गन्धर्वस्तस्य मरीचयोऽप्सरस आयुवस्सुषुम्नस्सूर्यरश्मिश्चन्द्रमा गन्धर्वस्तस्य नक्षत्राण्यप्सरसो बेकुरयो भुज्युस्सुपर्णो यज्ञो गन्धर्वस्तस्य दक्षिणा अप्सरसस्स्तवाः प्रजापतिर्विश्वकर्मा मनः ॥ १ ॥ गन्धर्वस्तस्यर्क्सामान्यप्सरसो वह्नय इषिरो विश्वव्यचा वातो गन्धर्वस्तस्याऽऽपोऽप्सरसो मुदा भुवनस्य पते यस्य त उपरि गृहा इह च । स नो रास्वाज्यानिꣳ रायस्पोषꣳ सुवीर्यꣳ संवत्सरीणाꣳ स्वस्तिम् । परमेष्ठ्यधिपतिर्मृत्युर्गन्धर्वस्तस्य विश्वमप्सरसो भुवस्सुक्षितिस्सुभूतिर्भद्रकृत्सुवर्वा-

ராஷ்டிரபிருத்)

न्पर्जन्यो गन्धर्वस्तस्य विद्युतोऽप्सरसो रुचो दूरेहेतिरमृडयः ॥२॥

मृत्युर्गन्धर्वस्तस्य प्रजा अप्सरसो भीरुवश्चारुः कृपणकाशी कामो

गन्धर्वस्तस्याऽऽधयोऽप्सरसश्शोचयन्तीर्नाम स इदं ब्रह्म क्षत्रं पातु

ता इदं ब्रह्म क्षत्रं पान्तु तस्मै स्वाहा ताभ्यस्स्वाहा स नो भुवनस्य

पते यस्य त उपरि गृहा इह च । उरु ब्रह्मणेऽस्मै क्षत्राय महि

शर्म यच्छ ॥ ३ ॥

ஈண்டு, ராஷ்டிரபிருத் என்னும் இந்தஹோமங்கள் பரியாயங்களால் இருபத்திரண்டு ஆகின்றன. பரியாயங்களும், முதல்பரியாயம் இரண்டாம் பரியாயங்களென இருவகைத்தாம். அவற்றுள் முதலாம் பரியாயங்கள் ஆறனுள்;

---

முதலாவது பரியாயஹோமம்

மந்திரங்கள் 1 - 2

ऋताषाडृतधामाऽग्निर्गन्धर्वस्तस्यौषधयोऽप्सरस ऊर्जो नाम स इदं ब्रह्म क्षत्रं पातु ता इदं ब्रह्म क्षत्रं पान्तु तस्मै स्वाहा ताभ्यस्स्वाहा ।

என்பது

உரை

உண்மையால் பொய்களைக்கெடுக்கும் இடத்தையுடைய ஒரு அக்கினியென்பவன் கந்தருவன் ஆவன். கொடிசெடிகளின் தேவதைகள் அவனுடைய மனைவிகள். அவர்கட்கு ஊர்ச்சர்க்கள் என்று பெயர். அதாவது வன்மையை, அல்லது பிராணனைக் கொடுப்போர்கள் என்பது பொருள். அத்தகைய கந்தருவன், போற்றத்தக்க இக்கருமத்தை, அல்லது அவியைப் பாதுகாப்பானாக. அதாவது பயனையளிக்கும்படி செய்வானாக என்பது கருத்து. அவனுடைய மனைவிகளும் இதைப்பாதுகாப்பார்களாக. அக்கந்தருவனுக்கு இது அர்ப்பணமாகுக. அவனுடைய மனையாள்களுக்கும் இது அர்ப்பணமாகுக என்பதாம்.

---

இரண்டாவது பரியாய ஹோமம்

மந்திரங்கள் 3 - 4

**सꣳहितोविश्वसामा सूर्यो गन्धर्वस्तस्य मरीचयोऽप्सरस आयुवः ।**

என்பது.

உரை

அனைத்தையும் உணர்வதற்குக் காரணமும் எல்லாச் சாமங்கட்கும் இடமாகவும் உள்ள சூரியன் என்னும் பெயர்கொண்டவன் ஒருகந்தருவன். அவனுக்கு ஆயுக்களென்பவர்கள் மனைவிகள்; அதாவது வேகமாய்வருகின்றவர்கள் என்பதாம். மற்றவை முன்போல் .

---

மூன்றும் பரியாய் ஹோமம்

மந்திரங்கள் 5 - 6

**सुषुम्नस्सूर्यरश्मिश्चन्द्रमा गन्धर्वस्तस्य नक्षत्राण्यप्सरसो बेकुरयः ।**

என்பது

உரை

அழகிய முகத்தையும் இரவியின் கிரணம் போன்றகிரணங்களையுமுடைய சந்திரன் என்பவன் ஒருகந்தருவனவன். பேகுரிகள் என்னுநாமங்கொண்ட நக்ஷத்திரங்களைப்போன்ற திருமேனிகளையுடையவர்கள் அவனுடைய மனைவிகள். பேகுரிகள்—மனவெண்ணங்களை மாறுபடுத்துகின்றவர்கள். மற்றவை முன்போல்என்பதாம்.

---

நான்காவது பரியாய ஹோமம்

மந்திரங்கள் 7 - 8

**भुज्युस्सुपर्णो यज्ञो गन्धर्वस्तस्य दक्षिणा अप्सरसस्स्तवाः ।**

என்பது

உரை.

பறவைபோல் வானிற்சஞ்சரிக்கின்றவனும் உலகைப்பாதுகின்றவனுமாகிய 'எக்ஞன், என்னும் பெயர்கொண்டவன் ஒருகந்தருவன். போற்றப்படும் தக்ஷிணைவடிவ தேவதைகள் அவனுடைய மனைவிகள் என்பதாம். மற்றவை முன்போல்.

---

ஐந்தாவது பரியாய ஹோமம்

மந்திரங்கள் 9 - 10

**प्रजापतिर्विश्वकर्मा मनो गन्धर्वस्तस्यर्क्सामान्यप्सरसो वह्नयः ।**

என்பது

உரை

உலகையுண்டாக்குஞ் செயலையுடையதும் பாதுகாக்குந்தன்மையை யுடையதுமாகிய மனம் என்பவன் ஒருகந்தருவன். அவனுடைய மனைவிகள் இருக்குச்சாமதேவதைகள். அவர்கள் அழகு மிக்குடையார்களாதலின் வன்னிகள் எனப்படுகின்றார்கள் என்பதாம். மற்றவை முன்போல்.

---

ஆறாவது பரியாயஹோமம்

மந்திரங்கள் 11 - 12

**इषिरो विश्वव्यचा वातो गन्धर्वस्तस्याऽऽपोऽप्सरसो मुदाः ।**

என்பது

உரை

வேண்டியபொருளை அடைவிப்பதும் உலகமெங்குஞ் செல்வதுமாகிய வாதம் என்பவன் ஒருகந்தருவன். தண்ணீர்த் தேவதைகள் அவனுடைய மனைவிகள். அவர்கள் களிப்புமிக்குடையர்களாதலின் முதர்கள் எனப்படுகின்றார்கள் என்பதாம்.

---

பதின்மூன்றவது ஆகுதியின் பொருட்டு ஏழாம் பரியாயம் ஒன்று கூறப்படுகின்றது

மந்திரம் 13

**भुवनस्य पते यस्य त उपरिगृहा इह च । स नो रास्वाज्यानिꣳ रायस्पोषꣳ सुवीर्यꣳ संवत्सरीणाꣳ स्वस्तिम् ।**

என்பது.

உரை

எல்லாப்புவனங்களேயும் பாதுகாப்போய்! மூவுலகங்களிலும் வீடுகளேயுடைய நீ, எமக்கு வயது குறையாமையைத் தருவாயாக. மற்றும், தன புஷ்டியையும், அழகிய புத்திரனையும், வருடம்வரை வாழ்வதற்குரிய சம்பத்தையுங் கொடுப்பாயாக என்பதாம். மற்றவை முன்போல்

---

இரண்டாம் பரியாயங்கள் ஐந்தனுள் முதலாம்பரியாய ஹோமம்

மந்திரங்கள் 14 - 15

**परमेष्ठ्यधिपतिर्मृत्युर्गन्धर्वस्तस्य विश्वमप्सरसो भुवः ।**

என்பது

உரை.

எல்லாவற்றுள்ளுஞ் சிறந்ததோரிடத்திலிருப்பவனும், மிகுந்த பயனளிக்கின்றவனுமாகிய மிருத்து என்பவன் ஒருகந்தருவன். அவனுக்கு விசுவாபிமானிகள் என்னுந் தேவதைகள் மனைவிகள். எப்போதும் நிலையாயிருக்கின்றவர்களாலிதன் அவர்கள் புவனங்கள் எனப்படுகின்றார்கள் என்பதாம். மற்றவை முன்போன்றன.

---

இரண்டாம் பரியாய ஹோமம்

மந்திரங்கள் 16 - 17

**सुक्षितिस्सुभूतिर्भद्रकृत्सुवर्वान्पर्जन्यो गन्धर्वस्तस्य विद्युतोऽप्सरसो रुचः ।**

என்பது.

உரை

அழகிய வாழுமிடத்தையும், ஐசுவரியத்தையும், எசமானனுக்கு மங்களத்தைசசெய்யுஞ் செயலையும், சுவர்க்கலோக வசமாந்தன்மையையு முடைய பார்ச்சன்யம் (மழை) என்னும் பெயர்பூண்டவன் ஒருகந்தருவன். அவனுக்கு மின்னலாகிய தேவதை மனைவியாவள். அவள் பிரகாசமுடையவளாதலின் ருசி, எனப்படுகின்றாள் என்பதாம்.

மூன்றாம் பரியாய ஹோமம்

மந்திரம் 18 - 19

**दूरेहेतिरमृड्यो मृत्युर्गन्धर्वस्तस्य प्रजा अप्सरसो भीरुवः ।**

என்பது.

உரை.

தூரத்திருப்பவனையுங் கொல்லுதற்குக் கருவியாகிய ஹேதி, என்னும் ஆயுதத்தையுடையவனும், பேரைக்கேட்டவுடன் சுகங்கெட்டுவிடுதலின் 'அமிருடய:' எனப்படுகின்றவனும், மிருத்துவென்னும் பெயர்பூண்டவனுமாகியவன் ஒருகந்தருவன். பிரசாபிமானி தேவதைகள் அவனுடைய மனைவிகள். அவர்கள் மிருத்துவிற்குப் பயப்படுதலின் பீருக்கள் எனப்படுகின்றார்கள் என்பதாம், மற்றவை முன்போன்றன.

---

நான்காம் பரியாய ஹோமம்

மந்திரம் 20 - 21

**चारुः कृपणकाशी कामो गन्धर्वस्तस्याऽऽधयोऽप्सरसश्शोचयन्तीर्नाम स इदं ब्रह्म क्षत्रं पातु ता इदं ब्रह्मक्षत्रं पान्तु तस्मै स्वाहा ताभ्यस्स्वाहा ।**

என்பது

உரை

அழகியபாதத்தை, அல்லது, உடம்பையுடையவனும், இந்திரியப் பொருள்களில் மனத்தைச் செலுத்துவதுமான ஒருவன் கந்தருவன். விடய விருப்பத்தை முன்னிட்டெழும் கிலேசாபிமானி தேவவைகள் அவனுடைய மனைவிகள். அவர்கள் விரும்பிய விடயங்கள் கிடைக்காவிடில் சோகத்தையுண்டாக்குகின்றவர்கள் என்பதாம்.

---

இருபத்திரண்டாவது ஆகுதிக்குச் சாதனமாகிய ஐந்தாம் பரியாய மந்திரம்

மந்திரம் 22

**स नो भुवनस्य पते यस्य त उपरि गृहा इह च । उरु ब्रह्मणेऽस्मै क्षत्राय महि शर्म यच्छ ।**

என்பது.

உரை

எல்லாப் புவனங்களையும் பாதுகாப்போய்! மேலிரண்டு உலகங்களிலும் பூமியிலும் வீடுகளையுடைய நீ, எமக்கு மிகுந்த சுகத்தைக் கொடுப்பாயாக. அவ்வாறே பிராமணகுலத்துடன் கூடிய வன்மையுடையவர்கட்கும் மிகுந்த சுகத்தைக் கொடுப்பாயாக என்பதாம்.

ஏழாம் அநுவாகம்
முற்றிற்று.

---

## மூன்றாங் காண்டம் நான்காம் பிரபாடகம்

## எட்டாவது அநுவாகம்

*ஆறுபஞ்சாதிக்குமேல் நாற்பத்தொன்பது பதங்களைக்கொண்டது.*

இதில், மேற்கூறிய ராஷ்டிரபிருத் மந்திரங்கட்கு காமியப் பிரயோகங்கள் கூறப்படுகின்றன-

राष्ट्रकामाय होतव्या राष्ट्रं वै राष्ट्रभृतो राष्ट्रेणैवास्मै राष्ट्रमव
रुन्धे राष्ट्रमेव भवत्यात्मने होतव्या राष्ट्रं वै राष्ट्रभृतो राष्ट्रं प्रजा
राष्ट्रं पशवो राष्ट्रं यच्छ्रेष्ठो भवति राष्ट्रेणैव राष्ट्रमव रुन्धे वसिष्ठः
समानानां भवति ग्रामकामाय होतव्या राष्ट्रं वै राष्ट्रभृतो राष्ट्रꣳ-
सजाता राष्ट्रेणैवास्मै राष्ट्रꣳ सजातानव रुन्धे ग्रामी ॥ १ ॥ एव
भवत्यधिदेवने जुहोत्यधिदेवन एवास्मै सजातानव रुन्धे त एन-
मवरुद्धा उप तिष्ठन्ते रथमुख ओजस्कामस्य होतव्या ओजो वै
राष्ट्रभृत ओजो रथ ओजसैवास्मा ओजोऽव रुन्ध ओजस्व्येव भवति
यो राष्ट्रादपभूतस्स्यात्तस्मै होतव्या यावन्तोऽस्य रथास्स्युस्ता-
न्ब्रूयाद्युङ्ग्ध्वमिति राष्ट्रमेवास्मै युनक्ति ॥ २ ॥ आहुतयो वा एत-

स्याक्लृप्ता यस्य राष्ट्रं न कल्पते स्वरथस्य दक्षिणं चक्रं प्रवृह्य नाडीमभि जुहुयादाहुतीरेवास्य कल्पयति ता अस्य कल्पमाना राष्ट्रमनु कल्पते सङ्ग्रामे संयत्ते होतव्या राष्ट्रं वै राष्ट्रभृतो राष्ट्रे खलु वा एते व्यायच्छन्ते ये सङ्ग्रामꣳ संयन्ति यस्य पूर्वस्य जुह्वति स एव भवति जयति तꣳ सङ्ग्रामं मान्धुक इध्मः ॥ ३ ॥ भवत्यङ्गारा एव प्रतिवेष्टमाना अमित्राणामस्य सेनां प्रति वेष्टयन्ति य उन्माद्येत्तस्मै होतव्या गन्धर्वाप्सरसो वा एतमुन्मादयन्ति य उन्माद्यत्येते खलु वै गन्धर्वाप्सरसो यद्राष्ट्रभृतस्तस्मै स्वाहा ताभ्यस्स्वाहेति जुहोति तेनैवैनाञ्छमयति नैयग्रोध औदुम्बर आश्वत्थः प्लाक्ष इतीध्मो भवत्येते वै गन्धर्वाप्सरसां गृहास्स्व एवैनान् ॥ ४ ॥ आयतने शमयत्यभिचरता प्रतिलोमꣳ होतव्याः प्राणानेवास्य प्रतीचः प्रति यौति तं ततो येन केन च स्तृणुते स्वकृत इरिणे जुहोति प्रदरे वैतद्वा अस्यैनिर्ऋतिगृहीतं निर्ऋतिगृहीत एवैनं निर्ऋत्या ग्राहयति यद्वाचः क्रूरं तेन वषट्करोति वाच एवैनं क्रूरेण प्र वृश्चति ताजगार्तिमार्छति यस्य कामयेतान्नाद्यम् ॥ ५ ॥ आ ददीयेति तस्य सभायामुत्तानो निपद्य भुवनस्य पत इति तृणानि सं गृह्णीयात्प्रजापतिर्वै भुवनस्य पतिः प्रजापतिनैवास्यान्नाद्यमा दत्त इदमहममुष्याऽऽमुष्यायणस्यान्नाद्यꣳ हरामीत्याहान्नाद्यमेवास्य हरति षड्भिर्हरति षड्वा ऋतवः प्रजापतिनैवास्यान्नाद्यमादायर्तवोऽ-

सा अनु प्र यच्छन्ति ॥ ६ ॥ यो ज्येष्ठबन्धुरपभूतस्स्यात्तꣳ स्थलेऽवसाय्य ब्रह्मौदनं चतुश्शरावं पक्त्वा तस्मै होतव्यां वर्ष्म वै राष्ट्रभृतो वर्ष्म स्थलं वर्ष्मणैवैनं वर्ष्म समानानां गमयति चतुश्शरावो भवति दिक्ष्वेव प्रति तिष्ठति क्षीरे भवति रुचमेवास्मिन्दधात्युद्धरति शृतत्वाय सर्पिष्वान्भवति मेध्यत्वाय चत्वार आर्षेयाः प्राश्नन्ति दिशामेव ज्योतींषि जुहोति ॥ ७ ॥

அவற்றுள் முதலாவது பிரயோகத்தை விதிக்கின்றது

பிராமணம் 1

राष्ट्रकामाय होतव्या राष्ट्रं वै राष्ट्रभृतो राष्ट्रेणैवास्मै राष्ट्रमव रुन्धे राष्ट्रमेव भवति ।

என்பது

உரை.

*முற் கூறிய 'ராஷ்டிரபிருத்' என்னும் மந்திரங்கள் இராச்சியத்தை அடைதற்குக் காரணமாயிருத்தலின் ராஷ்டிரம் (இராச்சியம்) என்று உபசாரமாய்க் கூறப்படுகின்றன. ஆதலின், அம்மந்திர ஹோமமாகிய இராச்சியத்தால் எசமானன்பொருட்டு வேட்போன் பூமிவிசேடமாகிய இராச்சியத்தைத் தேடுகின்றான். அவ்வெசமானனும் இராச்சியத்தை அடைகின்றான். ஆதலின், இராச்சியத்தைப் பெறவிருப்புடையான் இம்மந்திரங்களால் ஹோமங்களைச் செய்தல்வேண்டுமென்பதாம்.*

---

மக்கள் பசுமுதலானவைகளால் தன்னைப் பெருமைப்படுத்திக் கொள்வதற்கும் மேற்கூறிய மந்திரங்களால் ஹோமத்தை விதிக்கின்றது

பிராமணம் 2

आत्मने होतव्या राष्ट्रं वै राष्ट्रभृतो राष्ट्रं प्रजा राष्ट्रं पशवो राष्ट्रं यच्छ्रेष्ठो भवति राष्ट्रेणैव राष्ट्रमव रुन्धे वसिष्ठस्समानानां भवति ।

என்பது.

அதன் காமியப் பிரயோகம்)

உரை.

பூமிவிசேடமாகிய இராச்சியமிருந்தும் சிறந்த மக்கள் பசுமுதலியவை களின்றேல் போகம் இனிது அமையாமையின் பிரசைமுதலியவைகளும் இராச்சியமெனப்படுகின்றன. ஆதலின் ராஷ்டிரபிருத் மந்திரங்களால் வேட்பானுக. அவைகளால் வரும் மக்கள்முதலானவைகளால் மேம்பாட்டையடைகின்றான். அடைந்தபோது ஏனையோர்களினுஞ் சிறப்பாய் வாழுகின்றான் என்பதாம்.

---

கிராமத்தை அடைதற் பொருட்டு அவ்வோமத்தை விதிக்கின்றது

பிராமணம் 3

**ग्रामकामाय होतव्या राष्ट्रं वै राष्ट्रभृतो राष्ट्र९ सजाता राष्ट्रेणैवास्मै राष्ट्र९ सजातानव रुन्धे ग्राम्येव भवति ।**

என்பது

உரை

தன்னுடன்பிறந்தாரும் ஒருகிராமத்தில் வாழ்கின்றவர்களும் கூடப் பிறந்தோர்களாவார்கள். அவர்களிருக்கில் இராச்சியம் நிறைந்ததாகின்றது. ஆதலின், அத்தகைய இராச்சியத்தையடைய ராஷ்டிரபிருத் மந்திரத்தால் ஓமஞ்செய்யில் முழு இராச்சியத்தையும் அடைகின்றான். இவனும் கிராமத்திற்குத்தலைவனுகின்றான் என்பதாம்.

---

மேற்கூறிய ஹோமஞ்செய்யுமிடத்தை விதிக்கின்றது

பிராமணம்

**अधिदेवने जुहोत्यधिदेवन एवास्मै सजातानव रुन्धे त एनमवरुद्धा उप तिष्ठन्ते ।**

என்பது.

உரை

சதுரங்கம் ஆடுமிடத்தில் மேற்கூறிய ஹோமத்தைச்செய்யில் அங்குள்ள உடன்பிறந்தார்கள் இவனது வசமாகின்றார்கள். வசம் ஆகி இவனை வழிபடுகின்றார்கள் என்பதாம்.

---

ஆற்றலையடைதற்பொருட்டு அவ்வோமத்தை விதிக்கின்றது

பிராமணம் 5

**रथमुख ओजस्कामस्य होतव्या ओजो वै राष्ट्रभृत ओजो रथ ओजसै-**
**वास्मा ओजोऽव रुन्ध ओजस्व्येव भवति ।**

என்பது

உரை.

இரதத்தின் முடியை தீயின்மேற் பிடித்துக்கொண்டு அதில் ஹோமஞ் செய்தல் வேண்டும். ராஷ்டிரபிருத் மந்திரங்களும் இரதமும் வேள்விக்குக் காரணமாதலின் ஆற்றலையுடையதாம். ஆதலின், அவ்விருவகை ஆற்றலினாலே எசமானனுக்கு ஆற்றலையுண்டாக்குகின்றான். இதனால் அவன் ஆற்றலுடையவனா கின்றான் என்பதாம்.

---

இராச்சியத்தையிழந்தவன் மீண்டும் அதையடைதற்பொருட்டு இவ்வோமத்தை விதிக்கின்றது

பிராமணம் 6

**यो राष्ट्रादपभूतस्स्यात्तस्मै होतव्या यावन्तोऽस्य रथास्स्युस्तान्ब्रूयाद्युङ्-**
**ग्ध्वमिति राष्ट्रमेवास्मै युनक्ति ।**

என்பது

உரை

இராச்சியத்திலிருந்தும் விலகியவன் இந்த ஹோமங்களைச்செய்தல் வேண்டும். மற்றும், அவனுக்கு எத்தனை இரதங்களிருக்கின்றனவோ, அவ்விரதங்களனைத்தையும் பூட்டுவீர்களாக, என்று ஏவுதலும்வேண்டும். இதனால் போனராச்சியம் மீண்டும் வருகின்றது என்பதாம்.

---

இராச்சியத்தையடைந்தும் அது விருப்பிற்கு இசைந்து வராவிடில் ஒரு பிரயோக விசேடத்தை விதிக்கின்றது

பிராமணம் 7

**आहुतयो वा एतस्याक्लृप्ता यस्य राष्ट्रं न कल्पते स्वरथस्य दक्षिणं चक्रं**
**प्रवृह्य नाडीमभि जुहुयादाहुतीरेवास्य कल्पयति ता अस्य कल्पमाना**
**राष्ट्रमनु कल्पते ।**

என்பது

உரை.

முற்கூறிய ஆகுதிகள் காரியத்தைச்செய்ய வன்மையற்றவளாய்விடில் இரதத்தின் வலது சக்கரத்தைக்கழட்டி தீயின்மீதுபிடித்துக்கொண்டு அதன் இரிசிக்கட்டைத் துளேயில் ஓமஞ்செய்தல்வேண்டும். அவ்வாறுசெய்த ஆகுதிகள் ஒன்றைச் செய்யும் வலுவுடையவைளாகின்றன. ஆகவே இராச்சியம் அவனுடைய போகத்திற்கு அநுகூலமாகும்படி செய்கின்றன. ஆதலின் இவ்வாகுதிகள் அநுராஷ்டிரங்கள் எனப்படுகின்றன என்பதாம்.

---

போரிடத்தொடங்கியபோது வெற்றியை விரும்பியவனுக்கு ஹோமத்தை விதிக்கின்றது

பிராமணம் 8

सङ्ग्रामे संयत्ते होतव्या राष्ट्रं वै राष्ट्रभृतो राष्ट्रं खलु वा एते व्याय-च्छन्ते ये सङ्ग्रामꣳ संयन्ति यस्य पूर्वस्य जुह्वति स एव भवति जयति तꣳ सङ्ग्रामम्।

என்பது.

உரை.

இராச்சியத்தை முன்னிட்டுப் போரிடத் தொடங்கினவர்களுக்குள் முதலில் ஹோமஞ்செய்யத் தொடங்கியவன் ராஷ்டிரபிருத் ஹோமங்களைச் செய்தல்வேண்டும். அவ்வாறு செய்தவன் வன்மை மிக்குடையானுகின்றான். ஏனையோன் இவன் வன்மையடைந்ததால் போரில் வெற்றியடைகின்றான் என்பதாம்.

---

மேலேகூறிய அக்கினியை வளர்ப்பதற்கு ஒரு விறகு விசேடத்தைக் கூறுகின்றது

பிராமணம் 9

मान्धुक इध्मो भवत्यङ्गारा एव प्रतिवेष्टमाना अमित्राणामस्य सेनां प्रति वेष्टयन्ति ।

என்பது

உரை.

மதூகமரத்தி (இலுப்பையி)ன் விறகால் தனியே அக்கினி வளர்த்து ஓமஞ்செய்தல்வேண்டும். அத்தீயே, எசமானனுடைய சேனையில் அக்கினியால் வருங் கேட்டை உண்டாக்குகின்றது. அதாவது, பகைவர்களுடைய உடம்புகளில் காய்ச்சல் முதலானவைகளை உண்டாக்குகின்றது என்பதாம்.

பயித்தியம் நீங்ுவதற்கு இவ்வோமத்தை விதிக்கின்றது

பிராமணம் 10

**य उन्माद्येत्तस्मै होतव्या गन्धर्वाप्सरसो वा एतमुन्मादयन्ति य उन्माद्यत्येते खलु वै गन्धर्वाप्सरसो यद्राष्ट्रभृतस्तस्मै स्वाहा ताभ्यस्स्वाहेति जुहोति तेनैवैनाञ्छमयति ।**

என்பது.

உரை

பயித்தியங்கொண்டவன், கந்தருவர் முதலான தேவர்களால் பிடிக்கப் பட்டவன். ஆதலின் ராஷ்டிரபிருத் மந்திரஹோமங்களைச் செய்வார்களாக ஏனெனின்? ராஷ்டிரபிருத் ஹோமங்களும், கந்தருவனைக் குறித்து அவனுக்கு இது அர்ப்பணமாகுக எனவும், அப்சரஸ்திரீகளைக்குறித்து அவர்கட்கு இது அர்ப்பணமாகுக எனவும் ஓமங்கள் செய்யப்படுவதாமாதலின் என்க. இதனால் பயித்தியம் நீங்கிவிடுகின்றன என்பதாம்.

---

இதிலும் முன்போல் அக்கினியைவளர்ப்பதற்கு கற்பித்த விறகு விசேடங்களைக் காட்டுகின்றது.

பிராமணம் 11

**नैयग्रोध औदुम्बर आश्वत्थः प्लाक्ष इतीध्मो भवत्येते वै गन्धर्वाप्सरसां गृहास्स्व एवैनानायतने शमयति ।**

என்பது.

உரை.

ஆல், அத்தி, அரசு, கல்லால் என்பவைகளுள் ஒன்றால் அக்கினியை வளர்த்தல்வேண்டும். இவைகள் கந்தருவ அப்சரசர்களுக்கு வீடுகள் போன்றன. இதனால் இவை தமது இடங்களிலேயே பயித்தியத்தை நீக்குகின்றன என்பதாம்.

---

மாரணஞ்செய்தற்பொருட்டு இவ்வோமத்தை விதிக்கின்றது

பிராமணம் 12

**अभिचरता प्रतिलोमꣳ होतव्याः प्राणानेवास्य प्रतीचः प्रति यौति तं ततो येन केन च स्तृणुते ।**

என்பது.

உரை.

*மாரணஞ்செய்யவேண்டியவன் இவ்வோமங்களைத் தலைகீழாகச் செய்தல் வேண்டும். அது எதிரியின் பிராணனைத் தலைகீழாக மாற்றிவிடுகின்றது, மாற்றின பிறகு அவனைக் கொல்லுவது மிக எளிது என்பதாம்.*

---

மேற்கூறிய ஹோமத்திற்கு இடம் இதுவென விதிக்கின்றது

பிராமணம் 13

**स्वकृत इरिणे जुहोति प्रदरे वैतद्वा अस्यै निर्ऋतिगृहीतं निर्ऋतिगृहीत एवैनं निर्ऋत्या ग्राहयति यद्वाचः क्रूरं तेन वषट्करोति वाच एवैनं क्रूरेण प्र वृश्चति ताजगार्तिमार्छति ।**

*என்பது*

உரை

*இயற்கையாகிய உவர்ப்பூமி, பள்ளமாகிய பூமி என்னும் இவ்விரண்டும் நிருதி என்னுந் தேவதையாற் பிடிக்கப்பெற்ற இடங்களாகின்றன. அங்கு இவ்வோமத்தைச்செய்யில் நிருதி தேவதையால் பகைவன் பிடிக்கப்பட்டவனாகின்றான். மற்றும், வஷட் என்பதற்கு பதிலாக தீயசொல்லால் பகைவன் வெட்டப் பட்டவனுமாகின்றான். ஆதலின், அவன் விரைவில் துன்புறுகின் கின்றான் என்பதாம்.*

*ஈண்டுத் தீயசொல் என்பதால், அருணம் நான்காம் பிரபாடகத்திலுள்ள கட், பட், என்பது முதலியசொற்களுள் ஒன்று கொள்ளற்பாலது என்பதையுமுணர்க.*

---

பிறருடைய உணவுப்பொருளை அபகரிப்பதற்கும், ஒரு விசேடப் பிரயோகத்தை விதிக்கின்றது

பிராமணம் 14

**यस्य कामयेतान्नाद्यमा ददीयेति तस्य सभायामुत्तानो निपद्य भुवनस्य पत इति तृणानि सं गृह्णीयात्प्रजापतिर्वै भुवनस्य पतिः प्रजापतिनैवा-स्यान्नाद्यमा दत्ते ।**

*என்பது*

உரை

பிறருடைய அன்னப்பொருள்களை அபகரிப்பதற்கு விருப்புடையவன் பகைவனுடைய சபையில், அல்லது, பசுக்கட்டு மடத்தில் ஒருவரும் பார்க்காதபடி சென்று மேல்முகமாய்ப் படுத்துக்கொண்டு ஏழாம் பரியாயத்தின் மந்திரமாகிய 'புவனஸ்ய' என்பது முதலிய மந்திரத்தால் அங்கேயே உண்டாகிய, அல்லது அங்குக் கிடக்கும் புல்லுகளை எடுத்துக்கொள்ளல்வேண்டும். இதனால் புவனத்திற்குபதி' என்பதால் பிரமாவின் வாயிலாக பிறருடைய உணவுப்பொருளை அபகரித்துக்கொண்டவனாகின்றான் என்பதாம்.

---

எடுத்தபுல்லை, தனது வீட்டிற்குக்கொண்டு வருதல்

பிராமணம் 15

इदमहममुष्याऽऽमुष्यायणस्यान्नाद्यꣳ हरामीत्याहान्नाद्यमेवास्य हरति ।

என்பது.

உரை

இன்னானுடைய உணவுப்பொருளை இந்த நான் கொண்டுவருகின்றேன் என்று அவன் பெயரையும் அவனுடைய தகப்பன் பெயரையுங் கூறிக் கொண்டு தனது வீட்டிற்குக் கொண்டுவரல் வேண்டும் என்பதாம்.

---

கொண்டுவரும் மந்திரங்கள் இத்தனை என்னுந் தொகையை விதிக்கின்றது

பிராமணம் 16

षड्भिर्हरति षड्वा ऋतवः प्रजापतिनैवास्यान्नाद्यमादायर्तवोऽस्मा अनु प्र यच्छन्ति ।

என்பது.

உரை.

'புவனஸ்ய, என்பதை ஈறாகவுடைய ஆறுபரியாய மந்திரங்களால் அப் புல்லுக்களைக்கொண்டு வரல்வேண்டும். கொண்டுவந்து தனது புல்லுடன் சேர்த்துக்கொள்ளல்வேண்டும். இருதுக்கள் ஆறானதால் அவர்கள் பிரசாபதி வாயிலாக பிறருடைய உணவுப்பொருள்களைக்கொண்டுவந்து விடுகின்றார்கள் என்பதாம்.

அதன் காமியப் பிரயோகம்)

பிறரால் பயமடைந்தவன் அதை நீக்குதற்கு மற்றொரு கருமத்தை விதிக்கின்றது

பிராமணம் 17

**योज्येष्ठबन्धुरपभूतस्स्यात्तᳫ स्थलेऽवसाय्य ब्रह्मौदनं चतुश्शरावं पक्त्वा तस्मै होतव्या वर्ष्मं वै राष्ट्रभृतो वर्ष्म स्थलं वर्ष्मणैवैनं वर्ष्म समानानां गमयति ।**

என்பது

உரை

சுற்றத்தார்கள் உயர்ந்தோர்களாயிருந்தும் தான் மாத்திரம் தாழ்ந்த நிலையிலிருப்பதோடு அவர்களால் தள்ளிவைக்கப்பட்டவனுமானவன் உயரமாயுள்ள ஒருபூமியை யடைந்து நான்கு மடக்கு அரிசியால் பிராமணர்கட்கு பொங்கல்செய்து, தள்ளிவைத்தவனைச் சேர்த்துக்கொள்ளுதற்பொருட்டு அவ்வன்னத்தால் ராஷ்டிரபிருத் ஓமங்களைச் செய்தல்வேண்டும். அதனால் அப்பூமி, அவ்வேள்வித்தலைவனை, சுற்றத்தார்களனைவர்க்குள்ளுஞ் சிறப்புடையவனாகச் செய்கின்றது என்பதாம்.

மண்மடக்கு இத்தனை எனப்புகழ்கின்றது

பிராமணம் 18

**चतुश्शरावो भवति दिक्ष्वेव प्रति तिष्ठति ।**

என்பது

உரை

திக்குக்கள் நான்காம் ஆதலின் நான்கு மடக்கு அரிசியால் பொங்கல் செய்தலால் நான்குதிசைகளிலும் பெருமையுண்டாகின்றது என்பதாம்.

என்ன பொங்கல் செய்வது என்பதை விதிக்கின்றது.

பிராமணம் 19

**क्षीरे भवति रुचमेवास्मिन्दधाति ।**

என்பது

உரை

பாற்பொங்கல் செய்தல்வேண்டும். அது பாற்சுவையை யுண்டாக்குகின்றது என்பதாம்.

வெந்தபின் கரண்டியில் எடுத்தல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம் 20

**उद्धरति शृतत्वाय ।**

என்பது.

உரை

பக்குவமாதற்பொருட்டு எடுத்துவைத்துவிடல்வேண்டுமென்பதாம்.

---

சமைத்தபின் நெய்விடுதலை விதிக்கின்றது

பிராமணம் 21

**सर्पिष्वान्भवति मेध्यत्वाय ।**

என்பது

உரை.

சுத்தியாதற்பொருட்டு நெய்யைவிடல்வேண்டுமென்பதாம்.

---

எஞ்சியதை நான்கு அந்தணர்கள் அருந்தல் வேண்டும் எனவிதிக்கின்றது

பிராமணம் 22

**चत्वारआर्षेयाः प्राश्नन्ति दिशामेव ज्योतिषि जुहोति ।**

என்பது.

உரை.

நான்குதிக்குக்களிலுள்ள அக்கினிகள் போன்றவர்கள் இந்நான்கு பிராமணர்களுமாவர்கள் ஆதலின் அவர்கள் அருந்தில் அக்கினியில் ஹோமஞ்செய்தாகின்றது என்பதாம்.

எட்டாம் அநுவாகம்

முற்றிற்று.

---

## மூன்றும் காண்டம் நான்காம் பிரபாடகம்

### ஒன்பதாவது அநுவாகம்

*ஏழு பஞ்சாதிக்குமேல் ஒன்பது பதங்களைக் கொண்டது.*

தேவிகா அவிகளைக் கூறும் பிராமணங்கள்.

देविका निर्वपेत्प्रजाकामश्छन्दांसि वै देविकाश्छन्दांसीव खलु वै प्रजाश्छन्दोभिरेवास्मै प्रजाः प्र जनयति प्रथमं धातारं करोति मिथुनी एव तेन करोत्यन्वेवास्मा अनुमतिर्मन्यते राते राका प्र सिनीवाली जनयति प्रजास्वेव प्रजातासु कुह्वा वाचं दधात्येता एव निर्वपेत्पशुकामश्छन्दांसि वै देविकाश्छदांसि ॥ १ ॥ इव खलु वै पशवश्छन्दोभिरेवास्मै पशून्प्र जनयति प्रथमं धातारं करोति प्रैव तेन वापयत्यन्वेवास्मा अनुमतिर्मन्यते राते राका प्र सिनीवाली जनयति पशूनेव प्रजातान्कुह्वा प्रति ष्ठापयत्येता एव निर्वपेद्ग्राम-कामश्छन्दांसि वै देविकाश्छन्दांसीव खलु वै ग्रामश्छन्दोभिरे-वास्मै ग्रामम् ॥ २ ॥ अव रुन्धे मध्यतो धातारं करोति मध्यत एवैनं ग्रामस्य दधात्येता एव निर्वपेज्ज्योगामयावी छन्दांसि वै देविकाश्छन्दांसि खलु वा एतमभि मन्यन्ते यस्य ज्योगामयति छन्दोभिरेवैनमगदं करोति मध्यतो धातारं करोति मध्यतो वा एत-स्याक्लृप्तं यस्य ज्योगामयति मध्यत एवास्य तेन कल्पयत्येता एव निः ॥ ३ ॥ वपेद्यं यज्ञो नोपनमेच्छन्दांसि वै देविकाश्छ-न्दांसि खलु वा एतं नोप नमन्ति यं यज्ञो नोपनमति प्रथमं धातारं करोति मुखत एवास्मै छन्दांसि दधात्युपैनं यज्ञो नम-

त्येता एव निर्वपेदीजानश्छन्दाꣳसि वै देविका यातयामानीव खलु वा एतस्य छन्दाꣳसि य ईजान उत्तमं धातारं करोति ॥ ४ ॥ उपरिष्टादेवास्मै छन्दाꣳस्ययातयामान्यव रुन्ध उपैनमुत्तरो यज्ञो नमत्येता एव निर्वपेद्यं मेधा नोपनमेच्छन्दाꣳसि वै देविकाश्छन्दाꣳसि खलु वा एतं नोप नमन्ति यं मेधा नोपनमति प्रथमं धातारं करोति मुखत एवास्मै छन्दाꣳसि दधात्युपैनं मेधा नमत्येता एव निर्वपेत् ॥ ५ ॥ रुक्कामश्छन्दाꣳसि वै देविकाश्छन्दाꣳसीव खलु वै रुक्छन्दोभिरेवास्मिन्रुचं दधाति क्षीरे भवन्ति रुचमेवास्मिन्दधति मध्यतो धातारं करोति मध्यत एवैनꣳ रुचो दधाति गायत्री वा अनुमतिस्त्रिष्टुग्राका जगती सिनीवाल्यनुष्टुप्कुहूर्धाता वषट्कारः पूर्वपक्षो राकाऽपरपक्षः कुहूरमावास्या सिनीवाली पौर्णमास्यनुमतिश्चन्द्रमा धाताऽष्टौ ॥६॥ वसवोऽष्टाक्षरा गायत्र्येकादश रुद्रा - एकादशाक्षरा त्रिष्टुब्द्वादशाऽऽदित्या द्वादशाक्षरा जगती प्रजापतिरनुष्टुब्धाता वषट्कार एतद्वै देविकास्सर्वाणि च छन्दाꣳसि सर्वाश्च देवता वषट्कारस्ता यत्सह सर्वा निर्वपेदीश्वरा एनं प्रदहो द्वे प्रथमे निरुप्य धातुस्तृतीयं निर्वपेत्तथो एवोत्तरे निर्वपेत्तथैनं न प्र दहन्त्यथो यस्मै कामाय निरुप्यन्ते तमेवाऽऽभिरुपाऽऽप्नोति ॥ ७ ॥

...ண்டு, இராசசூயப் பிரகரணத்திற்றோன்றின, "தாத்ரே புரோடாசம் என்பது முதலிய ஐவகை தேவிகா அவிகளைச் சிறப்பாகக் கூறிவிட்டு, அவற்றின் பல்வகையான காமியப் பிரயோகங்களையுங் கூறுகின்றது.

அவற்றுள் ஒருபிரயோகத்தை விதிக்கின்றது

பிராமணம் 1

**देविका निर्वपेत्प्रजाकामश्छन्दाꣳसि वै देविकाश्छन्दाꣳसीव खलु वै प्रजा-श्छन्दोभिरेवास्मै प्रजाः प्र जनयति ।**

என்பது

உரை.

பயனை விளக்குவதால் தாதாமுதலான ஐந்து இஷ்டிகளுக்கும் தேவிகாக்கள் என்றுபெயர் அநுமதி முதலியவைகள் பெண்வடிவுடையவைகளாதல் பற்றி தேவிகளாகின்றன. அவைகளைப் பற்றியவைகளாதலின் இவைகளும் தேவிகளையுடையவைகள் எனப்பட்டன. அநுமதி முதலியன சந்தவடிவங்களாம் அதைப்பற்றி தேவிகாக்களும் சந்தவடிவுடையவைகளாயின. சந்தங்கள் பயனுக்குக்காரணங்களாதலின் சுகத்தைச்செய்வன. இவ்வாறே, பிரசைகளும் சுகத்திற்குக் காரணங்களாதலின் சந்தங்கட்கு ஒப்பானவைகளே. இதனால், தேவி காக்கள் சந்தவடிவங்களாலேயே எசமானன்பொருட்டு பிரசையை உண்டாக்கு கின்றார்கள் என்பதாம்.

---

தாதா, முதலான ஐவர்கட்கும் மகவை உண்டுபண்ணுவதிற் காணப்படும் குண சம்பந்தத்தை விளக்குகின்றது

பிராமணம் 2

**प्रथमं धातारं करोति मिथुनी एव तेन करोत्यन्वेवास्मा अनुमतिर्मन्यते राते राका प्र सिनीवाली जनयति प्रजास्वेव प्रजातासु कुह्वा वाचं दधाति ।**

என்பது

உரை

ஐந்து தேவதைகளுக்குள் 'தாதா, என்னுந் தேவதையை முதலாவதாகச் செய்க' என்றதால் அது எசமானனை, தனது மனைவியுடன் புணரச்செய்கின்றது. அநுமதி என்னும் தேவதை அப்புணர்ச்சியை உடன்பட்டுக்கொள்கின்றது. ராகா என்னுந் தேவதை குழந்தையைக்கோருகின்றது. சினிவாலி என்னுந் தேவதை கருப்பத்திலுள்ள குழந்தையைப் பிறக்கும்படிசெய்கின்றது. குஹூ என்னுந்தேவதை பிறந்தகுழந்தையைப் பேசும்படி செய்விக்கின்றது என்பதாம்.

---

மற்றொரு பயனைக்குறித்து விதிக்கின்றது

## பிராமணம் 3

एता एव निर्वपेत्पशुकामश्छन्दाꣳसि वै देविकाश्छन्दाꣳसीव खलु वै पशवश्छन्दोभिरेवास्मै पशून्प्र जनयति प्रथमं धातारं करोति प्रैव तेन वापयत्यन्वेवास्मा अनुमतिर्मन्यते राते राका प्र सिनीवाली जनयति पशूनेव प्रजातान्कुह्वा प्रतिष्ठापयति ।

என்பது

### உரை.

பசுக்களை விரும்பியவன் இவைகட்கு நெல்லெடுத்துப் புரோடாசஞ் செய்து வேட்கவும். தேவிகாக்கள் சந்தங்களாம். பசுக்களுஞ் சந்தங்கள்போன் றன. ஆதலின் சந்தங்களாகின்ற தாதா என்னுந் தேவதை முதலில் பசுமுத லான வைகளில் கருவையுண்டாக்குகின்றது. குஹூ என்பது பிறந்த கன்று முதலானவைகளை புல்முதலியவைகளால் வளர்க்கின்றது. ஏனையவை முன் போன்றன என்பதாம்.

---

மற்றொரு பயனைக்குறித்து விதிக்கின்றது

## பிராமணம் 4

एता एव निर्वपेद्ग्रामकामश्छन्दाꣳसि वै देविकाश्छन्दाꣳसीव खलु वै ग्रामश्छन्दोभिरेवास्मै ग्राममव रुन्धे मध्यतो धातारं करोति मध्यत एवैनं ग्रामस्य दधाति ।

என்பது

### உரை

கிராமத்தை விரும்பியவன் இவைகட்கு நெல்லெடுத்துப் புரோடாசஞ் செய்து வேட்பானாக. இதில் அநுமதி, ராகாஎன்னும் இரண்டையும் மேலும், சினீவாலி குஹூஎன்னு மிரண்டையும் கீழுமாகவைத்து நடுவில் தாதாவை வைத்தல் வேண்டும். இதனால் எசமானன், கிராமத்திற்கு நடுவில் அதற்குத் தலைவனாக வைக்கப் பெறுகின்றான் என்பதாம்.

---

மற்றொரு பயனைக்குறித்து விதிக்கின்றது

பிராமணம் 5

एता एव निर्वपैज्ज्योगामयावी छन्दाꣳसि वै देविकाश्छन्दाꣳसि खलु वा एतमभि मन्यन्ते यस्य ज्योगामयति छन्दोभिरेवैनमगदं करोति मध्यतो धातारं करोति मध्यतो वा एतस्याक्लृप्तं यस्य ज्योगामयति मध्यत एवास्य तेन कल्पयति ।

என்பது

உரை

நெடுநாள் வியாதியாற் பீடிக்கப்படுகின்றவன் இவைகட்கு நெல்லெடுத்து புரோடாசஞ் செய்து வேட்கவும். இதனால், அவைகள் சந்தங்களால் இவனுடைய பிணியை நீக்குகின்றன. ஆனால், முன்போல் தாதாவை நடுவில் வைத்தல்வேண்டும். வைத்தலால் பிணியுடையவனுடைய வயிற்றின் நடுவில் வலுவின்மை ஏதாகிலுமிருக்கில் தாதுவைச்சீர்படுத்தி வயிற்றின் நடுவில் வன்மையையுண்டாக்குகின்றது என்பதாம்.

---

சோதிட்டோமம் முதலிய வேள்விகளையடைவதன் பொருட்டு விதிக்கின்றது

பிராமணம் ·6

एता एव निर्वपेद्यं यज्ञो नोपनमेच्छन्दाꣳसि वै देविकाश्छन्दाꣳसि खलु वा एतं नोप नमन्ति यं यज्ञो नोपनमति प्रथमं धातारं करोति मुखत एवास्मै छन्दाꣳसि दधात्युपैनं यज्ञो नमति ।

என்பது.

உரை

ஏதோ ஒரு தடையால் வேள்வியைச் செய்யமுடியாதவன் இவைகட்கு நெல்லெடுத்துப் புரோடசஞ் செய்து வேட்கவும். முதலாவது அவனுக்குச் சந்தங்கள் கிடைப்பதின்றாம். ஆதலின், அவன், முதலில், தாதாவை நிலை நிறுத்தியதால் அது முதலாவது எசமானனக்குச் சந்தங்களை நிலைநாட்டியதாகும். சந்தங்கள் அநுகூலங்களானபோது வேள்வியுங் கிடைக்கும் என்பதாம்.

---

வேள்வியையடைந்தவன் மேல் செய்யும் வேள்வி கைகூடுதற் பொருட்டுவிதிக்கின்றது

பிராமணம் 7

**एता एव निर्वपेदीजानश्छन्दा१ꣳसि वै देविका यातयामानीव खलु वा एतस्य छन्दा१ꣳसि य ईजान उत्तमं धातारं करोत्युपरिष्टादेवास्मै छन्दा१ꣳस्ययातयामान्यव रुन्ध उपैनमुत्तरो यज्ञो नमति ।**

என்பது

உரை

மேல் எக்ஞுஞ் செய்ய விரும்பிய இவைகட்கு நெல்லெடுத்துப் புரோடாசஞ் செய்து வேட்க. முன்னர் ஒரு வேள்வியைக் செய்தவனுக்கு இச்சந்தங்களான தேவிகாக்கள் முன் எக்ஞுத்தில் ஒரு செயலைச் செய்ததால் சாரத்தை இறக்கியதுபோலாயின. அங்கு, முடிவில் தாதாவை வைப்பதால் மேல் செய்யப்படும் எக்ஞுத்தில் சாரம் போகாதவைகளாகத் தேடிக்கொள்கின்றன. ஆதலின், மேலே செய்யப்படும்எக்ஞுமும் இவனுக்குக் கிடைக்கின்றது என்பதாம்.

---

சாத்திரத்தை உள்ளத்திலமைக்கும் மேதையின் பொருட்டு விதிக்கின்றது

பிராமணம் 8

**एता एव निर्वपेद्यं मेधा नोपनमेच्छन्दा१ꣳसि वै देविकाश्छन्दा१ꣳसि खलु वा एतं नोप नमन्ति यं मेधा नोपनमति प्रथमं धातारं करोति मुखत एवास्मै छन्दा१ꣳसि दधात्युपैनं मेधा नमति ।**

என்பது.

உரை

நூற் பொருளை கவனத்தில் இருத்தல் வேண்டுமென்னும் மதிநுட்பத்தையடைய விருப்பியவன் இவைகட்கு நெல்லெடுத்துப் புரோடாசஞ் செய்து வேட்கவும். அவன் முதலில் தாதாவின்பொருட்டு வேட்கவும். அது முதலில் சந்தங்களைக் கொடுக்கின்றது. அது பற்றி மேதையுங் (நூற்பொருளைக் கவனப்படுத்து நுண்ணறிவும்,) கிடைக்கின்றது என்பதாம்.

---

அழகையடைவதற்கு விதிக்கின்றது

பிராமணம் 9

एता एव निर्वपेद्रुक्कामश्छन्दाꣳसि वै देविकाश्छन्दाꣳसीव खलु वै रुक्छन्दोभिरेवास्मिन्रुचं दधाति क्षीरे भवन्ति रुचमेवास्मिन्दधाति मध्यतो धातारं करोति मध्यत एवैनꣳ रुचो दधाति ।

என்பது.

உரை.

அழகையடைய விரும்பியவன் இவைகட்கு நெல்லெடுத்துப் புரோடாசஞ்செய்து நிவேட்பானாக. சந்தங்கள் தேவிகாக்களாம், அழகு பிரியமாம் ஆதலின் சந்தங்களாகின்ற தேவிகாக்களால் அழகுண்டாகின்றது. பால் அழகுடையது அத்தகைய பாலை தாதாவிற்கு நடுவில் வைப்பதால் எசமானனை அழகிற்குள் நிலைநாட்டுகின்றது என்பதாம்.

---

காய்த்திரி முதலிய சந்தங்களாக அநுமதி முதலிய தேவதைகளைப்புகழ்கின்றது

பிராமணம் 10

गायत्री वा अनुमतिस्त्रिष्टुग्राका जगती सिनीवाल्यनुष्टुप्कुहूर्धाता वषट्कारः ।

என்பது.

உரை

சந்தங்கள் விருப்பத்திற்குச் சாதனங்களாவதுபோல் அநுமதி முதலிய தேவதைகளுமாம். ஆதலின் காயத்திரி அநுமதியாம், திரிஷ்டுப் ராகாவாம், சத்தி சினீவாலியாம். அநுஷ்டுப் குகுவாம், வஷட்காரம் தாதாவாம் என்பதாம்.

---

மேற்கூறிய நியாயத்தால் பூர்வபக்கம், உத்தரபக்கம் முதலிய கால வடிவமா மென்பதை விளக்குகின்றது

பிராமணம் 11

पूर्वपक्षो राकाऽपरपक्षः कुहूरमावास्यासिनीवाली पौर्णमास्यनुमतिश्चन्द्रमा धाता ।

என்பது.

உரை

ராகா என்னுந் தேவதை பூரண சந்திர மண்டலத்துடன் கூடியதாமாதலின் சுக்கிலபட்சவடிவாம். குகு என்னுந் தேவதை கலைகள் தேய்ந்த சந்திர வடிவமாதலின் கிருஷ்ணபச்சடிவாம். சதுர்த்தசியுடன் கூடிய கிருஷ்ணபக்க பஞ்சதசி சினீவாலியாம். அது இங்கு அமாவாசை யெனக்குறிக்கப்பட்டது. சதுர்த்தசியுடன் கூடிய சுக்கிலபட்ச பஞ்சதசி அநுமதியாம். அது பௌர்ணமையெனக் குறிக்கப்பட்டது, இவைகட்குக் காரணமாகிய சந்திரன் ஈண்டு பிரமன் எனக்குறிப்பிடப்பட்டது என்பதாம்.

---

வசு முதலியவடிவாகப்புகழ்கின்றது

பிராமணம் 12

अष्टौ वसवोऽष्टाक्षरा गायत्र्येकादश रुद्रा एकादशाक्षरा त्रिष्टुब्द्वादशाऽऽदित्या द्वादशाक्षरा जगती प्रजापतिरनुष्टुब्धाता वषट्कारः ।

என்பது.

உரை

காயத்திரி முதலிய சந்தங்களான அநுமதி முதலிய தேவைகள் எண் ஒப்பாயிருத்தல்பற்றி வசுக்கள் முதலான வடிவங்களாம். என்னை ? காயத்திரி எட்டு எழுத்துக்களாமாதலின் வசுக்கள். திரிஷ்டுப் பதினொரு எழுத்துக்களாதலின் உருத்திரர்கள். சக்தி பன்னிரண்டெழுத்துக்களாதலின் இரவிகள். அநுஷ்டுப் பிரசாபதியாம். வஷட்காரம் முக்கியமாதலின் தாதாவாம் என்பதாம்.

---

பிராமணம் 13

एतद्वै देविकास्सर्वाणि च छन्दाꣳसि सर्वाश्च देवता वषट्कारः ।

என்பது.

உரை

இதுவரை கூறி வந்தவைகளே துதியின் பொருட்டு தேவிகா என்பவைகளே (அநுமதிமுதலிய தேவதைகளே) சந்தங்களாகக்கூறும் வடிவங்களாம் என்பதாம்.

---

வேறிடம் போதும் ஹோமம்)

இவ்வைந்தையும் மூன்றாகவுஞ்செய்தல் கூடும் என்பதை விதிக்கின்றது

பிராமணம் 14

ता यत्सह सर्वा निर्वपेदीश्वरा एनं प्रदहो द्वे प्रथमे निरुप्य धातुस्तृतीयं निर्वपेत्तथो एवोत्तरे निर्वपेत्तथैनं न दहन्त्यथो यस्मै कमाय निरुप्यन्ते तमेवाऽभिरुपाऽऽप्नोति ।

என்பது.

உரை.

இவ்வைந்துக்கும் நெல்லெடுத்து வேள்வி செய்யயும் வகைபற்றி எசமானனை எரித்துவிடமுடியும். ஆதலின், அநுமதி, ராகா என்னுந்தேவதைக்கு பொங்கல்களும், மூன்றாவதாக பிரமாவுக்கு புரோடாசமுஞ் செய்தல் வேண்டும். அதற்கு மேல் சினீவாலி தேவதைக்கும் குகுவிற்கும் இரண்டு பொங்கல்கள் செய்தல் வேண்டும். இவ்வாறு செய்யில் தேவிகாக்கள் எசமானனை எரித்து விடமாட்டார்கள். ஆதலின், எவ்விருப்பத்திற்கு நெல்லெடுத்துப் புரோடாசஞ் செய்யப்பெற்றதோ, அதை, இத் தேவதைகள் முடித்து வைக்கின்றன என்பதாம்,

ஒன்பதாம் அநுவாகம்

முற்றிற்று.

---

பத்தாம் அநுவாக விடயச் சுருக்கம்.

अग्निहोत्रीतुसगृहः प्रयास्यन्जुहुयाद्वयम् ॥

वास्तोःपुरोनुवाक्यैका याज्या चान्येति तद्वयम् ॥ १ १

ஆஹிதாக்கினி ஒருவன் வெளியூருக்கு ஏகும்போது காருகபத்தியத்தில் செய்யவேண்டிய ஹோமமந்திரங்கள் கூறப்படுகின்றன.

---

## மூன்றுங் காண்டம் நான்காம் பிரபாடகம்

### பத்தாவது அநுவாகம்

நான்கு பஞ்சாதிகட்குமேல் நாற்பத்தைந்து பதங்களைக் கொண்டது.

வேறிடம் புறப்படும் ஹோமத்தைக் கூறும் மந்திரங்கள்.

वास्तोष्पते प्रति जानीह्यस्मान्त्स्वावेशो अनमीवो भवा नः । यत्त्वेमहे प्रति तन्नो जुषस्व शं न एधि द्विपदे शं चतुष्पदे । वा-

स्तोष्पते शग्मया सꣳसदा ते सक्षीमहि रण्वया गातुमत्या । आवः क्षेम उत योगे वरं नो यूयं पात स्वस्तिभिस्सदा नः । यत्सायं-प्रातरग्निहोत्रं जुहोत्याहुतीष्टका एव ता उप धत्ते ॥ १ ॥ यज-मानोऽहोरात्राणि वा एतस्येष्टका य आहिताग्निर्यत्सायंप्रातर्जुहोत्य-होरात्राण्येवाऽऽप्त्वेष्टकाः कृत्वोप धत्ते दश समानत्र जुहोति दशा-क्षरा विराड्विराजमेवाऽऽप्त्वेष्टकां कृत्वोप धत्तेऽथो विराज्येव यज्ञ-माप्नोति चित्यश्चित्योऽस्य भवति तस्माद्यत्र दशोषित्वा प्रयाति तद्यज्ञवास्त्ववास्त्वेव तद्यत्ततोऽर्वाचीनम् ॥ २ ॥ रुद्रः खलु वै वास्तोष्पतिर्यदहुत्वा वास्तोष्पतीयं प्रयायाद्रुद्र एनं भूत्वाऽग्निर-नूत्थाय हन्याद्वास्तोष्पतीयं जुहोति भागधेयेनैवैनꣳ शमयति नाऽऽ-र्तिमार्छति यजमानो यद्युक्ते जुहुयाद्यथा प्रयाते वास्तावाहुतिं जुहो-ति तादृगेव तद्यदयुक्ते जुहुयाद्यथा क्षेम आहुतिं जुहोति तादृगेव तदहुतमस्य वास्तोष्पतीयꣳ स्यात् ॥ ३ ॥ दक्षिणो युक्तो भवति सव्योऽयुक्तोऽथ वास्तोष्पतीयं जुहोत्युभयमेवाकरपरिवर्गमेवैनꣳ-शमयति यदेकया जुहुयाद्दर्विहोमं कुर्यात्पुरोनुवाक्यामनूच्य याज्य-या जुहोति सदेवत्वाय यद्धुत आदध्याद्रुद्रं गृहानन्वारोहयेद्य-दवक्षाणान्यसंप्रक्षाप्य प्रयायाद्यथा यज्ञवेशसं वाऽऽदहनं वा तादृ-गेव तदयं ते योनिर्ऋत्विय इत्यरण्योस्समारोहयति ॥ ४ ॥ एष वा अग्नेर्योनिस्स्व एवैनं योनौ समारोहयत्यथो खल्वाहुर्यदरण्योः

வேறிடம் போதும் ஹோமம்)

समारूढो नश्येदुदस्याग्निस्सीदेत्पुनराधेयस्स्यादिति या ते अग्ने यज्ञिया तनूस्तयेह्या रोहेत्यात्मन्त्समारोहयते यजमानो वा अग्ने-योनिस्स्वायामेवैनं योन्याꣳ समारोहयते ॥ ५ ॥

ஈண்டு, அக்கினி ஹோத்திரத்துடன் வேறிடத்திற்குப் புறப்படுகின்றவன், அவ்வக்கினியை, தீக்கடைக் கோலின்மீது ஏற்றிக்கொள்ளல் வேண்டுமென்பதை விதிக்கின்றது.

---

காருகபத்திய மென்னுந்தீயுடன் புறப்படில் மனைவியுடன் அக்கினியை எடுத்துக் கொண்டு புறப்படல் வேண்டும் அப்போது மேல்வரும் மந்திரத்தால் ஹோமஞ் செய்தற்பொருட்டு புரோநுவாக்கியமாக ஓதவேண்டிய மந்திரம்

மந்திரம் 1

वास्तोष्पते प्रति जानीह्यस्मान्स्वावेशो अनमीवो भवा नः । यत्त्वेमहे प्रति तन्नो जुषस्व शं न एधि द्विपदे शं चतुष्पदे ।

என்பது.

உரை

அக்கினி ஹோத்திரத்திற்கு இருப்பிடமாகிய வீட்டிற்குத் தலைவ! அதாவது காருகபத்தியத்தீயே! நீ, வேறுகிராமத்திற்கு எடுத்துக்கொண்டு செல்கின்றவர்களை உணர்வாயாக. பிறகு, எங்களை வசிக்கச் செய்கின்றவனுவாய். பிணியைப் போக்குவோனுமாவாய். எதைக்குறித்து உன்னைப் போற்றுகின்றோமோ, அக்காரியத்தை அன்போடு அநுபவிப்பாயாக. பிறகு, எம்முடைய மக்கள் விலங்குகளின் பொருட்டு சுகங்கொடுப்போனுவாய் என்பதாம்.

---

மந்திரம் 2

वास्तोष्पते शग्मया सꣳसदा ते सक्षीमहि रण्वया गातुमत्या । आवः क्षेम उत योगे वरं नो यूयं पात स्वस्तिभिस्सदा नः ।

என்பது.

உரை

அக்கினி ஹோத்திரக் கிருகத்திற்குத் தலைவ! எல்லாவற்றையுங் கொடுக்கும் வன்மையுடையதும், மனதைக் கவர்வதும் எல்லாவற்றையு முணர்கின்றதுமாகிய உனது சபையில் பற்றுடையவர்களாவோமாக. நீ, எமது யோகத்தின் பொருட்டு இனிது காப்பாயாக. எமது க்ஷேமத்தின் பொருட்டு பாது காப்பாயாக. நீவிர் பல்வகைச் சிறப்புக்களா (நலங்களா)ல் எம்மைப் பாது காப்பீர்களாக என்பதாம், ஈண்டுப்பன்மை ஆதரவின் பொருட்டு.

---

இனி, ஹோமத்தை விதித்தற் பொருட்டுப்புகழ்கின்றது

பிராமணம் 1

**यत्सायंप्रातरग्निहोत्रं जुहोत्याहुतीष्टका एव ता उप धत्ते यजमानोऽहोरात्राणि वा एतस्येष्टका य आहिताग्निर्यत्सायंप्रातर्जुहोत्यहोरात्राण्येवाऽऽप्त्वेष्टकाः कृत्वोप धत्ते ।**

என்பது.

உரை.

காலைமாலைகளில் முறையாய் அக்கினி ஹோத்திரஞ் செய்கின்ற வேள்வித் தலைவன் செங்கலடுக்கைச் செய்தவனாகின்றான். எவ்வாற்றாலெனின்? இவன் செய்த ஆகுதிகளனைத்தும் செங்கல்களாகி விடுகின்றதாலென்க என்பதாம்.

---

மற்றொருவகையாகப் புகழ்கின்றது.

பிராமணம் 2

**दशसमानत्र जुहोति दशाक्षरा विराड्विराजमेवाऽऽप्त्वेष्टकां कृत्वोप धत्तेऽथो विराज्येव यज्ञमाप्नोति चित्यश्चित्योऽस्य भवति ।**

என்பது

உரை

ஓரிடத்தில் பத்துநாள் அக்கினி ஹோத்திரங்களைச் செய்தவன், எண் ஒப்புப் பற்றி பத்து எழுத்துக்கள் கொண்ட விராட் சந்தத்தையடைகின்றான். அவ்விராட்டுக்கள் செங்கல்களாய் அடுக்குகின்றான். அதனால், அக்கினிஷ்டோம எக்ஞத்தை அடைகின்றான். இவ்வாறு, அக்கினி ஹோத்திரஞ் செய்கின்றவனுக்கு செங்கலடுக்குக்கள் உண்டாகின்றன என்பதாம்,

ஈண்டு, காலைமாலை செய்யும் ஆகுதிகளாகிற செங்கல்களால் ஒரு தீயும், பகலிரவுகளென்னுஞ் செங்கலடுக்கால் இரண்டாந் தீயும், விராடாகிய செங்கலால் மூன்றாமக்கினியும் உண்டாகின்றன. இவ்வாறு இவனுக்கு பல்வகை அக்கினிகளும் உண்டு என்பதாம்.

---

இப்போது அதை விதிக்கின்றது.

பிராமணம் 3

**तस्माद्यत्र दशोषित्वा प्रयाति तद्यज्ञवास्त्ववास्त्वेव तद्यत्ततोऽर्वाचीनꣳ रुद्रः खलु वै वास्तोष्पतिर्यदहुत्वा वास्तोष्पतीयं प्रयायाद्रुद्र एनं भूत्वाऽग्निरनूत्थाय हन्याद्वास्तोष्पतीयं जुहोति भागधेयेनैवैनꣳ शमयति नाऽऽर्तिमार्छति यजमानः ।**

என்பது

உரை

இடையில், பத்துநாள் தங்கிய பிறகு செல்கின்ற அக்கினி ஹோத்திரத்திற்கு எண்ணிக்கை ஒப்பால் விராட் கிடைக்கின்றது. ஆனால் அவ்விடம் எக்ஞ நிமித்தமெனின்? வேள்வியிடமாம். இன்றெனின்? வேள்வியிடமன்று. ஆதலின் அந்த ஹோமத்தில் உருத்திரனென்னும் காருகபத்திய தேவதையே வாஸ்தோஷ்பதியா (கிருகதலைவனா)தலின் அதுஹோம நிமித்தமெனப் படுகின்றது. இவ்வாற்றால், வாஸ்தோஷ்பதி ஹோமஞ் செய்யாமல் பிரயாணப் படில் காருகபத்தியம் உருத்திராகாரமாய் எசமானனைக்கொன்றுவிடும். ஆதலின் பிரயாணஞ் செய்யும்போது வாஸ்தோஷ்பதி ஹோமஞ் செய்தல் வேண்டும். அதனால் ஹோமஞ் செய்யும் பாகததைக் கொடுத்து அவ்வக்கினியைச் சாந்தப்படுத்துகின்றான். ஆதலின் எசமானன் கேடுறான் என்பதாம்.

---

புறப்படும்போது, வண்டியில், வலது காளையைப் பூட்டிய பிறதும், இடது காளையைப் பூட்டுவதற்கு முன்னுமாயுள்ள காலமே ஹோமஞ்செய்வதற்குரிய காலமென விதிக்கின்றது.

பிராமணம் 4

**यद्युक्ते जुहुयाद्यथा प्रयाते वास्तावाहुतिं जुहोति तादृगेव तद्यदयुक्ते जुहुयाद्यथा क्षेम आहुतिं जुहोति तादृगेव तदहुतमस्य वास्तोष्पतीयꣳस्याद्दक्षिणो युक्तो भवति सव्योऽयुक्तोऽथ वास्तोष्पतीयं जुहोत्युभयमेवाकरपरिवर्गमेवैनꣳ शमयति ।**

என்பது

உரை.

அவ்விரண்டுகாளைகளையும் வண்டியிற்பூட்டிவிட்டு வாஸ்தோஷ்பதிஹோமஞ் செய்யில் பூட்டிய மாத்திரத்தாலே பிரயாணஞ்செய்ததாகி வேள்விக்குரித்தலாத விடத்தில் ஹோமஞ்செய்யப்பட்டு உலக இயலோடு ஒத்துவிடும். இரண்டு காளைகளையும் பூட்டுவதற்குமுன்செய்யில், க்ஷேமமாயிருக்கும்போது பிரயாணமென்பது இல்லாமலே ஹோமஞ்செய்யப்பட்டதுபோலாகும். இவ்விருவகையாலும் வாஸ்தோஷ்பதி ஹோமம் செய்யாதொழிந்ததாகும். மற்றெவ்வாறெனின்? பிரயாணஞ் செய்துகொண்டே ஹோமஞ் செய்தல்வேண்டும். அஃதெவ்வாறெனின்? வண்டியில் ஒரு காளையைப்பூட்டியும் மற்றொரு காளையைப் பூட்டாமலுமுள்ளசமயத்தில் வாஸ்தோஷ்பதிஹோமத்தைச் செய்தல் வேண்டும். இதனால், கோபமடைந்த அக்கினி சாந்தமாகி எசமானனும் நலமடைகின்றான் என்பதாம்.

---

'வாஸ்தோஷ்பதே பிரதிஜாநீஹி, வாஸ்தோஷ்பதே சக்மயா, என்னுமிவ்விரண்டு மந்திரங்களும் ஹோமங்கட்கு அங்கமென விதிக்கின்றது.

பிராமணம் 5

**यदेकया जुहुयाद्दर्विहोमं कुर्यात्पुरोनुवाक्यामनूच्य याज्यया जुहोति सदेवत्वाय ।**

என்பது

உரை

ஒரு இருக்கு மந்திரத்தால் ஆகுதி செய்யில் 'ஆசிரவணம், என்பது முதலிய மந்திரங்கட்கு இடமின்மையின அது தர்வி ஹோமமாய்விடும். அவ்வாறாகாதொழியும்படி 'வாஸ்தோஷ்பதே பிரதிஜாநீஹி, என்பதைப் புரோநுவாக்கியமாகக்கூறிக் கொண்டு 'வாஸ் தோஷ்பதேசக்மயா என்பதை யாஜ்யா வாக்கியமாக்கி அதனால் ஹோமஞ் செய்யில் வஷட்கார ஹோம சமமாய் தேவர்கட்கு மிகுந்த பிரியமாகின்றது என்பதாம்.

ஈண்டு, ' ஆசிராவய என்பது முதல் 'வௌஷட் என்பதீறாக உள்ள மந்திரத் தொகுதி யாஜ்யா புரோநுவாக்கியங்களுக்குச் சகாயமாகின்றது. இவையிரண்டும் முக்கியமானவைகள். இவைகளுடன் கூடிய ஹோமமே தேவர்கட்குப் பிரியமாகின்றது. அவை களில்லாதது தர்வி ஹோமமெனப் படும். அதாவது, " அக்னயே (அக்கினிக்கு) சுவாஹா, என்றுகூறி, ஆசிராவண முதலியவைகளின்றி தனியே ஹோமஞ்செய்தலின் இத்தகையது தேவர்கட்கு விருப்புடையதன்றாம் என்பதையுணர்க.

---

வேறிடம் போதும் ஹோமம்)

வண்டியில் பாண்டத்தை வைத்தலும், தீக்கடைக் கோலில் தீயை ஏற்றலும் முறையே விதிக்கப்படுகின்றன.

பிராமணம் 6

**यद्वत आदध्याद्रुद्रं गृहानन्वारोहयेद्यदवक्षाणान्यसंप्रक्षाप्य प्रयायाद्यथा यज्ञवेशसं वाऽऽदहनं वा तादृगेव तदयं ते योनिर्ऋत्विय इत्यरण्योः समारोहयत्येष वा अग्नेर्योनिस्स्व एवैनं योनौ समारोहयति।**

என்பது

உரை

அக்கினி ஹோத்திரஞ்செய்தபின் பாண்டங்களை வண்டியில் வைக்கில், வீட்டின் உபகரணங்களான பாண்டங்களையும், அவைகளைப் பற்றிய உருத்திரனென்னும் அக்கினியையும் வண்டியில் வைக்கவேண்டிவரும், வரவே, வண்டி எரிந்துபோய்விடும். ஹோமத்திற்கு முன் அக்கினி அவ்விடத்தில் இல்லை ஓமத்தின்பொருட்டோ, இருக்கின்றது. ஆதலின், அக்கினிஹோத்திர ஹோமஞ் செய்யும்முன்னரே பாண்டங்களை வைத்தல் வேண்டுமென்று கருதப்படுகின்றது; கருதுமிடத்து எரிந்தகட்டையை அணைக்காமல் பிரயாணஞ்செய்ததாயிற்று. ஆகவே, வேள்விகெட்டவிடத்தும் வீடெரிந்த போதும் அணைக்காமற் கிடந்ததுபோலாகும். அக்குற்றத்தை நீக்குதற்கு 'அயம்தேயோனி:, என்பது முதலியமந்திரத்தால் அவ்வக்கினியை தீக்கடைக் கோலில் ஏற்றிக்கொள்ளல் வேண்டும். தீயைப்போற்றுமிடத்து அக்கினியெழுதலின் தனது காரணத்தில் தீயைஏற்றிக்கொள்ளல் வேண்டும். அம்மந்திரத்திற்கு, உபபிரமந்தோ அத்வாம், என்னும் அநுவாகத்தில் உரைகூறப்பட்டிருக்கின்றது என்பதாம். தீயைப்போற்றுதல் = தீக்கடைக் கோலை தீயில்காய்ச்சுதலாம்.

---

தீக்கடைக் கோலில் தீயை யேற்றுதல் ஒருவாற்றல் குற்றமுடையதாதலின், அதைவிட்டு, ஆன்மாவில் தீயேற்றுதலை விதிக்கின்றது.

பிராமணம் 7

**अथो खल्वाहुर्यदरण्योस्समारूढो नश्येदुदस्याग्निस्सीदेत्पुनराधेयस्स्यादिति या ते अग्ने यज्ञिया तनूस्तयेह्या रोहेत्यात्मन्त्समारोहयते यजमानो वा अग्नेर्योनिस्स्वायामेवैनं योन्याꣳ समारोहयते।**

என்பது.

உரை

தீக்கடைக் கோல்களில் தீயையேற்றில் தீக்கடைக்கோல் எரிந்துவிடில் எசமானனுடைய தீயுங்கெடும். பிறகு மீண்டும் தீயைஉண்டாக்கல் வேண்டி வரும் அக்குற்றத்தைப் போக்குதற்பொருட்டு 'யாதேஅக்னே' என்பது முதலிய மந்திரத்தால் ஆன்மாவினிடத்தில் தீயை ஏற்றிக் கொள்ளல் வேண்டும். தீக்கடைகோல்கள் தீயை உண்டாக்குவது போல் எசமானனும் தீயை உண்டாக்குவோனாதலின் அதன்காரணனாகின்றான். ஆதலின், ஆன்மாவிலேற்றிய் தீயும் தனதுகாரணத்தில் ஏறிக்கொள்ளப்படுகின்றது என்பதாம். இதனுரை, பிரமாணம் இரண்டாவது அஷ்டகத்தில் வரும்.

பத்தாம் அநுவாகம்

முற்றிற்று.

---

பதினோராம் அநுவாக விடயச் சுருக்கம்.

राजसूये देवसुवामिष्टौ याज्या इमाःक्रमात् ।

त्वमग्ने बृहदाग्नेयेत्वंच सोमेति सौम्यके ॥ १ ॥

आविश्व देवं सावित्रे यथान इतिरौद्रके ।

बार्हस्पत्य उदेत्येतदैन्द्रेऽस्यैन्द्रे चतुष्टयम् ॥ २ ॥

मित्रस्येति त्रयं मैत्रे वारुणे यदिति त्रयम् ॥

एकादशेऽनुवाकेस्मिन्मन्त्रा उक्ताहिविंशतिः ॥ ३ ॥

இராசசூயம்என்னும் யாகத்தில் 'தேவசுவம், என்னும் இஷ்டியில் அக்கினி கிருகபதி தேவதை, சோம வனஸ்பதி தேவதை,ஸவிதாதேவதை,உருத்திர தேவதை, பிருஹஸ்பதி தேவதை, இந்திரதேவதை, மித்திரதேவதை, வருணதேவதை என்னுந் தேவதைகளுக்கு முறையே இரண்டிரண்டு இருக்குக்களாக யாஜ்யா புரோநுவாக்கியங்கள் கூறப்படுகின்றன என்பது.

---

## மூன்றும் காண்டம் நான்காம் பிரபாடம்
## பதினோராவது அநுவாகம்

ஆறுபஞ்சாதிக்குமேல் ஏழுபதங்களைக் கொண்டது.

காமிய யாஜ்யா புரோநுவாக்கியங்களைக்கூறுமந்திரங்கள் :—

त्वमग्ने बृहद्वयो दधासि देव दाशुषे । कविर्गृहपतिर्युवा । हव्यवाडग्निरजरः पिता नो विभुर्विभावा सुदृशीको अस्मे । सुगार्हपत्याः समिषो दिदीह्यस्मद्रियक्सं मिमीहि श्रवाꣳसि । त्वं च सोम नो वशो जीवातुं न मरामहे । प्रियस्तोत्रो वनस्पतिः । ब्रह्मा देवानां पदवीः कवीनामृषिर्विप्राणां महिषो मृगाणाम् । श्येनो गृध्राणाꣳस्वधितिर्वनानाꣳ सोमः ॥ १ ॥ पवित्रमत्येति रेभन् । आ विश्वदेवꣳ सत्पतिꣳ सूक्तैरद्या वृणीमहे । सत्यसवꣳ सवितारम् । आ सत्येन रजसा वर्तमानो निवेशयन्नमृतं मर्त्यं च । हिरण्ययेनसविता रथेनाऽऽ देवो याति भुवना विपश्यन् । यथा नो अदितिः करत्पश्वे नृभ्यो यथा गवे । यथा तोकाय रुद्रियम् । मा नस्तोके तनये मा न आयुषि मा नो गोषु मा ॥२॥ नो अश्वेषु रीरिषः । वीरान्मा नो रुद्र भामितो वधीर्हविष्मन्तो नमसा विधेम ते । उदप्रुतो न वयो रक्षमाणा वावदतो अभ्रियस्येव घोषाः । गिरिभ्रजो नोर्मयो मदन्तो बृहस्पतिमभ्यर्का अनावन् । हꣳसैरिव सखिभिर्वावदद्भिरश्मन्मयानि नहना व्यस्यन् । बृहस्पतिरभिकनिक्रदद्गा उत प्रास्तौदुच्च विद्वाꣳ अगायत् । एन्द्र सानसिꣳ रयिम् ॥ ३ ॥ सजित्वानꣳ सदासहम् । वर्षिष्ठमूतये भर । प्र ससाहिषे पुरुहूत शत्रूञ्ज्येष्ठस्ते

शुष्म इह रातिरस्तु । इन्द्राऽऽ भर दक्षिणेना वसूनि पतिः सिन्धूनामसि रेवतीनाम् । त्वꣳ सुतस्य पीतये सद्यो वृद्धो अजायथाः । इन्द्र ज्यैष्ठ्याय सुक्रतो । भुवस्त्वमिन्द्र ब्रह्मणा महान्भुवो विश्वेषु सवनेषु यज्ञियः । भुवो नृꣳश्च्यौत्नो विश्वस्मिन्भरे ज्येष्ठश्च मन्त्रः ॥ ४ ॥ विश्वचर्षणे । मित्रस्य चर्षणीधृतः श्रवो देवस्य सानसिम् । सत्यं चित्रश्रवस्तमम् । मित्रो जनान्यातयति प्रजानन्मित्रो दाधार पृथिवीमुत द्याम् । मित्रः कृष्टीरनिमिषाऽभि चष्टे सत्याय हव्यं घृतवद्विधेम । प्र स मित्र मर्तो अस्तु प्रयस्वान्यस्त आदित्य शिक्षति व्रतेन । न हन्यते न जीयते त्वोतो नैनमꣳहो अश्नोत्यन्तितो न दूरात् । यत् ॥ ५ ॥ चिद्धि ते विशो यथा प्र देव वरुण व्रतम् । मिनीमसि द्यविद्यवि । यत्किं चेदं वरुण दैव्ये जनेऽभिद्रोहं मनुष्याश्चरामसि । अचित्ती यत्तव धर्मा युयोपिम मा नस्तस्मादेनसो देव रीरिषः । कितवासो यद्रिरिपुर्न दीवि यद्वा घा सत्यमुत यन्न विद्म । सर्वा ता वि ष्य शिथिरेव देवाथा ते स्याम वरुण प्रियासः ॥ ६ ॥

அநுவாகத்தின் தலைப்புச் சொற்களைக் கொண்ட தொகை :—

विवा आ वायो इमे वै चित्तमग्निर्भूतानां देवा वा ऋताराषाड्राष्ट्र कामाय देविका वास्तोष्पते त्वमग्ने बृहद्वय एकादश ॥ ११ ॥

பஞ்சாதிகளின் தலைப்புச் சொற்களைக் கொண்ட எண் :—

विवा इत्याह यथायजुरेवैतन्मृत्युर्गन्धर्वोऽदरुन्धेत्वमग्ने बृहद्वयः षट्चत्वारिꣳशत् ॥ ४६ ॥

(புரோநுவாக்கியம்

‘ தேவசுவாமேதானி ஹவிம்ஷிபவந்தி’ என விதிக்கப்பட்டதனுள், ‘அக்னயே கிருகபதயே புரோடாச மஷ்டாகபாலம் நிர்வபதி கிருஷ்ணாநாம் வ்ரீஹீணம், என்ப தற்குப் புரோநுவாக்கியமிது :—

மந்திரம் 1

त्वमग्ने बृहद्वयो दधासि देव दाशुषे। कविर्गृहपतिर्युवा।

என்பது.

உரை

கவியும், கிருகத்தைப்பாது காக்கின்றதும், கட்டிளமையுடையதுமாகிய அக்கினியே ! நீ, அவியளிக்கும் எசமானனுக்கு மிகுந்த உணவுப்பொருளை அல்லது, நீண்ட ஆயுளைக் கொடுப்பாயாக என்பதாம்.

---

மேற்கூறிய அதற்கே யாஜ்யா வாக்கியங் கூறப்படுகின்றது.

மந்திரம் 2

हव्यवाडग्निरजरः पिता नो विभुर्विभावा सुदृशीको अस्मे सुगार्हपत्याः समिषो दिदीह्यस्मद्रियक्सं मिमीहि श्रवाꣳसि।

என்பது.

உரை.

அவியை யேற்றுச் செல்வதும், மூப்பற்றதும், எமது பிதாவும், வியாபகமும், மிக ஒளிர்வதும், சுகத்தைப் பார்ப்பதுமாகிய இவ்வக்கினி எமக்கு அழகிய கிருகத்தலைமைக்குக் காரணங்களான உணவுப் பொருள்களை நன்கு அளிக்குக. மற்றும், எமது இந்திரியங்களுக்கு உள்முகப்பட்டுக் கேட்கத்தக்க பெருமைகளையும் உண்டாக்குக என்பதாம்.

---

‘வானஸ்பதியாகிய சோமனுக்கு சாமைப் பொங்கல் செய்க, என்பதற்குப் புரோநுவாக்கியம் :

மந்திரம் 3

त्वं च सोम नो वशो जीवातुं न मरामहे। प्रियस्तोत्रो वनस्पतिः।

என்பது

உரை.

‘ சோமோவா, என்பது முதலிய துதியில் பிரியமுடையதும், கொடி செடிகளைப்பரிபாலிப்பதுமாகிய சோமமே ! நீ, எம்மை வாழ்விப்பதற்கு விருப்புடையதாயிருக்கின்றாய். ஆதலின், யாம் இறக்கமாட்டோம் என்பதாம்.

யாஜ்யாவாக்கிய)

மேற்கூறிய அதற்கே யாஜ்யா வாக்கியம் :

மந்திரம் 4

ब्रह्मा देवानां पदवीः कवीनामृषिर्विप्राणां महिषो मृगाणाम् । श्येनो गृध्राणाꣳ स्वधितिर्वनानाꣳ सोमः पवित्रमत्येति रेभन् ।

என்பது

உரை

தேவர்களுக்குள் பிரமன் சிறந்தவன், கவிகளுக்குள் சொற்பொருள்களை நன்குணர்ந்தவன் சிறந்தவன், விப்பிரர்களுக்குள் அநுஷ்டான நுண்பொருளை யுணர்கின்றவன் சிறந்தவன், விலங்குகளுக்குள் எருமை சிறந்தது, வனங்களுக்குள் சோதிவிருக்ஷம் சிறந்தது. இவ்வாறு புநிதப்படுத்தும் தருப்பை முதலியவைகளுக்குள் சோமம் சிறந்தது என்பதாம்.

---

'சவித்ரே சத்யப்ரசவாய புரோடாசம் த்வாதச கபாலம் ஆசுநாம் விரீஹீணும், என்பதற்குப் புரோநுவாக்கியம் :

மந்திரம் 5

आविश्वदेवꣳ सत्पतिꣳ सूक्तैरद्या वृणीमहे । सत्यसवꣳ सवितारम् ।

என்பது.

உரை

தேவர்களனைவரையும் அடக்கியாள்கின்றவனும், நன்னெறியிற் செல்லுகின்றவரைப் பாதுகாக்கின்றவனும், பயனுடைய அநுக்ஞை செய்கின்றவனுமாகிய சூரிய தேவனை இக்கருமத்திற்கு அழகிய வாக்கியங்களால் அழைக்கின்றோம் என்பதாம்.

---

மேற்கூறிய அதற்கே யாஜ்யா வாக்கியம் :

மந்திரம் 6

आ सत्येन रजसा वर्तमानो निवेशयन्नमृतं मर्त्यं च । हिरण्ययेन सविता रथेनाऽऽ देवो याति भुवना विपश्यन् ।

என்பது

உரை

இரவி, ஒளி மண்டிலத்துடன் எழுந்து மனிதர்களையும் தேவர்களையும் தத்தமது செயல்களில் வன்மையையுண்டாக்கிவிட்டு, உலகனைத்தையும் பார்த்துக்கொண்டு பொன் தேரில் நாடோறும் கிழக்கில் வருகின்றது என்பதாம்.

புரோநுவாக்கியம்)

நத்ராய பசுபதயே காவீதுகம் (காட்டுக்கோதுமை) பொங்கல்செய்க, என்பதற்குப் புரோநுவாக்கியம் ;

மந்திரம் 7

**यथा नो अदितिः करत्पश्वे नृभ्यो यथा गवे । यथा तोकाय रुद्रियम् ।**

என்பது.

உரை

கண்டிக்கப்படாத உருத்திரன், பசுக்கள், மக்கள் அதனுடைய மக்கள் என்பவைகளை எவ்வாறு ஆராதனை செய்யில் பாதுகாப்பானோ, அவ்வாறு அவனை அவியால் ஆராதிக்கின்றோம் என்பதாம்.

---

மேற்கூறிய அதற்கே யாஜ்யா வாக்கியம்:—

மந்திரம் 8

**मा नस्तोके तनये मा न आयुषि मा नो गोषु मा नो अश्वेषु रीरिषः । वी-
रान्मा नो रुद्र भामितो वधीर्हविष्मन्तो नमसा विधेम ते ।**

என்பது.

உரை

உருத்திர ! நீ, கோபமாய் எமது மக்கள் பேரன்மார்களிடத்து துன்பை யுண்டாக்காதே. அங்ஙனமே, எமது ஆயுளிலும் துன்பஞ் செய்யாதே. எமது பசு முதலியவைகளையுந் துன்புறுத்தாதே. யாம் அவிகளையுடையவர்களாய் உனக்கு அவியளித்து வழிபடுகின்றோம் என்பதாம்.

---

" பிருகற்பதியின் பொருட்டும் வாசற்பதியின் பொருட்டும் நைவாரப் (செந்நெற்) பொங்கல் செய்க,, என்பதற்குப் புரோநுவாக்கியம்:—

மந்திரம் 9

**उद्प्रुतो न वयो रक्षमाणा वावदतो अभ्रियस्येव घोषाः । गिरिभ्रजो नो-
र्मयो मदन्तो बृहस्पतिमभ्यर्का अनावन् ।**

என்பது.

உரை.

மேகம் எமது பயிர்களை வளர்ப்பதுபோல், அவமிருத்துவை நீக்கும் வாயிலாக எமது ஆயுளைப் பாதுகாக்கின்றவைகளும், மேகஒலிபோன்ற இரைச்சலுடையவைகளுமான எமது துதிவாக்குக்கள், பிருகற்பதியைக் குறித்துப்

போற்றுகின்றன. மற்றும், ஆற்றுக்கரையிலுள்ள மலைகளின்மீது மோது கின்றஅலைகள் ஆற்றின் நிறைவைக்காட்டிக் களிப்பிப்பதுபோல் எமது வாக்குக்களும் பிருகற்பதியின் மகிமைகளை அறிவுறுத்துவதால் களிப்பை உண்டாக்குவனவாகின்றன என்பதாம்.

---

மேற்கூறிய அதற்கே யாஜ்யாவாக்கியம்

மந்திரம் 10

**हꣳसैरिव सखिभिर्वावदद्भिरश्मन्मयानि नहना व्यस्यन् । बृहस्पतिरभिकनिक्रदद्गा उत प्रास्तौदुच्च विद्वाꣳ अगायत् ।**

என்பது.

உரை.

பரமாஞ்சத் துறவிகளாற் போற்றப்பெற்ற பரமேசுரன் புருடார்த்தத் தடைகளைப் போக்கியருள்வதுபோல், அதிசயமாகப் போற்றுகின்ற இருத்துவிக்குக்களுடன் கூடிய பிருகற்பதி, எமது அவிகளை ஏற்றுக்களித்துப் பேரொலி செய்கின்றான். மற்றும், களிப்பைக் காட்டும் பேச்சுக்களையும் பேசுகின்றனன். எமது வழிபாட்டைத் தெரிந்துகொண்டு களிப்பால் பாடுகின்றனன். அதாவது, பயனுக்குள்ள கல்துளைபோன்ற தடைகளை நீக்கிவிட்டுப் பாடுகின்றனன் என்பதாம்.

---

"சிறந்தஇந்திரனுக்கு பெருநெல்லெடுத்து, பதினொரு அகல்களில் புரோடசஞ் செய்க, என்பதற்கு புரோநுவாக்கியம்:—

மந்திரம் 11

**एन्द्र सानसिꣳ रयिꣳ सजित्वानꣳ सदासहम् । वर्षिष्ठमूतये भर ।**

என்பது.

உரை.

மிகுந்த கொடை கொடுத்தற்குப் போதியதும், வெற்றிபெறும் புகழுடன் கூடியதும், எப்போதும் பகைவரைப் பழித்துத் தள்ளுவதும், ஆச்சரியமாக வளர்கின்றதுமாகிய தனத்தை, இந்திர ! நீ பாதுகாப்பின் பொருட்டு எமக்குக் கொண்டுவந்து தருவாயாக என்பதாம்.

மேற்கூறிய அதற்கே யாஜ்யாவாக்கியம்

மந்திரம் 12

**प्र ससाहिषे पुरुहूत शत्रूञ्ज्येष्ठस्ते शुष्म इह रातिरस्तु । इन्द्राऽऽभर दक्षिणेना वसूनि पतिः सिन्धूनामसि रेवतीनाम् ।**

என்பது.

உரை

பல்லோர்களால் பல்வகை யாகங்களில் அழைக்கப் பெற்ற இந்திர! நீ, எக்காலத்தும் பகைவர்களைத் துரும்புபோல் தள்ளுகின்றவனுயிருக்கின்றாய். உனது சிறந்த வன்மை பெருமையுடையது. அது இக்கருமத்தில் பயனளிப்பதாகுக. இந்திர! வலக்கையால் தனங்களை நிறையவாரிக் கொடுப்பாயாக. கடல்போன்ற பிரசைகட்கு நீ இறைவனுயிருக்கின்றாய் என்பதாம்.

---

மேற்கூறிய அதற்கே விகற்பமாகிய மற்றொரு புரோநுவாக்கியம் :—

மந்திரம் 13

**त्वꣳ सुतस्य पीतये सद्यो वृद्धो अजायथाः । इन्द्र ज्यैष्ठ्याय सुक्रतो ।**

என்பது

உரை

நற்கருமத்தையுடைய இந்திர! நீ பிழிந்த சோமரசத்தை அருந்துதற்பொருட்டு அப்போது வளர்கின்றனை. தேவர்களுக்குள் சிறப்புடையனிக்கு இது பொருந்தும் என்பதாம்.

---

மேற்கூறிய அதற்கே விகற்பமாகிய மற்றொரு யாஜ்யாவாக்கியம்:—

மந்திரம் 14

**भुवस्त्वमिन्द्र ब्रह्मणा महान्भुवो विश्वेषु सवनेषु यज्ञियः । भुवो नॄꣳश्च्यौत्नो विश्वस्मिन्भरे ज्येष्ठश्च मन्त्रो विश्वचर्षणे ।**

என்பது

உரை

இந்திர! நீ, துதியாகிய வேதவாக்கியத்தால் வளர்ந்துகொண்டிருக்கின்றாய். மூன்று வேளையும் சோமரசம் பிழியும்போது நீ யக்ஞத்திற்கு உரியோனுயிருக்கின்றாய். மாறுன பகைவரை ஒழித்துக் கொண்டிருக்கின்றாய். எல்லா மக்கட்கும் இறைவனுயிருக்கின்றாய் இத்தகைய நீ, எல்லா வேள்விகளிலும் முதல்வனுகவும் போற்றத்தக்கோனுமாயிருக்கின்றாய் என்பதாம்.

மித்திரன் பொருட்டு, ஆம்பானம்சருதம், என்பதற்குப் புரோநுவாக்கியம்:—

மந்திரம் 15

**मित्रस्य चर्षणीधृतश्श्रवो देवस्य सानसिम्। सत्यं चित्रश्रवस्तमम्।**

என்பது.

உரை

மக்களைத் தாங்கும் மித்திரதேவனுடைய கேட்கத்தக்க பெருமை மிகுதியாயிருக்கின்றது பயனளிக்குஞ் சீலமுடையதும், உண்மையுரையுடையதும், அழகிய பெருமையையுடையதுமாகிய மித்திரதேவதையை, யாகத்தால் வழிபடுகின்றோம் என்பதாம். ஆம்பா = வெண்கழுநீர் அரிசி.

---

மேற்கூறிய அதற்கே யாஜ்யா வாக்கியம்:—

மந்திரம் 16

**मित्रो जनान्यातयति प्रजानन्मित्रो दाधार पृथिवीमुत द्याम्। मित्रः कृष्टी-रनिमिषाऽभि चष्टे सत्याय हव्यं घृतवद्विधेम।**

என்பது.

உரை

இம்மித்திர தேவதை அதிகாரத்தையுணர்ந்து மக்களை தத்தமது செயலில் ஏவுகின்றது. மற்றும், மித்திரதேவதை மண்ணுலகைத் தாங்குகின்றது. அன்றியும், விண்ணுலகையுந் தாங்குகின்றது. மக்களையும் தேவர்களையும் பார்க்கின்றது. உண்மைப்பயனையளிக்கும் அம்மித்திரதேவதைக்கு நிறையப் பொங்கல் செய்கின்றேன் என்பதாம்.

---

மேற்கூறியதற்கே விகற்பமாகிய மற்றொரு யாஜ்யாவாக்கியம்:—

மந்திரம் 16

**प्र स मित्र मर्तो अस्तु प्रयस्वान्यस्त आदित्य शिक्षति व्रतेन। न हन्यते न जीयते त्वोतो नैनमंहो अश्नोत्यन्तितो न दूरात्।**

என்பது

உரை

மித்திர! உனது சம்பந்தமாகிய விரதமுதலிய கருமங்களால் அநுட்டானஞ்செய்ய விரும்பிய எசமானன் சிறந்த கருமபயனையடைகின்றான். உன்னாற் பாதுகாக்கப் பெற்ற அவ்வெசமானன் பிணிமுதலியவைகளால் துன்புறமாட்டான். பகைவராலும் தோல்வியடையான். உன்னால் பாதுகாக்கப் பெற்ற எசமானனுக்கருகில் பாவமென்பதே வாராது என்பதாம்.

"வருணாய தர்மபதயே யவமயம் சரும் என்பதற்குப் புரோநுவாக்கியம்:—

மந்திரம் 18

**यच्चिद्धि ते विशो यथा प्र देव वरुण व्रतम् । मिनीमसि द्यविद्यवि ।**

என்பது

உரை

வருணதேவ ! உன்னுடைய கருமத்தை, பிரசைகள் தத்தமது கருமத்தைச் செய்வதுபோன்று நாடோறும் தருக்கித்துணர்ந்து எதைச் செய்கின்றார்களோ, அதனால் உன்னையே வழிபடுகின்றோம் என்பதாம்.

---

மேற்கூறிய அதற்கே யாஜ்யாவாக்கியம்:—

மந்திரம் 19

**यत्किं चेदं वरुण दैव्ये जनेऽभिद्रोहं मनुष्याश्चरामसि । अचित्ती यत्तव धर्मा युयोपिम मा नस्तस्मादेनसो देव रीरिषः ।**

என்பது

உரை

வருண ! மக்களாகிய யாம் தேவலோகத்திலுள்ளவர்களுக்கு அறியாமையால் என்ன சிறிது தீமைசெய்துள்ளோமோ, மற்றும், கர்மத்தால் உனது கருமத்தைக்கொடுத்தோமோ, தேவ! அவைகளிலிருந்து எம்மைத் துன்புறுத்தாதருள்வாயாக என்பதாம்.

---

மேற்கூறிய அதற்கே விகல்பிதமாகிய மற்றொரு யாஜ்யாவாக்கியம்

மந்திரம் 20

**कितवासो यद्रिरिपुर्न दीवि यद्वा घा सत्यमुत यन्न विद्म । सर्वा ता वि-
ष्य शिथिरेव देवाथा ते स्याम वरुण प्रियासः ।**

என்பது

உரை

கெட்டவர்களைப்போன்ற இருத்துவிக்குக்கள் எக்கருமாங்கத்தைப் பழுதுபடுத்திவிட்டார்களோ, அதாவது வழிபாட்டில் நன்கு முயலவில்லையோ, அல்லது தெரிந்தே எப்பாவஞ் செய்தார்களோ, தெரியாமல் எதைச் செய்துள்

ளார்களோ அவைகளனைத்தையும் அறியாமையாற்செய்தவைகளென்று கருதி தள்ளிவிடுவாயாக. பிறகு, வருணதேவ! உனது அன்பர்களாவோமாக என்பதாம்.

பதினோராம் அநுவாகம்
முற்றிற்று.

மூன்றாங் காண்டம் நான்காம் பிரபாடகம்
முடிந்தது.

---

மூன்றாங் காண்டம் ஐந்தாம் பிரபாடகம் விடயச்சுருக்கம்.

प्रपाठके चतुर्थेतु काम्यानैमितिकाश्श्रुताः ॥
प्रपाठकेपञ्चमेतु सोमेष्ट्योश्शेष उच्यते ॥ १ ॥

நான்காம் பிரபாடகத்தில் காமியங்களும் நைமித்திகங்களுங் கூறப்பட்டன. இதில். சோமயாக தரிசபூரணமாதயாகங்களின் பரிசேடங்கள் கூறப்படுகின்றன என்பது.

---

அநுவாக விடயச் சுருக்கம்.

पूर्णेत्यारम्भणीयेष्टौ द्वौ सारस्वत होमयोः ॥
मन्त्रौविकल्पितावन्याविचत्वार ईरिताः ॥ १ ॥

அந்வாரம்பணீய இஷ்டியில் இரண்டு சாரசுவத ஹோமங்கள். மற்றைய இரண்டு மந்திரங்கள் விகற்பங்கள் என்பது. ஆயுள்வரை தரிசபூரணமாத யாகங்கள் செய்யற்பாலன என்னும் உறுதிப்பாடு அன்வாரம்பமாம்.

---

மூன்றாங் காண்டம் ஐந்தாம் பிரபாடகம்
முதலாம் அநுவாகம்

நான்கு பஞ்சாதிக்குமேல் இருபத்தைந்து பதங்களைக்கொண்டது.

தரிசபூரணமாச யாகங்களின் அங்கமாகிய அன்வாரம்பணீய இஷ்டியை விதிக்கும் பிராமணகள்.

पूर्णा पश्चादुत पूर्णा पुरस्तादुन्मध्यतः पौर्णमासी जिगाय । तस्यां देवा अधि संवसन्त उत्तमे नाक इह मादयन्ताम् । यत्ते देवा अद-

धुर्भागधेयममावास्ये संवसन्तो महित्वा । सा नो यज्ञं पिपृहि विश्ववारे रयिं नो धेहि सुभगे सुवीरम् । निवेशनी संगमनी वसूनां विश्वा रूपाणि वसून्यावेशयन्ती । सहस्रपोषꣳ सुभगा रराणा सा न आ गन्वर्चसा ॥ १ ॥ संविदाना । अग्नीषोमौ प्रथमौ वीर्येण वसून्रुद्रानादित्यानिह जिन्वतम् । माध्यꣳ हि पौर्णमासं जुषेथां ब्रह्मणा वृद्धौ सुकृतेन सातावथास्माभ्यꣳ सहवीराꣳ रयिं नि यच्छतम् । आदित्याश्चाङ्गिरसश्चाग्नीनाऽदधत ते दर्शपूर्णमासौ प्रैप्सन्तेषामङ्गिरसां निरुप्तꣳ हविरासीदथाऽऽदित्या एतौ होमावपश्यन्तावजुहवुस्ततो वै ते दर्शपूर्णमासौ ॥ २ ॥ पूर्व आऽलभन्त दर्शपूर्णमासावालभमान एतौ होमौ पुरस्ताज्जुहुयात्साक्षादेव दर्शपूर्णमासावा लभते ब्रह्मवादिनो वदन्ति स त्वै दर्शपूर्णमासावा लभेत य एनयोरनुलोमं च प्रतिलोमं च विद्यादित्यमावास्याया ऊर्ध्वं तदनुलोमं पौर्णमास्यै प्रतीचीनं तत्प्रतिलोमं यत्पौर्णमासीं पूर्वामालभेत प्रतिलोममेनावा लभेताममुमपक्षीयमाणमन्वप ॥ ३ ॥ क्षीयेत सारस्वतौ होमौ पुरस्ताज्जुहुयादमावास्या वै सरस्वत्यनुलोममेवैनावा लभतेऽमुमाप्यायमानमन्वा प्यायत आग्नावैष्णवमेकादशकपालं पुरस्तान्निर्वपेत्सरस्वत्यै चरुꣳ सरस्वते द्वादशकपालं यदाग्नेयो भवत्यग्निर्वै यज्ञमुखं यज्ञमुखमेवर्द्धिं पुरस्ताद्धत्ते यद्वैष्णवो भवति यज्ञो वै विष्णुर्यज्ञमेवाऽऽरभ्य प्र तनुते सरस्वत्यै चरुर्भवति सरस्वते द्वादशकपालोऽमावास्या वै सरस्वती पूर्णमासः सरस्वान्तावेव साक्षादा रभत

ऋध्नोत्याभ्यां द्वादशकपालस्सरस्वते भवति मिथुनत्वाय प्रजात्यै मिथुनौ गावौ दक्षिणा समृद्ध्यै ॥ ४ ॥

இதில் தரிசபூரணமாக யாகங்களின் அங்கமாகிய அன்வாரம்பணீய இஷ்டியைக் கூறுகின்றது.

முதலாவது சாரசுவத ஹோமம்

மந்திரம் 1

पूर्णा पश्चादुत पूर्णा पुरस्तादुन्मध्यतः पौर्णमासी जिगाय । तस्यां देवा अधि संवसन्त उत्तमे नाक इह मादयन्ताम् ।

என்பது

உரை

பௌர்ணமையின் அபிமானி தேவதை வேள்வி செய்யும் இடத்தின் மேற்குத் திக்கில் வெற்றி பெற்றது, மற்றும், கிழக்கிலும் இவ்விரண்டிற்கும் நடுவிலும் வெற்றி பெற்றது. அத்தகைய பௌர்ணிமையை அதிட்டித்து இவ் வேள்வியில் வசிக்கின்ற தேவர்களனைவரும் எம்மைக் களிப்படைவிப்பார்களாக என்பது.

---

இரண்டாவது சாரசுவத ஹோமம்

மந்திரம் 2

यत्ते देवा अदधुर्भागधेयममावास्ये संवसन्तो महित्वा । सा नो यज्ञं पिपृहि विश्ववारे रयिं नो धेहि सुभगे सुवीरम् ।

என்பது

உரை

அமாவாசை அபிமானி தேவதையே! உனது மகிமையால் இங்குள்ள தேவர்கள் அவிர்ப்பாகங்களைப் பெற்றுக்கொண்டார்களாதலின் எல்லா வெறுப்புக்களையும் போக்குவோய்! எமது வேள்வியை நிறைவாக்குவாயாக சௌபாக்கியத்துடன்கூடியோய்! எமக்கு, தனத்தையும் அழகிய புத்திரனையுங் கொடுப்பாயாக என்பது.

மேற்கூறிய ஹோமத்திற்கே இரண்டு விகற்ப மந்திரங்கள்

மந்திரம் 3 - 4

**निवेशनी संगमनी वसूनां विश्वा रूपाणि वसून्यावेशयन्ती । सहस्रपोषꣳ-सुभगा रराणा सा न आगन्वर्चसा संविदाना । अग्नीषोमौ प्रथमौ वीर्येण वसून्रुद्रानादित्यानिह जिन्वतम् । माध्यꣳ हि पौर्णमासं जुषेथां ब्रह्मणा वृद्धौ सुकृतेन सातावथास्मभ्यꣳ सहवीराꣳ रयिं नि यच्छतम् ।**

என்பது.

உரை

நல்லவீட்டின்கண் எம்மைப்பிரவேசிக்கச் செய்வதும், தனங்களையளிப்பதும், பல்வகை இரத்தின முதலான பொருள்களை வளரச்செய்வதும், எமது வீட்டில் புகச்செய்வதும், ஆயிரலக்ஷம் தனங்களை நிறைப்பதும், சௌக்கியமுடையதும், வன்மையோடுகூடச் செய்வதுமாகிய தேவதை எம்மைக் குறித்து வருக. அக்கினி சோமர்களே ! நீவிர், தேவர்களுக்குள் மிகுந்த வீரியமுடையோர்களாதலின், உமது வன்மையால் வசுமுதலிய தேவதைகளை மகிழ்விப்பீர்களாக. துதிகளால் களிப்புறுகின்றவர்களும், முறையாய் அநுட்டித்த இவ்வேள்விக் கருமப்பயனைக் கொடுப்பவர்களும், அவியை அருந்திய பிறகு எமக்கு வீரமுடைய புத்திரனையும் தனத்தையும் இனிது கொடுக்கின்றவர்களுமான நீவிர். தரிசபூரணமாத தேவதைகளால் பாதுகாக்கப்பெற்று நடுவில் செய்யப்படும் பௌர்ணிமா அவியை அருந்துவீர்களாக என்பதாம்.

---

மேற்கூறிய ஹோமத்தை விதிப்பதற்குப் புகழ்கின்றது

மந்திரம் 1

**आदित्याश्चाङ्गिरसश्चाग्नीनाऽदधतते दर्शपूर्णमासौ प्रेप्सन्तेषामङ्गिरसां निरुप्तꣳहविरासीदथाऽऽदित्या एतौहोमावपश्यन्तावजुहवुस्ततो वै ते दर्शपूर्णमासौ पूर्व आऽलभन्त ।**

என்பது.

உரை

ஆதித்தர்களும் ஆங்கீரசரிஷிகளும் ஆதானஞ் செய்வதன்முன் தரிசபூரணமாத இஷ்டிகளை யடையவிரும்பினர். அவர்களுள் ஆங்கிரசர் சாரசுவத ஹோமத்தையுணர்ந்து அந்வாரம்பணீய இஷ்டியின் பொருட்டு நெல்லெடுத்தனர். அப்போது ஆதித்ய தேவர்கள், அன்வாரம்பணீய இஷ்டிக்கு அங்கங்களான சாரசுவத ஹோமங்களிரண்டும் முன்னர்ச் செய்யற்பாலன

வென்று உறுதிகொண்டு செய்தார்கள். பிறகு, அங்வாரம்பணீய இஷ்டியைச் செய்து தரிசபூரணமாதங்களைச் செய்தார்கள் என்பதாம.

---

இப்போது விதிக்கப்படுகின்றது

பிராமணம் 2

**दर्शपूर्णमासावालभमान एतौ होमौ पुरस्ताज्जुहुयात्साक्षादेव दर्शपूर्णमासावालभते ।**

என்பது

உரை.

தரிசபூரணமாத இஷ்டியைத் தொடங்கும்போது, 'பூர்ணுஸ்சாத், என்பது முதலிய மந்திரங்களால் சாரசுவத ஹோமங்களைச் செய்யில் தரிசபூரணமாதங்களைச் செய்வதற்கு உரித்தானவனுகின்றான் என்பதாம்.

---

மேற்கூறிய இரண்டு ஹோமங்களின் தேவதைகளை விதிப்பதற்குப் புகழ்கின்றது

பிராமணம் 3

**ब्रह्मवादिनो वदन्ति स त्वै दर्शपूर्णमासावा लभेत य एनयोरनुलोमं च प्रतिलोमंचविद्यादित्यमावास्याया ऊर्ध्वं तदनुलोमं पौर्णमास्यै प्रतीचीनं तत्प्रतिलोम यत्पौर्णमासीं पूर्वामालभेत प्रतिलोममेनावा लभेतामुमपक्षीयमाणमन्वप क्षीयेत ।**

என்பது

உரை

தரிசபூரணமாதங்களின் பிரதிலோப முறையையும் அநுலோப முறையையும் உணர்ந்தவன் தரிசபூரணமாத இஷ்டிகளைச் செய்ய முயல்கின்றவனுகின்றான். அதாவது, அமாவாசைக்குமுன் சுக்கிலபாட்டிமை முதற்கொண்டுள்ள காலம் அநுலோபமாம். சந்திரன் வளர்தலின் பௌர்ணிமிலிருந்து கிருஷ்ணபட்சபாட்டிமை வரையுள்ளகாலம் பிரதிலோமமாம். நாடோறும் சந்திரன் குறைதலின் என்க. இவ்வாறு ஆதலின் பௌர்ணிமிக்கு முன் இஷ்டிசெய்யத் தொடங்கில் நாடோறும் சந்திரன் குறைவுபடுதலின் எசமானுக்கும் குறைவுவரும் என்பதாம்

பிரதிலோம தோஷத்தைப் போக்கும் இரண்டு தேவதை விசேடங்களை விதிக்கின்றது

பிராமணம் 4

**सारस्वतौ होमौ पुरस्ताज्जुहुयादमावास्या वै सरस्वत्यनुलोममेवैनावा लभतेऽमुमाप्यायमानमन्वा प्यायते ।**

என்பது

உரை

அன்வாரம்பணீய இஷ்டிக்குமுன் சரஸ்வதி சரஸ்வான் என்னும் இரண்டையுந் தேவதைகளாகக்கொண்ட சாரசுவதமென்னும்ஓமங்களிரண்டையுஞ் செய்யில்பிரதிலோம தோஷம் நீங்கி அநுலோம முறையாக தரிசபூரணமாச யாகங்களைத் தொடங்கியவனாகின்றான். இதனால்,சந்திரன் வளர்தல்கொண்டு எசமானனும் வளர்கின்றான் என்பதாம்.

---

அங்கமாகிய ஹோமங்களைக் கூறிவிட்டு மூன்று அவிகளையுடைய அங்கியாகிய அன்வாரம்பணீய இஷ்டியை விதிக்கின்றது

பிராமணம் 5

**आग्नावैष्णवमेकादशकपालं पुरस्तान्निर्वपेत्सरस्वत्यै चरुं सरस्वते द्वादशकपालम् ।**

என்பது

உரை

முதலில் அமாவாசையாகத்தொடங்கிய பிரதிலோம தோஷம் இன்றிய போதும் பௌர்ணமியை முதன்மையாகத் தொடங்குவதை வெறுத்து பிரதிலோமதோஷபரிகார முயற்சிசெய்யப்பட்டது. ஆதலின், அது வேறோராற்றால் அமையாமையின் பௌர்ணமியாகமே முதலில் தொடங்கற்பாலதென்பது பெறப்பட்டது. ஆதலின், அக்கினி விஷ்ணுக்களுக்கு பதினொரு கபாலங்களில் புரோடாசமும், சரசுவதிக்குப் பொங்கலும், சரஸ்வானுக்கு பன்னிரு கபாலங்களில் புரோடாசமுஞ் செய்தல் வேண்டுமென்பதாம்.

---

அவற்றுள் அக்கினிக்கும் விஷ்ணுவிற்குஞ் செய்யப்பெறும் அவிகளைப் புகழ்கின்றது

பிராமணம் 6

**यदाग्नेयो भवत्यग्निर्वै यज्ञमुखं यज्ञमुखमेवर्द्धिं पुरस्ताद्धत्ते यद्वैष्णवो भवति यज्ञो वै विष्णुर्यज्ञमेवाऽऽरभ्य प्र तनुते ।**

என்பது.

உரை

அக்கினியின்றி வேள்வியே இல்லாமையின் அக்கினிதேவி வேள்வியின் முகமாம். ஆதலின் வேள்வியின் முகத்தைக் குறித்து முதலில் சம்பத்தைத் தேடுகின்றான். எக்ஞமயாணடும் வியாபிதகிருததலின் விஷ்ணுவாம. ஆதலின் விஷ்ணுவின் அவியால் எக்ஞத்தை நன்கு பரப்பியவனாகின்றான என்பதாம்.

---

பிறகு, இரண்டு அவிகளைப் புகழ்கின்றது

பிராமணம் 7

**सरस्वत्यै चरुर्भवति सरस्वते द्वादशकपालोऽमावास्या वै सरस्वती पूर्णमासस्सरस्वान्तावेव साक्षादा रभत ऋध्नोत्याभ्याम् ।**

என்பது

உரை

சரசுவதிக்குப் பொங்கல், சரஸ்வானுக்கு பன்னிரண்டு கபாலங்களில் புரோடாசம். அமாவாசையில் சரசுவதி. பௌர்ணிமையில் சரஸ்வான். இவ்விருதேவதைகளைக்கொண்ட தரிசபூரணமாச யாகங்கள் தொடங்கப்பட்டது. இவ்விரண்டு தேவதைகளாலும் எசமானன் தடையின்றி நிறைந்த சம்பத்தையடைகின்றான் என்பதாம்.

---

மூன்றுவது அவியில் சரசுவதி தேவிக்குரியதை விட்டு விட்டு சரஸ்வானுக்குரியதைக் கொள்ளல் வேண்டும் மென்பதைப் புகழ்கின்றது.

பிராமணம் 8

**द्वादशकपालस्सरस्वते भवति मिथुनत्वाय प्रजात्यै ।**

என்பது

உரை.

பன்னிரு கபாலப் புரோடாசம் 'சரஸ்வான்' என்னும் ஆண் தேவதைக் குரியதாமாதலின் அது எசமானனுடைய புணர்ச்சியின் பொருட்டு உதவுகின்றது. அதுவும் குழந்தைப்பேற்றின் பொருட்டாம் என்பதாம்.

---

இதில் தட்சிணை இதுவென விதிக்கின்றது

பிராமணம் 2

**मिथुनौ गावौ दक्षिणा समृद्ध्यै ।**

என்பது

உரை

இதற்கு இரண்டு பசுக்கள் தட்சிணை கொடுத்தல் வேண்டும். இது, புத்திர சம்பத்தின் பொருட்டு என்பதாம்.

முதல் அநுவாகம்

முற்றிற்று.

---

மூன்றாங் காண்டம் ஐந்தாம் பிரபாடகம்

## இரண்டாவது அநுவாகம்

நான்கு பஞ்சாதிக்குமேல் முப்பது பதங்களைக் கொண்டது.

ஸ்தோமபாகத்தைக் கூறும் பிராமணங்கள்.

ऋषयो वा इन्द्रं प्रत्यक्षं नापश्यन्तं वसिष्ठः प्रत्यक्षमपश्यत्सोऽब्रवीद्ब्राह्मणं ते वक्ष्यामि यथा त्वत्पुरोहिताः प्रजाः प्रजनिष्यन्तेऽथ मेतरेभ्य ऋषिभ्यो मा प्र वोच इति तस्मा एतान्त्स्तोमभागानब्रवीत्ततो वसिष्ठपुरोहिताः प्रजाः प्राजायन्त तस्माद्वासिष्ठो ब्रह्मा कार्यः प्रैव जायते रश्मिरसि क्षयाय त्वा क्षयं जिन्वेति ॥ १ ॥ आह देवा वै क्षयो देवेभ्य एव यज्ञं प्राऽऽह प्रेतिरसि धर्माय त्वा धर्मं जिन्वेत्याह मनुष्या वै धर्मो मनुष्येभ्य एव यज्ञं प्राऽऽहान्वितिः-

रसि दिवे त्वा दिवं जिन्वेत्याहैभ्य एव लोकेभ्यो यज्ञं प्राऽऽह विष्ट-
म्भोऽसि वृष्ट्यै त्वा वृष्टिं जिन्वेत्याह वृष्टिमेवाव ॥ २ ॥ रुन्धे
प्रवाऽस्यनुवासीत्याह मिथुनत्वायोशिगसि वसुभ्यस्त्वा वसूञ्जिन-
न्वेत्याहाष्टौ वसव एकादश रुद्रा द्वादशाऽऽदित्या एतावन्तो वै
देवास्तेभ्य एव यज्ञं प्राऽऽहौजोऽसि पितृभ्यस्त्वा पितॄञ्जिन्वेत्याह
देवाने वपितॄननु सं तनोति तन्तुरसि प्रजाभ्यस्त्वा प्रजा जिन्व
॥ ३ ॥ इत्याह पितॄनेव प्रजा अनु सं तनोति पृतनाषाडसि पशु-
भ्यस्त्वा पशूञ्जिन्वेत्याह प्रजा एव पशूननु सं तनोति रेवदस्योष-
धीभ्यस्त्वौषधीर्जिन्वेत्याहौषधीष्वेव पशून्प्रति ष्ठापयत्यभिजिदसि
युक्तग्रावेन्द्राय त्वेन्द्रं जिन्वेत्याहाभिजित्या अधिपतिरसि प्राणाय
त्वा प्राणम् ॥ ४ ॥ जिन्वेत्याह प्रजास्वेव प्राणान्दधाति त्रिवृदसि
प्रवृदसीत्याह मिथुनत्वाय संरोहोऽसि नीरोहोऽसीत्याह प्रजात्यै
वसुकोऽसि वेषश्रिरसि वस्यष्टिरसीत्याह प्रतिष्ठित्यै ॥ ५ ॥

*சண்டிச் சோமயாகத்தில் பிரமனுடைய தன்மையின் விதி கூறப்படுகின்றது. அதாவது ஸ்தோமபாகத்தையுணர்ந்து அநுக்ஞை கொடுக்குந் திறமையாம்.*

சோமயாகத்திற்கு 'பிரமன்' என்னும் இருத்துவிக்கு வசிஷ்டரிஷி வம்சத்தில் பிறந்தவனுயிருத்தல் வேண்டும். அல்லது, சோதிட்டோமத்தில் ஸ்தோமபாகங்களை உணர்ந்தவனுயிருத்தல் வேண்டுமென்பதை விதித்தற்பொருட்டுப் போற்றுகின்றது.

பிராமணம் 1

ऋषयो वा इन्द्रं प्रत्यक्षं नापश्यन्त वसिष्ठः प्रत्यक्षमपश्यत्सोऽब्रवीद्ब्राह्मणं ते वक्ष्यामि यथा त्वत्पुरोहिताः प्रजाः प्रजनिष्यन्तेऽथ मेतरेभ्य ऋषिभ्यो मा प्र वोच इति तस्मा एतान्त्स्तोमभागानब्रवीत्ततो वसिष्ठपुरोहिताः प्रजाः प्राजायन्त ।

ஸ்தோமபாகம்)

உரை

ஓர்கால் வசிஷ்டர்முதலான இருடிகளனைவரும், இந்திரமுக மந்திரவிசேடங்களையுணர்ந்து கொள்ளுதற்பொருட்டு இந்திரனிடம் வந்தார்கள் அதைக் கண்ட இந்திரன் இவர்கள் அதற்கு அதிகாரிகளல்லர் என மறைந்துகொண்டனன் ஆதலின் இருடிகள் இந்திரனைக்கண்டிலர். வசிஷ்டரிஷிமாத்திரம் யோகவலியால் திவ்யநேத்திரத்தால் மறைந்திருந்த இந்திரனைப்பார்த்தனர். அப்போது அவ்விந்திரன், சோமயாகத்தில் பிரமாத்தன்மைக்கு உபயோகப்படும் மந்திரங்களை உனக்கு உபதேசிக்கின்றேன் இதனால், உன்னையே புரோகிதராக எல்லாப்பிரசைகளுங் கொள்வார்கள் என்று அதை உபதேசித்தனன் அதாவது, அதிகாரமில்லாதவர்கட்கு இதை உபதேசிக்கக்கூடாதென்று கூறிவிட்டு 'ரஜமிரலி, என்பது முதலியஸ்தோமபாக மந்திரத்தை உபதேசித்தருளினன் என்பதாம்.

ஈண்டு, ஸ்தோமம் என்பது பகிழ்ப்பவமானம் முதலிய துதிவிசேடமாம். இம்மந்திரங்களை ஓதிவிட்டு, ஸ்துதிக்கும்படி பிரமன் அநுக்ஞை கொடுக்கின்றான். ஆதலின் இது ஸ்தோமபாகம் எனப்படும். இவ்வாற்றால், இந்திரனுடைய அருளால் உண்டான மனிதர்களனைவரும் வசிஷ்டரையே புரோகிதராகக்கொண்டு வழிபட்டனர் என்பதாம்.

---

இப்போது அதை விதிக்கின்றது.

பிராமணம் 2

तस्माद्वासिष्ठो ब्रह्मा कार्यः प्रैव जायते ।

என்பது.

உரை

இந்திரன், வசிஷ்டருக்கு பிரமத்தன்மைக்குரிய மந்திரங்களனைத்தையும் உபதேசித்துள்ளான் ஆதலின், சோமயாகஞ் செய்யவிரும்பியவன் வசிஷ்ட கோத்திரத்திற் பிறந்தவனையேனும், அல்லது, வசிஷ்டகோத்திர சம்பிரதாயமாக வந்த ஸ்தோமபாகங்களையறிந்தவனையேனும் பிரமனாக நியமித்துக் கொள்ளல் வேண்டும். அந்த ஸ்தோமபாகங்கள் நான்காங்காண்டத்தின்நான்காம் பிரபாடகத்திற் கூறப்பட்டுள்ளன. அவைமுப்பத்தொன்றாம. அவற்றுள் ஒவ்வொன்றைக்கூறிவிட்டு 'துதிப்பாயாக, என்று ஆணை கொடுத்தல் வேண்டும்.

ஈண்டு, அக்கினிஷ்டோமத்தில் பன்னிரண்டு. உக்த்தியத்தில் பதினைந்து, சோடசியில் பதினாறு, வாசபேயத்தில் பதினேழு, அதிராத்திரத்தில் இருபத்தொன்பது, அப்தோர்யாமத்தில் முப்பத்துமூன்று, என்றிவ்வாறு வகுக்கப்பட்டிருத்தலின் உள்ள முப்பத்தொன்றின் கடைசியிலுள்ள

ஸ்தோமபாகத்தை மும்முறை ஓதில் முப்பத்துமூன்றாகிவிடுகிறது என்பதை யுணர்க. எசமானன் இவ்வாறாயின் மக்களும் அவ்வாறே தோன்றுகின்றனர் என்பதாம்.

---

முதலாம் ஸ்தோமபாகத்தை எடுத்துக்கொண்டு உரை கூறுகின்றது.

பிராமணம் 3

रश्मिरसि क्षयाय त्वा क्षयं जिन्वेत्याह देवा वै क्षयो देवेभ्य एव यज्ञं प्राऽऽह ।

என்பது

உரை

ஐந்தாங்காண்ட பிராமணத்தில் இதற்கு ஆதித்யபரமாகப் பொருள் கூறப்பட்டிருத்தலின் அவ்வாறே ஈண்டும் உரை கூறற்பாலதாம். ஆதித்தனே! நீ, கிரணங்களுடன்கூடியவனாக இருக்கின்றாய். க்ஷயம் = தேவசங்கம். ஆதலின் தேவர் சங்கத்திலுள்ள பிரீதியின் பொருட்டு, ஆதித்தனே! உன்னை எண்ணுகின்றேன். ஆதலின் தேவசங்கத்தைப் பிரியப்படுத்துவாயாக. ஈண்டு, இவ்வெக்ஷத்தை, தேவர்களின் பொருட்டே ஹோதா சொன்னதாகும் என்பதாம்.

---

இரண்டாவது ஸ்தோமபாகத்தில் தர்மத்தை அநுட்டானஞ் செய்கின்றவர்களாதலின் தருமம், என்னுஞ்சொல்லால் மனிதர்கள் குறிப்பிடப்பட்டார்கள் என்பதை விளக்குகின்றது.

பிராமணம் 4

प्रेतिरसि धर्माय त्वा धर्मं जिन्वेत्याह मनुष्या वै धर्मो मनुष्येभ्य एव यज्ञं प्राह ।

என்பது

உரை

தருமத்தை அபிமானிக்குந் தேவதையே! நீ, உயிர்கட்கு உபகாரமுடையோனாயிருக்கின்றாய். ஆதலின், தருமாநுட்டானமாகிய புருடார்த்தத்தின் பொருட்டு உன்னை நினைக்கின்றேன். அத்தகைய தருமத்தை அநுட்டானஞ் செய்கின்றவனைக் களிப்புறுவிப்பாயாக. இதனால், கருமம் என்னுஞ் சொல்லாற் குறிப்பிட்ட மக்களின் பொருட்டு இதைக் கூறியதாகும் என்பதாம்.

மூன்றுவது, நான்காவது, ஐந்தாவது ஸ்தோமபாகங்களில் கருத்தை விளக்கு கின்றது.

பிராமணம் 5

**अन्वितिरसि दिवे त्वा दिवं जिन्वेत्याहैभ्य एव लोकेभ्यो यज्ञं प्राऽऽह ।**

என்பது.

உரை

சுவர்க்கலோகாபிமானியாகிய தேவதையே! நீ தேவர்கட்கு அநுகூல மாகிய போக்குடையதாயிருக்கின்றாய். அத்தகைய உன்னை சுவர்க்கலோகத் தின் பொருட்டு எண்ணுகின்றேன். அந்தச் சுவர்க்கலோகத்தைப் பிரியப் படுத்துவாயாக என்பது.

ஈண்டு, நான்காவது ஐந்தாவது ஸ்தோமபாகங்களை மந்திரத்தில் எடுத் துக் கூறவில்லை. ஆயினும், 'உலகங்கட்கு' என்னும் பன்மையால் பொது வாகக் கூறியிருத்தலின் எல்லாவற்றின் கருத்துங் கூறப்பட்டது.



ஆறவது ஸ்தோமபாகம் மழையைக் கொடுப்பதால் புகழ்கின்றது.

பிராமணம் 6

**विष्टम्भोऽसि वृष्ट्यै त्वा वृष्टिं जिन्वेत्याह वृष्टिमेवाव रुन्धे ।**

என்பது.

உரை

மழையை அபிமானிக்கும் தேவதையே! நீ, நீரை விசேடமாய்த்தாங்கு வதாக இருக்கின்றாய். மழையின் பொருட்டு உன்னை எண்ணுகின்றேன். மழையைப் பிரியப்படுத்துவாயாக என்று கூறுகின்றது. இதனால் மழை உண்டாக்கப்படுகின்றது என்பதாம்.



ஏழாவது, எட்டாவது ஸ்தோமபாகங்களின் தலைதிபுச் சொற்கள் எடுத்துக் கொண்டு, பகலிரவுகளைக் கூறுவதால் புணர்ச்சியாகிய சம்பத்தை விளக்குகின்றது.

பிராமணம் 7

**प्रवाऽस्यनुवाऽसीत्याह मिथुनत्वाय ।**

என்பது.

உரை

பகலபிமானி தேவ! நீ, உலகச் செய்கையை யுண்டாக்குவோனுயிருக் கின்றாய். இரவின் அபிமானி தேவ! நீ, உறக்க முதலான செய்கைகட்கு

அநுகூலமாயிருக்கின்றாய் எனல், இவை இரண்டானதால் புணர்ச்சிக்குச் சாதனமாந்தன்மையைக் காட்டுகின்றது என்பதாம்.

---

ஒன்பதாவது, பத்தாவது, பதினோராவது ஸ்தோமங்களின் கருத்தைச் சுருக்கிக் கூறுகின்றது.

பிராமணம் 8

**उशिगसि वसुभ्यस्त्वा वसूञ्जिन्वेत्याहाष्टौ वसव एकादश रुद्रा द्वादशाऽऽ-
दित्या एतावन्तो वै देवास्तेभ्य एव यज्ञं प्राऽऽह ।**

என்பது

உரை

வசுகணபாலக! நீ, விரும்பப்படுவோனாயிருக்கின்றாய். வசுக்களைக் குறித்து உன்னை நினைக்கின்றேன். வசுக்களைப் பிரியப்படுத்துவாயாக எனல் வசுக்கள் எட்டு, உருத்திரர்கள் பதினொன்று, ஆதித்தர்கள் பன்னிரண்டு என்னும் இவ்வளவு தேவர்களின் பொருட்டு எக்ஞத்தைக்கூறுவதாகின்றது. ஈண்டு, உருத்திர ஆதித்த ஸ்தோமபாகங்களிரண்டும் வசுவைக்குறித்த ஸ்தோமபாகத்தால் உபலட்சிதமாகக்கொண்டு கருத்துக் கூறப்பட்டன என்பதையுமுணர்க என்பதாம்.

---

தேவர்களைக்கூறும் மூன்று ஸ்தோமங்கட்கு முன் பிதிர்க்களைக்கூறும் பதினேந ஸ்தோமபாகங்கள் கூறப்பட்டதால் தேவர்களையும் பிதிர்க்களையும் எப்போதுந் தேடியதாகின்றது.

பிராமணம் 9

**ओजोऽसि पितृभ्यस्त्वा पितॄञ्जिन्वेत्याह देवानेव पितॄननु सं तनोति ।**

என்பது

உரை

பிதிர்க்களைப் பரிபாலிக்குந் தேவ! நீ, வன்மை வடிவாயிருக்கின்றாய் பிதிர்க்களின் பொருட்டு உன்னை நினைக்கின்றேன். பிதிர்க்களைப் பிரியப் படுத்துவாயாக எனல், இது தேவர்களையும் பிதிர்க்களையும் விருத்தி செய்கின்றது என்பதாம்.

---

பிதிர்க்களைக்கூறும் ஸ்தோமபாகங்கட்கு முன், பிரசைகளைக்கூறும் பதின்மூன்றாவது ஸ்தோமபாகங் கூறப்பட்டிருத்தலின், பிதிர்க்களையும், பிரசைகளையும் எப்போதுந் தேடுகின்றது என்பதை விளக்குகின்றது.

பிராமணம் 10

**तन्तुरसि प्रजाभ्यस्त्वा प्रजा जिन्वेत्याह पितॄनेव प्रजा अनु सं तनोति ।**

*என்பது*

உரை

*பிரசைகளை அபிமானிக்குந் தேவ! நீ, மக்கள், பேரன்மார்களை வளர்க்குங்காரணமாயிருக்கின்றாய். பிரசைகளின் பொருட்டு உன்னை எண்ணுகின்றேன். பிரசைகளைப் பிரியப்படுத்துவாயாக எனல், பிதிர்க்களையும் பிரசைகளையும் எப்போதும் விருத்திசெய்கின்றது என்பதாம்.*

---

பசுக்களைக்கூறும் பதினான்காம் ஸ்தோமபாகத்தால் பிரசைகளையும், பசுக்களையும் பெறுதல் கூடுமென்பதை விளக்குகின்றது:—

பிராமணம் 11

**पृतनाषाडसि पशुभ्यस्त्वा पशूञ्जिन्वेत्याह प्रजा एव पशूननु सं तनोति ।**

*என்பது.*

உரை

*பசுக்களைப் பரிபாலிக்குந் தேவனே! நீ, எமது பசுக்களைக் கொல்லும் பிறருடைய சைன்யங்களை ஒழிக்கின்றவனாக இருக்கின்றாய். பசுக்களின் பொருட்டு உன்னை நினைக்கின்றேன். பசுக்களைப் பிரியப் படுத்துவாயாக எனல், பிரசைகளுடன் பசுக்களையும் விரித்திசெய்கின்ற தென்கின்றது என்பதாம்.*

---

கொடிசெடிகளைக்கூறும் பதினைந்தாம் ஸ்தோமபாகத்தால் பசுக்கட்குப் பிறகு உண்டாகும் கொடிசெடிகளில் பசுக்கள் நிலைக்கின்றன என்பதை விளக்குகின்றது :

பிராமணம் 12

**रेवदस्योषधीभ्यस्त्वौषधीर्जिन्वेत्याहौषधीष्वेव पशून्प्रति ष्ठापयति ।**

*என்பது*

உரை

*கொடி செடிகளைப் பாதுகாக்கும் தேவனே! நீ, தனமுடையவனாக இருக்கின்றாய். கொடி செடிகளின் பொருட்டு உன்னை நினைக்கின்றேன். கொடிசெடிகளைப் பிரியப் படுத்துவாயாக எனல், கொடிகளில் பசுக்கள் நிலை பெற்றிருக்கின்றன என்கின்றது என்பதாம்,*

இதுவரை, முதலிலிருந்து பதினைந்து ஸ்தோமபாகங்களுக்கு ஐந்தாங்காண்டப் படி உரை கூறப்பட்டது. இனி, பதினாறவது ஸ்தோமவாக்கியத்தின் முதலாவது சொல்லுக்கு வச்சிராயுதம் பொருளென்று அங்குள்ள உரைப்படி உரைகூறப்படுகின்றது:

பிராமணம் 13

**अभिजिदसि युक्तग्रावेन्द्राय त्वेन्द्रं जिन्वेत्याहाभिजित्यै ।**

என்பது.

உரை

*வச்சிராயுதமே! நீ, எங்கும் வெற்றி பெறும் கல்லொத்த வன்மை மிக்குடையதாயிருக்கின்றாய். இந்திரன் பொருட்டு உன்னை நினைக்கின்றேன். இந்திரனைப் பிரியப்படுத்துவாயாக எனல், வெற்றியின் பொருட்டு என்கின்றது என்பதாம்.*

---

பதினேழாவது ஸ்தோமபாகத்தால் பிராணன்களை நிலைநிறுத்தல் கூறப்படுகின்றது

பிராமணம் 14

**अधिपतिरसि प्राणाय त्वा प्राणञ्जिन्वेत्याह प्रजास्वेव प्राणान्दधाति ।**

என்பது.

உரை

*பிராணனையபிமானிக்கும் தேவனே! நீ, பிராணன்களைப்பாதுகாப்போனாயிருக்கின்றாய். பிராணன் பொருட்டு உன்னை நினைக்கின்றேன். பிராணனைப் பிரியப் படுத்துவாயாக எனல், பிராணன்களை பிரசைகளில் நிறுவுகின்றதென்கின்றது என்பதாம். ஈண்டு, 'பிராணன்களை' என்ற பன்மையால் பிராணன்களைக் கூறும் மூன்று ஸ்தோமபாகங்களால் அபானன், நேத்திரம் செவிகளைக்கூறும் 18 - 19 - 20 - வது ஸ்தோமபாகங்களின் கருத்தும் சுருக்கிக் கூறப்பட்டதாயிற்றென்பதை யுணர்க.*

---

21-22-23-24-வது ஸ்தோமபாகங்கள் புணர்ச்சியைத் தேடுகின்றவைகள் என விளக்குகின்றது:—

பிராமணம் 15

**त्रिवृदसि प्रवृदसीत्याह मिथुनत्वाय ।**

என்பது

உரை

புணர்ச்சியே! நீ, ஆண், பெண், கூடுதல் என்னும் முக்குண வடிவா யிருக்கின்றாய். கூடியபின் உண்டாகும் கடைதலாகிய செய்கையாயும் இருக் கின்றாய். இவ்வாறு, மூன்று செயல்களைக்கூறும் இரண்டு ஸ்தோமங்களால் கடைதல் முடிந்து பிரிதலாகிய இரண்டையுங்கூறும் மேல்வரும் இரண்டு ஸ்தோமங்களும் உபலட்சியமாய்க் கொள்ளப்பட்டன. சம்விருத் = கடைதல். முடிவு விவிருத் = ஆண்பெண் பிரிதல். இவ்வாறு, நான்கு ஸ்தோமங்களா லும் புணர்ச்சி முழுதுந் தேடப்பெற்றது என்பதாம்.

---

**25-26-27-28** -வது ஸ்தோமபாகங்கள் புத்திரப்பேற்றை மேற்கொண்டன என்பதை விளக்குகின்றது

பிராமணம் 16

**सꣳरोहोऽसि नीरोहोऽसीत्याह प्रजात्यै ।**

என்பது

உரை

பிரசவமே! நீ, சுக்கில சோணித கருப்பத்தை வெளிப்படுத்துவதாயும் அவயவங்களை வெளிப்படுத்துவதாயுமிருக்கின்றாய். இவ்விரண்டு ஸ்தோம பாகங்களால் முதலுற்பத்தி இரண்டாவது உற்பத்திகளைக் கூறும் ஏனைய இரண்டு ஸ்தோமபாகங்களுக்கும் உரைகூறப்பட்டது என்பதாம்.

---

**29-30-31**-வது ஸ்தோமபாகங்களால் உண்டாகிய குழந்தையின் நிலைமை பயனென்பதை விளக்குகின்றது

பிராமணம் 17

**वसुकोऽसि वेषश्रिरसि वस्यष्टिरसीत्याह प्रतिष्ठित्यै ।**

என்பது.

உரை

பிறந்த குழந்தையை அபிமானிக்குந் தேவதையே! நீ, எம்மை வாழ் விப்பதாயிருக்கின்றாய். மற்றும், அநுகூல இலக்குமியையுடையதும், வன்மை யுடையதும், வாழ்வு வளர்தலுடையதுமாக விருக்கின்றாய் என்பதாம்.

மேற்கூறிவந்த ஸ்தோமபாக மந்திரங்களைக்கூறி பிரமன் ஒவ்வொரு சாமப்பாடலுக்கும் அநுக்ஞைகொடுக்கின்றான். ஆதலின், இது, பிரமனுடைய தன்மை என்பதாயிற்று.

இரண்டாம் அநுவாகம்

முற்றிற்று.

மூன்றும் அநுவாக விடயச்சுருக்கம்

यजमानोऽग्निनेन्द्रेण विश्वेभिर्विष्णवतिक्रमान् ।
क्रामत्युत्तरयो भ्रातृव्यानित्याद्यनुषज्यते ॥ २ ॥
इन्द्र पूर्वाग्न्युपस्थानंमन्त्राश्चत्वार ईरिताः ॥

இதில்எசமானன், விஷ்ணு அதிக்கிரமம் என்னும் மூன்று மந்திரங்களையும் அனுஷங்கஞ் செய்துக்கொண்டு செபித்தல், ஆகவனீயத் தீயைப்போற்றல் என்பவைகள் கூறப்படுகின்றன என்பதாம்.

---

## மூன்றுங் காண்டம் ஐந்தாம் பிரபாடகம்

## மூன்றுவது அநுவாகம்

ஒருபஞ்சாதிக்குமேல் நாற்பத்தாறு பதங்களைக் கொண்டது.

விஷ்ணு அதிக்கிரமமந்திரங்கள்.

अग्निना देवेन पृतना जयामि गायत्रेण छन्दसा त्रिवृता स्तोमेन रथंतरेण साम्ना वषट्कारेण वज्रेण पूर्वजान्भ्रातृव्यानधरान्पादयाम्यैवेनान्बाधे प्रत्येनान्नुदेऽस्मिन्क्षयेऽस्मिन्भूमिलोके योऽस्मान्द्वेष्टि यं च वयं द्विष्मो विष्णोः क्रमेणात्येनान्क्रामामीन्द्रेण देवेन पृतना जयामि त्रैष्टुभेन छन्दसा पञ्चदशेन स्तोमेन बृहता साम्ना वषट्कारेण वज्रेण ॥ १ ॥ सहजान्विश्वेभिर्देवेभिः पृतना जयामि जागतेन छन्दसा सप्तदशेन स्तोमेन वामदेव्येन साम्ना वषट्कारेण वज्रेणापरजानिन्द्रेण सयुजा वयꣳ सासह्याम पृतन्यतः । घ्नन्तो वृत्राण्यप्रति । यत्ते अग्ने तेजस्तेनाहं तेजस्वी भूयासं यत्ते अग्ने वर्चस्तेनाहं वर्चस्वी भूयासं यत्ते अग्ने हरस्तेनाहꣳ हरस्वी भूयासम् ॥२॥

இதில், விஷ்ணு அதிக்கிரமங் கூறப்படுகின்றது. அதாவது, இந்நான்கு மந்திரங்களையும், விஷ்ணுக்கிரமம் (மூன்றடியெடுத்து வைத்தல்) செய்யுமிடத்தில் நின்றுகொண்டு செபித்தல் வேண்டுமென்பதாம்.

முதலாம் மந்திரம்

अग्निना देवेन पृतना जयामि गायत्रेण छन्दसा त्रिवृता स्तोमेन रथंतरेण साम्ना वषट्कारेण वज्रेण पूर्वजान्भ्रातृव्यानधरान्पादयाम्यवैनान्बाधे प्रत्येनान्नुदेऽस्मिन्क्षयेऽस्मिन्भूमिलोके योऽस्मान्द्वेष्टि यं च वयं द्विष्मो विष्णोः क्रमेणात्येनान्क्रामामि ।

என்பது.

உரை

அக்கினி தேவன், காயத்திரிச் சந்தம், திரிவிருத் ஸ்தோமம், ரதந்தரமென்னும் சாமம், வஷட்காரமாகிய வச்சிரம் என்னுமிச்சாதனங்களால் பிறருடைய சேனைகளை வெல்லுகின்றேன். மற்றும், பாட்டன் தகப்பன் முதலானோர்களைப்பற்றி வந்துகொண்டிருக்கின்ற பகைவரை எனக்குத் தாழ்ந்து போகின்றவர்களாகச் செய்கின்றேன. தாயைப்பற்றிய பகைவரை சங்கிலி முதலியவைகளால் கட்டிவைத்துத் துன்புறுத்துகின்றேன். இப்போது எனக்குக் கெடுதிசெய்யும் ஏனைய பகைவரைக் கொல்லுகின்றேன். விரிப்பதிலென், இவ்வுலகில், எவர்கள் எம்மை வெறுக்கின்றார்களோ, அவர்களையும், யாம் எவர்களை வெறுக்கின்றோமோ அவர்களையும் விஷ்ணுவென்னும் எசமானாகிய யான் இவ்வடியெடுத்துவைத்தலால் கடக்கின்றேன் என்பதாம்.

---

இரண்டாவது மந்திரம்

इन्द्रेण देवेन पृतना जयामि त्रैष्टुभेन छन्दसा पञ्चदशेन स्तोमेन बृहता साम्ना वषट्कारेण वज्रेण सहजान् ।

என்பது

உரை

இந்திரதேவன், திரிஷ்டுப் சந்தம், பதினைந்து ஸ்தோமம், பிருகத்சாமம், வஷட்காரமாகிய வச்சிரம் என்னும் இச்சாதனத்தால் பிறருடைய சேனைகளை வெல்கின்றேன். மற்றவை முன்போல் வருவித்துப் பொருளுரைத்துக் கொள்க என்பதாம்.

மூன்றும் மந்திரம்

**विश्वेभिर्देवेभिः पृतना जयासि जागतेन छन्दसा सप्तदशेन स्तोमेन वामदेव्येन साम्ना वषट्कारेण वज्रेणापरजान् ।**

என்பது.

உரை

விசுவே தேவர்கள், சகதிச் சந்தம், பதினேழு ஸ்தோமம், வாமதேவ்யம் என்னும் சாமம், வஷட்காரமாகிய வச்சிரம் என்னு மிச்சாதனங்களால் பிறருடைய சேனைகளை வெல்கின்றேன். மற்றவைகளை முன்போல் வருவித்துப்பொருளுரைத்துக்கொள்க என்பதாம். இவை மூன்றும் விஷ்ணு அதிக்கிரம மந்திரங்கள்.

---

ஆகவனீயத்தைப் போற்றல்

நான்காம் மந்திரம்

**इन्द्रेण सयुजो वयँ सासह्याम पृतन्यतः । घ्नन्तो वृत्राण्यप्रति । यत्ते अग्ने तेजस्तेनाहं तेजस्वी भूयासं यत्ते अग्ने वर्चस्तेनाहं वर्चस्वी भूयासं यत्ते अग्ने हरस्तेनाहँ हरस्वी भूयासम् ।**

என்பது.

உரை.

மிகுந்த ஐசுவரியமுடைய இந்திரன் என்னும் ஆகவனீயத்தீயுடன் கூடியவர்களும், பகைவர்களை பகையின்றி யொழித்தவர்களுமாகியயாம் எமது பகைமையுடைய சேனைகளை விரும்பும் பகைவர்களை அடக்க வன்மையையுடையவர்களாயுள்ளோம். அக்கினியே! ஒளியால் யானும் ஒளியுடையனுவேனுக. உனது அழகால் யானும் அழகுடையனுவேனுக. அழகு என்பது ஈண்டு வன்மையாம். மற்றும், உனது கிரணங்களால் யானும் காந்தியுடையனுவேனுக என்பதாம்.

மூன்றும் அநுவாகம்
முற்றிற்று.

---

நான்காம் அநுவாக விடயச்சுருக்கம்.

**येदेवा इत्यतीमोक्षान्मन्त्रानेताञ्जपेन्नव ।**

**यज्ञहन्यज्ञमुद्चेति भेदान्मन्त्रभिदेष्यते ॥ १ ॥**

அதி மோக்ஷம் என்னும் ஒன்பது மந்திரங்களை அனுஷங்கஞ் செய்துக்கொண்டு செபித்தல் வேண்டும் என்பது.

## மூன்றுங் காண்டம் ஐந்தாம் பிரபாடகம்

### நான்காவது அநுவாகம்

*மூன்று பஞ்சாதிக்குமேல் நாற்பத்துமூன்று பதங்களைக்கொண்டது.*

அதி மோக்ஷ மந்திரங்கள்.

ये देवा यज्ञहनो यज्ञमुषः पृथिव्यामध्यासते । अग्निर्मा तेभ्यो रक्षतु गच्छेम सुकृतो वयम् । आऽगन्म मित्रावरुणा वरेण्या रात्रीणां भागो युवयोर्यो अस्ति । नाकं गृह्णानास्सुकृतस्य लोके तृतीये पृष्ठे अधि रोचने दिवः । ये देवा यज्ञहनो यज्ञमुषोऽन्तरिक्षेऽध्यासते । वायुर्मा तेभ्यो रक्षतु गच्छेम सुकृतो वयम् । यास्ते रात्रीः सवितः ॥ १ ॥ देवयानीरन्तरा द्यावापृथिवी वियन्ति । गृहैश्च सर्वैः प्रजया न्वग्रे सुवो रुहाणास्तरता रजाꣳसि । ये देवा यज्ञहनो यज्ञमुषो दिव्यध्यासते । सूर्यो मा तेभ्यो रक्षतु गच्छेम सुकृतो वयम् । येनेन्द्राय समभरः पयाꣳस्युत्तमेन हविषा जातवेदः । तेनाग्ने त्वमुत वर्धयेमꣳ सजातानाꣳ श्रैष्ठ्य आ धेह्येनम् । यज्ञहनो वै देवा यज्ञमुषः ॥ २ ॥ सन्ति त एषु लोकेष्वासत आददाना विमथ्नाना यो ददाति यो यजते तस्य । ये देवा यज्ञहनः पृथिव्यामध्यासते ये अन्तरिक्षे ये दिवीत्याहेमानेव लोकाꣳस्तीर्त्वा सगृहः सपशुस्सुवर्गं लोकमेत्यप वै सोमेनेजानाद्देवताश्च यज्ञश्च क्रामन्त्याग्नेयं पञ्चकपालमुदवसानीयं निर्वपेदग्निस्सर्वा देवताः ॥ ३ ॥ पाङ्क्तो यज्ञो देवताश्चैव यज्ञं चाव रुन्धे गायत्रो वा अग्निर्गायत्रछन्दास्तं छन्दसा व्यर्धयति यत्पञ्चकपालं करोत्यष्टाकपालः कार्योऽ-

ष्टाक्षरा गायत्री गायत्रोऽग्निर्गायत्रछन्दाः स्वेनैवैनं छन्दसा समर्धयति पङ्क्त्यौ याज्यानुवाक्ये भवतः पाङ्क्तो यज्ञस्तेनैव यज्ञान्नैति ॥४॥

இதில், அதி மோட்சமென்னும் மந்திரங்கள் கூறப்படுகின்றன. இவ்வநுவாக மந்திரங்கட்கே அதி மோட்சமென்ற பெயராம். இம் மந்திரங்களை, வேதமென்னுந் தருப்பைமுடிச்சை மடியில் வைத்துக்கொண்டு அந்தர் வேதியில் உட்கார்ந்துகொண்டு செபித்தல் வேண்டுமென்பதாம். அவற்றுள்,

முதலிரண்டு மந்திரங்கள்

ये देवा यज्ञहनो यज्ञमुषः पृथिव्यामध्यासते । अग्निर्मा तेभ्यो रक्षतु गच्छेम सुकृतो वयम् ।

என்பது

உரை

தேவர்களுக்குள் சிலர்தாழ்ந்த சாதியாராகிய தீயவர்களாவர்கள். அத்தகைய தீயதேவர்கள் சிலர் வேள்விச்சாதனங்களை வேறிடத்திற்கு எடுத்துக்கொண்டு போய்விடுவார்கள். சிலர் வேள்வியைக் கெடுத்துவிடுவார்கள். அவ்விருவகைத் தேவர்களுள் ஒருவகையார் பூமியில் சிலவிடத்தைப் பிடித்துக் கொண்டிருக்கின்றார்கள். அவர்களிடத்திலிருந்து அக்கினி எம்மைப் பாதுகாக்க, யாம் நல்ல வேள்வியைச் செய்து பயனையடைவோமாக என்பதாம்.

ஈண்டு, 'யக்ஞமுஷ:, என்னுஞ் சொல்லை தனியே எடுத்து மற்றொரு மந்திரமாக்கிக்கொள்க.

---

மூன்றாவது மந்திரம்

आऽगन्म मित्रावरुणा वरेण्या रात्रीणां भागो युवयोर्यो अस्ति । नाकं गृह्णानास्सुकृतस्य लोके तृतीये पृष्ठे अधि रोचने दिवः ।

என்பது

உரை

சிறப்புடைய மித்திரவருணர்களே! வேள்வியைப்பற்றிய இரவுகளுக்குள் அமாவாசையிரவில் உங்களுடைய ஆட்டின் பாகத்தால் சுவர்க்கசுகத்தை உள்ளவாறடைந்தனம். எங்கு எவ்வாற்றாலெனின்? மிக ஒளிர்கின்ற வேள்வியைப் பற்றிய மூன்றாவது உலகில் என்க. அவ்வுலகம் எங்கேயெனின்? சுவர்க்கத்தின் மேல் உள்ளது என்க. மூன்றாவது உலகமெனல், மண்ணுலகம் அந்தரிக்கவுலகங்களை நோக்கி என்க. ஈண்டுச் சுவர்க்கத்தின்மேல் என்பதால் பாதாளமும், வேள்வியைப்பற்றிய என்பதால் நரகமும் நீக்கப்பட்டமை காண்க என்பதாம்.

அதிமோட்சம்)

இவை, முன்போல் இரண்டாக்கிக்கொள்ளவேண்டியவைகள்

நான்காவது ஐந்தாவது மந்திரங்கள்.

**ये देवा यज्ञहनो यज्ञमुषोऽन्तरिक्षेऽध्यासते । वायुर्मा तेभ्यो रक्षतु गच्छेम सुकृतो वयम् ।**

என்பது.

உரை

இதில். 'அந்தரிக்ஷம். என்பதும் 'வாயு, என்பதும் விசேடங்கள் மற்றவை முன்போன்றன என்பதாம்.

ஆறுவது மந்திரம்.

**यास्ते रात्रीस्सवितर्देवयानीरन्तरा द्यावापृथिवी वियन्ति । गृहैश्चसर्वैः प्रजयान्वग्रे सुवो रुहाणास्तरता रजाꣳसि ।**

என்பது.

உரை

சவிதா தேவ! வானுலக மண்ணுலகங்கட்கிடையில் தேவர்கட்குரிய கருமங்களையுடைய உன்னைப்பற்றின இரவுகளில் கருமாநுட்டானஞ் செய்தவர்களும், எல்லா வீடுகள், மக்கள், வீட்டிலுள்ள ஏவலாளர்கள், பிரசைகள் என்பவர்களுடன்கூட சுவர்க்கத்தை யடைந்தவர்களும், எசமானர்களுமான நீவிர் மகிழ்ச்சிதருஞ் சுகத்தையடைவீர்களாக என்பதாம்.

---

முன்போல் வநவித்துக் கொள்ளத்தக்கன.

ஏழாவது எட்டாவது மந்திரங்கள்.

**येदेवा यज्ञहनो यज्ञमुषो दिव्यध्यासते । सूर्यो मा तेभ्यो रक्षतु गच्छेम सुकृतो वयम् ।**

என்பது.

உரை.

சுவர்க்கம், சூரியன் என்பன விசேடங்கள். மற்றவை முன்போன்றன என்பதாம்.

ஒன்பதாவது மந்திரம்

**येनेन्द्राय समभरः पयाꣳस्युत्तमेन हविषा जातवेदः । तेनाग्ने त्वमुत वर्धयेमꣳ सजातानाꣳ श्रैष्ठ्य आ धेह्येनम् ।**

என்பது

உரை

சாதவேதாவே! நீ எவ்வுத்தமமாகிய பாலின் சாரம்போன்ற சோமரசத்தை இந்திரன் பொருட்டு நிறைத்தனையோ, அக்கினியே! நீ அந்த அவியால், இந்த எசமானனை வளர்ப்பாயாக மற்றும், எசமானனை அவனுடைய கூடப் பிறந்தார்கட்குத் தலைவனுக்குவாயாக என்பதாம்.

அதிமோட்ச மந்திரங்கள் முடிந்தன.

---

முற்கூறிய மந்திரங்களைப் புகழ்கின்றது

பிராமணம் 1

**यज्ञघ्नो वै देवा यज्ञमुष्णन्ति त एषु लोकेष्वासत आददाना विमथ्नाना यो ददाति यो यजते तस्य ।**

என்பது

உரை

பொய்வேடம் பூண்டுகொண்டு வேள்விச்சாலையைக் கொளுத்திவிடுதன் முதலான தீமைசெய்து வேள்வியைக் கெடுக்கின்றார்கள். சில வேள்விப் பாகமின்றிய தேவர்களும், மற்றுஞ் சில தேவர்களும், வேள்விக்குரிய சமசம் சோமரசம் முதலான சாதனங்களைக் கவருவதால் கெடுதிசெய்கின்றார்கள். இவர்கள், மூவுலகத்திலும் எசமானன் கொடுத்த தட்சிணையாகிய பசுக்கள் முதலான பொருள்களைக் கவர்ந்துகொண்டும், எசமானனுடைய வேள்விச் சாதனங்களை உடைத்தெறிந்து கொண்டும் இருக்கின்றார்கள் என்பதாம்.

---

அத்தகைய துன்பங்கள் இம்மந்திரங்களால் நீங்கிவிடும் என்கின்றது

பிராமணம் 2

**ये देवा यज्ञहनः पृथिव्यामध्यासते ये अन्तरिक्षे ये दिवीत्याहेमानेव लोकाꣳस्तीर्त्वा सगृहस्सपशुस्सुवर्गं लोकमेति ।**

என்பது

உரை

பூமியிலும், அந்தரிக்ஷத்திலும், சுவர்க்கத்திலும், வேள்வியைக் கெடுக்கும் எத்தேவர்களிருக்கின்றார்களோ, எனல், இம்மந்திரங்களை ஓதுவதால் துன்பங்களுடன் கூடிய இவ்வுலகங்களைத் தாண்டி, வீடு, மனை, மக்கள், பசு, கோ, குதிரைகளுடன் சுவர்க்கலோகத்தை யடைகின்றான் என்கின்றது என்பதாம்.

---

உதவசானீய (முடிவிற்செய்யும்) இஷ்டியை விதிக்கின்றது. அதாவது வேள்வியை முடித்துக் கொண்டு வீட்டுக்கு வந்து செய்தல்வேண்டும் என்பதாம்

பிராமணம் 3

अप वै सोमेनेजानाद्देवताश्च यज्ञश्च क्रामन्त्याग्नेयं पञ्चकपालमुदवसानीयं निर्वपेदग्निस्सर्वा देवताः पाङ्क्तो यज्ञो देवताश्चैव यज्ञं चाव रुन्धे ।

என்பது

உரை

சோமயாகஞ் செய்த எசமானனால் பயனின்று என எண்ணிக்கொண்டு தேவதைகளும் எக்ஞங்களும் எசமானனை விட்டுவிடுகின்றன. அதை நீக்குதற்பொருட்டு அக்கினி தேவதைக்கு ஐந்து கபாலங்களில் புரோடாசஞ் செய்து உதவசானீயம் என்னும் இவ்விஷ்டியைச் செய்தல்வேண்டும். இதனால், எல்லாத் தேவதைகளும், ஐந்தென்னும் எண்ணிக்கையுடைய வேள்வியுமாகின்றன என்பதாம். ஐந்து = பாங்ந்தி என்னுஞ் சந்தமாம்.

---

ஐந்து கபாலத்தில் செய்வதைநிந்தை செய்து விட்டு எட்டுக்கபாலத்தில் செய்வதை விதிக்கின்றது

பிராமணம் 4

गायत्रो वा अग्निर्गायत्रछन्दास्तं छन्दसा व्यर्धयति यत्पञ्चकपालं करोत्यष्टाकपालः कार्योऽष्टाक्षरा गायत्री गायत्रोऽग्निर्गायत्रछन्दास्स्वेनैवैनं छन्दसा समर्धयति ।

என்பது.

உரை

அக்கினியும் காயத்திரியும் பிரமாவினுடையமுகத்திலிருந்து உண்டான தால் அக்கினி காயத்திரிச்சந்தமாகிறது. காயத்திரிக்கு எட்டு எழுத்தாம். ஐந்து கபாலங்களை வைக்கில் எட்டெழுத்தை விட்டவனாகின்றான். ஆதலின் எட்டுக் கபாலங்களில் புரோடாசஞ்செய்து இவ்விஷ்டியைச் செய்தல் வேண்டு' மென்பதாம். இது சித்தாந்தம்.

---

யாஜ்யா புரோநுவாக்யத்திற்கு 'அக்னேதமத்ய, என்பது முதலிய அக்ஷரபங்தி மந்திரத்தை விதிக்கின்றது

பிராமணம் 5

**पङ्क्त्यौ याज्यानुवाक्ये भवतः पाङ्क्तो यज्ञस्तेनैव यज्ञान्नैति ।**

என்பது

உரை

காயத்திரிச் சந்த சித்தியின்பொருட்டு எட்டுக் கபாலங்களாம். ஆனாலும் பாங்க்தி எக்ஞமாகவில்லை. ஆதலின், அக்ஷரபங்க்தியாகிய "அக்னே தமத்ய, என்னும் மந்திரத்தை யாஜ்யாபுரோநுவாக்கியங்களாக்கிக் கொள்ளல் வேண்டும். இதனால், இவ்வேள்வியானது எசமானனைவிட்டு நீங்காது என்பதாம்.

நான்காம் அநுவாகம்

முற்றிற்று

---

ஐந்தாம் அநுவாக விடயச் சுருக்கம்.

सूर्यो तृतीयसवन आदित्यग्रह हस्तकः ।

उत्तिष्ठेदहमित्यसात्स्वाम्यन्वारभते ग्रहम् ॥ १ ॥

आसमुच्यावयेद्दर्भैरुन्नं वृष्ठ्यर्थं होमकः ।

कविर्हरेद्रूहं यास्ते वह्नौ प्रास्यति दर्भकान् ॥ २ ॥

आशा यूपोऽपस्थितिस्यात्सप्तमन्त्रा इहेरिताः ।

மூன்றுஞ் சவனத்தில் ஆதித்தியக் கிரகத்தை மூடுதல், எசமானன் ஆதித்தியக் கிரகத்தைத்தொடுதல், தருப்பைகளால் சோமரசத்தை அலைத்து விடுதல், மழையை விரும்பி செய்யும் ஹோமம், ஆஹவனீயத்திற்குச் சமீபத்திற் கொண்டுவருதல், தருப்பைகளை ஆகவனீயத்திற் போடுதல், யூபத்தை உபஸ்தானஞ் செய்தல் என்பவைகட்கு மந்திரங்கள் கூறப்படுகின்றன என்பதாம்.

---

## மூன்றுங் காண்டம் ஐந்தாம் பிரபாடகம்

## ஐந்தாவது அநுவாகம்

*மூன்று பஞ்சாதிக்குமேல் ஒருபதத்தைக் கொண்டது.*

ஆதித்தியக் கிரக மந்திரங்கள்.

सूर्यो मा देवो देवेभ्यः पातु वायुरन्तरिक्षाद्यजमानोऽग्निर्मा पातु
चक्षुषः । सक्ष शूष सवितर्विश्वचर्षण एतेभिस्सोम नामभिर्विधेम
ते तेभिस्सोम नामभिर्विधेम ते । अहं परस्तादहमवस्तादहं ज्यो-
तिषा वि तमो ववार । यदन्तरिक्षं तदु मे पिताऽभूदहꣳ सूर्यमु-
भयतो ददर्शाहं भूयासमुत्तमस्समानानाम् ॥ १ ॥ आ समुद्रादाऽ-
न्तरिक्षात्प्रजापतिरुदधिं च्यावयातीन्द्रः प्र स्नौतु मरुतो वर्षयन्तून्न-
म्भय पृथिवीं भिन्धीदं दिव्यं नभः । उद्नो दिव्यस्य नो देहीशानो
वि सृजा दृतिम् । पशवो वा एते यदादित्य एष रुद्रो यदग्निरोषधीः
प्रास्याग्नावादित्यं जुहोति रुद्रादेव पशूनन्तर्दधात्यथो ओषधीष्वेव
पशून् ॥ २ ॥ प्रति ष्ठापयति कविर्यज्ञस्य वि तनोति पन्थां नाक-
स्य पृष्ठे अधि रोचने दिवः । येन हव्यं वहसि यासि दूत इतः
प्रचेता अमुतस्सनीयान् । यास्ते विश्वास्समिधस्सन्त्यग्ने याः
पृथिव्यां बर्हिषि सूर्ये याः । तास्ते गच्छन्त्वाहुतिं घृतस्य देवा-

यते यजमानाय शर्म । आशासानस्सुवीर्यं रायस्पोषं स्वश्वियम् ।
बृहस्पतिना राया स्वगाकृतो मह्यं यजमानाय तिष्ठ ॥ ३ ॥

இதில், ஆதித்தியக்கிரக மென்னும் பாத்திரத்திலுள்ள சோமரசத்தை ஹோமஞ் செய்யும் மந்திரங்கள் கூறப்படுகின்றன.

ஆதித்தியக்கிரக மென்னுஞ் சோமபாத்திரத்தை தருப்பைகளால் மூடுதல்

மந்திரம் 1.

सूर्यो मा देवो देवेभ्यः पातु वायुरन्तरिक्षाद्यजमानोऽग्निर्मा पातु चक्षुषः । सक्ष शूष सवितर्विश्वचर्षण एतेभिस्सोम नामभिर्विधेमते तेभिस्सोम नामभिर्विधेमते ।

என்பது.

உரை

ஆதித்தியக்கிரகமென்னுஞ் சோமபாத்திரம் சூரியவாயுக்களின் வடிவாம். ஆதலின் சூரிய வடிவாகிய இத்தேவன், எக்குத்தைக் கெடுக்குந் தீயோர்களிடத்திலிருந்து என்னைப்பாதுகாப்பானாகை. வாயுவடிவாகிய இது கெடுதிவிளைவிக்குந்தேவர்களுடன்கூடிய அந்தரிட்சத்திலிருந்து என்னைப்பாதுகாக்க. எசமானனையும் யாகத்திற்குக் காரணமுமாகிய இவ்வக்கினி பகைவரின் கண்ணேறுக் குற்றத்திலிருந்து பாதுகாக்க. சோம. மேற்கூறிய நாமங்களால் உன்னை வழிபடுகின்றேன். பாத்திரத்துடன்கூடினேய்! வன்மையுடையோய்! செலுத்துவோய்! எல்லா மக்கட்கும் அருள்புரிவாய்! என்னும் இத்தகைய கூப்பாட்டுப் பெயர்களாலும் உன்னை வழிபடுகின்றேன் என்று மேலே கூட்டுக என்பதாம்.

---

எசமானன் ஓமம்முடியும்வரை கையில்பிடித்துக் கொண்டிருப்பதற்கு மந்திரம்

மந்திரம் 2

अहं परस्तादहमवस्तादहं ज्योतिषा वि तमो ववार । यदन्तरिक्षं तदु मे पिताऽभूदहं सूर्यमुभयतो ददर्शाहं भूयासमुत्तमस्समानानाम् ।

என்பது.

உரை

எசமானனாகிய நான், ஆதித்தியக்கிரகத்தின் மேல்பாகத்தைப் பிடித்துக் கொள்கின்றேன். கீழ்பாகத்தையும் பிடித்துக் கொள்கின்றேன். யான்

உரை

இதனுடைய ஒளியாயிருந்து இருட்டை யொழிக்கின்றவனாயிருக்கிறேன். மேல்பாக கீழ்பாகங்கட்கு நடுவிலுள்ள அந்தரிட்சமும் தந்தைபோல் பாது காப்பதாகுக. யான் ஆதித்தியக்கிரகத்தின் மேலையுங்கீழையும், அல்லது வடபுறதென்புறங்களையும் பார்த்துக்கொண்டிருக்கின்றேன். இதனால், யான் எசமானர்களுக்குள் சிறந்தவனாயிருக்கின்றேன் என்பதாம்.

---

அத்தநப்பைகளால் தயிர்கலந்த சோமரசத்தை அலைத்துவிடல்

மந்திரம் 3

आ समुद्रादाऽन्तरिक्षात्प्रजापतिरुदधिं च्यावयातीन्द्रः प्र स्नौतु मरुतो वर्षयन्तु ।

என்பது

உரை.

பிரமன், இவ்வாதித்தியக் கிரகத்தை நான்குதிக்குக்களிலும் கடல்வரை தருப்பைகளால் இறைத்துவிடுவானாக. அங்ஙனமே, மேலே அந்தரிக்ஷம் வரை கடல்போன்ற இவ்வாதித்தியக் கிரகத்(சோமரசத்)தை தருப்பைகளால் வாரி இறைப்பானாக, இந்திரன், கோவின் மடியைப்போல் இதைக் கறப்பானாக. வருணன் மேகம்போல் பெய்விப்பானாக என்பதாம்.

---

மழையை விரும்பியவன் ஆதித்தியக் கிரகத்தை ஓமஞ்செய்தல்

மந்திரம் 4

उन्नम्भय पृथिवीं भिन्धीदं दिव्यं नभः उद्नो दिव्यस्य नो देहीशानो वि सृजा दृतिम् ।

என்பது.

உரை

ஆதித்தனே! நீ பூமியை, நன்றாய் நனைத்துவிடுவாயாக. சுவர்க்கத்திலுள்ள வானிலுள்ள மேகம்போல் விண்ணைத் திறந்துவிடுவாயாக. வானிலுள்ள மழையை எமக்கு நிறையக் கொடுப்பாயாக. பேராற்றலுடைய நீ நீருண்டமேகத்தைத் திறந்துவிடுவாயாக என்பதாம்.

ஆதித்தியக்கிரகத்தை விதித்தல்

பிராமணம் 1

**पशवो वा एते यदादित्य एष रुद्रो यदग्निरोषधीः प्रास्याग्नावादित्यं जुहोति रुद्रादेव पशूनन्तर्दधात्यथो ओषधीष्वेव पशून् प्रतिष्ठापयति ।**

என்பது.

உரை

பசுக்களையடைவதற்குக் காரணமானதால் இவ்வாதித்தியக் கிரகங்கள் பசுக்கள் எனப்படுகின்றன. இவ்வாதித்யக்கிரகங்கள் கொடியவைகளாதலின் அக்கினியெனப்படுகின்றன. ஆகலின் கொடுமை தணிதற் பொருட்டு முதலில் கொடிசெடிகளை (தருப்பையை)த் தீயிலிட்ட பிறகு இந்தச் சோமரசத்தை ஓமஞ்செய்தல் வேண்டும். அங்ஙனஞ் செய்யில் உருத்திரவடிவமாகிய தீயி லிருந்து ஆதித்தியக் கிரகவடிவ பசுக்களை மறைத்ததாகின்றது. ஆனாலும், கொடிசெடிகளில் ஆதித்தியக்கிரகங்களான பசுக்களை நிலைநிறுத்துகின்றது என்பதாம்.

---

ஆதித்யக்கிரகத்தை அவிர்த்தான மண்டபத்திலிருந்து ஆகவனீயத்திற்குக் கொண்டுவருதல்

மந்திரம் 5

**कविर्यज्ञस्य वि तनोति पन्थां नाकस्य पृष्ठे अधि रोचने दिवः । येन हव्यं वहसि यासि दूत इतः प्रचेता अमुतस्सनीयान् ।**

என்பது.

உரை.

எக்ஞத்தை இனிதுணர்ந்த கவியாகிய இவ்வாதித்தியக்கிரகம் மிக ஒளிர் கின்ற சுவர்க்கத்தின் மேலிடத்தில் சுவர்க்கத்தின் வழியைப் பெருக்குகின் றது, அக்கினியே! தேவர்கட்கு அவி கொண்டுசெல்லும் தன்மையால் தூத னாகிய நீ, இப்போது கிளம்பி எவ்வழியால் செல்கின்றாயோ, அவ்வழியைப் பெரிதாக்குவாயாக என்று முன்னர்ச் சேர்த்துக்கொள்க. தூதன் என்றது எத்தகைய தூதுவனெனின்? கருமாநுட்டானஞ் செய்கின்றவர்களை நன்கு உணர்ந்து கொள்கின்றவனும், சுவர்க்கத்தில் அதிசயமாகிய பயனையளிக்கின்ற வனுமாவன் எனக என்பதாம்.

---

ஓமஞ் செய்தல்

மந்திரம் 6

**यास्ते विश्वास्समिधस्सन्त्यग्ने याः पृथिव्यां बर्हिषि सूर्ये याः। तास्ते गच्छन्त्वाहुतिं घृतस्य देवायते यजमानाय शर्म।**

என்பது

உரை

அக்கினியே ! பூமியிலும், வேள்வியின்கண்ணும், சூரியனிடத்தும் மிக வொளிர்கின்ற உன்னுடைய எக்கிரணங்களிருக்கின்றனவோ, அவைகள் நெய்யாகுதிக்குச் செல்க. தேவர்களை விரும்பும் எசமானனுக்குச் சுகத்தைக் கொடுப்பனவாக என்பதாம்.

இம்மந்திரங்களை, கதாசானஸ்தரீரஸி, என்னும் அநுவாகத்திற்கு முன் உள்ளதாகக் காண்க.

இது, முதற் காண்டம், நான்காம் பிரபாடகம், இருபத்திரண்டாம் அநுவாகத்தில் விநியோகிக்கப்பட்டிருக்கின்றது.

---

யூபத்தைப் போற்றுதல்

மந்திரம் 7

**आशासानस्सुवीर्यꣳ रायस्पोषꣳ स्वश्वियम्। बृहस्पतिना राया स्वगाकृतो मह्यं यजमानाय तिष्ठ।**

என்பது

உரை

யூபமே (ஆடுகட்டுந்தறியே) நீ, பிருகற்பதி தேவனுய், எசமானன் எல்லாத் தனங்களேயும் அடையும்படி செய்யப்பெற்றிருக்கின்ருய். பாதுகாப்பதும், அழகிய போகசாதனங்களுடன் கூடியதும், நல்லகுதிரைகளுடன் கூடியதுமாகிய தனத்தை எசமானகிய எனக்குக் கொடுத்துக்கொண்டிருப்பாயாக என்பதாம்.

ஐந்தாம் அநுவாகம்
முற்றிற்று.

---

ஆறும் அநுவாக விடயச் சுருக்கம்.

सं त्वा पत्न्यायोक्त्रबन्धः प्रैतु शालामुखेनयेत् ।
आथाहमुपविश्यैषा सुप्रजेति जपेदथ ॥ १ ॥
इमंकाले योक्त्रमोकः प्रेहि पत्नीमुदानयेत् ।
वसुपन्नेजनीः पत्नी गृहीत्वा तेनसादयेत् ॥ २ ॥
विश्वस्यपत्नीमुद्राता संख्यापयति सात्वगन् ।
अपः प्रवर्तयत्यूरावल मन्त्रादश स्मृताः ॥ ३ ॥

பத்தினியை யோக்த்திரத்தால் கட்டுதல், சாலாமுகீயத்திற்கு பத்தினியை அழைத்து வருதல், உட்காருதல், உட்கார்ந்த பிறகு செபித்தல், யோக்த்திரத்தை அவிழ்த்தல், அழைத்து வருதல், பன்னேசனீ என்னும் பாத்திரத்தில் நீரைக் கிரகித்தல், அதை வைத்தல், உத்காதாபார்க்குப்படி செய்வித்தல், பன்னேஜனியிலுள்ள நீரால் துடைகளை கழுவிக்கொள்ளல் என்பது.

## மூன்றுங் காண்டம் ஐந்தாம் பிரபாடகம்

## ஆறுவது அநுவாகம்

இரண்டு பஞ்சாதிக்குமேல் முப்பது பதங்களைக் கொண்டது,

பத்தினிக்குவேண்டிய மந்திரங்கள்.

सं त्वा नह्यामि पयसा घृतेन सं त्वा नह्याम्यप ओषधीभिः । सं त्वा नह्यामि प्रजयाऽहमद्य सा दीक्षिता सनवो वाजमस्मे । प्रैतु ब्रह्मणस्पत्नी वेदिं वर्णेनसीदतु । अथाहमनुकामिनी स्वे लोके विशा इह । सुप्रजसस्त्वा वयꣳ सुपत्नीरुप सेदिम । अग्ने सपत्नदम्भनमदब्धासो अदाभ्यम् । इमं वि ष्यामि वरुणस्य पाशम् ॥ १ ॥ यमबध्नीत सविता सुकेतः । धातुश्च योनौ सुकृतस्य लोके स्योनं मे सह पत्या करोमि । प्रेद्युदेहृतस्य वामीरन्वग्निस्तेऽग्रं नयत्वदितिर्मध्यं ददताꣳ रुद्रावसृष्टाऽसि युवा नाम मा मा हिꣳ-

सीर्वसुभ्यो रुद्रेभ्य आदित्येभ्यो विश्वेभ्यो वो देवेभ्यः पन्नेजनीर्गृह्णामि यज्ञाय वः पन्नेजनीस्सादयामि विश्वस्य ते विश्वावतो वृष्णियावतः ॥ २ ॥ तवाग्ने वामीरनु संदृशि विश्वा रेताꣳसि धिषीयागन्देवान्यज्ञो निदेवीर्देवेभ्यो यज्ञमशिषन्नस्मिन्त्सुन्वति यजमान आशिषस्स्वाहाकृतास्समुद्रेष्ठा गन्धर्वमातिष्ठतानु । वातस्य पत्मन्निड ईडिताः ॥ ३ ॥

இதில், பத்தினிக்கு வேண்டிய மந்திரங்கள் கூறப்படுகின்றன.

பத்தினியின் இடுப்பில் மஞ்சிக்கயிற்றைக் கட்டல்

மந்திரம் 1

सं त्वा नह्यामि पयसा घृतेन सं त्वा नह्याम्यप ओषधीभिः । सं त्वा नह्यामि प्रजयाऽहमद्य सा दीक्षिता सनवो वाजमस्मे ।

என்பது

உரை

பால் நெய் இரண்டுஞ் சித்தியாதற்பொருட்டு உன்னை நல்ல கயிற்றாற் கட்டுகின்றேன். அங்ஙனமே, கொடி செடிகளுடன் நீருஞ் சித்தியாதற்பொருட்டு உன்னைக் கட்டுகின்றேன். புத்திரப்பேறாகிய நிமித்தத்தின் பொருட்டு வேட்போனாகிய யான் (அத்வர்யு) உன்னைக் கட்டுகின்றேன். எமக்கு உணவுப் பொருளை அளித்தற்பொருட்டு அப் பத்தினி தீட்சை பண்ணிக்கொண்டவளாகுக என்பதாம்.

இது, முதற்காண்டம், இரண்டாம் பிரபாடகம், இரண்டாம் அநுவாகத்தில் விநியோகிக்கப்பட்டுள்ளது.

---

பத்தினியை, சாலாமுகியத்திற்கு அழைத்துக்கொண்டு வருதல்

மந்திரம் 2

प्रैतु ब्रह्मणस्पत्नी वेदिं वर्णेन सीदतु ।

என்பது,

உரை.

பிராமணர்களுக்குத் தலைவனாகிய எசமானனுடைய பத்தினியானவள் பத்தினியின் சாலையிலிருந்துகிளம்பி இனிது சென்றுவந்து சாலாமுகீயத்தை அடைவாளாக என்பதாம்.

---

பத்தினி, சாலாமுகியத்திற்குத் தெற்கில் உட்காருதல்

மந்திரம் 3

**अथाहमनुकामिनी स्वे लोके विशा इह ।**

என்பது

உரை

யான், எசமானனுடைய அநுகூலத்தை விரும்பியவளாய் எனதிடத்தில் உட்காருவேனாக என்பதாம்.

---

பத்தினி சேபம்

மந்திரம் 4

**सुप्रजसस्त्वा वयꣳ सुपत्नीरुप सेदिम । अग्ने सपत्नदम्भनमदब्धासो मदाभ्यम् ।**

என்பது

உரை

அழகிய மக்கட்பேறுடையவர்களும், தரும பத்தினிகளுமான யாங்கள், ஒருவராலும் பழிக்கப்படாதவர்களாய் பகைவரைக் கொல்வோனும், ஒருவராலுந் தள்ளிவிடமுடியாதவனுமாகிய உன்னிடத்தில் உட்கார்ந்திருக்கின்றோம் என்பதாம்.

இவைகள், முதற் காண்டம் மூன்றும் பிரபாடகம் நான்காவது அநுவாகத்தில் விநியோகிக்கப்பட்டவைகள் என்பதாம்.

---

பத்தினியின், இடுப்பிற் கட்டியிருந்த கயிற்றை அவிழ்த்தல்

மந்திரம் 5

**इमं विष्यामि वरुणस्य पाशं यमबध्नीत सविता सुकेतः । धातुश्च योनौ सुकृतस्य लोके स्योनं मे सह पत्या करोमि ।**

என்பது.

உரை.

நல்லுணவிற் செலுத்துவோன் (பரமேசுரன்) கட்டிய வருணபாசத்தை அவிழ்க்கின்றேன். புண்ணியத்தின் பயனாகிய மேலுலகில் பரமேசுரனுடைய இடத்தில் கணவனுடன் இன்புறுவேன் என்பதாம்.

இது முதற் காண்டம், நான்காம் பிரபாடகம், நாற்பத்தைந்தாம் அநுவாகத்தில் விநியோகிக்கப்பட்டது.

---

நேஷ்டா பத்தினியை அழைத்துக் கொண்டுவரல்

மந்திரம் 6

प्रेहुदेह्यृतस्य वामीरन्वग्निस्तेऽग्रं नयत्वदितिर्मध्यं ददताꣳ रुद्रावसृष्टाऽसि युवा नाम मा मा हिꣳसीः ।

என்பது

உரை

பத்தினியே! நீ, சாலாமுகியம் என்னுமிடத்திலிருந்து 'பன்னேசனி என்னும் உனது பாத்திரத்தில் நீர்கொண்டு வருவதன் பொருட்டு இனிது செல்வாயாக. வேள்வியை நடாத்தும் இவ்வக்கினி, உனது நடையை ஏற்றுக் கொண்டு முன்னே செலுத்துக. பூமியும், இரண்டு பக்கங்கட்கிடையில் உள்ள வழியைக் கொடுக்குக. நீ, துன்புறுந் தேவனிலிருந்து விடுபட்டவளாயிருக்கின்றாய். நீ தருணியாய், அல்லது இடையூறுகளிலிருந்து விடுபட்டவளாய் இருக்கின்றாய். இவ்வாறு செல்லும் என்னையும் நேஷ்டாவையுந் துன்புறுத்தாதே என்பதாம்.

---

ன்னேசனி என்னும் ஒருபாத்திர விசேடத்தில் பத்தினி நீரைமொண்டுகொள்ளுதல்

மந்திரம் 7

वसुभ्यो रुद्रेभ्य आदित्येभ्यो विश्वेभ्यो वो देवेभ्यः पन्नेजनीर्गृह्णामि यज्ञाय वः पन्नेजनीः ।

என்பது

உரை

தண்ணீரே! உன்னை, வசுக்கள் முதலிய தேவர்களின்பொருட்டு 'பன்னேசனி, என்னும் பாத்திரத்தில் எடுத்துக்கொள்கின்றேன். அல்லது வேள்வியின் பொருட்டு, பன்னேசனி, என்னும் பாத்திரத்தை எடுத்துக் கொள்கின்றேன், என்பதாம்.

பன்னேசனி, என்னும் பாத்திரத்தை வைத்தல்

மந்திரம் 8

**सादयामि ।**

என்பது.

உரை

பாத்திரத்தை வைக்கின்றேன் என்பதாம். ஈண்டு, மூன்மந்திரத்தில் எடுத்துக்கொள்கின்றேன் என்பதை விட்டுவிட்டு மற்றவைகளை இதனுடன் சேர்த்து ஓதிக்கொள்ளல் வேண்டும் என்பதாம்.

இது, முதற்காண்டம் நான்காம் பிரபாடகம் பதின்மூன்றும் அநுவாகத்தில் விநியோகிக்கப்பட்டது.

---

உத்காதாக்கள் 'ஹிம், என்னும் போது நேஷ்டா, உத்காதாக்கள் பத்தினியை பார்க்கும் படிசெய்தல்

மந்திரம் 9

**विश्वस्य ते विश्वावतो वृष्णियावतस्तवाग्ने वामीरनु संदृशि विश्वा रेता-ꣳसि धिषीय ।**

என்பது.

உரை

உலகம் இருக்கப்பெற்றதும் வன்மையுடையதுமாகிய உனது கடைக்கண் பார்வை இருக்கில், போற்றத்தக்க அநுட்டானத்தைச் செய்விக்கும் யான் அநேகங்குழந்தைகள் பெறத்தக்க சோணிதத்தை பத்தினியினிடத்தில் நிறுத்துவேன் என்பதாம்.

---

பத்தினி, 'பன்னேசனி, என்பதிலுள்ள நீரால், தனதுதுடைகளை (யோனியை) கழுவிக்கொள்ளல்

மந்திரம் 10

**अगन्देवान्यज्ञो निदेवीर्देवेभ्यो यज्ञमशिषन्नस्मिन्त्सुन्वति यजमान आशिष स्वाहाकृतास्समुद्रेष्ठा गन्धर्वमा तिष्ठातानु । वातस्य पत्मन्निड ईडिताः ।**

என்பது

உரை.

இவ்வேள்வி தேவர்களையடைக. விளக்கமான தண்ணீராகிய தேவி எமது வேள்வியைப்பற்றி தேவர்கட்கு நன்கு சொல்லியிருக்கின்றாள். எச

சுருக்கு மரங்கள்)

மானன் சோமரசம் பிழிந்து சுவாஹா என்று ஓமஞ்செய்து தேடிய கடல்போன்ற சுவர்க்கத்திலுள்ள பயன்களனைத்தும் கந்தருவன் போன்று மிகப்பிரியமாகிய மனைவியையுடைய எசமானனுக்குக் கிடைக்குக. வாயுவால் ஏவப்பட்டபோது இருத்துவிக்களால் ஓதப்பட்ட துதிகளின் பயன்களும் எசமானனையடைக என்பது கருத்து என்பதாம்.

இது, முதற் காண்டம், நான்காம் பிரபாடகம் இருபத்தேழாம் அநுவாகத்தில் விநியோகிக்கப்பட்டுள்ளது.

ஆறும் அநுவாகம்

முற்றிற்று.

---

## மூன்றுங் காண்டம் ஐந்தாம் பிரபாடகம்

### ஏழாவது அநுவாகம்

மூன்று பஞ்சாதிக்குமேல் பதினேழு பதங்களைக் கொண்டது.

சுருக்குக்களின் விதி

वषट्कारो वै गायत्रियै शिरोऽच्छिनत्तस्यै रसः पराऽपतत्स पृथिवीं प्राविशत्स खदिरोऽभवद्यस्य खादिरस्स्रुवो भवति छन्दसामेव रसेनाव द्यति सरसा अस्याऽऽहुतयो भवन्ति तृतीयस्यामितो दिवि सोम आसीत्तं गायत्र्याऽहरत्तस्य पर्णमच्छिद्यत तत्पर्णोऽभवत्तत्पर्णस्य पर्णत्वं यस्य पर्णमयी जुहूः ॥ १ ॥ भवति सौम्या अस्याऽऽहुतयो भवन्ति जुषन्तेऽस्य देवा आहुतीर्देवा वै ब्रह्मन्नवदन्त तत्पर्ण उपाशृणोत्सुश्रवा वै नाम यस्य पर्णमयी जुहूर्भवति न पापꣳश्लोकꣳ शृणोति ब्रह्म वै पर्णो विण्मरुतोऽन्नं विण्मारुतोऽश्वत्थो यस्य पर्णमयी जुहूर्भवत्याश्वत्थ्युपभृद्ब्रह्मणैवान्नमव रुन्धेऽथो ब्रह्म ॥२॥ एव विश्यध्यूहति राष्ट्रं वै पर्णो विडश्वत्थो यत्पर्णमयी जुहूर्भवत्याश्वत्थ्युपभृद्राष्ट्रमेव विश्यध्यूहति प्रजापतिर्वा अजुहोत्सा यत्राऽऽ-

हुतिः प्रत्यतिष्ठत्ततो विकङ्कत उदतिष्ठत्ततः प्रजा असृजत यस्य वैकङ्कती ध्रुवा भवति प्रत्येवास्याऽऽहुतयस्तिष्ठन्त्यथो प्रैव जायते एतद्वै स्रुचाꣳ रूपं यस्यैवꣳ रूपाः स्रुचो भवन्ति सर्वाण्येवैनꣳ रूपाणि पशूनामुप तिष्ठन्ते नास्यापरूपमात्मञ्जायते ॥ ३ ॥

இதில், தரிசபூரணமாத யாகங்கட்கு அங்கங்களான சுருக்குக்கள் (அகப்பை முதலியவைகள்) செய்யவேண்டிய மரவிசேடங்கள் கூறப்படுகின்றன.



சுருவம் கருங்காலி மரத்தாற் செய்யவேண்டுமெனல்

பிராமணம் 1

वषट्कारो वै गायत्रियै शिरोऽच्छिनत्तस्यै रसः पराऽपतत्स पृथिवीं प्राविशत्स खदिरोऽभवद्यस्य खादिरस्स्रुवो भवति छन्दसामेव रसेनाव द्यति सरसा अस्याऽऽहुतयो भवन्ति ।

என்பது

உரை

வஷட்காராபிமானி தேவன், ஏதோ ஒரு பகையால் காயத்திரியின் தலையை அறுத்துவிட்டனன். அதிலிருந்த நீர் பெருகி மண்ணில் விழுந்து கருங்காலிமரமாயிற்று. ஆதலின், சுருவம் கருங்காலி மரத்தாற் செய்தல் வேண்டும். செய்யில், சுருவத்தால் எடுக்கப்பட்டவைகளனைத்தும் சந்தத்தின்இரசத்தால் எடுக்கப்பட்டதாகும். ஆதலின், எசமானன் செய்யும் ஆகுதிகள் இரசத்துடன்கூடியவைகளாகின்றன என்பதாம்.



'சுகு, என்பது புரசைமரத்தாற் செய்யவேண்டு மெனல்

பிராமணம் 2

तृतीयस्यामितो दिवि सोम आसीत्तं गायत्र्याऽहरत्तस्य पर्णमच्छिद्यत तत्पर्णोऽभवत्तत्पर्णस्य पर्णत्वं यस्य पर्णमयी जुहूर्भवति सौम्या अस्याऽऽहुतयो भवन्ति जुषन्तेऽस्य देवा आहुतीः ।

என்பது

சுருக்கு மரங்கள்)

மண்ணுலகிலிருந்து எண்ணிப்பார்க்கில் மூன்றுவதாகிய சுவர்க்கத்தில் சோமம் இருந்தது. அதைக் காயத்திரி கொண்டுவந்தது. அது வேறிடத்திற் கூறப்பட்டுள்ளது. அவ்வாறு கொண்டுவரும்போது சோமத்தின் இலையொன்று மண்ணில் விழுந்து புரசமரமாயிற்று. இது இலைகளடர்ந்திருத்தலின் இலைமரம் எனப்படும். அத்தகைய புரசமரத்தால் சுரு செய்யில் அதனுற் செய்யும் ஆகுதிகளனைத்தும் சோமத்தைப்பற்றியவைகளாகும். தேவர்களும், அவரவர்களின் ஆகுதிகளை மிகவிருப்புடன் 'அருந்துவர்' என்பதாம்.

---

புரசமரத்தை மற்றெருவகையில் புகழ்கின்றது

பிராமணம் 3

**देवा वै ब्रह्मन्नवदन्त तत्पर्ण उपाशृणोत्सुश्रवा वै नाम यस्य पर्णमयी जुहू-र्भवति न पापꣳ श्लोकꣳ शृणोति ।**

என்பது.

உரை

முன்னொருகால் புரசமரத்தின்நிழலில் உட்கார்ந்துகொண்டு தேவர்கள் பிரமதத்துவ இரகசியத்தை ஒருவர்க்கொருவர் வாதாடிக் கொண்டிருந்தனர். அப்போது புரசமரத்தை அபிமானிக்குந் தேவதை அதைக் கேட்டுக் கொண்டிருந்தது. ஆதலின் அம்மரத்திற்கு 'சுஶ்ரவான்', என்னும் பெயராயிற்று. இவ்வாறாதலின் புரசமரத்தால் சுருச்செய்யில் எசமானன் எப்போதும் அழகிய துதிவார்த்தையையே கேட்டுக்கொண்டிருக்கின்றான். ஒருபோதேனும் பாவவார்த்தையை (பழிப்பை) காதில் கேட்கவேமாட்டான் என்பதாம்.

---

சுத புரசைமரம் என்பதை உவமானமாக எடுத்துக்கூறி, 'உபபிருத்', என்னும் பாத்திரம் அரசமரத்தாற் செய்ய வேண்டு மெனல்

பிராமணம் 4

**ब्रह्म वै पर्णो विण्मरुतोऽन्नं विण्मारुतोऽश्वत्थो यस्य पर्णमयी जुहूर्भवत्या-श्वत्थ्युपभृद्ब्रह्मणैवान्नमव रुन्धेऽथो ब्रह्मैव विश्यध्यूहति ।**

என்பது

உரை

தேவர்கள்கூறிய பிரமதத்துவத்தைக் கேட்டதால் புரசமரம் பிரமமாம்; வணிக குல அபிமானியாக மருத்துக்களையுண்டாக்கியதால் மருத்துக்களும் வணிகர்களாவார்கள். உழுதல் முதலியவைகளை மேற்கொண்ட அவர்களால்

தேடப்படுதலில் உணவுப் பொருளும் வணிகர் வடிவாம். இவ்வாறாதலின், எவ் வெசமானன் சுருவை புரசமரத்தாற் செய்கின்றானோ, அவன், உபபிருதையும் அரசமரத்தாற் செய்வானாக. இவ்விரண்டாலும் சுருவாகிய பிரமத்தால் அரசமரத்தின சுவாமிகளான மருத்துக்களால் உணவுப் பொருள் தேடப் பெற்றதாகின்றது. அங்ஙனமாயினும், பிரமகுலத்தை வணிக குலத்தினுஞ் சிறந்ததாகச் செய்கின்றது என்பதாம்.

---

அவ்விரண்டையும் மற்றொருவகையால் புகழ்கின்றது

பிராமணம் 5

**राष्ट्रं वै पर्णो विडश्वत्थो यत्पर्णमयी जुहूर्भवत्याश्वत्थ्युपभृद्राष्ट्रमेव विश्य-ध्यूहति ।**

என்பது.

உரை

புரசமரத்தின் தலைமை பிரமகுலம் வாழுமிடமாதலின் இராச்சியம் புரசமரமாம். மருத்தேவதைகள் வாயிலாக அரசமரம் வணிக குலமாம். இதனால், முற்கூறியபடி சுருவும், உப பிருதும் இருவகை மரங்களாற் செய்திருக்கில் பிரமமாகிய இராச்சியம் அரசமரமாகிய வணிக குலத்தில் உயர்ந்ததென்று நிறுவப்பெற்றதாயிற்று என்பதாம்.

---

துருவாவை சொத்தைக் களாமரத்தினாற் செய்ய வேண்டு மெனல்

பிராமணம் 6

**प्रजापतिर्वा अजुहोत्सा यत्राऽऽहुतिः प्रत्यतिष्ठत्ततो विकङ्कत उदतिष्ठ-त्ततः प्रजा असृजत यस्य वैकङ्कती ध्रुवा भवति प्रत्येवास्याऽऽहुतय-स्तिष्ठन्त्यथो प्रैव जायते ।**

என்பது.

உரை

முதலில் பிரமா ஆகுதி செய்த இடத்தில் சொத்தைக்களாமரம் முளைத்தது. பிரமன் வேள்விக்குச் சாதனமாகிய சொத்தைக் களாமரத்தால் பிரசைகளைப்படைத்தனன். ஆதலின், சொத்தைக்களாமரத்தால் துருவா என்னும் அகப்பை விசேடத்தைச் செய்யில் எசமானன் செய்யும் ஆகுதிகள் பெருமையுடையதாகின்றன. மற்றும், இவன் புத்திரர்களையும் உண்டாக்குகின்றான் என்பதாம்.

சுருக்கின் மரவிசேடத்தை முடிக்கின்றது

பிராமணம் 7

एतद्वै स्रुचा१ँ रूपं यस्यैव१ँ रूपास्स्रुचो भवन्ति सर्वाण्येवैन१ँ रूपाणि पशूनामुप तिष्ठन्ते नास्यापरूपमात्मञ्जायते ।

என்பது.

உரை

கருங்காலி, புரசு, அரசு, சொத்தைக்களா என்னும் இம்மரங்களால், சுருவம், சுரு, உபபிருத், துருவா என்னும் அகப்பை விசேடங்களைச்செய்யில் எசமானனுக்கு கோ, குதிரை மூதலியவைகள் கிடைக்கின்றன. மற்றும், இவ் வெசமானனுக்கு தன்னைப்போன்ற மக்களே பிறக்கின்றார்கள் தன்னிலும் மாறுபாடான குழந்தை பிறக்காது என்பதாம்.

ஏழாம் அநுவாகம்
முற்றிற்று.

---

எட்டாம் அநுவாக விடயச்சுருக்கம்.

उपया दधिगृह्णात्यपेन्द्रेति हरति ग्रहम् ॥
प्राणायेति जुहोत्येवं त्रयोमन्त्रा इहोरिताः ॥ १ ॥

தயிரைக் கிரகித்தல், ஆகவனீயத்திற்குச் சமீபத்திற்குக் கொண்டுபோதல், அதை ஹோமஞ் செய்தல் என்பது.

## எட்டாம் அநுவாகம்

ஒரு பஞ்சாதிக்குமேல் பதினன்கு பதங்களைக் கொண்டது.

தயிரை எடுத்தற்குரிய மந்திரங்கள்

उपयामगृहीतोऽसि प्रजापतये त्वा ज्योतिष्मते ज्योतिष्मन्तं गृह्णामि दक्षाय दक्षवृधे रातं देवेभ्योऽग्निजिह्वेभ्यस्त्वर्तायुभ्य इन्द्र-ज्येष्ठेभ्यो वरुणराजभ्योवातापिभ्यः पर्जन्यात्मभ्यो दिवे त्वाऽन्त-

रिक्षाय त्वा पृथिव्यै त्वाऽपेन्द्र द्विषतो मनोऽप जिज्यासतो जह्यप यो नोऽरातीयति तं जहि प्राणाय त्वाऽपानाय त्वा सते त्वाऽसते त्वाऽद्भ्य स्त्वौषधीभ्यो विश्वेभ्यस्त्वा भूतेभ्यो यतः प्रजा अक्खिद्रा अजायन्त तस्मै त्वा प्रजापतये विभूदाव्ने ज्योतिष्मते ज्योतिष्मन्तं जुहोमि॥ १ ॥

*இதில், தயிரை எடுத்தற்குரிய மந்திரங்கள் கூறப்படுகின்றன.*

தயிரை எடுக்கும் பாத்திர விசேடத்தில் தயிரை எடுத்தல்

மந்திரம் 1

**उपयामगृहीतोऽसि प्रजापतये त्वा ज्योतिष्मते ज्योतिष्मन्तं गृह्णामि दक्षाय दक्षवृधे रातं देवेभ्योऽग्निजिह्वेभ्यस्त्वर्तायुभ्य इन्द्रज्येष्ठेभ्यो वरुणराजभ्यो वातापिभ्यः पर्जन्यात्मभ्यो दिवे त्वाऽन्तरिक्षायत्वा पृथिव्यै त्वा ।**

என்பது

உரை.

பாத்திரத்திலுள்ள தயிரே! நீ மரப்பாத்திரத்தில் எடுக்கப் பெற்றிருக்கின்றாய். ஒளிமிகுந்த பிரசாபதியின் பொருட்டு ஒளியுடைய உன்னை எடுத்துக்கொள்கின்றேன். கருமஞ் செய்வதில் வல்லுநனாகிய தக்ஷன் என்பவன் பொருட்டு முன்னர்க் கொடுக்கப்பட்டது. மற்றும், அக்கினிகளையே நாவாக உடையவர்களும், சத்தியத்தை விரும்புகின்றவர்களும், இந்திரனை மூத்தவனாக உடையவர்களும், வருணனை அரசனாகவுடையவர்களும், வாயுவையே ஆகாரமாகவுடையவர்களும் மழையையே ஆன்மாவாகக் கொண்டவர்களும் (மழை முதலியவைகளைப் பொறுத்துக்கொள்கின்றவர்களு)மான தேவர்களின்பொருட்டு கொடுக்கப்பட்ட உன்னை எடுத்துக்கொள்கின்றேன். சுவர்க்கலோகப்பிராப்தியின் பொருட்டு உன்னை எடுத்துக் கொள்கின்றேன். இவ்வாறே, மண்ணுலக வானுலகங்கட்கும் உணர்ந்துகொள்க என்பதாம்.

---

எடுத்த தயிரை ஆகவனீயத்திற்குக் கொண்டுவருதல்

மந்திரம் 2

**अपेन्द्र द्विषतो मनोऽप जिज्यासतो जह्यपयोनोऽरातीयति तंजहि ।**

என்பது.

அதன்பிராமணம்)

உரை.

எசமானனுடைய தனமுதலியவைகளைக் கெடுக்கின்ற துவேஷி என்பவன் ஒரு பகைவன். தனத்தைக் கவரும் வன்மையிருந்தும் எசமானன் இறக்கவேண்டுமென்று விரும்புகின்றவன். 'சிச்யாசன்' என்னும் இரண்டாம் பகைவன். ஒரு சிறிதளவும் கொடுப்பதற்குரியதைக் கொடுக்காதவன் அராதி என்னும் மூன்றாவது பகைவன். இந்திர! நீ, இவர்களுள் துவேஷி என்னும் பகைவனை வெல்வாயாக. அவ்வாறே ஏனையோர்களையும் வெல்வாயாக என்பதாம்.

தயிரை ஹோமஞ் செய்தல்

மந்திரம் 3

प्राणाय त्वाऽपानाय त्वा व्यानाय त्वा सते त्वाऽसते त्वाऽद्भ्यस्त्वौषधीभ्यो
विश्वेभ्यस्त्वा भूतेभ्यो यतः प्रजा अक्खिद्रा अजायन्त तस्मै त्वा प्र-
जापतये विभूदाव्न्ने ज्योतिष्मते ज्योष्मन्तं जुहोमि ।

என்பது

உரை

பாத்திரத்திலுள்ள தயிரே! உன்னை, பிராணன், அபானன், வியானன் என்னும் வாயுகட்குப் பிரியமுண்டாகும் பொருட்டு ஆகுதி செய்கின்றேன். சாத்திரநெறி தவறினவர்களின் பொருட்டும், தண்ணீரின்பொருட்டும், கொடிசெடிகளின்பொருட்டும், எல்லா உயிர்களின் பொருட்டும், ஒரு சிறிதும் துன்பின்றி உயிர்களைப் படைக்கும் பிரசாபதியின் பொருட்டும் எல்லாவற்றையும் விளக்கும் உன்னை ஆகுதிசெய்கின்றேன் என்பதாம்.

எட்டாம் அநுவாகம்

முற்றிற்று.

---

## மூன்றுங் காண்டம் ஐந்தாம் பிரபாடகம்

## ஒன்பதாவது அநுவாகம்

இரண்டு பஞ்சாதிக்குமேல் நாற்பத்து மூன்றுபதங்களைக் கொண்டது.

முற்கூறிய மந்திரங்களின் பிராமணங்கள்.

यां वा अध्वर्युश्च यजमानश्च देवतामन्तरितस्तस्या आ वृश्चयेते
प्राजापत्यं दधिग्रहं गृह्णीयात्प्रजापतिस्सर्वा देवता देवताभ्य एव नि-

ह्नुवाते ज्येष्ठो वा एष ग्रहाणां यस्यैष गृह्यते ज्यैष्ठ्यमेव गच्छति सर्वासां वा एतद्देवतानाꣳ रूपं यदेष ग्रहो यस्यैष गृह्यते सर्वाण्येवैनꣳ रूपाणि पशूनामुप तिष्ठन्त उपयामगृहीतः ॥ १ ॥ असि प्रजापतये त्वा ज्योतिष्मते ज्योतिष्मन्तं गृह्णामीत्याह ज्योतिरेवैनꣳ समानानां करोत्यग्निजिह्वेभ्यस्त्वर्तायुभ्य इत्याहैतावतीर्वै देवतास्ताभ्य एवैनꣳ सर्वाभ्यो गृह्णात्यपेन्द्र द्विषतो मन इत्याह भ्रातृव्यापनुत्त्यै प्राणाय त्वाऽपानाय त्वेत्याह प्राणानेव यजमाने दधाति तस्मै त्वा प्रजापतये विभूदाव्न्ने ज्योतिष्मते ज्योतिष्मन्तं जुहोमि ॥ २ ॥ इत्याह प्रजापतिस्सर्वा देवतास्सर्वाभ्य एवैनं देवताभ्यो जुहोत्याज्यग्रहं गृह्णीयात्तेजस्कामस्य तेजो वा आज्यं तेजस्व्येव भवति सोमग्रहं गृह्णीयाद्ब्रह्मवर्चसकामस्य ब्रह्मवर्चसं वै सोमो ब्रह्मवर्चस्येव भवति दधिग्रहं गृह्णीयात्पशुकामस्योर्ग्वै दध्यूर्क्पशव ऊर्जैवास्मा ऊर्जं पशूनव रुन्धे ॥ ३ ॥

இதில், முன் அநுவாகத்திற்கூறியுள்ள தயிரை எடுக்கும் மந்திரங்கட்கு உரை கூறப்படுகின்றது.

தயிரை எடுக்கவேண்டுமென்று விதித்தல்.

பிராமணம் 1

थं वा अध्वर्युश्च यजमानश्च देवतामन्तरितस्तस्या आ वृश्च्येते प्राजापत्यं दधिग्रहं गृह्णीयात्प्रजापतिस्सर्वा देवता देवताभ्य एव नि ह्नुवाते ।

என்பது.

உரை.

சோமயாகத்தில் பல தேவதைகளாதலின், வேட்போனும் வேள்வித்தலைவனும் மறந்து யாதானுமொரு தேவதையைவிட்டுவிடுவார்களாயின் அத்தேவதைக்குக் குற்றஞ் செய்தவர்களாவார்கள். அக்குற்றம் நீங்குதற்கு பிரசா

அதன்பிராமணம்)

பதிக்குத் தயிரை எடுத்தல்வேண்டும். என்னை? பிரசாபதி படைப்புத் தலைவனாகலின் எல்லாத் தேவதைகளின் வடிவனைவான். அவனுக்குத் தயிரெடுக்கில், எல்லாத் தேவர்கட்கும் அவியளிக்கின்றனர் என்னும் பேச்சுவருதலின் தேவர்கள் இவர்களிடத்திலுள்ள துவேஷத்தை விட்டுவிடுவார்கள் ஆதலின் என்பதாம்.

---

எல்லாவற்றிலும் சோமரசத்தை எடுப்பதற்குமுன் தயிரை எடுத்தல் வேண்டும் மென்பதை விதிக்கின்றது

பிராமணம் 2

ज्येष्ठो वा एष ग्रहाणां यस्यैष गृह्यते ज्यैष्ठ्यमेव गच्छति ।

என்பது

உரை

எல்லாவற்றிலும் சோமரசத்தை எடுக்குமுன் எடுக்கவேண்டிய தென்னையெனின்? எல்லாவற்றிலும் இது சிறந்ததாமாதலினென்க. இவ்வாறு தயிரை முதலில் எடுத்த வேள்வித் தலைவன் எல்லா வேள்வித்தலைவர்களுள்ளுஞ் சிறந்தவனாகின்றான் என்பதாம்.

---

தயிரெடுத்தல் பிரசாபதிதேவதைக்காம் ஆதலின், சிறைப்பைப் புகழ்கின்றது

பிராமணம் 3

सर्वासां वा एतद्देवतानाꣳ रूपं यदेष ग्रहो यस्यैष गृह्यते सर्वाण्येवैनꣳ-
रूपाणि पशूनामुप तिष्ठन्ते ।

என்பது

உரை

எல்லாத் தேவதைகளும் பிரசபாதிவடிவங்களாமாதலின், இதனால் எல்லாத் தேவதைகட்கும் தயிர் எடுத்தாகின்றது. மற்றும், இவ்வாறு முதலில் எடுத்தவன் பசுக்கள், கோக்கள், குதிரைகள் அனைத்தையுமடைகின்றான் என்பதாம்.

---

தயிரெடுக்கும் மந்திரத்தின் முற்பகுதியிலுள்ள சோதி (விளக்கம்) என்றும்விசே டணத்தைப் புகழ்கின்றது

பிராமணம் 4

**उपयामगृहीतोऽसि प्रजापतये त्वा ज्योतिष्मते ज्योतिष्मन्तं गृह्णामी-
त्याह ज्योतिरेवैनꣳ समानानां करोति ।**

என்பது

உரை

*விளக்கமுடைய பிரசாபதியின் பொருட்டு விளக்கமுடைய உன்னை எடுத்துக்கொள்கின்றேன் என்றது, ஏனைய வேள்வித் தலைவர்களுக்குள் இவ் வேள்வித் தலைவனை விளக்கமுடையவனாகச் செய்கின்றான் என்பதாம்.*

---

பிற்பகுதியிலுள்ள, பிரசாபதியின் அவயவங்களான தேவதைகளைக்கூறும் “ அக்கினிசிஹ்வேப்ய: என்பது முதலிய நான்காம் வேற்றுமையேற்றிற்கொண்ட ஒன்பது சொற்களின் கருத்தைக் கூறுகின்றது

பிராமணம் 5

**अग्निजिह्वेभ्यस्त्वर्तायुभ्य इत्याहैतावतीर्वै देवतास्ताभ्य एवैनꣳ सर्वाभ्यो
गृह्णाति ।**

என்பது.

உரை

*அக்கினிகளை நாக்குக்களாகவுடையவைகளின் பொருட்டு என்றது, இத ஞல் எல்லாத் தேவதைகட்கும் தயிரை எடுத்தவனாகின்றான் என்பதாம்.*

---

ஆகவனீயத்திற் கருகில் கொண்டுவரும் மந்திரத்தின் கருத்தை விளக்குகின்றது

பிராமணம் 6

**अपेन्द्र द्विषतो मन इत्याह भ्रातृव्यापनुत्त्यै ।**

என்பது

உரை.

*‘**அபேந்திர**, அதாவது இந்திரனே ! நீ பகைவர்களைத் தொலைப்பாயாக என்று கூறியதால், சத்துருக்கள் விலக்கப்பட்டவர்களாகின்றனர் என்பதாம்.*

---

அதன் பிராமணம்)

ஹோமமந்திரத்தின் முற்பகுதியிலுள்ள 'பிராணன் பொருட்டு' அபானன்பொருட்டு என்பதன் கருத்தை விளக்குகின்றது

பிராமணம் 7

**प्राणाय त्वाऽपानाय त्वेत्याह प्राणानेव यजमाने दधाति ।**

என்பது

உரை.

இதனால், எசமானனிடத்தில் பிராணன் முதலிய வாயுக்கள் நிலைநாட்டப் பெற்றன என்பதாம்.

---

" பிரசாபதி,, என்பதன் கருத்தை விளக்குகின்றது

பிராமணம் 8

**तस्मै त्वा प्रजापतये विभूदाव्नेज्योतिष्मते ज्योतिष्मन्तं जुहोमीत्याह प्रजापतिस्सर्वा देवतास्सर्वाभ्य एवैनं देवताभ्यो जुहोति ।**

என்பது.

உரை.

பிரசாபதி எல்லாத் தேவதைகளின் வடிவன் ஆதலின் இதனால் எல்லாத் தேவதைகட்கும் ஹோமஞ் செய்யப்பட்டதாயிற்றென்பதாம்.

---

மூன்று காமிய் விசேடதுணங்களை விதிக்கின்றது

பிராமணம் 9

**आज्यग्रहं गृह्णीयात्तेजस्कामस्य तेजो वा आज्यं तेजस्व्येव भवति सोमग्रहं गृह्णीयाद्ब्रह्मवर्चसकामस्य ब्रह्मवर्चसं वै सोमो ब्रह्मवर्चस्येव भवति दधिग्रहं गृह्णीयात्पशुकामस्योर्ग्वै दध्यूर्क्पशव ऊर्जैवास्मा ऊर्जं पशूनव रुन्धे ।**

என்பது

உரை

அழகு நெய்யாதலின் அழகை (தேசசை) விரும்பியவன் நெய்யையும், பிரமவொளி வடிவு சோமமாம் அதை விரும்பியவன் சோமத்தையும், தயிர் வன்மையாம் வன்மை பசுக்களாம் ஆதலின் பசுக்களை விருப்பியவன் தயிரையும் பாத்திரங்களில் எடுத்துக் கொள்ளல் வேண்டும் என்பதாம்.

ஒன்பதாவது அநுவாகம்
முற்றிற்று.

பத்தாம் அநுவாக விடயச்சுருக்கம்.

त्वे गवामयने पात्रेऽति ग्राह्यग्रहणं भवेत् ।
अयं पुरोभुवः प्राणग्रहाणां पञ्चमन्त्रकाः ॥ १ ॥
सोमांशवो नव नव ग्राह्याः पर्यायपञ्चके ।
कयानश्चित्र एतस्या योनौ भ्रष्टन्तु सामतत् ॥ २ ॥
अग्निनर इतिह्यत्र गीयते दशमेऽहनि ।

கவாமயனத்தில் அதிக்கிராகியத்தைக் கிரகித்தல், மேற்படி கிரஹத்திற்கு சில விசேடங்களை விதிக்கும் பிராமணமும் இதில் கூறப்படுகின்றன என்பது.

## மூன்றுங் காண்டம் ஐந்தாம் பிரபாடம்

## பத்தாவது அநுவாகம்

*இரண்டு பஞ்சாதிக்குமேல் முப்பத்தேழு பதங்களைக்கொண்டது.*

கவாமயன அதிக்கிராகியக் கிரகபிராமணங்களும் மந்திரங்களும்

त्वे क्रतुमपि वृञ्जन्ति विश्वे द्विर्यदेते त्रिर्भवन्त्यूमाः । स्वादोस्स्वादीयस्स्वादुना सृजा समत ऊ षु मधु मधुनाऽभि योधि । उपयामगृहीतोऽसि प्रजापतये त्वा जुष्टं गृह्णाम्येष ते योनिः प्रजापतये त्वा । प्राणग्रहान्गृह्णात्येतावद्वा अस्ति यावदेते ग्रहास्स्तोमाश्छन्दांसि पृष्ठानि दिशो यावदेवास्ति तत् ॥ १ ॥ अव रुन्धे ज्येष्ठा वा एतान्ब्राह्मणाः पुरा विदामक्रन्तस्मात्तेषां सर्वा दिशोऽभिजिता अभूवन्यस्यैते गृह्यन्ते ज्यैष्ठ्यमेव गच्छत्यभि दिशो जयति पञ्च गृह्यन्ते पञ्च दिशस्सर्वास्वेव दिक्ष्वृध्नुवन्ति नवनव गृह्यन्ते नव वै पुरुषे प्राणाः प्राणानेव यजमानेषु दधाति प्रायणीये चोदयनीये च गृह्यन्ते प्राणा वै प्राणग्रहाः ॥ २ ॥ प्राणैरेव प्रयन्ति

கவாமயன அதிக் கிராகிபம்)

प्राणैरुर्ध्यन्ति दशमेऽहन्गृह्यन्ते प्राणा वै प्राणग्रहाः प्राणेभ्यः खलु वा एतत्प्रजा यन्ति यद्वामदेव्यं योनेश्च्यवते दशमेऽहन्वामदेव्यं योनेश्च्यवते यद्दशमेऽहन्गृह्यन्ते प्राणेभ्य एव तत्प्रजा न यन्ति ॥३॥

இதில், கவாமயனம் என்னும் யாகத்தில் அதிக்கிராகியம் என்பதும் பிராணக்கிரஹங்கள் (சோமக்கொடியை அளத்தல்) என்பதுங் கூறப்படுகின்றன.

ஈண்டு, கவாமயனம் என்னும் யாகத்தில் அடங்கியுள்ள மகாவிரதத்தி லும், தனித்த மகாவிரதத்திலும், அதிக்கிராகிய மென்னும் பாத்திரங்களில் சோமரசமெடுக்கும்போது இந்திரனுடைய அதிக்கிராகியம் (சோமரச மெடுத்தல்) முடிந்ததும் ஐந்து பாத்திரங்களில சோமரசத்தை யெடுத்து, நான்கிலுள்ள சோமரசத்தையும் ஒரு பாத்திரத்தில்விட்டு அதை இம்மந்தி ரத்தின் முன்பாதியால் நடுவில் வைத்திருக்கின்ற பாத்திரத்தில்விட்டு, பின் பாதி மந்திரத்தால் அதனுடைய இடத்திலேயே வைத்துவிடல் வேண்டும் என்பதையுணர்க

---

அதிக்கிராகியங்கள்

மந்திரம் 1

त्वे क्रतुमपि वृञ्जन्ति विश्वे द्विर्यदेते त्रिर्भवन्त्यूमाः । स्वादोस्स्वादीयस्स्वादुना सृजा समत ऊ षु मधु मधुनाऽभि योधि । उपयामगृहीतोऽसि प्रजापतये त्वा जुष्टं गृह्णामि ।

என்பது

உரை

அதிக்கிராஹியமே! உன்னிடத்தில் இருத்துவிக்குக்கள் எல்லாக் கரு மங்களையும் முடிக்கின்றார்கள். ஏனைய கிரகபாத்திரங்களினின்று இதற்கு விசேடம் யாதெனின்? கூறப்படுகின்றது;—இருமுறை, மும்முறை யென்று இவ்வாறு ஐந்து பாத்திரங்களில் எடுக்கப்பட்ட சோமரசங்கள் அனைத்தும் பாதுகாப்பாற்றப்படுகின்றன. ஆதலின் கிருதுவின முடிவு பொருந்தும். நீயும், அதிசயமாகிய இரசத்தால் தித்திப்புடன் கூடுவாயாக. மற்றும், அதற்கு மேலாக தென்பாகத்துடன் கூடுவாயாக. என்றிவ்வாறு

தித்திப்பு இரசத்துடன்கூட மண் பாத்திரத்தில் எடுக்கப்பெற்றிருக்கின்ருய். பிரசாபதியின் பொருட்டு ஏனைய பாத்திரங்களில் எடுக்கப்பட்ட உன்னை நடுப்பாத்திரத்தில் எடுத்துக்கொள்கின்றேன் என்பது. இது சோமரசமெடுக்கும் மந்திரமாம்.

---

வைக்கும் மந்திரம்

மந்திரம் 2

**एष ते योनिः प्रजापतये त्वा ।**

என்பது

உரை

கரம் என்னும் இம்மேடை உனது இடமாம். பிரசாபதியின்பொருட்டு உன்னை இங்கு வைக்கின்றேன் என்பதாம்.

---

நான்காங் காண்டத்திற் கூறியுள்ள அயம்புரோபுவ:' என்பது முதலியமந்திரங்களால் பிருசனிக்கிரகம் (சோமக் கொடியை அளத்தல்) போன்று, இங்கு, சோமத்தைஅளத்தலாகிய பிராணக்கிரஹங்களை விதிக்கின்றது

---

பிராமணம் 1

**प्राणग्रहान्गृह्णात्येतावद्वा अस्ति यावदेते ग्रहास्स्तोमाश्छन्दाꣳसि पृष्ठानि-दिशो यावदेवास्ति तदवरुन्धे ।**

என்பது.

உரை

'அயம்புரோபுவ:' என்பது முதலிய பிராணமந்திரங்களால் சோமக்கொடியை அளத்தல் வேண்டும். பிருசினிகள் கிரஹிக்கப்படுகின்றன என்னுமிடத்து 'வாயுரஸி, என்பது முதலிய மந்திரங்களால் சோமக்கொடி அளக்கப்பட்டது போன்று இங்கும் பிராணக்கிரகம் என்பது சோமக்கொடியை அளத்தலாம். இதற்கு வேண்டியவைகள் திரிவிருத முதலிய ஸ்தோமங்கள், காயத்திரி முதலிய சந்தங்கள், மாத்தியந்தின பவமானங்கட்குள்ளடங்கின பிருஷ்டம் என்னுந் துதிகள், கிழக்கு முதலிய திசைகள் என்பன. அதாவது இவைகள் இக்கிரஹணங்களில் உண்டாகின்றன என்பதாம். எனவே இவைகளால் அளக்கப் பெற்றது என்பது கருத்து.

---

மற்றேநவகையால் பிராணக்கிரஹங் களைப்புகழ்கின்றது

பிராமணம் 2

**ज्येष्ठा वा एतान्ब्राह्मणाः पुरा विदामक्रन्तस्मात्तेषाꣳसर्वा दिशोऽभिजिता अभूवन्यस्यैते गृह्यन्ते ज्यैष्ठ्यमेव गच्छत्यभि दिशो जयति ।**

என்பது.

உரை

இந்தப் பாத்திரங்களில் சோமரசத்தையெடுத்த அந்தணர்கள் சிறந்தவர்களாய் திக்குக்களையும் வெல்கின்றனர். ஆதலின் இக்கிரக பாத்திரங்களில் சோமரசத்தை எடுக்கின்றவர்கள் ஏனையோர்களினும்பெருமையுடையாராய் எல்லாத்திக்குக்களிலுமுள்ள மனிதர்களால் வழிபடப்பெறுகின்றனர் என்பதாம்.

---

பிராணக்கிரகங்கள் (சோமக்கோடிகளை எடுத்தல்) எத்தனை முறையென அதன் எண்ணை விதிக்கின்றது

பிராமணம் 3

**पञ्च गृह्यन्ते पञ्च दिशस्सर्वास्वेव दिक्ष्वृध्नुवन्ति ।**

என்பது.

உரை

'அயம்புரோபுவ:; அயம்தக்ஷிண, அயம்பஸ்சாத், இதமுத்தராத், இயமுபரி என்பவைகளை முதலாகக் கொண்ட ஐந்து மந்திரங்களாலும் ஐந்து திக்குக்களிலும் சம்பத்தையடைகின்றான் என்பதாம்.

---

ஒவ்வொருமுறையிலும் எத்தனை சோமக் கோடிகள் இருத்தல் வேண்டுமென்பதைவிதிக்கின்றது

பிராமணம் 4

**नवनव गृह्यन्ते नव वै पुरुषे प्राणाः प्राणानेव यजमानेषु दधति ।**

என்பது

உரை

ஒவ்வொரு முறைக்கும் ஒன்பது ஒன்பது சோமக்கொடித்துண்டுகளிருத்தல் வேண்டும். இதனால் மனிதனுடைய தலையிலுள்ள ஏழு பிராணன்களும் கீழேயுள்ள இரண்டு பிராணன்களுமாக ஒன்பது பிராணன்களும் எசமானனிடத்தில் நிலைக்கவைத்ததாகின்றன என்பதாம்.

சோமக் கொடியை அளந்தெடுக்கும் காலத்தை விதிக்கின்றது

பிராமணம் 5

**प्रायणीये चोदयनीये च गृह्यन्ते प्राणा वै प्राणग्रहाः प्राणैरेव प्रयन्ति प्राणैरुद्यन्ति ।**

என்பது.

உரை.

வருடத்திற்செய்யும் சத்திரயாகத்தில் முதலாவது சோமரசம் பிடிக்கும் நாள் பிராமணீயம் எனப்படும். முடிவுநாள் உதயனீயம் எனப்படும். இவ்விரண்டு நாட்களிலும் சோமக்கொடியை அளந்தெடுத்தல் வேண்டும். எடுக்கில், அது பிராணவடிவாதலின் பிராணனால் வருடம் தொடங்கப்பட்டு பிராணனால் முடிந்ததாகிறது என்பதாம்.

---

மற்றொரு காலத்தை விதிக்கின்றது

பிராமணம் 6

**दशमेऽहन्गृह्यन्ते प्राणा वै प्राणग्रहाः प्राणेभ्यः खलु वा एतत्प्रजा यन्ति यद्वामदेव्यं योनेश्च्यवते दशमेऽहन्वामदेव्यं योनेश्च्यवते यद्दशमेऽहन्गृह्यन्ते प्राणेभ्य एव तत्प्रजा न यन्ति ।**

என்பது.

உரை

ஒருவருடஞ் செய்யும் சத்தரயாகத்தில் பன்னிரண்டு நாட்கள் கொண்டதின் விகிருதியாதலின் அதிலும் பன்னிரு நாட்கள் உபயோகிக்கப்படுவனவாம். அவைகளுள், பத்தாவது நாளில் வாமதேவ்யம் என்னுஞ் சாமமறைப் பாடலைப்பாடுமிடத்தில் மற்றொரு இருக்குமந்திரத்திற் பாடுவதால் மக்களின் பிராணன்கள் செல்கின்றன. இங்குக்கூறிய பிராணக்கிரகங்களை அந்தநாளில் செய்வதால், அதாவது அந்நாளில் சோமக்கொடிகளை அளந்தெடுப்பதால் மக்களின் பிராணன்கள் மக்களிடத்தில் நிலைக்கும் என்பதாம்.

பத்தாம் அநுவாகம்

முற்றிற்று.

பதினோராம் அநுவாக விடயச்சுருக்கம்.

अथपाशुक हौत्रस्य शेष औत्तरवेदिके ।
अग्निप्रणयनेह्यष्टौ प्रदेव मिति मन्त्रकाः ॥ १ ॥
अभ्यग्निमन्थनेपञ्चजाते वह्न्युतद्वयम् ।
प्रदे ग्न्योर्मेलने षट्स्युर्मन्त्रा अत्रैकविंशतिः ॥ २ ॥

பசுக்கிரியையில் அக்கினியைக் கொண்டுபோகும்போது ஹோதா ஓத வேண்டியமந்திரங்களும், தீயைக் கடையும் மந்திரங்களுங் கூறப்படுகின்றன என்பது.

---

**மூன்றுங் காண்டம் ஐந்தாம் பிரபாடகம்**

பதினோராவது அநுவாகம்

ஐந்து பஞ்சாதிக்குமேல் நான்கு பதங்களைக் கொண்டது.

பசுவைப்பற்றின ஹோதாவின் மந்திரங்கள்.

प्र देवं देव्या धिया भरता जातवेदसम् । हव्यानो वक्षदानुषक् । अयमुष्य प्र देवयुर्होता यज्ञाय नीयते । रथो न योरभीवृतो घृणीवाश्चेतति त्मना । अयमग्निरुरुष्यत्यमृतादिव जन्मनः । सहसश्चित्सहीयान्देवो जीवातवे कृतः । इडायास्त्वा पदे वयं नाभा पृथिव्या अधि । जातवेदो नि धीमह्यग्ने हव्याय वोढवे ॥ १ ॥ अग्ने विश्वेभिस्स्वनीक देवैरूर्णावन्तं प्रथमस्सीद योनिम् । कुलायिनं घृतवन्तꣳ सवित्रे यज्ञं नय यजमानाय साधु । सीद होतस्स्व उ लोके चिकित्वान्त्सादया यज्ञꣳ सुकृतस्य योनौ । देवावीर्देवान्हविषा यजास्यग्ने बृहद्यजमाने वयो धाः । नि होता होतृषदने विदानस्त्वेषो दीदिवाꣳ असदत्सुदक्षः । अदब्धव्रतप्रमतिर्वसिष्ठस्सहस्रंभरश्शुचिजिह्वो अग्निः । त्वं दूतस्त्वम् ॥ २ ॥ उ नः

परस्पास्त्वं वस्य आ वृषभः प्रणेता । अग्ने तोकस्य नस्तने तनूनाम-प्रयुच्छन्दीद्यद्बोधि गोपाः । अभि त्वा देव सवितरीशानं वार्याणाम् । सदाऽवन्भागमीमहे । मही द्यौः पृथिवी च न इमं यज्ञं मिमिक्षताम् । पिपृतां नो भरीमभिः । त्वामग्ने पुष्करादध्यथर्वा निरमन्थत । मूर्ध्नो विश्वस्य वाघतः । तमु ॥३॥ त्वा दध्यङ्ङृषिः पुत्र ईधे अथर्वणः । वृत्रहणं पुरंदरम् । तमु त्वा पाथ्यो वृषा समीधे दस्युहन्तमम् । धनंजयꣳ रणेरणे । उत ब्रुवन्तु जन्तव उदग्निर्वृत्रहाऽजनि । धनंजयो रणेरणे । आ यꣳ हस्ते न खादिनꣳ शिशुं जातं न बिभ्रति । विशामग्निꣳ स्वध्वरम् । प्र देवं देववीतये भरता वसुवित्तमम् । आ स्वे योनौ नि षीदतु । आ ॥ ४ ॥ जातं जातवेदसि प्रियꣳ शिशीतातिथिम् । स्योन आ गृहपतिम् । अग्निनाऽग्निस्समिध्यते कविर्गृहपतिर्युवा । हव्यवाड्जुह्वास्यः । त्वꣳह्यग्ने अग्निना विप्रो विप्रेण सन्त्सता । सखा सख्या समिध्यसे । तं मर्जयन्त सुक्रतुं पुरोयावानमाजिषु । स्वेषु क्षयेषु वाजिनम् । यज्ञेन यज्ञमयजन्त देवास्तानि धर्माणि प्रथमान्यासन् । ते ह नाकं महिमानस्सचन्ते यत्र पूर्वे साध्यास्सन्ति देवाः ॥ ५ ॥

அநுவாகத்தின் தலைப்புச் சொற்களைக் கொண்ட எண்:—

पूर्णषयोऽग्निना देवेनयेदेवास्सूर्यस्सं त्वा वषट्कार उपयामगृहीतोऽसियांवै त्वेक्रतुंप्रदेवमेकादश ॥ ११ ॥

பஞ்சாதிகளின் தலைப்புச் சொற்களைக்கொண்ட எண் :—

पूर्णा सहजाꣳ स्तवाग्नेवामीः प्राणैरेव षट्त्रिꣳशत् ॥ ३६ ॥

இதில், பசுக்கருமங்கட்கு வேண்டிய ஹோதா மந்திரங்கள் கூறப்படுகின்றன.

பசுவிற்த ஹோதா மந்திரம்)

அவற்றுள், பிராமணம் மூன்றாங் காண்டத்தின் ஆறும் பிரபாடகத்தில், 'அஞ்சந்தி த்வாமத்வரே, என்பது முதலிய விடத்து பசுவைப்பற்றின ஹோதா மந்திரங்கள்பெரும்பான்மை கூறப்பட்டிருக்கின்றன. எஞ்சின மந்திரங்கள் ஈண்டுக்கூறப்படுகின்றன. அவற்றுள்ளும் மேல்வரும் எட்டு மந்திரங்களால் உத்தரவேதியில் அக்கினியைப் பிரணயனஞ் செய்தல் வேண்டும் என்க.

---

அவற்றுள், முதலாவது மந்திரம்,

**प्र देवं देव्या धिया भरता जातवेदसम् । हव्या नो वक्षदानुषक् ।**

என்பது.

உரை.

வேள்விச்செயலாளர் வேள்வித் தலைவர்களே! நீவிர், தோன்றினவைகளையுணரும் சாதவேதா என்னும் அக்கினியை விவேகமுடைய புத்தியால் நன்கு பாதுகாப்பாற்றுவீர்களாக. அத்தகைய அக்கினியும் அன்புடன் கூடி எமது அவியைக்கொண்டு செல்வதாகுக என்பதாம்.

---

இரண்டாவது மந்திரம்

**अयमुष्य प्र देवयुर्होता यज्ञाय नीयते । रथो न योरभीवृतो घृणीवाञ्चेतति त्मना ।**

என்பது.

உரை.

தேவர்களை விரும்புவதும், ஹோமத்தையுண்டாக்குவதும், தேரைப்போல்தன்பால் ஆகுதிசெய்த அவியை ஏனைய அவிகளிலிருந்து வேறாக்கித் தேவர்கட்குச் சேர்ப்பதும், எசமானனால் இனிது ஏற்றுக்கொள்ளப் பெற்றதும், கிரணங்களையுடையதுமாகிய அக்கினி, தானாகவே எசமானனுடைய பத்தியையுணர்ந்து கொள்கின்றது என்பதாம்.

---

மூன்றாவது மந்திரம்

**अयमग्निरुरुष्यत्यमृतादिव जन्मनः । सहसश्चित्सहीयान्देवो जीवातवे कृतः ।**

என்பது

உரை

எடுத்து வைக்கப்பட்ட இவ்வக்கினி, அமுதமுண்டவன் வாழுமாறு தோன்றிய மாத்திரத்தானே வளர்ச்சியடைய விரும்புகின்றது. மற்றும், இவ்வக்கினிதேவன், வாழ்விக்கும் மருந்தின் பொருட்டு வன்மையுடையார் களினின்றும் என்னை மிகுந்த வன்மையுடையனாகச் செய்தனன். அதாவது தான் வளர்வதுபோல் எசமானனையும் வளர்க்கின்றான் என்பதாம்.

---

நான்காம் மந்திரம்

**इडायास्त्वा पदे वयं नाभा पृथिव्या अधि । जातवेदो नि धीमह्यग्ने हव्या-
य वोढवे ।**

என்பது

உரை

தோன்றியவைகளையுணரும் அக்கினியே! அவிகளை ஏற்றுச் செல்வதன் பொருட்டு, பூமியின்மேலுள்ளதும், நாபி போன்றதும், நெய்வதியும் பசுவின் காலின் குளம்படி போன்றதுமாகிய ஆகவனீயம் என்னு மிடத்தில் உன்னை, வைக்கின்றேன் என்பதாம்.

---

ஐந்தாம் மந்திரம்

**अग्ने विश्वेभिस्स्वनीक देवैरूर्णावन्तं प्रथमस्सीद योनिम् । कुलायिनं घृत-
वन्तं सवित्रे यज्ञं नय यजमानाय साधु ।**

என்பது.

உரை

எல்லாத் தேவர்களையும் சைன்யமாகக்கொண்ட அக்கினியே! தேவர்களுக்குத் தலைமையாகிய நீ, மெதுவாகிய கம்பளிபோன்று வழிபடுவதற்கு இனியதும், பறவைகளின் கூட்டைப்போன்றதும், நெய்யாகுதிகட்கு இடமுமாகிய ஆகவனீயத்தில், அல்லது நெய்யாகுதியையுடைய வேள்வியில் உட்காருவாயாக. அநுட்டிக்கும் எசமானன் பொருட்டு வேள்வியை நடத்துவாயாக. அதாவது இனிது முடித்து வைப்பாயாக என்பதாம்.

பசுவிற்கு ஹோதா மந்திரம்)

ஆறுவது மந்திரம்

सीद होतस्स्व उ लोके चिकित्वान्त्सादया यज्ञꣳ सुकृतस्य योनौ । देवावीर्देवान्हविषा यजास्यग्ने बृहद्यजमाने वयोधाः ।

என்பது.

உரை

ஹோமத்தையுண்டாக்குவோய்! பேரறிவுடையோய்! நீ, உத்தரவேதியாகிய உனதிடத்தில் உட்காருவாயாக. இவ்வேள்வியை, புண்ணிய கருமத்திற்குரிய விடத்தில் நிறுவுவாயாக. தேவப்பிரியனாகிய நீ, தேவர்களை அவியால் வழிபட்டுக் கொண்டிருக்கின்றாய். அக்கினியே! நீ, வேள்வித் தலைவனுக்கு நீண்ட ஆயுளையளிப்பாயாக என்பதாம்.

---

ஏழாவது மந்திரம்

निहोता होतृषदने विदानस्त्वेषो दीदिवाꣳ असदत्सुदक्षः । अदब्धव्रतप्रमतिर्वसिष्ठस्सहस्रंभरश्शुचिजिह्वो अग्निः ।

என்பது

உரை.

தேவர்களை அழைப்பதும், இடத்தையுணர்வதும், ஒளியுடையதும் தேவர்கட்கு அவியளிப்பதும், மிக வன்மையுடையதும், குனமிலாக் கருமத்தில் மனமுடையதும், அதிசயமாய் வாழ்விப்பதும், ஆயிரக்கணக்கான அவிகளைப் பாதுகாப்பதும், ஹோமத்திற்குரிய புனிதநாகிய நாவையுடையதுமாகிய அக்கினி, ஹோமத்தையுண்டாக்கத்தக்க உத்தரவேதியில் இனிது அமர்ந்தது என்பதாம்.

---

எட்டாவது மந்திரம்

त्वं दूतस्त्वमु नः परस्पास्त्वं वस्य आ वृषभः प्रणेता । अग्ने तोकस्य नस्तने तनूनामप्रयुच्छन्दीद्यद्बोधि गोपाः ।

என்பது.

உரை.

அக்கினியே! நீ, தேவர்களுடைய தூதனாக இருக்கின்றாய். எம்மைப் பரிபாலிப்போனாயிருக்கின்றாய். நீ, இக்கருமத்தில் அமர்ந்திருப்பதற்குரியாய்'

தேவர்களுட் சிறந்தோய்! நீயேவந்து யாகத்தை நடத்துகின்றாய். எம்முடைய சந்ததிகளையுண்டாக்குவதில் மறதியற்று விளங்குவாயாக. அலைது, தேவர்கட்கு அவியளித்துப் பாதுகாப்போனாய் ஆவாயாக என்பதாம்.

இவ்வெட்டு மந்திரங்களும், உத்தரவேதியில் அக்கினியைப் பிரணயனஞ் செய்யும்போது ஹோதா (இருக்கோதுவோன்) ஓதவேண்டியவைகள் என பதை யுணர்க.

---

இனி, தீக்கடையும்போது ஓதவேண்டிய மந்திரங்கள் ஐந்தனுள்

முதலாம் மந்திரம் (9)

**अभि त्वा देव सवितरीशानं वार्याणाम् । सदाऽवन्भागमीमहे ।**

என்பது

உரை

அனைத்தையுஞ் செலுத்தும் பரமேசுர! எப்போதும் பாதுகாப்போய்! தடைகளை நீக்குவதில் வன்மைமிக்க உன்னையடைதற்பொருட்டு போற்றத் தகுந்த அக்கினியை உனது அருளால் அடைகின்றேன் என்பதாம்.

---

இரண்டாவது மந்திரம் (10)

**मही द्यौः पृथिवी च न इमं यज्ञं मिमिक्षताम् । पिपृतां नो भरीमभिः ।**

என்பது

உரை

பெரிதான வானும் மண்ணும் எம்முடைய இவ்வேள்வியை நெய் முதலான ஹோமப்பொருள்களால் நனைப்பதற்கு விரும்புக. பாதுகாக்கும் பொருள்களால் எம்மைப்பாதுகாப்பனவுமாகுக என்பதாம்.

---

மூன்றும் மந்திரம் (11)

**त्वामग्ने पुष्करादध्यथर्वा निरमन्थत । मूर्ध्नो विश्वस्य वाघतः ।**

என்பது

பசுவிற்கு ஹோதா மந்திரம்)

உரை

அக்கினியே ! உன்னை அதர்வரிஷியானவர் தாமரையிலையின்மீது கடைந்தனர்·எவ்வண்ணமாகிய தாமரை இலையெனின் ? தலையைப்போல் சிறந்ததும், உலகனைத்தையுந் தாங்குவதுமாம் என்க., இத்தகைய தாமரை இலை நீக்கடையும் வேள்வியைத் தோற்றுவிக்கும் வாயிலாக உலகனைத்தையுந் தாங்கும் என்பதாம்.

---

நான்காம் மந்திரம் (12)

**तमु त्वा दध्यङ्ङृषिः पुत्र ईधे अथर्वणः । वृत्रहणं पुरंदरम् ।**

என்பது

உரை.

அக்கினியே ! பகைவரைக் காய்வதும், உருத்திரனாகிய அசுரர்களுடைய முப்புரங்களை எரிப்பதுமாகிய உன்னை, அதர்வரிஷியின் புதல்வராகிய ததயங் ரிஷி யென்பவர் இனிது வளர்த்தனர் என்பதாம்.

---

ஐந்தாம் மந்திரம் (13)

**तमु त्वा पाथ्यो वृषा समीधे दस्युहन्तमम् । धनंजयꣳ रणेरणे ।**

என்பது.

உரை

கள்வரை முழுதுமொழிப்பதும், ஒவ்வொருபோரிலும் தனத்தைத் தேடுவதுமாகிய உன்னை, சிறந்த பாத்யர் என்னும் ரிஷி இனிது வளர்த்தனர் என்பதாம்.

---

ஆறும் மந்திரம் (14)

**उत ब्रुवन्तु जन्तव उदग्निर्वृत्रहाऽजनि । धनंजयो रणेरणे ।**

என்பது

உரை

பகைவரைக் கொல்வதும், ஒவ்வொரு போரிலும் தனத்தைத் தேடுவதுமாகிய அக்கினி உண்டாயிற்று என்று எல்லாவுயிர்களும் பேசிக்கொள்கின்றனர் என்பதாம்.

ஏழாம் மந்திரம் (15)

**आ यꣳ हस्ते न खादिनꣳ शिशुं जातं न बिभ्रति । विशामग्निꣳ स्वध्वरम् ।**

என்பது.

உரை

*அவிகளையுண்பதும், உயிர்கட்கு துன்பஞ் செய்யாததுமாகிய அக்கினியை, பிறந்த குழந்தையை ஏந்திக்கொள்வதுபோல் கைகளையொத்த ஒருவகை பாத்திரத்தில் வேள்விச் செயலாளர்கள் எடுத்து வைத்துக்கொள்கின்றனர் என்பதாம்.*

---

இனி, இவ்வக்கினியை முன்னுள்ள அக்கினியுடன் கூட்டும்போது ஹோதா படிக்க வேண்டிய மந்திரங்கள் ஆறனுள்,

முதலாம் மந்திரம் (16)

**प्रदेवं देववीतये भरता वसुवित्तमम् । आ स्वे योनौ नि षीदतु ।**

என்பது.

உரை

*அவியாகிய சிறந்ததனத்தையுடையதும், ஒளியுடையதுமாகிய அக்கினி தேவதையை, வேள்விச் செயலாளர்களே! நீவிர் ஆனது பாதுகாப்பாற்றுவீர்களாக. அத்தகைய அக்கினி, தனது இடமாகிய முன்னுள்ள அக்கினிக்குட் புகுவதாகுக என்பதாம்.*

---

இரண்டாம் மந்திரம் (17)

**आजातं जातवेदसि प्रियꣳ शिशीतातिथिम् । स्योन आ गृहपतिम् ।**

என்பது

உரை.

*வேள்விச் செயலாளர்காள்! நீவிர் இப்போதுண்டாகியதும் எல்லாவீடுகளையும் பாரிலிப்பதும், விருந்துபோன்று பிரியமுடையதுமாகிய அக்கினியை முன்னுள்ள சுகவடிவ சாதவேதசம் என்னும் அக்கினியின்மீது படுக்க வைப்பீர்களாக என்பதாம்.*

பசுவிற்கு ஹோதா மந்திரம்)

மூன்றாம் மந்திரம் (18)

**अग्निनाऽग्निस्समिध्यते कविर्गृहपतिर्युवा । हव्यवाड्जुह्वास्यः ।**

என்பது

உரை

கவியும், வீட்டைப்பாதுகாப்பதும், கட்டிளமையுடையதும், அவிசை ஏற்றுச்செல்வதும், சுருவை முகமாகவுடையதுமாகிய இப்போதெழுந்த அக்கினி, முன்னுள்ள அக்கினியுடன்கூடி இனிது விளங்குகின்றது என்பதாம்.

---

நான்காம் மந்திரம் (19)

**त्वꣳह्यग्ने अग्निना विप्रो विप्रेण सन्त्सता । सखा सख्या समिध्यसे ।**

என்பது

உரை

அந்தணகுலாபிமானியாய்க் கேடின்றியிருக்கின்றதும், நண்பன்போன்ற விருப்புடையதுமாகிய புதிய அக்கினியே! நீ முன்னுள்ள நட்புமிக்க அக்கினியுடன் சேர்ந்து மிக ஒளிர்கின்றாய் என்பதாம்.

---

ஐந்தாம் மந்திரம் (20)

**तं मर्जयन्त सुक्रतुं पुरोयावानमाजिषु । स्वेषु क्षयेषु वाजिनम् ।**

என்பது.

உரை

வேள்வியைத் தேடுவதும், போர்களில் முன்செல்வதும், தனக்கு எசமானனுடைய வீடுகட்கு உணவுப் பொருள்களைத் தேடுவதுமாகிய விருந்தாடியாகிய அக்கினியை, வேள்விச்செயலாளர்காள்! நீவிர் பரிசுத்தப்படுத்துவீர்களாக என்பதாம்.

---

ஆறாம் மந்திரம் (21)

**यज्ञेन यज्ञमयजन्त देवास्तानि धर्माणि प्रथमान्यासन् । ते ह नाकं महिमानस्सचन्ते यत्र पूर्वे साध्यास्सन्ति देवाः ।**

என்பது.

**உரை.**

தேவத்தன்மையையடைய விரும்பிய எசமானர்கள் புதிதாகிய அக்கினி யுடன்கூட, எக்ஞசாதனமாகிய பழைய அக்கினியைப் பூசிக்கின்றார்கள். கூடின அத்தகைய இரண்டு அக்கினிகளாற் செய்து முடிக்கப்பெறும் நற்கருமங்கள் முக்கியங்களாயிருக்கின்றன. அத்தகைய மகிமைவாய்ந்த எசமானர்கள் முன்னர் வேள்விப்பயனையடைந்து எங்குத்தேவர்களாய் வசிக்கின்றார்களோ, அவ்வானுலகை வழிபடுகின்றார்கள் என்பதாம்.

கடைந்த அக்கினியை முன் அக்கினியுடன் கூட்டுதற்குரிய மந்திரங்கள் முடிந்தன.

பதினோராம் அநுவாகம்

முற்றிற்று.

மூன்றாங் காண்டம் முடிந்தது.

சுப்ரமண்யோம்! சுப்ரமண்யோம்! சுப்ரமண்யோம்!